

# சிந்தைக்கினிய
# சீறா





# சிந்தைக்கினிய சீறா

தொகுப்பாசிரியர்

மணவை முஸ்தபா

விலை ரூ. 40/-

மீரா பப்ளிகேஷன்

ஏஈ-103, அண்ணா நகர்

சென்னை - 600 040

## BIBLIOGROPHICAL DATA


| | |
|---|---|
| Title of the book | — **Chindhaikkinia Seera** |
| Compiler | — *Manavai Mustafa* |
| Language | — Tamil |
| First Edition | — 1978 |
| Re-edition | — 1988 |
| Copyright holder | — Meeraa Publication |
| Paper used | — 16 Kg. White Cream Wove |
| Size of the book | — Crown Octavo |
| Printing points used | — 10 points |
| No. of Pages | — 426 |
| Printer | — Meeraa Press<br>AE-103, Anna Nagar,<br>Madras-600 040. |
| Binding | — Paperback |
| Price | — Rs. 40/- |
| Publishing Place | — Meeraa Publication<br>AE-103, Anna nagar,<br>Madras-600 040. |
| Subject | — Literary Criticism |
| Call Number | — O, 31, 1J65, C; g L8 |

# பொருளடக்கம்

பக்

# நுழைவாயில்

தமிழ் இலக்கிய வரலாற்றில் இஸ்லாமியர்களின் பங்கும் பணியும் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கன என்பது புனைந்துரையன்று. உள்ளங்கை நெல்லிக் கனி போன்று தெள்ளத்தெளிய வரலாறு உணர்த்தும் உண்மையாகும்.

தமிழை வளர்த்தவர்கள்—வளப்படுத்தியவர்கள் மட்டு மல்ல; ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் தமிழை அழி வினின்று தடுத்துக் காத்த பெருமையும் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கட்கு உண்டு என்பதை வரலாறு தெளிவாக உணர்த்தவே செய்கிறது. தமிழ் இலக்கிய உலகத்தை நோக்கி விரைந்து படரத் தொடங்கிய இருட் படலத்தை நீக்கியதோடு ஒளியேற்றி, செழுமையின் உச்சகட்டத்திற்கு உயர்த்தியவர்கள் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள். இஃது காலச் சுவட்டில் பளிச்சிடும் உண்மை.

தமிழக வரலாற்றில் நான்கு முதல் ஏழாம் நூற்றாண்டு வரை வடக்கேயிருந்து படையெடுத்த களப்பிரர்களால் தமிழகமே இருண்ட களமாக ஆகியிருந்தது அரசியலில் குழப்பம், இலக்கியத்தில் தேக்கநிலை. இதுவே வரலாறு கூறும் 'இருண்ட காலம்'.

இதே போன்ற இருட்காலச் சூழல் பதினாறு முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் மீண்டும் தலைதூக்கி நிலைகுத்தி நிற்கத் தொடங்கியது.

தெலுங்கர், மராட்டியர், கன்னடத்தவர்களின் பிடி யிலே சிக்குண்டு சுக்கு நூறாகத் தமிழகம் சிதறுண்டு கிடந்த நிலை. தெலுங்குப் பாளையக்காரர்களின் அரவணைப்பில் தமிழ் இளைப்பாற வேண்டிய அவல நிலை. மராட்டியம், தெலுங்கு மொழிகளோடு பரங்கி மொழிகளும் சேர்ந்து கொண்டு தமிழை மிரட்டிக் கொண்டிருந்த இக்கட்டான காலச்சூழல்.

அரசியலில் கருமேகம் கவிந்திருந்தது போலவே புலமை யுலகும் ஒழுக்க உணர்வுகளின்றும் சற்று விலகிய நிலையில் சிற்றின்ப உணர்வுகளுக்குப் 'பராக்' கூறிக் கொண்டிருந்த நேரம். பாலுணர்வுக்கு முக்கியத்துவம் அளித்துக் கவி புனைந்து செல்வர்களின் சிந்தையைக் குளிர்வித்து, அவர்கள் விட்டெறியும் பிச்சைகளுக்காக அவர்தம் வீட்டு வாசல்களிலே புலமையுலகம் தவமிருந்த நேரமும்கூட.

பெரும் புலவர்கள் என்போரும்கூட ஒழுக்க இலக்கியச் சிந்தனை அருகியவர்களாக தூது இலக்கியங்களையும் உலாக் களையும், கோவைகளையும், தலபுராணங்களையும் 'கூளப்ப நாயக்கன் காதல்' போன்ற காமச் சுவை நனி சொட்டச் சொட்டக் கூறும் காதல் இலக்கியங்களையும் உருவாக்கிக் கொண்டிருந்தனர்.

தமிழ் இலக்கிய உலகில் இருள் சூழ்ந்திருந்த இந்தக் கால கட்டத்தை இஸ்லாமியத் தமிழ்ப் புலமையுலகம் முழுக்க முழுக்கத் தனக்குரிமையுடைய காலமாக ஆக்கிக் கொண்டது எனலாம். இலக்கியச் சுடரேந்தி இருளகற்ற முனைந்து நின்றது. ஒழுக்கவியல் அடிப்படையில் ஒரு பெருங் காப்பியம் மீண்டும் உருவாகாதா என்று இலக்கிய உலகு ஏங்கியதற்கு மாறாகப் பதினைந்து அருந்தமிழ்க காப்பியங் களைத் தமிழுக்குப் பரிசளித்துத் தமிழ்க் காப்பியப் பூங்கா வை செழுமையின் உச்சத்திற்கு உயர்த்தியது. தமிழ் இலக் கிய வரலாற்றில் முதன் முறையாக ஒரே இஸ்லாமியத் தமிழ்ப் புலவர் நான்கு காப்பியங்களை எழுதிக் குவித்தது இந்தக் கால கட்டத்தில்தான்.

நானூறுக்கு மேற்பட்ட இஸ்லாமியத் தமிழ்ப்புலவர் கள் ஆயிரத்துக்கும் அதிகமான இலக்கியங்களை எழுதிக் குவித்தார்கள். 'படைப்போர்' போன்ற புதிய புதிய இலக்கியத் துறைகளைத் தமிழிலே தோற்றுவித்து வளா மூட்டினார்கள்.

தமிழகமே அரசியல் போராட்டங்களில் ஆழ்ந்து கிடந்த சூழலில் இஸ்லாமியத் தமிழ்ப் புலமையுலகு அமைதியான

இலக்கியப்பணியில் தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொண்டிருந்தது. இலக்கிய இருள் மேகத்தைக் கிழித்து ஒளி பாய்ச்சியது. சுருங்கச் சொன்னால் இலக்கிய வரலாற்றில் படியவிருந்த இருளை, தேக்க நிலையைப் போக்கிய பெருமையின் பெரும்பகுதி இஸ்லாமியத் தமிழ் புலமை யுலகையே சாரும், மூன்னூறு ஆண்டுக் கால வரலாற்றின் முழுச் சொந்தக்காரர்களாக இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் தங்களை ஆக்கிக் கொண்டார்கள் என்றுகூட கூறலாம்.

முன்னூறு ஆண்டுகளில் உருவாகி வெளிவந்த இலக்கியங்களில் எண்ணிக்கைப் பெருக்கத்தில் மட்டுமல்லாமல் கருவிலும் உருவிலும் கூட தனி வழி கண்டு இமயமென உயர்ந்து நின்றவர்கள் இஸ்லாமியப் புலவர்கள் என்பதை எளிதில் மறக்கவோ மறுக்கவோ அல்லது மறைக்கவோ முடியாது.

தமிழுக்கேயுரிய இலக்கியப் பண்புகளைப் போற்றிப் பாதுகாத்து நிலைபெறச் செய்ததோடு, 'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல; கால வகையினானே' என்ற நன்னூலாரின் கூற்றுக்கேற்ப-கால வளர்ச்சிக்கொப்ப புதியன போற்றி படைப்போர், மசலா, கிஸ்ஸா போன்ற புதுவகை இலக்கியத் துறைகளைப் புகுத்தி வீழ்ச்சியை நோக்கிச் சென்ற தமிழ் இலக்கிய உலகைத் தடுத்து நிறுத்தியதோடு வளர்ச்சிப் பாதையிலே இமயமென நிமிர்ந்து நிற்கச் செய்த பெருமை இஸ்லாமியத் தமிழ்ப் புலமை உலகையே சாரும் என்பது மிகைப்படுத்திக் கூறுவதல்ல; தமிழ் இலக்கிய வரலாறு தெளிவாகப் புகட்டும் உண்மை.

மொத்தத்தில் முறையாகத் தமிழ் இலக்கிய வரலாறு எழுதும்போது 16 முதல் 19-ம் நூற்றாண்டு வரையுள்ள முன்னூறு ஆண்டுக் கால இலக்கிய வரலாற்றை பெரும்பாலும் இஸ்லாமியத் தமிழப் புலவர்களின் வரலாறாகத் தான் எழுத முடியும். இதை காலத்தின் தீர்ப்பு என்றே கூறிவிடலாம்.

இவ்வாறு எச்சமயத்தவர் தமிழ்த்தொண்டுக்கும் சளைக்காத தமிழ்ப் பணியை இஸ்லாமியப் புலவருலகம் ஆற்றியிருந்தும் அதன் சிறப்பையும் பெருக்கத்தையும் தமிழ் மக்கள் உணர்ந்து தெளிய வழியில்லாது. இஸ்லாமியத் தமிழ் புலவர்களும் அவர் தம் படைப்புகளும் காலத்தால் மறக்கப்பட்டிருந்த நிலைமை இன்று விரைந்து மாறத் தொடங்கியுள்ளது. மறக்கப்பட்ட இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் செல்வங்களைத் தேடி மக்களிடையே உலவச் செய்யும் பெரும் பணியில் தமிழ்ப் புலமையுலகம் முனைந்து செயல்படத் தொடங்கியுள்ளது. அதன் விளைவே உலக இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கருத்தரங்கு மாநாடுகளும் விரைந்து வெளிவரும் இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மறு வெளியீடுகளும் மதுரைப் பல்கலைக்கழகத்தில் உருவாகியுள்ள இஸ்லாமிய இலக்கிய ஆராய்ச்சிக்கான தனி இருக்கையும் ஆகும்.

இத்தகைய விழிப்புச் சூழ்நிலைக்குக் கட்டியங்கூறும் வகையிலேதான் 1976ஆம் ஆண்டில் விடுதலைத் திருநாளான ஆகஸ்ட் 15ஆம் நாளன்று சென்னைப் புதுக்கல்லூரியில் 'சீறாப்புராணக் கருத்தரங்கு' சீரும் சிறப்புமாக நடந்து முடிந்தது.

உலகம் குறுகி வரும் இன்றைய நிலையில் மனித உள்ளங்களை நெருங்கி உறவாடி ஒன்றுபடுத்தும் ஆற்றல் இலக்கியங்களுக்கே உண்டு. ஒருமைப் பாடெனும் உயர் குறிக்கோளை மனித குலம் எளிதில் எட்டிப்பிடிக்க இலக்கியமே இணையற்ற சாதனம் என்பதை அறிவுலகம் தீவிரமாக உணர்ந்து வருகிறது.

'ஒரு சமயத்தைச் சார்ந்தோர் மற்ற சமயத்தவரின் இலக்கியத்தை விருப்போடு படித்து அதன் சிறப்புகளை' உளந்திறந்து பாராட்டிப் போற்றும் மனப் பக்குவம் என்று உருவாகிறதோ அப்போதுதான் உண்மையான ஒருமைப் பாட்டுணர்வு மக்களிடையே வலுவாகக் காலூன்ற முடியும் என்றார் மறைந்த மாமேதை அபுல் கலாம் ஆஸாத் அவர்

கள். அவர் தம் கனவைப் பூரணமாகத் தமிழகம் இன்று நிறைவேற்றி வருகிறது. கம்பராமாயணம் போன்ற இலக்கியச் செல்வங்களை இஸ்லாமியத் தமிழறிஞர்களும் சீறாப் புராணம் போன்ற இஸ்லாமியக் காப்பியங்களை முஸ்லிமல்லாத பிற சமயத் தமிழறிஞர்களும் ஆராய்ந்து போற்றும் இனிய சூழலை தமிழ் நாட்டிலே இன்று காண்கிறோம்.

இஸ்லாமிய இலக்கியமாயினும் அல்லது வேறு எந்தச் சமயச் சார்புள்ள இலக்கியமாயினும் அதிலுள்ள சமயக் கருத்துக்கள் வேண்டுமானால் அந்தந்தச் சமயங்களுக்குச் சொந்தமானதாக இருக்கலாம். ஆனால், இலக்கியம் என்ற அளவில் அவை உலகத்துக்குச் சொந்தம், மனிதகுலம் முழுமைக்குமான பொதுச் சொத்து.

கருத்தரங்கு வெற்றிக்கு மூலவர்களாக விளங்கியவர்கள் ஆய்வாளர்கள் ஆவார்கள். முதுபெரும் தமிழறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறை தலைவர் டாக்டர் சி பாலசுப்பிரமணியம், பெரும் புலவர் பேராசிரியர் சி. நயினார் முகம்மது, கலைமாமணி கவி கா.மு. ஷெரீப், திரு இரா. முத்துகுமாரசாமி, திருமதி கிருஷ்ணா சஞ்சீவி, ஜனாப் ஜே. எம். சாலி, சிலம்பொலி செல்லப்பனார், பேராசிரியர் க. ப. அறவாணன், தக்கலை எம். எஸ். பஷீர் போன்றோர் எனது நோக்கை நன்குணர்ந்தவர்களாக மனமுவந்து ஒத்துழைப்பு நல்கியதோடு அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கருத்தரங்கில் படித்துப் பெருமைப்படுத்தினார்கள். இவர்கட்கு என்றும் நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

எனது இலக்கிய முயற்சிகளுக்குப் பேராதரவு காட்டி வரும் பெருந்தகை அல்ஹாஜ் ஆ. க. அ. அப்துல சமத் சாஹிப் அவர்கள் இந்நூலுக்கு அருமையான முன்னுரை எழுதியுள்ளார்கள்.

முதல் பதிப்பை விரும்பி ஏற்று ஆரவளித்த இலக்கிய ஆர்வலர்கள் இவ்விரண்டாம் பதிப்பிற்கும் நல்லாதரவு நல்குவார்கள் என நம்புகிறேன்.

அன்பன்,

**மணவை முஸ்தபா**

தொகுப்பாசிரியர்

# முகப்பு

தாய்மொழிக்குத் தன்னேரில்லாத் சிறப்புக்கள் பல உண்டு. அவற்றில் ஒன்று;

உலகளாவிய சமயங்கள் பலவற்றின் அடிப்படையில் அமைந்த பெருங்காப்பியங்களை அது பெற்றிருப்பதாகும்.

சைவ சமயப் பெரிய புராணமும், வைணவ கம்ப ராமயணமும், சமண சமயச் சார்பான சீவக சிந்தாமணியும் பௌத்தம் தழுவிய மணிமேகலையும், கிறித்துவத் தேம்பாவணியும் அப்பெருங் காப்பியங்களில் சிலவாகும்.

இந்த வழிவாற்றில் இஸ்லாமிய நெறி சார்பாக இன்பத் தமிழில் விளைந்த செஞ் சொற் காப்பியம் ''சீறாப்புராணம்'' ஆகும்.

அரபு மொழியில் ''சூறத்'' என்றால் வடிவம் ''சீறத்'' என்றால் வரலாறு எனப் பொருள்படும்.

அகில உலகிற்கும் அருட்கொடையாக அருளப் பெற்ற அண்ணலார் நாயகத் திருமேனி முஹம்மது (சல்) அவர்களின் வரலாற்றை, காப்பிய வடிவில் தர முற்பட்டார் கவிஞர் உமறு. அது ''சீறாப்புராணம்'' என்னும் மாறப் புகழ்படைத்த காவியமாக உருப்பெற்றது.

பதினேழாம் நூற்றாண்டின் மத்தியில் நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த நாகலாபுரத்தில், நறுமணப் பொருட்கள் உற்பத்தி செய்து வழங்கும் வணிகக் குடும்பத்தில், செய்கு முஹம்மது அலியார் என்பவரின் வழித் தோன்றலாகப் பிறந்தவர் உமறு.

எட்டயபுரத்து அரசவைக் கவிஞராக விளங்கிய, கவிக்குயில் கடிகை முத்துப் புலவரிடம் தமிழ் கற்று பதினாறு வயதினிலேயே, வடநாட்டுக் கவிஞர் வாலை வாருதி என்பாரைத் தம் வாதத்தால் வென்ற காரணத்தினால் எட்டையபுரத்து அரசவைக் கவிஞராக ஏற்றம் பெற்றார் உமறு.

மூன்று காண்டங்களையும், 92 படலங்களையும், 5027 பாடல்களையும் கொண்டதாகச் 'சீறா' விளங்குகிறது.

தமிழ் இலக்கியங்களில் ஆழ்ந்த ஈடுபாடும் தேர்ந்த ஞானமும், கொண்டிருந்த உமறுப்புலவருக்கு, காப்பியம் படைப்பது கைவந்த கலையேயாயினும் சில இடர்பாடுகள் அவருக்கு எதிர்ப்படச் செய்தன.

ஏனெனில் அவருடைய காப்பியத்தின் தலைநாயகர் வரலாற்றின் முழு ஒளியில் பிறந்த இறைவனின் தீர்க்கதரிசி அண்ணலார் அவர்களுடைய ஒவ்வொரு சொல்லும் செயலும், அவர்கள் திருமுன் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் பதியப்பட்ட வரலாறாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன.

அந்த வரலாற்று நாயகரின் வாழ்க்கையே முன்மாதிரியாகக் கொண்டு வாழ்ந்து வரும் முஸ்லிம்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக, ஆயிரம் ஆயிரமாகத் தமிழகத்தில் நிலைத்து நீடித்து இசைபட வாழ்ந்திருக்கிறார்கள்.

இந்தப் பின்னணியில் கவிஞர் உமறு, தம் காப்பியப் பெருமானார் மீது, இலக்கியச் சுவைக்காக, கற்பனையை ஏற்றிக் கூறினால் அது இன்னலுக்கு வித்திட்டிருக்கக்கூடும்.

ஏனெனில், "நான் சொல்லாததையோ, செய்யாததையோ, நான் சொன்னதாகவோ, செய்ததாகவோ சொல்வது பாபமாகும்" என அந்த உண்மையின் தூதர் அவர்கள் எச்சரித்துச் சென்றிருக்கிறார்கள்.

அதே நேரத்தில், புனைவுகளுக்கு அறவே இடம் மறுத்தாலும், காப்பியச்சுவை குன்றிவிடும் என்பதையும் கவிஞர் உமறு அறிந்திருந்தார்.

எனவேதான் வரலாற்று வரம்பிலிருந்து வழுவி விடாமலும் புனைவுகளை முற்றாகப் புறக்கணித்து விடாமலும் காப்பியம் படைக்க வேண்டிய கட்டாயத்தில் நிறுத்தப்பட்டார் கவிஞர் உமறு.

சீறாப்புராணத்தில் வரலாற்று ஆசிரியருடைய பொறுப்பும் புரிகிறது; காவியப் புலவருடைய சிறப்பும் தெரிகிறது.

தம் உள்ளத்தே வரித்த இஸ்லாமிய வழிக்கும், ஊரைத்து வாழ்ந்த தமிழ் மொழிக்கும் கவிஞர் பெருமான் உமறு ஒருங்கே செய்த பெருஞ் சேவைக்குச் சிறந்த சான்றாக சீறாப்புராணம் விளங்குகிறது.

பேராசிரியர் பெருந்தகை, டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் சொல்வதுபோல, "இஸ்லாம்—தமிழ்" என்னும் இருபெரும் பண்பாடுகள் இணைந்து அளவளாவி, ஒன்றையொன்று வளர்ந்து உலகத்தையே வளர்க்க வேண்டும் என்று கவிஞர் உமறு கண்ட பெருங் கனவு சீறாப்புராணமாக வடிவெடுத்தது."

அந்தச் சீறாவைச் செந்தமிழ் அறிந்தார் சிந்தையிலெல்லாம் இடம் பெறச் செய்ய ஜனாப் மணவை முஸ்தபா அவர்கள் எடுததுக் கொண்ட முயற்சி 'சிந்தைக்கினிய சீறா' வாக உருப்பெற்று உங்கள் கரங்களில் தவழ்கிறது

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக் காலம் பிறந்து விட்டிருக்கிறது.

மதுரைப் பல்கலைக் கழகத்தில், இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்திற்கென ஓர் இருக்கை ஏற்படுத்தி இஸ்லாமியத் தமிழ் இலக்கிய ஆய்வு முனைப்புடன் நடந்து வருகிறது

தமிழ் முஸ்லிம்களின் சிறந்த காப்பியமான சீறாப்புராணத்தைப் படித்து ரசிக்க வேண்டுமென்ற அறிவாசை கொண்டவர்களுக்குக் கிடைக்கிற அமுதக் கலசம் போல "சிந்தைககினிய சீறா" அமைந்து விட்டிருக்கிறது.

நம்முடைய காலத்தில், நாச்சிகுளத்தாரின் அரிய முயற்சியால் சீறாவுக்கான புதிய பதிப்பு, வெளிவந்ததைத் தொடர்ந்து கடந்த 1975இல் இளையாங்குடி டாக்டர் ஜாகீர் ஹுஸைன் கல்லூரியினர் சீறாவின் பெயரால் கருத்தரங்கு நடத்தி, மலர் வெளியிட்டனர். அந்நறுமண மலரின் 14 இதழ்களின் தொகுப்பு மதுரைப் பல்கலை

கழகத்தில் பாட நூலாக ஏற்றுக் கொள்ளப்பெறும் சிறப்பினையும் பெற்றது.

இரண்டாண்டுகளுக்கு முன்னர், புகழ்பெற்ற தமிழ் எழுத்தாளரும் நல்ல சுவையறிஞருமான ஜனாப் மணவை முஸ்தபா அவர்கள், தன்னந்தனியராக முன்னின்று சீறாவின் பெயரால் சென்னை மாநகரில் கருத்தரங்கு நடத்தினார்

தக்கவர்களும், தகுதி மிக்கவர்களுமான பத்துப் பேரறிஞர்கள் அக்கருத்தரங்கில், வழங்கிய கருவூலங்கள் அறிவுப் பெட்டகமாக 'சிந்தைக்கினிய சீறா' என்ற பெயர் பெற்று, இந்நூலாக உருப்பெற்றிருக்கிறது.

சீறாவின் சிறப்பைப் பல்வேறு கோணங்களில் சுவைத் தேர்ச்சிமிக்க அறிஞர் பெருமக்கள் திறனாய்வு செய்து வெளியிட்டுள்ள தன்மை வியந்து பாராட்டத்தக்கதாக அமைந்திருக்கிறது.

நானூறுக்கு மேற்பட்ட பக்கங்கள் கொண்ட இந்நூலில் நூற்றுக்கு மேற்பட்ட பக்கங்களில் கலாநிதி அல்ஹாஜ் உவைஸ் அவர்களின் இரு எழுத்தோவியங்கள் இடம் பெற்றிருக்கின்றன.

கலாநிதி அவர்கள் சீறாவில் உள்ள வரலாற்றுக் குறிப்புகளை எடுத்துக்காட்டும் முறையும், அதிலுள்ள அறபு பாரசீகச் சொற்களை விளக்கிக் காட்டும் விதமும், அவர் ஓர் தமிழ் அறிஞர் மட்டுமல்ல, இஸ்லாமிய மொழியில் மேதையுமாவார் என்பதற்குச் சான்றாக விளங்குகின்றன.

'உமறுப் புலவரின் இலக்கியத் திறனைக் கூறவந்த பேராசிரியர் அறவாணர். "காவியத்தில் பரவிக் கிடக்கும் அரபு, பாரசீக சொற்கள் சுவைஞனின் பார்வையில் சுமை தான் எனினும், மேலே அழுத்தமான தோல் இருக்கிறதே என்பதற்காக பலாப்பழத்தை விட்டுவிடுகிறோமா? பல்லை உடைக்கும் கணுக்கள் இருக்கின்றனவே என்பதற்காக கரும்பை விரும்பாதவர் உண்டா?......" என்று கேட்டு

'சீறாப்புராணம்—நல்ல கவிதைகளின் களஞ்சியம், கற்பனை திறன்களின் கருவூலம், கருத்துக்களின் உருவப்பேழை, கவரும் உவமைகளின் பெட்டகம்'' எனக் கூறிமுடிக்கும் பாங்கு நயக்கத்தக்கதாக உள்ளது.

தமிழ்ப் பண்பாடுகள் சீறாவில் நிரவியுள்ள தன்மையை சிலம்பொலி செல்லப்பனார் சொல்லிச் செல்லும் தன்மை உலகளாவிய இருபெரும் (தமிழ், இஸ்லாமியப்) பண்பாடு களின் ஒருமைப்பாட்டை உணர்த்துகிறது.

'சீறாப்புராணம், சீரிய புராண' மாக திகழும் விதத்தை சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியனார் விளக்கிக் காட்டும் முறை சிறப்பாக இருக்கிறது.

உமறு தரும் பெண்மை நலத்தைப்பற்றி பேராசிரியை கிருட்டிணா சஞ்சீவி எழுதியுள்ள கட்டுரையை இன்னும் சிறிது விரிவுபடுத்தினால் 'டாக்டர்' பட்டம் பெறுதற்குரிய பொருளாக அமைவது திண்ணம் எனலாம்

சீறாவில் இயற்கை கடந்த செயல்களை தக்கலை பஷீர் விவரிக்கும் விதம், சிறப்பானதாக அமைந்துள்ளது.

முதுபெரும் தமிழறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி சீறாவின் காப்பியப் பண்புகளை கட்டுரைக்குரிய பண்போடு எடுத்துக் காட்டுகிறார்.

'உமறுவின் தனித்திறனை' விளக்க வந்த ஜே. எம். சாலி யின் கட்டுரையில் அந்தத் 'திறமை' 'சாலி' யின் தனித்திறன் பளிச்சிடுகிறது.

பானைசோற்றிலே ஒரு பருக்கையைப் பதம் பார்ப்பது போல சீறாவில் ஒரு கவிதைக்குக் கவி கா. மு. ஷெரீப் அவர் தந்துள்ள விளக்கம் கருத்தினை, ஒவ்வொரு வரியோடும் பொருத்தம் பார்க்கும். அந்த முறை நமக்குப் புதிய முறை யாகத் தெரிகிறது. அந்தப் பொருத்தத்திலே கலைமாமணி யின் தனி முத்திரையில் பொருந்தியிருக்கிறது.

இஸ்லாமியர்களின் நாட்டுப் பற்றையும், மொழிப் பற்றையும், தன்னிகரில்லாத தமிழ்ப் புலமையையும் வரலாற்று வழியே படம் பிடித்துக் காட்டி விடுகிறார் மௌலவி எம். அப்துல் வஹ்ஹாப் சாஹிப் அவர்கள்.

என்ன இருப்பினும், இஸ்லாமிய மரபினை மறந்து விடாமல் நினைவூட்டுகிறார். ஜனாப் சையந் முஹம்மத் (ஹஸன்) அவர்கள்.

அத்தனைக்கும் அடக்க உரையாக, அறிஞர் அல்ஹாஜ் எஸ். எம். சுலைமான் ஐ.ஏ.எஸ். அவர்களின் தொடக்கவுரை அமைந்திருக்கிறது.

இந்நூலிலேயே மிகச் சுவையான பகுதியாக சீறாவும் அதன் சார்பு நூல்களும் அச்சு வாகனமேறிய வரலாறும் அமைந்திருக்கிறது. அந்த வரலாற்றைப் பூரணப்படுத்த அது தொடர்புடைய வாசகர் வட்டம் உதவும் எனத் தொகுப்பாசிரியர் எதிர்பார்ப்பது நியாயமேயாகும்.

பாரம்பரியமாக நறுமணப் பொருட்கள் தயாரித்தளித்த உமறு தமிழ்க் கவிதைப் பாக்களைக் கோத்து இஸ்லாமிய இன் தமிழ்க் காவியமாக்கித் தந்தார்.

முன்னூறு ஆண்டுகள் வரலாற்றையுடைய அம் மா காவியத்திற்கு மீண்டும் மணம் பூச முற்பட்டிருக்கிறார் ஜனாப் மணவை முஸ்தபா அவர்கள்.

வாடா மலர்களைக் கொண்ட அமரகாவியம் சீறாப் புராணம் அதற்கு மாறாகப் புகழ்மணம் சேர்க்கும் துணை நூல், 'சிந்தைக்கினிய சீறா'

தமிழ்ச் சமுதாயம், தரமான இம்முயற்சிக்கு தரும் ஆதரவு மேலும் பல தொகுப்புகள் தோன்ற, துணையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

கருணை மிக்க இறைவனின் இன்னருள் எல்லாப் பணிகளுக்கும் துணை நிற்குமாக.

அன்பன்,

**ஆ. கா. அ. அப்துஸ் ஸமத்**

# திறப்பு

ஹளரத் ஹஸ்ஸானுப்னு தாபித் (றலி) அவர்களின் மா கவிதையைப் பாராட்டி முகம்மது நபி (சல்) அவர்கள் ''இன்னல்லாஹ யு அய்யிது ஹஸ்ஸா(ன்) பிரூஹில் குதுஸி'' —திடமாக, புனித இறையுணர்வைக் கொண்டு அல்லாஹ் ஹஸ்ஸானுச்கு உதவி செய்கிறான் என்று குறிப்பிட்டார்கள். நலம் விளையும் கவிதை புனைபவன், நாயனால் தூண்டப் படுகிறான். அவன் கவிதை ஆண்டவனின் நல்லருளாகும் என்பதே இதன் விழுமிய கருத்தாகும். தொன்று தொட்டு இஸ்லாமியத் தொண்டாற்றிய முஸ்லிம் புலவர் பெரு மக்கள் பெருமானார் அவர்களைப் பற்றிப் பாமாலைகள் புனைவதைப் பெரும் பேறாகக் கருதி வந்துள்ளனர். அனைத் துலக மொழிகள் பலவற்றிலும் அவர்களைப் பற்றிய இலக் கியங்கள் சிறந்த சொற் சித்திரங்களாக இயங்கி வருகின்றன. அரபி, பார்சி உருது, துருக்கி, ஆங்கிலமொழிகளில் அண்ண லாரின் பண்ணான வாழ்வைப் படம் பிடித்துக் காட்டும் பொன்னான நூல்கள் பல உள்ளன. சரித்திர வல்லுநர்கள் சரித்திரமாகவும், தத்துவதுறைத் தலைவர்கள் அறநூலாக வும், மார்க்க மேதைகள் சமய விளக்கமாகவும், கவிஞர்கள் காப்பியமாகவும், பல்வேறு இலக்கிய வடிவங்களாய் இறை தூதரின் எழிலார். திருவாழ்வு வரையப்பட்டுக் கொண்டே வருகின்றது. அருந்தமிழ் மொழியில் நபியவர்களின் பெரு வாழ்வை முறைப்படித் தொடங்கிப் பாடிய பெருமை புலவர் கோமான் உமறுப்புலவர் அவர்களையே சாரும்.

தமிழ்க் காப்பியங்கள் ஏனைய பெரும் உலகக் காப்பியங் களைப் போல ஆழ்ந்த அனுபவத்திலிருந்து தோன்றியவை. அவை ஒவ்வொன்றும் வீர வாழ்க்கையினையும், அவ்வாழ்க் கையின் முடிபாகிய உயர்நிலையாம் ஆன்மீக நிலையினையும் தெளிவுற விளக்குகின்றன. ஒரு மொழியின் சிறப் பியல்புகள் அத்தனையும் பிரதிபலிப்பதாக அமைவது காப்பியம். இலக்கிய கோபுரத்தின் உச்சி மகுடமாகத்

திகழ்வது காப்பியம். தன்னால் பெறக்கூடிய அனைத்தையும் கையாண்டு அலங்காரமாகவும், கண்கவர் முறையிலும் கவிஞன் கோபுரத்தைக் கட்டி எழுப்புகிறான். பெருங் காப்பிய இலக்கணங்களாகிய தன்னேரிலாத் தலைவன் (நபி கள் நாயகம்), நானிலத்தின் வருணனை இவைகளைப் பெற் றுள்ளமையால் சீறாப்புராணம் பெருங்காப்பிய வகையில் சேர்க்கப்படும். அதுமட்டுமின்றித் தமிழ் நாட்டின் முதல் வரலாற்றுக் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தைப் போல நபிகள் நாயகத்தின் வரலாற்றைத் தன்னகத்தே கொண்ட சீறாப்புராணமும் வரலாற்றுக் காப்பியம் (Historic Epic) எனலாம். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் தலை சிறந்தது சீறாப்புராணம். உமறுப் புலவர் தமிழ் மொழிப் பற்றும், தமிழ் நாட்டுப் பற்றும் மிகுதியாக உடையவர். அவர் காப்பியம் இயற்றியது "பால்வாய்ப் பசுந் தமிழில்". ஆனால் அவருடைய காப்பி யத் தலைவர் அரபு நாட்டில் வாழ்ந்தவர். அவர் போதித்த மதமும் பிற தமிழ்க் காப்பியங்கள் பேசுகின்ற மதங்களினின் றும் வேறுபட்டது. என்றாலும் சீறாப்புராணத்தில் தமிழும், அரபியும், தமிழ்நாடும், அரபு நாடும், இஸ்லாமும் இந்திய மதங்களும் சேர்ந்து, இயைந்து, இணைந்து பட்டை தீட்டப் பட்ட கண்ணாடியின் மீது வீசும் ஒளி அழகிய பல வண்ணங் களை கண்ணுக்கு விருந்தாகக் காட்டுவது போல அறிவுக்கும் சிந்தைக்கும், பலவகை அனுபவங்களையும் சுவைகளையும் அளித்து நிற்கிறது என்று அழகுற மாண்புமிகு நீதிபதி எம்.எம். இஸ்மாயில் அவர்கள் எடுத்துக்காட்டியுள்ளார்கள். உமறுப்புலவரின் காப்பியத்தலைவர் புராண நாயகரோ, இதி காச புருஷரோ அல்லர்; சரித்திர நாயகர், "நபிகள் வாழ்க் கையில் ஒவ்வொரு சம்பவமும் வெள்ளிடை மலைபோல் இங்கு விளங்குகிறது. ஒரே பகலாக இருப்பதுடன் அதனொளி ஒவ்வொரு பொருள்மீதும் வீசுகின்றது. எப்பொருளும் அவ் வொளியிலிருந்து மறைய இடமே இல்லை" என்று ரெவ ரெண்ட்பாஸ் வொர்த் ஸ்மித் தெள்ளிதின் உணர்த்துகிறார். அத்தகைய வரலாற்றுப் புனிதரின் வாழ்வும், வாக்கும் பதிவு

செய்யப்பட்டவை. ஆகவே சரித்திர நாயகரைப் பற்றிப் பாடப்படும் காப்பியம் என்று எல்லா இலக்கியப் பண்புகளையும், அணிகளையும் நயங்களையும் தன்னகத்தே கொண்டதாய்ச் சரித்திர உண்மைக்கு மாறுபடாமலும் இருக்க வேண்டும். எனவே காப்பிய நாயகனைத் தன் விருப்பம் போல் புனைந்து சற்றனை வானில் பறக்கவிடவோ, விரும்பிய வண்ணம் தீட்டவோ வடிக்கவோ உமறுப் புலவருக்கு வாய்ப்பில்லை. கவிஞருடைய கற்பனையூற்றை, உண்மை நிகழ்ச்சிகள் ஆங்காங்கே கட்டுப்படுத்தும். வரலாறு என்னும் கட்டுக்கோப்புக்குள் காவியம் சமைக்கும் இன்றியமையாமை புலவருக்கு ஏற்பட்டது. இருந்த போதிலும் எப்படியோ நபிகள் நாயகத்தைப் பற்றிச் செவி வழிவந்த கர்ண பரம்பரையான கதைகள் சிலவும், வரலாற்று ஏட்டில் பதிவு செய்யப்படாத நிகழ்ச்சிகள், செய்திகள் சிலவும் சீறாப்புராணத்தில் இடம் பெற்றுள்ளன.

உமறுப்புலவர் தமிழ்ப் பண்பாட்டில் ஊறித் திளைத்தவர். நாயகம் வாழ்ந்த இடம் அவருக்குப் பாலைவனமாகக் காட்சியளிக்காமல் சோலைவனமாகக் காட்சியளிக்கிறது. நானிலத்தின் வளங்கள், தமிழ் நாட்டுணர்வு, தென்பாண்டி நாட்டுக் குரவை ஒலி, அராபியப் பெண்கள் தமிழ் மாதரைப் போன்று திலகம் சூடினமை முதலிய தமிழ்மரபுகளைக் குறிப்பிடுகிறார். சுருங்கச் சொல்லின் அரபுநாட்டுத் தலைவரைத் தமிழ்நாட்டுச் சூழலில் சந்திக்கும் வாய்ப்பினை புலவர் சீராக வழங்குகின்றார். புராணத்தில் இடம்பெறும் விழுமிய கருத்துகள் இஸ்லாமியத் தத்துவக் கருத்துகளும், பெருமானாரின் சீரிய அறிவுரைகளுமாகும். ஆனால் அவை உடுத்துள்ள உடையோ, புனைந்துள்ள அலங்காரமோ தமிழுடையும், தமிழ் அலங்காரமுமாகும்.

உள்ளதை உள்ளவாறு கூறாமல் உணர்ந்தவாறு உள்ளம் விரும்புவாறு அமையும் கற்பனை, இலக்கியத்திற்குச் சிறப்பைத் தரும். சீறாக் கவிதையின் கற்பனை நயத்தையும், உவமை நயத்தையும், கன்னல் நிகர்ச்சுவையையும் சுவைக்க

ஒரு சில பாட்டுகளை நோக்குவோம். மருதநில வயலில் உழத்தியர் நாற்று நடும் காட்சி இதோ,

"கையினிற் செறிந்த முடியினைச் சிதறிக்
கடைசியர் கரங்கள் தொட்(டு) ஒழுங்காய்ச்
செய்யினிற் பதிப்பத் துளிகரு(ம்) சேறு
தெறித்திடுஞ் செழுமுகச் செவ்வி
தூய்யவெண் திரைபாய் சுருட்டிமேல் எறியும்
தொடுகடல் முகட்(டு) இடை எழுந்து
வையகஞ் சிறப்ப வரு(ம்) முழுமதியு(ம்)
மறுவு(ம்) ஒத்(து) இருந்தன மாதோ." 1

மருத நிலத்து உழத்தியர்கள் தங்கள் கையில் பொருந்திய நிறைந்த நாற்று முடியினைச் சிதறித் தங்கள் கைகளால் தொட்டு வரிசையாய் வயலினில் நடும்பொழுது தெறித்தெழும் சேற்றின் கருநிறத் துளிகள், அவர்களின் சுந்தர முகத்தில் ஒட்டிடும் காட்சி, தூய்மையான வெண்ணிற அலையாகிய பாயைச் சுருட்டி மேல் எறியும் மருத நிலக் கடலின் உச்சியின்மீது, உலகம் சிறக்க எழுந்துவரும் பூரணச் சந்திரனும் அதன் முகத்தில் உள்ள களங்கமும் ஒத்து இருந்தது.

'செறிந்த' என்ற சொல்லில் உழத்தியர் கையில் நாற்று நிறைந்திருக்கும் தன்மையும், சேறு அதாவது வயலில் நடுவதற்காக உள்ள நாற்று என்று வரும் பொருள் தொனிப்பதையும் காண்க, 'கையினில்' ஒன்று ஒருமையில் கூறிய புலவர் 'கரங்கள் தொட்டு' என்று பன்மையில் சொல்லியிருப்பதை நோக்குக. உழத்தியர் நடுவதற்கு முன் நாற்று முடியை ஒரு கையிலேயே வைத்திருக்கும் தன்மையும், அதைச் சிதறிச் சேற்றில் நடும்போது இரு கைகளையும் அவர்கள் பயன்படுத்துவதையும் மனதிற் கொள்க. கடைசியர் என்ற வார்த்தையில்தான் எத்தனை அர்த்தபுஷ்டி. கடைசியர் என்றால் மருத நிலப்பெண்கள். நடவு எப்படி நடு

1. சீறா நாட்டுப்படலம் 30.

கிறார்கள்? ஒழுங்காய் நடுகிறார்கள், வரிசையாய் நடுகிறார்கள், இப்போது நாம் ஜப்பான் நடவு என்று சொல்லும் வரிசை நடவு அக்காலத்திலேயே தமிழ் நாட்டில் இருந்திருக்க வேண்டும். அது ஒன்றும் தமிழ்நாட்டிற்குப் புதிதல்ல என்று தோன்றுகிறது. மேற்பார்வைக்கு எவரும் உண்டா? இல்லை. இருந்தும் உழத்தியர் தங்கள் பணியை ஒழுங்காய்ச் செவ்வனே செய்கின்றனர். எப்படி முதலாளி-தொழிலாளி உறவு? 'செழுமுகம்'' என்று சொல்வதில் எத்தனை நயம்? செழுமை என்றால் வளமை, சௌந்தர்யம் என்று பொருள். உழத்தியர் வறுமையின்றி, மனநிறைவோடு வாழ்ந்தனர். அவர்களின் சௌந்தர்யமான முகம் வளப்பத்தைப் பிரதிபலிக்கிறது. ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்பீர், எத்துணைப் பொருத்தம்? உழத்தியர் நிலையே இப்படி என்றால் ஏனையவர் எத்தகைய வள வாழ்வு வாழ்ந்திருப்பார்கள் என்பதைப் புலவர், வாசகரின் யூகத்திற்கு விட்டு விடுகிறார். 'தொடு கடல்' என்ற பதத்தொடர் சிறப்புடையது. 'தொடு' என்ற சொல்லுக்குத் தோண்டல், மருத நிலம், வயல் என்றெல்லாம் பொருள் உண்டு மருத நிலக்கடல் என்று சொல்வதில் எத்தனை அழகு? தொடுகடல் என்பதற்கு இந்துப் புராணப்படி சாகர்களால் தோண்டப்பட்ட கடல் என்றும் கொள்ளலாம். வயல், கடல் போன்று பரந்துள்ளது. உழத்தியர் நடும் போது குனிவதும் நிமிர்வதுமாக இருக்கிறார்கள். அக்காட்சிக் கடலில் அலைகள் எழுவதும். அமைவதும் போலிக்கிறது. உழத்தியர் முகததற்கு 'மறுவுடை முழுமதி', என்று ஏன் புலவர் உவமை சொல்கிறார். பிறிதோரிடத்தில் நபிகள் நாதரை வருணிக்கும்போது,

''............இருளெனும் குபிரின்
குல மறுத்(து) அறநெறி விளக்க
மறுவிலா தெழுந்த முழுமதி போல
முகம்மது நபி பிறந்தனரே.''

என்று கூறுகிறார். சீலமெலாம் ஒருங்கு திரண்டு சேர்ந்த தெழுந்த சீரியர், குறைவில்லா நிறைவுடைப் பூரண மனிதர் நபிகள் நாயகம். அவர்கட்குக் கறை கொண்ட நிலவை உவமை காட்டலாமா? "வையகம் சிறப்ப" என்பது சிந்தனைக்குரியது. முழுமதி எழுவது மாநில நிலத்திற்கு மட்டும் குளிர்ந்த ஒளியைத் தருவதற்கல்ல; உலகம் முழுமைக்கும் வையகத்தின் வளவாழ்வையே, நானிலத்தின் நன்மையையே புலவர் மனதில் கொள்கிறார். என்னே அவரின் பரந்த உள்ளம்! சிறந்த எண்ணம்! எப்படி முழுமதி உலகம் முழுமைக்கும் சொந்தமோ அதேபோன்று நபிகள் நாயகம் அவர்களும் உலகம் முழுமைக்கும் சொந்தம். மன்பதைகட்கெல்லாம் அவர் ஒரு அருட்கொடையல்லவா என்று சொல்லாமற் சொல்லி வியபூட்டுகிறார். சீறாப்புராணமும் இலக்கிய வானிலே ஓர் இனிய நிலாத்தானே! உமறுவின் புலமையும் ஆழி திகர்த்ததுதானே! உழவர் வயலில் நாற்று நடும் காட்சி, அலைகளுக்கிடையே கடலில் முழு நிலா எழும் காட்சி, இவ்விரண்டின் இணைப்பு. இதை இயைபுக் கற்பனை (Associative Imagination) என்பார்கள். கவிதையில் உண்மையிலேயே தண்ணிலவு கொஞ்சி விளையாடுவதோடு தமிழ் நாட்டின் அன்றைய வேளாண்மைச் சிறப்புப் படம்பிடித்துக் காட்டப்படுகிறது. கவிஞரின் கற்பனை நயம் பயக்கும் இன்பத்தில் நம் நெஞ்சமும் கடலலையென நடம் புரிகிறது. மதி எழுவதுபோன்று 'மதி' யும் சுடர்விடுகிறது.

அடலேறு அலி (றலி) அவர்கட்கு மணக்கோலம் செய்விக்கும் பொழுது புத்தாடை உடுத்தினர். அவ்வாடை நிலவொளியில் உள்ள கதிர்களையே நூலாக நூற்றுச் செய்ததுபோல இருந்ததாம்.

"தெள்ளிய மதியின் கதிரினை நூற்றுச்
செய்தெனுந துகிலிடைச் சேர்த்தி..."[1]

1 சீறா. பாத்திமா திருமணப் படலம் 114

மதிக் கதிரை நூற்பது உலகில் இல்லை. இது இல்பொருள் உவமையணியாகும் இவ்வரிய உவமை வாயிலாகத் தமிழ் நாட்டுக் கைத்தொழில் வளத்தையும் நுட்பத்தையும் நம் தொழிலாளர் தம் கைத்திறனையும் நயப்பட நவில்கிறார் கவி. அலி (றலி) அவர்களும் பாத்திமா (றலி) அவர்களும் இணைபிரியாது இல்லறம் நடத்தியதைச் "சொல்லும் பொருளும் போல" வாழ்ந்தனர் என்கிறார். சொல்லை விட்டுப் பொருளைப் பிரிக்க முடியாது. அலி (றலி) யையும், பாத்திமா (றலி) யையும் அதுபோலப் பிரிக்கமுடியாது என்பது கருத்தாகும்.

"சொல்லுடன் பொருளெனச் சுருதி நூன்முறை
இல் லுறைந்து ஒருவருக்கொருவர் இன்பமுற்று
அல்லெனும் கூந்தலும் அரசர் சீயமும்
மல்லலம் புவியிடை மகிழ்வின் வைகினார்." 1

[சுருதி = வேதம்; அல் = இருள்; மல்லல் = வளமை, செல்வம்]

புறவாழ்வை வருணனை செய்த புலவர் கோமான் அக வாழ்வை வருணனை செய்வதைப் பார்ப்போம்.

"அவர்கள் இருவரும் கருத்துப் பேழையாம் திருக்குர்ஆன் வகுத்திட்ட வழி நின்று சீருஞ்சிறப்புமாய் இல்வாழ்வு நடத்தினர். இன்பம் நுகர்ந்தனர். ஒருவருக்கொருவர் இன்பமுற்று" என்று சொல்வதில்தான் எத்தனை நயம்? பரிவர்த்தனைக் காதல் (Reciprocatory Love) என்றல்லவா உணர்த்துகிறார்! அல் என்றால் இரவு. இருளாகிய கரு நிறக் கூந்தலையுடைய பாத்திமா (ரலி) என்று கூந்தலின் சிறப்பை உருவக அணியாற் சுட்டிக் காட்டுகிறார்.

இல்லுறைந்து மல்லலம் புவியிடை மகிழ்வின் வைகினார் —யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பரந்த நோக்கோடு நாட்டு மக்கள் வாழ்விலும் மகிழ்வை

1. சீறா பாத்திமா திருமணப்படலம் 220

ணட்டி வாழ்ந்தனர் எனும் இப்பாடலின் தொனிப்பொருளை யும் இனி விளக்கமாகக் காண்போம்.

பேரறிவுப் பெட்டகம் பாத்திமா (ரலி) வின் திருமணக் கோலம் மாறவில்லை. ஓர் ஏழைப் பக்கீர் வந்து பசிக்கு உணவும், குளிர் தாங்கப் போர்வையும் கேட்கிறார் பாத்திமா (றலி) அவருக்கு உணவளித்துப் புதுப் போர்வையும் கொடுத்தனுப்பினார். பக்கீர் போனதும் நபிகள் நாயகம் அபூபக்கர் (ரலி) உமர்(ரலி)முதலியவர்களுடன் வருகிறார்கள் தம் மகள் பழைய போர்வையுடன் காணப்படுவதைக் கண்டு காரணம் கேட்கிறார்கள். ஒரு பக்கீருக்குத் தந்தேன் என் கிறார் பாத்திமா (ரலி). புதியதை மணக் கோலத்திற்கு வைத்துக் கொண்டு பழையதைக் கொடுத்திருக்கலாமே என மீண்டும் வினாவுகிறார்கள் நபிகள் நாதர். அழகிய பொருள் எதையும் அல்லாஹ்வுக்குக் கொடுக்கத் தயங்கலாகாது என்று தாங்கள்தான் வேதவாக்காகக் கூறினீர்கள். அதன்படி ஒழுகினேன் என்கிறார் பாத்திமா (ரலி).

"அழகியது எவையும் அல்லாஹ்வுக்காகவே
விழைவுடன் கொடுத்திட வேண்டுமென்றுநும்
பழமறை வாக்கினாற் பகிர்ந்ததால் அரோ
மழைதவழ் கொடையனீர் வழங்கினேன் என்றார்."[1]

இங்கு பக்கீருக்குச் செய்த தானம் அல்லாஹ்வுக்கு செய்ததாகவே கூறப்படுகிறது. "கடவுளை நான் தரித்திர நாராயணனாகவே தரிசிக்க விரும்புகிறேன்" என்று காந்தியடி கள் கூறியிருப்பதை ஒப்பு நோக்குக. என்னே கருத்தாழம்.

தாய்க்குலத்தை அறத்தின் வடிவாகக் காண்பது தமிழர் தம் மரபாகும். உமறுப்புலவரும் உத்தமப் பெண்மணிகள் அறம் வளர்த்ததை அழகுறப் போற்றுகிறார். ஓரிடத்து வைக்கப்பட்ட விளக்கொளி பலவிடங்களிற் படர்ந்து பொருள்களை விளக்குதல் போல ஒரு சொல் ஓரிடத்து நின்று செய்யுளிற் பலவிடத்து நின்ற சொற்களோடு பொருந்திப்

1. சீறா பாத்திமா திருமணப் படலம் 206

பொருள் விளைப்பது தீவக அணி என்பார்கள். (தீபகம்=விளக்கு)

இப்பாடலில் கடைநிலைத் (தொழில்) தீவகம் அமைந்துள்ள அணியழகும் சுவைக்கத் தக்கதாகும்.

'வழங்கினேன்' எனுஞ் சொல் பாடலின் பல இடங்களிற் சென்று பொருந்தி அழகியது வழங்கினேன். அல்லாஹ்வுக்காவே வழங்கினேன். விழைவுடன் வழங்கினேன், கொடுத்திட வேண்டுமென்று வழங்கினேன். பழமறை வாக்கினால் வழங்கினேன், நீர் பகர்ந்ததால் வழங்கினேன் எனப் பொருள் முடிவு செய்கிறது.

மேலும் தமிழுக்கேயுரிய சிறப்பு 'ழ' கரம் ஆறு முறை இப்பாடலில் அமைந்து ஓசைக்கு மெருகேற்றுகிறது. அழகு, விழைவு, பழம் முதலிய மங்கலச் சொற்களும் கவிதையைச் சிறக்கச் செய்கின்றன.

சீறாப்புராணத்தைப் பயில்வோர் காயலில் பிறந்து கீழக்கரையில் வாழ்ந்த தத்துவ ஞானி செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்களையும், கீழக்கரை தந்த செம்மல் சீதக்காதி அவர்களையும், அவர்களுக்குப் பின்னர்ப் புலவரைப் புரந்த வள்ளல் பறங்கிப்பேட்டை அபுல்காசிம் மரைக்காயர் அவர்களையும் மறந்து விடலாகாது. சீமான் சீதக்காதியால் ஆதரிக்கப்பட்ட புலவர் மிகப் பலராவர். சீதக்காதியின் பேரில் "நொண்டி நாடகம்" பாடிய புலவர், வள்ளலின் அவையில் உமறுப் புலவரோடு கந்தசாமிப் புலவரும் வீற்றிருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

சந்தமும் தமிழ்த்தேறுங்—கல்வித்
தலைவர் மகிழ் உமறுப்புலவருடன்
செந்தமிழ்க் கந்தசாமிப்—புலவனும்
சீராட்டெனத் தமிழ் பாராட்டவே."

என்பது பாட்டு. உமறுவைக் "கல்வித் தலைவர் மகிழ் உமறு" என்று புகழ்துரைப்பது நோக்கத்தக்கது. உமறுப் புலவர் தம் ஆசானாகிய கடிகை முத்துப் புலவர் வழியொழு

கிப் புலமைத் திறமெல்லாம் பெற்றார் என்னும் செய்தியைப் பாவலர் சோமசுந்தரமணியக்காரர்,

"காவியமெல்லாம் கற்றனர், கடிகை
யாரெனும் கவிகளுக்கரசன்
மேவிய புலமை யாவையு மிவருள்
மேவிட மாற்றுதலனார்;
ஓவிய மொத்தே யவரருகிருந்தே
யுமறதை யிட் கொளலானார்;
நாவியல் பாக்களெதனையு நவிலு
நற்றிற மடைந்தன ரம்மா".

நாவியல் பாக்களெதனையும் நவிலும் நற்றிறம் பெற்றவர் என்று நயம்பட வருணித்திருப்பது நினைந்து மகிழத்தக்கது. புலவர்கள் மத்தியில் உமறுவுக்கு இருந்த பெருமதிப்பினை இப் பாக்கள் இதமாய் இயம்புகின்றன. அருமையாய் அழைக்கப் பெறும் உமறுப்பாவிற்கு "இஸ்லாமிய மகாகவி" என்ற சிந்தைக்கினிய சிறப்புப் பட்டம் முற்றிலும் பொருந்தும் சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் ஆகிய நூல்களின் விருத்த யாப்பிலேயே சீறாப்புராணத்தின் வடிவமும் (form) அமைந்துள்ளது. புலவரேறை 'இஸ்லாமியக் கம்பன்' எனலாம். ஆனால் புலவரின் தன்னடக்கத்தைப் பார்ப்போம். காப்பியங்களைத் துவக்கும் முன்னர் புலவர்கள் அவையடக்கமாகத் தங்களைப் பற்றி ஒருசில கூறிக் கொள்வது மரபு. செந்தமிழ்ப் புலவர்கள் முன் தாம் கவி பாடுவது புயல் காற்றுக்கெதிராக எறும்பு மூச்சு விடுவது போன்றது எனவும், இடியோசைக்கெதிரே கையால் நொடியோசை செய்வது போன்றது எனவும் உமறு இசைத்திருப்பது இன்பம் பயப்பதாகும்.

சீறாப்புராணம் சுவையூறும் இறவாத் தெய்வ மணம் கமழும் காப்பியம், கவிதைக் களஞ்சியம், அளவற்ற பொருள் வகைகள் நிறைந்த அருமையான பொற்குவியல். சொற் சந்தமும், பொருட்செறிவும் அணியழகும், உவமை நயமும், தத்துவ எழிலும், ஒருங்கே மிளிரும் இலக்கியச் சுரங்கம்; கற்பனையூற்றுப் பெருகிப் பாய்ந்தோடும்

ஒரு தெள்ளுதமிழ்க் காவிய ஆறு. அவ்வாற்றில் கலைச் சொற்கள் அலை வீசுகின்றன. அணிமுத்துக்கள் அழகொளி வீசுகின்றன. கருத்துக் கருவுடை மீன்கள் துள்ளி விளையாடுகின்றன. ஆற்றின் இருமருங்கிலும் உவமையாம் மெல்லிய பூங்காற்று உலவுகிறது. சிந்தனை பூங்கொத்து, காற்றில் நறுமணத்தைப் பரப்புகிறது. பயில்தோறும், பயில்தோறும் புதிய இன்பஞ்சுரக்கும் அருளமுத ஊற்று. அன்றாட வாழ்க்கையில் அகப்பட்டு அகமும், புறமும் புண் பட்டு அல்லலுறும் நெஞ்சிற்கு இன்பமும், அமைதியும் தேடித்தரும் அருமருந்து. மனதுக் கடங்காத கற்பனைகளை வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் பின்னிப் பிணைத்து உணர்ச்சி எனும் புனலில் அவற்றை நனைத்தெடுத்து. அருமையான கவிதைகளாக்கி, வறண்ட உள்ளங்களை வளப்படுத்துகின்றார் உமறு. சீறாவை அனுபவிப்போர் பெறும் இன்பம் கொம்புத்தேனாகத் தெவிட்டாத அமுதமாகத் தித்திக்கும் என்பதில் ஐயமில்லை. என் நெஞ்சத்திரையிலே நிழலாடிய பாட்டொன்றை மாமன்றத்தின் முன் வைக்க விழைகிறேன்.

"அழகு தமிழ் உமறு பழகு தமிழ்ச்சீறா
ஆழப்பயில அகமினிக்கும் பொங்கு சுவை
அருவியாகுஞ் செஞ்சொற் கொஞ்சச் செவியினிக்கும்
பருகிட நாவினிக்குமே."

என் துவக்க உரையை நிறைவு செய்வதற்கு முன் ஒரு சில கருத்துக்களை முன் வைக்க விரும்புகிறேன். சீறாவின் சுத்தமான, தெளிவான, ஆதாரபூர்வமான பதிப் பொன்றை 1974ஆம் ஆண்டு கவிஞர் நாச்சிகுளத்தார் வெளியிட்டுத் தமிழ்கூறும் நல்லுலகிற்குக் காணிக்கை யாக்கினார்கள். எனினும், சீறாப்புராணத்தின் அருமை பெருமை இன்னும் "குடத்துள் விளக்காகவே" உளது. உரை எழுதப்பட வேண்டும், ஆராய்ச்சி நூல்கள் எழுதப் படவேண்டும். பட்டி மன்றங்களில் முழக்கப்படவேண்டும். பேராசிரியர்கள் டாக்டர் பட்டம் பெற ஆய்வுக் கட்டுரைகள் (Thesis) வடிக்க வேண்டும்.

அல்ஹாஜ் எஸ். எம். சுலைமான். ஐ.ஏ.எஸ்

# தலைமைப் பொழிவு

பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டினருடன் நல் வாணிபம் செய்த வணிகர்களில் முக்கியமானவர்கள் அரபு மக்கள்.

பொன்னும், மணியும், அகிலும், சந்தனமும், தென் கடல் முத்தும், கீழ்க்கடல் பவழமும், 'நீரில் வந்த நிமிர் பரிப் புரவி'யும் கடல் வழியாகக் கொண்டு வரப்பட்ட குதிரைகளும், காலில் வந்த கருங்கறி மூடையும் (நில வழியாக வந்த மிளகு மூடைகளும்) அரபுகளின் வியாபாரச் சரக்குகளாக இருந்தன,

தமிழ் நாட்டோடு அரபுகள் செய்து வந்த பரவலான வாணிபத்தைப் பற்றி மார்க்கோ போலோ, இப்னு பதூதா, அப்துல்லாஹ் வஸ்ஸாப், ரஷிதுத்தீன் அபுல் பிதா போன்ற மத்திய கால பிரயாண—வரலாற்றாசிரியர்கள் விவரமாக எழுதியுள்ளார்கள். முத்து, மிளகு, அகில், மயிலிறகு, ஏலம், சந்தனம் போன்றவை மேலை நாடுகளில் அபூர்மான பொருள்களாகக் கருதப்பட்டன. அவற்றைத் தங்கள் மரக் கலங்களில் ஏற்றிக் கொண்டு மேலை நாடுகளுக்கு அனுப்பி வியாபாரம் செய்து வந்த அரபு மக்கள் ஐரோப்பிய நாடு களுக்கும் கீழ்த்திசை நாடுகளுக்கும் ஓர் இணைப்புப் பாலமாக விளங்கினர்.

"அரபு நாட்டவர்கள் அக்காலத்தில் இந்நாட்டுடன் வியாபாரம் செய்வதில் பெருமையடைந்தார்கள். ஹலரத் உமர் ஒரு வியாபாரியிடம் இந்திய வியாபாரத்தைப் பற்றிக் கேட்டபோது அவர் சொன்ன மறுமொழி பின்வருமாறு "அந்நாட்டில் நதிகள் முத்துக்கள் போலவும், மலைகள் சிவப்புக் கற்கள் போலவும் மரங்கள் நறுமணத் தைலங்கள் போலவும் விளங்குகின்றன". இவ்வாறு குறிப்பிடுகிறார் டாக்டர் மோதிசந்த் என்பார் "இந்திய வணிக நெறிகள்" என்னும் தம் ஆராய்ச்சி நூலில்.

ஏழாம் நூற்றாண்டு உலக வரலாற்றில் ஒரு முக்கியமான திருப்பமாக அமைந்தது. மனித வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்குகளை, அற நெறிகளைப் போதிக்க வந்த அண்ணல் நபி பெருமானார் பிறந்த நூற்றாண்டு அது அப்பொழுது தென்னிந்தியக் கடற்கரைகளுக்கு வந்த அரபு நாட்டு வணிகர்கள் வியாபாரப் பொருள்களை மட்டும் சுமந்து செல்பவர்களாக இங்கு வரவில்லை. இஸ்லாமிய அறநெறிகளை வாழ்ந்து காட்டும் பிரதிநிதிகளாகவும் அவர்கள் மாறியிருந்தனர்.

''அல்லாஹ் நீர்கடலையும் உங்களுக்கு வசப்படுத்தி தந்திருக்கிறான். அவன் கட்டளையைக் கொண்டு, அதில் கப்பலில் சென்று அவனுடைய அருளைப் பெற்றுக் கொள்கிறீர்கள். (இதற்காக) நீங்கள் நன்றி செலுத்துவீர்களாக! இன்னும் வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றையெல்லாம் உங்களுக்கு வசப்படுத்தித் தந்திருக்கிறான். சிந்தித்து உணரும் மக்களுக்கு இதில் பல சான்றுகள் இருக்கின்றன' (45:12-12 என்னும் இறை மறையின் திருவாசகம் அவர்களுக்கு ஊக்கத்தைக் கொடுத்தது.

தித்திக்கும் திருமறையைக் கையிலேந்தி, மக்களின் தேவைக்கு வேண்டிய பொருள்களையும் சேகரித்துக்கொண்டு ஆழ்கடலில் கலம் செலுத்தி, அழகுத் தமிழ்நாட்டுக்கு வந்த அன்றைய அரபு நாட்டு முஸ்லிம்கள் தாம் இஸ்லாத்தின் செந்நெறிகளை இந்நாட்டிலே பரப்பியவர்கள். அந்த வர்த்தகர்களின் வாய்மையும் அவர்கள் கொண்ட நேர்மையும் தமிழ் மக்களைப் பெரிதும் கவர்ந்தன.

மத்திய கிழக்கு நாட்டில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள் காரணமாகப் பல அரபு முஸ்லிம் குடும்பங்கள் தமிழகத்தில் குடியேறின. தமிழக மன்னர்கள் இவர்களுக்கு நல்வரவு நல்கி மானியங்கள் அளித்துச் சிறப்பித்தனர்.

சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் போர்ப்படைகளிலும் கணிசமான அளவுக்கு இம்முஸ்லிம்கள் இடம் பெற்றிருந்தனர். மைசூரை ஆண்டு வந்த ஹொய்சாள மன்னன் வீர வல்லாளனிடமும் அறுபதினாயிரம் முஸ்லிம் வீரர்கள்

இருந்தனர் என்று இப்னு பதூதா குறித்துள்ளார். பாண்டிய நாட்டை ஆண்டு வந்த ஜாதவர்மன் சுந்தர பாண்டியனின் முதலமைச்சராக ஸையித் தகிய்யுத்தீன் என்பார் பதவி வகித்திருக்கிறார். அவருடைய சகோதரர் ஸையித் ஜமாலுதீன் சீன மன்னன் குப்ளாய்கான் அரசவைக்குப் பாண்டிய நாட்டுத் தூதராகச் சென்றிருக்கிறார். இலங்கை மன்னன் பராக்கிரம பாகுவை அடக்கச் சென்ற தமிழர் படைக்கும் இவரே தளபதியாகச் சென்றார்.

இக்காலத்தில்தான் அலாவுதீன் கில்ஜீயின் தளபதி மாலிக்காபூர் தென்னாட்டில் படையெடுத்து வந்தார். பாண்டிய நாட்டின் நிர்வாகமும், இராணுவப் பொறுப்பும் முஸ்லிம்கள் கையிலிருந்ததை அறிந்த மாலிக்காபூர் தாம் மதுரையைத் தாக்கப் போவதாகவும் அப்போரில் பாண்டியரின் முஸ்லிம் போர் வீரர்கள் பங்கு பெறாது ஒதுங்கியிருக்க வேண்டும் என்று இரகசியமாகக் கோரினார்.

"நாங்கள் பாண்டிய நாட்டு குடிமக்கள். இந்த நாட்டு உப்பைத் தின்று வளர்ந்த நாங்கள் இந்த மண்ணுக்குத் துரோகம் செய்ய மாட்டோம். உங்கள் படையைப் போர்க் களத்தில் சந்திப்போம்!" என்று சூளுரைத்துப் போர் புரிந்தனர் முஸ்லிம் வீரர்கள்.

இப்படித் தமிழக மக்கள் வாழ்வோடு ஒன்றாகக் கலந்து விட்ட முஸ்லிம்கள், தமிழ் மொழியையும் தங்களதாக்கிக் கொண்டார்கள் ஓவியம், நாட்டியம் போன்ற துறைகள் விலக்கு என்று கருதப்பட்டமையால், முஸ்லிம்கள் இலக்கியப் படைப்பில் பெரிதும் ஈடுபட்டிருந்தனர். இந்த இலக்கியப் படைப்பில் பெரும் பகுதி மதச் சார்புடையதாக இருந்தது வியப்பிற்குரியது அல்ல! ஏனெனில் தமிழகத்தில் சென்ற நூற்றாண்டு வரை தோன்றிய இலக்கியங்கள் பொதுவே சமய இலக்கியங்களாகவே இருந்தன. எனவே, இராம காதையும், வில்லி பாரதமும் சிலம்புச் செல்வமும் கவிஞர் கா. அப்துல் கபூர் அவர்கள் பாடியிருப்பதுபோல,

"நாயன்மார் நாவமுதும்
நம்மாழ்வார் பாசுரமும்
மேயபுகழ் மேகலையும்
மேம்படு சிந்தாமணியும்
மாமுனி தேம்பாவணியும்
மாண்புறு சீறாவும்"

சமய இலக்கியத்தில் இடம்பெறுகின்றன.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் தமிழர்களுக்கு ஓரளவு அறிமுகமாயிருப்பது சீறாப்புராணமேயாகும். அண்ணல் நபி பெருமானாரின் அறவாழ்வை, 5027 திரு விருத்தங்களில் சிறந்த ஒரு காப்பியமாக வடித்துத் தந்திருக் கிறார் உமறுப்புலவர். (ஸீரத் என்னும் அரபுச் சொல் வாழ்க்கை வரலாறு எனப் பொருள்படும்.) உமறுப்புல வரின் முன்னோர்,

"மேவியமுல்லை, மல்லி
மேல் ரக ரோஜா தாழம்
பூவிலும் அத்தர் செய்துப்
புதுமணம் மாறா வண்ணம்
காவலர்களித்தல் தங்கள்
கைத் தொழிலாகக்"

கொண்டிருந்தனர்.

ஏறத்தாழ முன்னூறு ஆண்டுகட்கு முன்னர் எட்டய புரத்தில் வாழ்ந்து வந்த செய்கு முகமது அலி என்ற சேகு முதலியாரின் அருந்தவப் புதல்வனாகப் பிறந்தார் உமறு. சேகு முதலியார் எட்டையபுர அதிபதியான வெங்கடேச எட்ட பூபதிக்கும் அவர் தம் அரசவைக் கவிஞராக விளங் கிய கடிகை முத்துப் புலவருக்கும் உற்ற நண்பராக விளங் கினார். உமறு தம்மிடமே கல்வி கற்க வேண்டுமென்று விரும் பிய கடிகை முத்துப் புலவரிடம் உமறு மூன்றாண்டுகளில் "இங்குள்ள அறிவு நூற்கள் யாவையும் அலசிக் கற்று, சங்க நூல் முழுதும் மாந்தி, 'செந்தமிழ்ப் புலமை பூண்டார். அக்காலை தமிழகப்புலவர்கள் அனைவரையும்சிறுமைப்படுத்தி

உலாவந்து கொண்டிருந்த வாலை வாருதியென்ற வட நாட்டுப் புலவரை தம் அரசரின் அவைக் களத்தில் சந்தித் தார் பாலப் பருவத்திலிருந்த உமறுப் புலவரைப் பார்த்த அப்புலவர், "எம்மை வாலைவாருதி என்றறியாயோ, பிள் ளாய்' எனக் கேட்டதற்கு,

"திமிர் பகைவரை வென்ற பருதியெனும் எமதெட்ட
சீரனனி வாயில் வித்வான்
உமறுகுழ றிடில் அண்ட முகடும் படீரென்னும்
உள்ளச்சம் வையும் பிள்ளாய்"

என்று முழங்கி தம் ஆசிரியரின் புகழையும் தம் புகழையும் உயர்த்தினார்.

இக்காலத்தில்தான் ஈத்துவக்கும் இன்பத்தையே இலட் சியமாகக் கொண்டிருந்த வள்ளல் சீதக்காதி, "மரகதம், வச்சிரம், வைடூரியம், நீலம், அரவின் மணி, புஷ்பராகம், கோமேதகமும்," செம்பது மராகம், பவளம், மலாக்கா கஸ்தூரி, அம்பர், குதிரை, யானைத்தந்தம் முதலியவற்றில் வாணிபம் செய்து பெற்ற பணத்தை "அள்ளிப் பல திசை யும் அட்டகிரிபோல் குவித்து." அதை வாரிவாரிக்கொடை கொடுத்து வந்தார் படிக்காசுப் புலவர், நமசிவாயப் புலவர்' கந்தசாமி புலவர் ஆகியோரின் உற்ற நண்பராக வும் இருந்தார் அவர்.

"தினங் கொடுக்கும் கொடையானே, தென் காயற்பதி யானே சீதக்காதி," என்று பாவலர் போற்றி வந்த இப்பெரு மகனார் இயற்பெயர் ஷெய்கு அப்துல் காதிர் மரைக்காயர். ஹலரத் அவுரங்கஸீப் ஆலம்கீர் பாதுஷாவின் பிரதிநிதியா கவும் இவர் வங்காளத்தில் சில காலம் ஆட்சி செய்தார். சீதக்காதியின் நுண்ணறிவையும், இலக்கியப் பண்பையும் நிர்வாக ஆற்றலையும் கேள்விப்பட்ட தென் பாண்டி மண் டல வேந்தன் கிழவன் சேதுபதி என்ற விஜய ரகுநாதத் தேவர் அவரைத் தம் முதலமைச்சராக்கிக் கொண்டார். சீதக்காதியின் சிறப்பை நேரில் கண்டுணர்ந்த விஜயரகுநாதர் அவரை வெறும் அமைச்சராகக் கருதாமல் தம் சகோதர

ராக மதித்து விஜயரகுநாதப் பெரிய தம்பி என்ற பட்டத்தையும் சீதக்காதிக்கு அளித்து மன நிறைவு பெற்றார்.

அழ்ந்த சமயப் பற்றுக்கொண்டிருந்தவர் சீதக்காதி. அக்காலத்தில் மெய்ஞானப் பெருங்கடலாக, சகலகலா விற்பன்னராக விளங்கிய சதக்கதுல்லாஹ் அப்பா அவர்கள் என்ற மேதையின் ஆத்மீகச் சீடராக இருந்தார் உலகத்துக்கோர் அருட்கொடையாக வந்த உத்தம போதகர் முஹம்மது நபி (சல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு வளமார் காப்பியமாகத் தமிழில் அமையவேண்டும் என்று வேணவாக் கொண்டு, அதற்குத் தகுதி படைத்த கவிஞரைத் தேடிக் கொண்டிருந்தார் சீதக்காதி புலவர் உமறின் நட்பு. பரவலர் சீதக்காதிக்குக் கிடைத்ததும் இப்பொறுப்பு முழுவதையும் அவரிடமே ஒப்படைத்தார்

ஆனால் உமறின் காப்பியப் பணி நிறைவு பெறும் நேரத்தில் சீதக்காதி உயிரோடிருக்கவில்லை. சீறா சிறப்புற எழுதி முடிப்பதற்கு அருந்துணை புரிந்தவர்களில் ஷெய்கு சதக்கத்துல்லாஹ் அப்பா, மஹ்முது பந்தர் (பரங்கி பேட்டை), மாமு நைனார் லெப்பை, அபுல் காசிம் மரைக்காயர் ஆகியோர் முக்கியமானவர்கள்.

சீறாப்புராணத்தின் இறுதிப் பகுதி முடிவதற்குள் புலவர் உமறும் காலமாகிவிட்டார், இதற்கு முப்பது ஆண்டுகளுக்குப் பின்னர் பனூ அஹ்மது மரைக்காயர் என்னும் பெரும் புலவர் 1825 பாடல்கள் யாத்து நூலை முழுமை பெறச் செய்தார். இந்தப் பிற்பகுதி 'சின்னச் சீறா' என்று அழைக்கப் பெறுகிறது.

சீறாவின் காவிய நயத்தை நுகர்ந்த தமிழ்ப் பேரறிஞர்கள், கவியழகில் அதனைக் கம்ப இராமாயணம், சீவக சிந்தாமணி போன்ற காப்பியங்களுக்கொப்ப மதித்துள்ளனர்.

காப்பியத்தின் தொடக்கத்தில் புலவர்கள் அவையடக்கம் கூறுவதுண்டு. தாங்கள் வரையப்புகுந்த பாட்டுடைத் தலைவர் முன்னும், புலவர்கள் முன்னும், தங்களுடைய தகுதி எவ்வளவு குறைந்ததென்று கூறித் தங்கள் பணிவைச் சுட்டிக்

காட்ட அவையடக்கம் பயன்படும். உமறுப்புலவர் இப் பணியை எவ்வளவு சிறப்பாக செய்கிறார் பாருங்கள்.

கடல்களும் மலைகளும் நிலைபெயர்ந்து விடுமோ என்று அஞ்சுமளவுக்கு சண்டமாருதம் வீசுகிறது. அந்தச் சண்ட மாருதத்தின் பேரொலிக்கும் வேகத்தும் முன்னே மூச்சுவிடு கிறது ஒரு சிற்றெறும்பு. அதுதான் என்னுடைய இச்சிறு முயற்சி என்று பணிவாகக் கூறிக் கொள்கிறார் உமறுப் புலவர்.

'படித்தலத் தெழு கடல்குல கிரிநிலை பதற
வெடித்து வீசிய சண்டமா ருதத்தினுக் கெதிரே
மிடித்து நொந்தசிற் றெறும்பொரு மூச்சுவிட்டதுபோல்
வடித்த செந்தமிழ்ப் புலவர்முன் யான்சொல்லு
மாறே.'' 1

வயற்காடுகளில் பசுமையான நாற்றுகள் நெருங்கி வளர்ந்திருப்பதைக் கண்ட கவிஞருக்கு, 'செழுங்கிளை தாங் கும் உத்தமர்கள்' செல்வம் சேர்த்து தம் உற்றார் உற வினரை ஒன்று சேர்த்து இனிது வாழும் ஒரு குடும்பத் தலை வனை நினைவுறுத்துகிறது.

''அருமறை நெறியும்,
வணக்கமும் கொடையும்,
அன்பும் ஆதரவும் நல்லறிவும்
தருமமும் பொறையும்
இரக்கமும் குணமும்
தயவும் சீர்ஒழுக்கமும் உடையோர்
பெருகியச் செல்வக் குடியொடு கிளையும்
பெருத்து, இனிது இருந்து வாழ்வனபோல்
மருமலர் பழனக் காடெல்லா நெருங்கி
வளர்ந்தது நெட்டிலை நாற்றே.'' 2

வளமார் வர்ணனைகளெல்லாம் நபிகள் பெருமானார்

1. சீறா. கடவுள் வாழ்த்து 19
2. சீறா நாட்டுப்படலம் 28

(சல்) அவர்களின் நற்றவ வாழ்க்கையைச் சித்தரிப்பதற்குரிய பின்னணியாகவே அமைந்திருக்கின்றன. வரலாற்றுக் காலத்தில் வாழ்ந்த ஒரு பெருமகனாரைப் பற்றி—அவர்கள் போதனையைப் பற்றி-ஒரு பெருங்காப்பியம் சமைப்பது அரும்பெரும் சாதனையாகும். நபிகள் பெருமானார் இறைவன் மீது கொண்ட அசையாத நம்பிக்கையினாலும், தம் கொள்கை மீது வைத்த மாறாத உறுதியாலும் எப்படி வெற்றி மேல் வெற்றி பெற்றார்கள் என்பதையும், நம்பிக்கை, தொழுகை, நோன்பு, ஈகை, ஹஜ் போன்ற உயிர்நாடியான போதனைகளையும் அவர்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் கொண்ட சீறா ஒரு சீரிய களஞ்சியமாகும். "சொல் நயமும், பொருள் நயமும், ஓசை நயமும், அணி நயமும் ஒருங்கே கொண்டு திகழும் இலக்கியச் சுரங்கம்" வறண்ட உள்ளங்களையும் வளப்படுத்தும் வண்ணக் காவியம். தமிழ் மக்கள் பெருமைப்பட வேண்டிய அரும்பெறும் காப்பியம் சீறா என்பது அதனைச் சிறிது படித்துப் பார்ப்பவருக்கும் கூடப் புலனாகும்.

இஸ்லாமியத் தமிழ்த் தொண்டின் ஒரு மிகச் சிறிய பகுதியே சீறாப்புராணமாகும். எத்தனையோ முஸ்லிம் புலவர்கள் இஸ்லாமியப் பணியும் தமிழ்த் தொண்டும் ஒன்று சேரச் செய்திருக்கிறார்கள். "வேதமே முழங்கும் காயல் மாநகர்" என்னும் காயற்பதி, கீழக்கரை, நாகை தொண்டி, கோட்டாறு, தென்காசி, நாகூர், பனைக்குளம் போன்ற ஊர்களில் ஆயிரமாயிரம் புலவர்கள் தோன்றியிருக்கின்றனர். அந்தாதி, அம்மானை ஆற்றுப்படை, உலா, கீர்த்தனை, கும்மி, கோவை, சதகம் போன்ற கவிதை வடிவங்களில் தங்கள் கைவண்ணத்தைத் தீட்டியிருக்கின்றனர் பெரும் புலவர்கள். சிந்து, சித்திரக்கவி, பாமாலை, பிள்ளைத்தமிழ், புஞ்சம், புராணம், பரணி, மாலை முதலிய பாவினங்களிலும் அவர்கள் படைப்பாற்றல் பரிணமிக்கக் காண்கிறோம். இஸ்லாமியக் கருத்துகளை இசைவான இலக்கிய வடிவங்களில் சமைக்கவேண்டும் என்பதற்காக கிஸ்ஸா, முனாஜாத் போன்ற புத்தமைப்புகளையும் அவர்கள் தோற்றுவித்தனர்.

இவ்வாறு வாய் இனிக்க, படிப்போருக்கு நாவினிக்க, நெஞ்சினிக்கப் பாடிய இப்பெருமக்கள் தமிழை முறையாகக் கற்று தமிழின் இலக்கிய பாரம்பரியத்தை இசைவோடு ஏற்று புத்திலக்கியம் படைத்த மேதைகளாவர்.

"யாரால் பிறர் நலம் பெறுகிறார்களோ அவர்களே சிறந்த மனிதர்கள்," என்று வள்ளல் நபிகள் பெருமானார் கூறியுள்ளார்கள். இது இலக்கியப் படைப்பாளர்க்கு மிகவும் பொருந்தும் ஏனென்றால் குறுகிய கால உலக நன்மைகளையும் இலாபங்களையும் கருத்தில் வைத்து, மக்களின் கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டி அதனால் பயன் அடைய முற்படுபவர்கள் எழுத்தாளர்கள் அல்லர். மாறாக மனித குலத்துக்கே தீமை விளைவிக்கும் எதிரிகள் அவர்களே தாம்.

ஆண்டவன் தன் திருமறையில்:

"இன்று உங்களுடைய மார்க்கத்தை உங்களுக்குப் பூரணமாக்கியிருக்கின்றேன். உங்கள் மீது என் அருள் கொடைகளையும் நிறைவுபடுத்தியிருக்கிறேன். மேலும் இஸ்லாமிய நெறியை உங்களுக்குப் பொருத்தமுடையதாய் ஆக்கியுள்ளேன்" என்று கூறியுள்ளான். இத்திருவசனத்தில் குறிப்பிட்டுள்ள அருள் கொடையில் எழுதுகோல் முக்கியமானது. ஏனென்றால் "அல்லம பில்கலம்" எழுதுகோலைக் கொண்டு கற்றுக்கொடுத்தான்,' என்றுதானே முதன் முதலாகத்தான் அருளிய ஐந்து திருவசனங்களில் ஒன்றில் குறிப்பிடுகிறான்.

எனவே தான் இந்த அருள் கொடையை பயன்படுத்துவதில் எழுத்தாளர்கள் மனித குலத்தின் தன்மையை குறிக்கோளாக மனதில் கொண்டிருத்தல் வேண்டும்.

இஸ்லாமிய இலக்கியங்களை மேலோடு பார்ப்பவர்களுக்குக்கூட, இத்தத்துவம் இஸ்லாமிய எழுத்தாளர்களின் படையல்களில் ஆழ்ந்திருப்பதைக் காணமுடியும்.

மௌலவி எம். அப்துல் வஹ்ஹாப், எம். ஏ; பி.டிஎச்.

# சீறாவில் காணப்படும் இஸ்லாமிய மரபுகள்

எம். சையத் முஹம்மத் (ஹஸன்)

சீறாப்புராணத்தின் காப்பிய நாயகர் இஸ்லாமிய நெறியை நிலைநிறுத்த வந்தவர்கள் ஆதலின், உமறுப்புலவர், தமது காப்பியத்தில் இஸ்லாமிய மரபுகளுக்கு மாறான கருத்துகள் இடம்பெறலாகாது என்பதிலும், இஸ்லாமியருக்கே-முஸ்லிம்களுக்கே உரித்தான மரபுகள் ஆங்காங்கே இடம் பெற வேண்டும் என்பதிலும் கண்ணுங் கருத்துமாக இருந்திருக்கிறார்.

எனவே, சீறாப்புராணத்தை முழுமையாக உணர்ந்து ரசிப்பதற்கு அதனைக் கற்க விரும்புவோர் இஸ்லாமிய மரபுகளைப் பற்றி நன்கு தெரிந்து வைத்துக் கொள்வது பெரிதும் உதவும். அவ்வாறு அதற்கு உதவும் வகையில் தனியாக ஒரு முழு நூலே எழுதலாம். அதற்குச் சீறாப்புராணத்திற்கு உரைநூல்கள் கிடைப்பது அரிதாக இருப்பதால், அப்படிப்பட்ட சில துணைநூல்களாவது வெளிவருவது அவசியமாகும்.

இஸ்லாமிய மரபுகளுக்கும் ஏனைய மரபுகளுக்கும் இடையே உள்ள சில வேற்றுமைகள் மிகவும் நுணுக்கமானவை,

உதாரணமாக, ஒருவரை ஒருவர் குறைந்த அல்லது கூடுதலான கால இடைவெளிக்குப்பின் சந்திக்கும்போதோ அல்லது முதல் தடவையாக சந்திக்கும்போது கூட முகமன் கூறிக்கொள்வது உலகெங்கிலும் எல்லா சமுதாயங்களிலும் எல்லா மொழிப் பிரிவினரிடையிலும் பழக்கமாக இருந்து வருகிறது.

முஸ்லிம்கள் கூறும் முகமனுக்கு "சலாம்" என்றும் சொல்லப்படும். அதன் முழு உருவம் "அஸ்ஸலாமு

அலைக்கும்'' என்பதாகும். ''உங்கள் மீது சாந்தி உண்டாகுக'' என்பது அவ்வாழ்த்துரையின் பொருள்.

அதற்குத மறுமொழி அல்லது பதில் கூறுவது முதலில் சலாம் கூறியவரின் வாழ்த்துரையைக் காட்டிலும் கூடுதலாகவே இருக்கவேண்டும் என்ற கருத்தில் ''வ அலைக்குமுஸ்லாம் வ ரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு'' [உங்கள் மீதும் சாந்தியும் இறைவனின் கருணையும் நல்லாசியும் உண்டாகுக] என்று உரைப்பது இஸ்லாமிய மரபு. இப்படி ஸலாமுக்கு பதில் உரைப்பதற்கு ''பிறத்தி'' என்னும் புதியதொரு தமிழ்ச் சொல்லை உமறுப் புலவரும் ''சின்ன சீறா'' பாடிய பனீ அஹ்மது மரைக்காயர் புலவர் அவர்களும் தமது காப்பியத்திலே பயன்படுத்தியுள்ளார்.

இப்படியாக, சலாம் உரைக்கும் இஸ்லாமிய மரபை உமறுப் புலவர் மிகப் பல இடங்களில் பொருத்தமாக இணைத்துப் பாடியுள்ளார். அந்த சலாம்களிலெல்லாம் மிகுந்த சிறப்புடையது இறைவன் அமரர் கோன் ஜிபுறயீல் (அலை) அவர்களின் வாயிலாக நபிபெருமானார் (ஸல்) அவர்களுக்குச் சொல்லியனுப்பும் சலாம் ஆகும்.

ஆயிரம் சிறையும் ஒவ்வா ஆயிரம் சிரசு மாயி
ராயிரம் விழியும் தோன்ற ஆயிரம் முகமும் ஆகி
ஆயிரம் நாவினாலும் அகுமதே என்னக் கூவி
ஆயிரம் பெயரினான்தான் சலாம் என அருளிச்
செய்தார்.[1]

இறைவனின் சலாமைக் கூறுவது மட்டுமின்றி அமரருக்கரசர் ஜிபுறயீல் (அலை) அவர்கள் இறைதூதரிடம் வரும் போதெல்லாம் தம்முடைய சலாமையும் உரைக்கத் தவறுவதே இல்லை.

''............வரிசை நபிக்குமரர்
கோமான் சலாமுன் கூறியபின்''

என்று தொழுகை வந்த வரலாற்றுப் படலத்திலே (36)

1. சீறா. ஹபீபு மக்கத்துக்கு வந்த படலம் 86

உமறுப் புலவர் பாடி இருப்பதை இங்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

இறைவனும் வானவர்களும் மட்டுமின்றி நபி பெருமானார் (ஸல்) அவர்கள் இறைவனின் இறுதித் தூதர், மனிதப் படைப்பு அனைத்திலும் மிக மேலானவர் என்பதை உணர்ந்த இயற்கையும் மிருக இனங்களும், தாவரங்களும் அவர்களுக்குப் பணிந்து சலாம் உரைத்தன என்பதை ஆங்காங்கே பல பாடல்களில் உமறுப் புலவர் பாடியுள்ளார்.

நபி பெருமானார் (ஸல்) அவர்களின் வரலாற்றினைப் பாடி வரும்போது, அவர்களுக்கு நபிப்பட்டம் வரும்வரை உமறுப்புலவர் இஸ்லாமிய மரபுகளை மிகுதியான அளவில் கையாளவில்லை. அதுதான் இயற்கையும் கூட. நபி பெருமானாருக்கும் கதீஜா நாயகி அவர்களுக்கும் இடையே நடைபெற்ற திருமணம் பற்றி வர்ணிக்கும் "மணம்புரி படல"த்தையும் "பாத்திமா திருமணப் படல"த்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது இந்த உண்மை புலனாகும்.

வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் முஸ்லிம்கள் இப்படித்தான் வாழவேண்டும் என்று விதி முறைகளை வகுத்தளித்துள்ளது இஸ்லாம். ஒரு முஸ்லிமின் வாழ்வில் மார்க்கச் சட்ட திட்டங்கள் ஆட்சி செலுத்தாத எந்தப் பகுதியும் இல்லை என்றே கூறலாம். எனவேதான், அப்படியல்லாத மற்றவர்களின் வாழ்க்கை முறைகளிலே காணப்படாத, தனித்தன்மை பொருந்திய இஸ்லாமிய மார்க்க சட்ட திட்டங்களின் அடிப்படையில் அமைந்தவையான பல மரபுகள் இஸ்லாமியரின் வாழ்விலே காணப்படுகின்றன.

பெரும்பாலான இஸ்லாமிய மரபுகள் அவ்வாறாக மார்க்க அடிப்படையில் அமைந்தவை என்பதனாலேயே அவற்றைச் சுட்டும் சொற்களும் கூட மிகுதியாக அரபி மொழிச் சொற்களாவே உள்ளன. அப்படிப்பட்ட இஸ்லாமிய மரபுகள் உலகம் முழுவதிலுமுள்ள முஸ்லிம்களுக்குப் பொதுவானவை. அவைகளுள் மிகப்பல சீறாப்புராணம் முழுவதுமே ஆங்காங்கே விரவிக் கிடக்கின்றன.

அத்தகைய மரபுகளுள் ஒன்று முஸ்லிம்கள் எந்தவொரு நல்ல காரியத்தையும் துவங்கு முன்பாக "பாத்திஹா"வும் "துஆ" வும் ஓதுவதாகும். பாத்திஹா என்பது திருக்குர் ஆனின் முதல் அத்தியாயத்தின் பெயராகும். "தோற்று வாய்" எனப் பொருள்படும் அதனையும் திருமறையின் இறுதி மூன்று அத்தியாயங்களையும் ஓதிய பிறகு துஆ எனும் பிரார்த்தனையையும் ஓதுவார்கள். இவ்விரு செயல்களையும் சேர்த்தே பாத்திஹா ஓதுதல் என்று குறிப்பிடுவதுண்டு. துஆவினை ஒருவர் ஓதும்போது "அவ்வாறே ஆகுக!" என்னும் கருத்தில் அருகிலிருப்போர் ஒவ்வொரு வசனத்திற்கும் ஆமீன் என்று கூறுவர். இச்செயல்களை உமறுப்புலவர் சீறா வில் பலவிடங்களில் வருணித்துள்ளார்.

மலிபொலன் கிரியிற் சோதி மணியினை இருத்தல் போல
அலியிடத திருத்தும் பாவை அழகுகண் டுவந்து மேலோர்
ஒலிகடல் கிளர்ந்த தென்ன உற்றவ ரெவருஞ் சூழ்ந்து
பலனுற வாழ்த்தி வாழ்த்திப் பாத்திஹா ஓதுங்காலை.

என்று பாத்திமா திருமணப் படலத்திலும் (181)

உலகினிற்கரு தலர்க்கடல் அரிஉம றினைக்கொண்
டலத பூஜகி லினைகொடு தீனிலை அதனைப்
பெலனு லும்படி எனக்கருள் பிரிதிலை எனவே
நலனொ டும்துஆச் செய்தனர் முகம்மது நபியே.

என்று உமறு கத்தாபு ஈமான் கொண்ட படலத்திலும் (3)

இந்த நன்மொழி இறையவ னிடந்திரந் தேத்தி
அந்த ரத்தினில் அமரர்ஆ மீன் ஒலி அதிரக்
கந்து கத்திருந் தருமறை பாத்திஹா ஓதிச்
சுந்த ரப்புயத் துணைவரை அருளொடு நோக்கி,"

என்று பதுறுப்படலத்திலும் (116) மேற்சொன்ன இஸ் லாமிய மரபுகளை உமறு காட்டியுள்ளார்.

நல்ல செயல் எதனையும் தொடங்கு முன்பாக ''அருளாளனும் அன்புடையோனுமான அல்லாஹ்வின் திருப்பெயரால்'' என்னும் பொருளுடைய ''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் என்று உரைத்தல் இஸ்லாமிய மரபு என்பதனை அனைவரும் அறிவர்.

ஆதிதனை உளத்திருத்தி பிசுமில் எனும்
உரைதிருத்தி அமுதம் ஊறும்
வேதமெனும் புறுக்கானில் ஒரு சூறத்
தெடுத்தோதி விரிவதாக...

எனவரும் உத்துபா வந்த படலம் (18 பாட்டிலுள்ள ''பிஸ்மில்'' எனும் சொல் ''பிஸ்மில்லாஹி'' என்று தொடங்கும் சொற்றொடரைச் சுருக்கமாகக் குறிக்கும் சொற்களில் ஒன்றாகும்.

திருக்குர்ஆனின் முதல் அத்தியாயத்தில் முதல் வசனம் 'அல்ஹம்துலில்லாஹி...' என்று தொடங்குகிறது. எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே என்பது இதன் பொருள். முஸ்லிம்களின் நாவில் நாள்தோறும் பல சந்தர்ப்பங்களிலும் தவழும் சொற்றொடர் இது. இன்னுமொரு தனிப்பட்ட சந்தர்ப்பத்திலும் இது சொல்லப்படுகின்றது. ஒருவர் தும்மினால் உடனே ''அல்ஹம்தி லில்லாஹ்'' என்று அவர் கூறிக்கொள்வார். ஆதிமனிதர் ஆதம் (அலை) அவர்களைக் களிமண்ணினால் சிருட்டித்த இறைவன் தன் ஆவியை அதனிற் செலுத்த உயிர்பெற்ற ஆதம் நபி அவர்கள் முதலில் தும்மினார்கள் என்றும் அதைத் தொடர்ந்து 'அல்ஹம்துலில்லாஹ்' என்று சொன்னார்கள் என்றும், அதனை நினைவு கூறும் வகையில் ஒரு முஸ்லிம் தும்மியவுடன் அச்சொற்களைக் கூறவேண்டும் என்பதும் இஸ்லாமிய மரபு.

அவ்வாறு ஆதம (அலை) அவர்கள் படைக்கப்பட்டதை வாணிக்கும் பின்வரும் பாடலில் அச்சொற்கள் ஆளப்பட்டிருப்பதைக் காணலாம்.

''துண்டத்தின் ஆவி தோன்றத் தும்மலும் தோன்றிப்பின்பு
விண்டுரை பகரு நாவின் மேவியல் ஹம்தை ஓதிக்

கொண்டபின் பிரத்தி சொன்ன குதாதிரு வசன நோக்கி
அண்டர்நா யகனைப் போற்றி ஆதம்ஒன் றுரைப்ப தானார்.[1]

முஸ்லிம்களின் திருமணத்தின்போது மணமகன் மணமகளுக்கு "மஹர்" என்கிற தொகையைக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு அவ்விதமே கொடுக்கவேண்டும். சீறாவில் திருமண நிகழ்ச்சிகளை வர்ணிக்கும் பல இடங்களில் இம்மரபு தவறாமல் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. உதாரணத்திற்கு, பாத்திமா திருமணப் படலத்தில்,

பொறைவளை கடற்பா ரெங்கும் போற்றதும் புதல்வி
உள்ளத்
துறைகின்ற மகஹரைக் கேட்டு வருகவென் றும்பர்
போற்றும்
இறையவன் அருளிச் செய்தான் என்றுரைத் தனர்
அம் மாற்றம்
முறைவழி விளக்கத் தூதர் மொழிந்தனர் பாவைக் கன்றே.

என்று வரும் 49 ஆம் பாடலைக் காட்டலாம்.

திருமணம் போன்ற விழாக் காலங்களிலும் மற்றும் வைபவங்களிலும் மேளம் போன்ற இசை, கூத்து முதலியவை இடம்பெறுவதை இஸ்லாம் விலக்கியிருக்கிறது. மாறாக அறப் பாடல்களை இசைப்பது இஸ்லாமியரின் மரபு. அதற்கு பைத்து ஓதுதல் என்று சொல்வர்.

பொருவி லாதகர் ஆடவர் அரிவையர் போற்ற
மருமலர்ப்புய முகம்மதை அலிதனை வாழ்த்திக்
கருத லாக்கரி யேறெனும் காளையர் கூடித்
தெருவெ லாமணப் பைத்துகள் சொலிசொலித்
திரிவார்.[2]

என்னும் பாட்டில் இதன் இஸ்லாமிய மரபு சுட்டிக்காட்டப்படுகிறது.

இப்படியாக முஸ்லிம்களின் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஆட்சி புரியும் தனித்தன்மையோடு கூடிய இஸ்லாமியமரபுகளை பொருத்தமான இடங்களில் பொருத்தமான வழிகளில் தமது காவியத்திலே புகுத்திப் பாடியுள்ளார் உமறுப்புலவர்.

---

1. சீறா. தலைமுறைப் படலம் 9
2. சீறா பாத்திமா திருமணப் படலம் 109

# காலம் தந்த கவிஞன்!

கலைமாமணி கவி கா. மு. ஷெரீப்

வில்லினும் வேகமுடையது சென்று தைப்பதில்! வாளினும் வலிமையுடையது வீரம் விளைப்பதில்! தேனினும் சுவையுடையது இனிமை சேர்ப்பதில்! மழலையினும் சிறப்புடையது மகிழ்வளிப்பதில்! பிரிவினும் கொடியது துயர் தருவதில்! மழையினும் உயர்வுடையது பயனளிப்பதில்! பாலினும் அமுதினும் நலமுடையது உயிர்ச் செழிப்பிற்கு! மலரினும் மணமுடையது, மென்மையானது வளமான கவிதை!

இத்தன்மையில், ஏதாவதொன்றினைத் தாங்கி நிற்பதையும் நாம் கவிதை என்போம். அனைத்தையும் கொண்டு திகழ்வதை, மா கவிதை யென்போம்.

கவிதைகளை இயற்றுபவன் கவிஞன். மா கவிதைகளைப் படைப்பவன் மகா கவிஞன்.

தமிழ் மொழியில் பல மகா கவிஞர்கள் உண்டு 'சீறா' தந்த உமறுவை, தமிழகம் பெற்ற உலக மகா கவிஞர்களின் தலைவர் என்போம். இப்படிச் சுட்டுவது தமிழுக்கு நாம் செய்கின்ற சிறப்பாக அமையும். ஆம், நவரசம் சொட்டப் பாப்புனையும் தன்மையில், உமறுக்கு நிகரானவர் எவரு மிலர். இது உண்மை; வெறும் புகழ்ச்சியன்று.

கம்பீரமாக—நிமிர்ந்து விழிப்புடன் நோக்கும் தன்மையில் —[GRAND OPENING] ஆரம்பிப்பது, அடுத்து என்ன? என்ற ஆவலைத் தூண்டுகிற தன்மையுடன் காட்சிகளை முடிப்பது [END] நல்ல நாடகத்திற்கான பாங்கு எனபர், இதுபோன்று, காவியங்களுள் படலங்கள் [CHAPTERS] அமைவது சிறப்புடையதாகும். இந்தச் சிறப்பியல்புகளை, உமறு படைத்தளித்துள்ள 'சீறா' முழுவதிலும் காணலாம்.

இளங்கோ அடிகளும், சாத்தனாரும் வாழ்ந்த காலம், தமிழுக்குத் தமிழகத்தில் சிறப்பிருந்த காலம்.

கம்பன், சேக்கிழார், கூத்தன், ஜெயங்கொண்டான், வில்லி போன்றார் வாழ்ந்த காலம். வடமொழியுடன் போட்டியிட்டுத் தமிழ் வளர்ந்த காலம் உமறு வாழ்ந்த காலமோ தமிழ் தனது வாழ்வை இழந்திருந்த காலம். ஆம், முன்னரே புகுந்து நிலைத்து விட்டிருந்த வடமொழியுடன் தெலுங்கும், மராத்தியும் தமிழகத்தில் கால் ஊன்றிக் கொண்டிருந்த காலம். சிந்தித்தால் புரியும். உமறுப்புலவர் ஆத்தானக் கவிஞராக விளங்கியது, தமிழ் மன்னன் ஆட்சியில்லை. தெலுங்கு மன்னர் ஆண்ட எட்டயா அரபுச் சிற்றரசில் தான்.

செஞ்சியில் மராத்தியர் ஆளுகை. தஞ்சையிலும், மதுரையிலும் நாயக்க அரசுகள் தென்பாண்டிச் சீமை நெடுகிலும், அதிக அளவில் பாளையக்காரர்கள் என்ற பெயரில் தெலுங்கு-நாயக்க - சிற்றரசுகள்! பற்றாக்குறைக்கு பரங்கிப் பிரிவினர்கள், தமிழகத்தை ஆளத் தங்களுக்குள் போட்டியிட்டுப் போர் விளைவித்துக் கொண்டிருந்த காலம். ஆங்கிலத்தை வரவேற்க, தமிழர்கள் ஆரத்தி ஏந்தி நின்ற காலம்.

இந்தக் காலத் தமிழ்ப்புலவர்கள், தங்களின் ஆற்றலைக் காட்டிட, தல புராணங்கள் பாடிக் கொண்டிருந்தனர். தனம் தருகின்ற குறுநில மன்னர்கள் மீது, காமச்சுவை நிறைந்த உலாக்களும், கோவைகளும், தூதுகளும் பாடிக் கொண்டிருந்தனர்.

தமிழ்த்தாய் தன் மடியின் மிசை, ஒரு செந்தமிழ்க் காப்பியம், புதுமை பழுத்ததாய், பழைய மரபிற்கேற்றதாய் வந்து விழாதா என அன்று ஏங்கிக் கொண்டிருந்தாள்.

அன்று, தமிழை வளர்த்துக் கொண்டிருந்தது, சேதுபதிகள் ஆண்டிருந்த சேதுநாடு ஒன்றுதான், அதுவும் கூடப் பெருங்காப்பியம் படைத்துக் கொண்டிருக்கவில்லை, புலவர்களை ஆதரித்து, அவர்கள் பாடுகின்ற தனிப்பாடல்களை,

சிற்றிலக்கியங்களை வரவேற்றுச் சிறப்புச் செய்து கொண்டிருந்தது.

இந்தச் சேதுநாட்டின் - இராமநாதபுரச் சீமையின்-ஆட்சியைப் பரிபாலிக்கின்ற அமைச்சராக—திவானாக—திகழ்ந்தார் செய்யது அப்துல் காதிர் என்கின்ற 'சீதக்காதி' வள்ளல்.

அந்தத் தமிழ்க்குடி மகனாகிய இஸ்லாமிய இளைஞருக்கு, தமிழ்த் தாயின் தவிப்பு விளங்கிற்று. அவளது ஆவலைப் பூர்த்தி செய்கின்ற ஆர்வம் தோன்றிற்று! காவியம் பாடி, கன்னித் தமிழ்த்தாய் மடியில் தவழச் செய்வதற்குரிய கதைக்கு வேண்டிய கருப்பொருள் இருப்பதும் தெரிந்தது. தக்க கவிஞரைத் தேடினார். கிடைத்தார் கவிஞர். சோதித்தார்—அவரை. கம்பனின் வாரிசாக, கன்னித் தமிழின் மரபு கெடாமல், உயரிய நடையில், இனிய காவியம் படைத்தளிக்கின்ற இளம் கவிஞராக, புலவராக உமறு என்கின்ற பெயரினைத் தாங்கிய அருமாமணி கிடைத்தார். அணைத்து மகிழ்ந்து தனது ஊராகிய கீழக்கரைக்குக் கொணர்ந்து, சீறாப்புராணம் என்கின்ற சற்கண்டுக் காவியத்தை, தமிழிலே பாடி அளிக்கப் பணித்தார் அவரை வள்ளல் சீதக்காதி

பொருள் புதிது (தீனும், முகம்மது (சல்) வாழ்க்கையும்) சொல் புதிது. சொல்லுகின்ற முறையும் புதிது. ஆனால், அத்தனையும் தமிழ் என்கின்ற தேனில் தோய்த்தெடுத்த பேரீத்தம் கனிகள்!

தமிழகத்தின் வட மாவட்டங்கள் போர்க்களங்களாகிக் கொண்டிருந்தன. படை கொண்டு வந்தவர்கள் முஸ்லிம் மன்னர்கள் மட்டுமன்று. மராத்தி, தெலுங்கு, கன்னட மன்னர்களாகவும் இருந்தார்கள். ஆங்கிலோ, ஃபிரெஞ்சு நாட்டுக் கிருத்துவர்களும் விளங்கினர். நடந்தது மதப் போராட்டங்கள் அன்று. மண்ணை ஆளுகின்ற ஆசைப் போராட்டங்கள். இந்த நிலை தமிழக வட மாவட்டங்களிலென்றால், மதுரை, தஞ்சை நாயக்க அரசுகள் இந்தப் போராட்டங்களுக்கு உதவுபவையாகவோ அல்லது அந்த

அபாயத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்பவை களாகவோ திகழ்ந்தன என்றால், கவலையற்று சேதுநாடு கன்னித் தமிழ் வளர்ப்பில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. ஆம். காலத்தையும் வென்று நிற்கக்கூடிய காவிய படைப் பில் சீதாக்காதி ஈடுபட்டிருந்தார். அவர் சேதுநாட்டு மன்ன ரின் அமைச்சர். தமிழ் வளர்ப்பில் அரசருடன் போட்டி யிட்டு, அவரையும் விஞ்சுபவராய் விளங்கினார். ஆம், உலக மகா கவிகளில் ஒருவராக உமறுப் புலவரை உருவாக்கிக் கொண்டிருந்தார்; அழகிய தமிழ் பேசும் உமறுப் புலவரின் கிஞ்சுக வாய் சீறாப்புராணத்திற்கான விருத்தப்பாடலை முணகிக் கொண்டிருந்தது......

திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த
மருவினு மருவா யணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி யனைத்தும்
பொருளினும் பொருளா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினுங் கருவாய்ப் பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருந்துதல் கருத்தே!...

புரிந்த—பழைய—சொற்கள். ஆனால் புதிய வடிவம், புரிந்த பொருள்தான் — உருவமற்ற ஓரிறைவன் என்பது, ஆனால் படையெடுத்து வந்த உருவ வணக்கத்தாலும், ஓராயிரம் கற்பனைக் கடவுள் கதைகளாலும், தமிழக மக் களின் மனத்திலிருந்து மறைந்துவிட்ட பொருள் ஓரிறைவன் நெறி. ஆக, மறைந்துவிட்ட பழைய நெறியைப் புதுப்பிக்க வந்த முகம்மது (சல்) அவர்களின் வரலாற்றை, பாடத் துவங்கும் போதே உரிய வகையில், புதிய கவிதையில், புனைந்து தருகிறார் உமறுப்புலவர். இது மகா கவிகட்கு இருக்கவேண்டிய தகுதி—திறமை—ஆற்றல் ஆகும்.

புதிய பொருளைச் சொல்லவில்லை. புதிய சொற்களில் புரியாத சொற்களில் கூறவில்லை! ஆனால், இதயங்கள்—எல் லாச் சமயத்தார்களின் இதயங்களும்தான் — ஏற்கின்ற

வகையிலே, ஏற்று நினைவில் நிறுத்தி, நினைந்து நினைந்து மகிழ்ந்து, பாடிப் பாடி, பரவசம் அடைகின்ற தன்மையிலே தருகின்றார்.

தமிழிலே சரித்திரப் பாடல்களுக்குப் பஞ்சமில்லை என்பது போன்று, தோத்திரப் பாடல்கட்கும் பஞ்சமில்லை. ஆனால் உருவிலி என்று கடவுளைப் பாடுங் கவிஞர்கள் கூட. இடையிடையே மலையே என்றும், மணியே என்றும், கடலே என்றும், கனியே என்றும் உருவமுடையவைகளை உவமித்துக் காட்டியே பாடியுள்ளார். இதனால், உவமேயத்தைத் தவிர்த்துத் தள்ளிவிட்டு, உவமைக்கு உரியவற்றிற்கு உருவமிட்டு உருவவழிபாட்டிற்கு ஆக்கம் தேடிக் கொண்ட அறிவாளிகள் உள்ள நாடு இது என்பதனை, உமறுப் புலவர் ஊன்றிக் கவனித்து உணர்ந்து உள்ளத்தில் பதிய வைத்துக் கொண்டிருக்கிறார் எனவே, உருவமற்ற கடவுளைப் பாடும் போது உருவம் சமைத்துக் கொள்ளக்கூடிய சொற்களைத் தவிர்த்திருக்கிறார். ''திருவினும் திருவாய்'' என்ற சொல்லிற்கு எப்படி உருவம் நாட்ட முடியும்? இந்தப் பாடலில் உள்ள எல்லாச் சொற்களுமே இதைப் போன்றவைகளே! ஒளி என்கின்ற சொல்லினை மட்டும் தான் காட்சிப் படுத்தமுடியும். இந்தச் சொல்லிற்கு இத்தகு அபாயம் இருக்கின்றது என்பதனை உமறுப்புலவர் உணர்ந்திருந்தவராகவே திகழ்கின்றார். எனவே, 'மதித்திடாப் பேரொளி...'' என்று தொடங்கி நாம் காண இயலாத கற்பனைச் சொல்லிட்டுச் சுட்டுகின்ற ஒளியும் கூட, பொருவினும் பொருவா வடிவினும் வடிவன் என்று கூறுவதன் மூலம், காட்சி படுத்திக் காட்ட முடியாதவன் இறைவன் என்பதை உறுதிப்படுத்தியுள்ளார். பாடுவதற்கும் பாட்டின் பொருளுணர்ந்து போற்றுவதற்கும் உரிய அரிய பாடல் சீறாப்புராணத்தின் துவக்கத்திலேயே வருகின்ற — உமறுப்புலவர் தருகின்ற இந்தப் பாடல்! இது போன்ற பாடல் தமிழ்க் காப்பியங்களில் இதற்கு முன்பு உள்ளதாகத் தெரியவில்லை.

இந்தப் பாட்டின் மூலம், தமிழ்க் கவிஞர்கள் கற்றுக் கொள்கின்ற பாடம், உருவமற்றவன் கடவுள் என்று பாடி

னால் மட்டும் போதாது. உருவத்திற்குறிய சொற்களாலும் உருவமற்ற இறைவனைப் பாடக் கூடாது என்பதேயாகும்.

இசையிட்டுப் பாடுவோர் விரும்புவது, இது போன்று இசையிட்டுப் பாடக் கூடிய பாடல்களை, தமிழ்ப் புலவர்கள் பாடியருள வேண்டும் என்பதுதான்.

பொருளுணர்ந்து ரசிப்பவர்கள், இத்தகு பொருள் நயம் பொதிந்த பாடல்களைத் தமிழ்ப் புலவர்கள் அனைவரும் பாடியருள வேண்டும் என்பதே!

இந்தப் பாடலை, இன்னொரு கோணத்தில் காண்போம்.

தமிழில் அணி இலக்கண விரிவுரை-விளக்கவுரையாளர்கள். விளக்கணிக்கு விளக்கம் கூறும்போது, மேற்கோள் செய்யுளாகப் பெருங்காப்பியங்களில் உள்ள பாடல்களில் எது ஒன்றையேனும் சுட்டிக்காட்டி விளக்கம் உரைத்துள்ள அணி இலக்கண நூல் எதுவும் இதுவரை வெளிவந்திருப்பதாகத் தெரியவில்லை. ஒரு வேளை அத்தகைய பாடல்கள், அவர்கள் படித்த காவியங்களில் இல்லையோ என்னவோ! உமறுப்புலவர் இயற்றியருளியுள்ள சீறாப்புராணத்தின் முதல் பாடலாகத் திகழ்கின்ற மேலேயுள்ள "திருவினும் திருவாய்..." என்று ஆரம்பிக்கின்ற பாடலே விளக்கணிக்கு ஏற்ற பாடலாகத் திகழ்கின்றது.

'விளக்கணி விளக்கம்' என்பது, ஒரு பாடலில் உள்ள ஒரு வார்த்தையையோ, ஒரு வரியினையோ, இடையிலோ, கடைசியிலோ, எந்த இடத்திலிருந்தோ எடுத்துக் கொண்டு பாட்டு முழுமையும், பொருள் புரியும் தன்மையில், எடுத்து உரைத்து விளக்குவதாகும். "திருவினும் திருவாய்..." என்ற சொற்றொடருடன் துவக்கமாகின்ற உமறுதரும் சீறாப்புராணப் பாடல் இந்த வகையில் அமைந்திருக்கின்ற தன்மை காணுவோம்.

இந்தப் பாடலின் முடிவில் உள்ள சொற்கள், "கருத்தனைப் பொருத்துதல் கருத்தே" என்பதாகும். இந்த இறுதிச்சொற்களை, இறுதியில் அமைத்து, பாடல் முழுவதை

யும், வரி வரியாக...இல்லை இல்லை வார்த்தைகளாகவே பொருத்திப் பார்ப்போமே!

''திருவினும் திருவாய்
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே!''
''பொருளினும் பொருளாய்க்
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே!''
''தெளிவினும் தெளிவதாய்க்
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே!''
''மருவினும் மருவாய்
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே!''
''அணுவினுக் கணுவாய்
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே!''
''மதித்திடாப் பேரொளி யனைத்தும் பொருவினும்
கருத்தனைப் பொறுத்துதல் கருத்தே!''
''வடிவினும் வடிவாய்
கருத்தனைப் பொறுத்துதல் கருத்தே!''
''பூதலத் துறைந்த பல்லுயிரின கருவினும் கருவாய்
கருத்தனைப் பொறுத்துதல் கருத்தே!''
''பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் வருத்தே!''

இப்படி வரிகளை, வார்த்தைகளை, பிரித்து, இணைத்து, பொருள் புரிந்து, ரசித்து மகிழச் செய்கின்ற விளக்கணி விளக்கத்திற்கு ஏற்ற பாடலாக இந்தப் பாடல் விளங்கு வதைப் புலவர்கள் கவனத்தில் கொள்ளுவது பயனுடைய தாகும்

''திருவினும் திருவாய்'' என்று தொடங்கும் இந்தப் பாடலின் அமைப்பு, ஒரு புலவன், தான் செய்கின்ற நூலின் நோக்கம் கூறுகின்ற, பாயிரம் போன்றிருப்பதை நோக்குதல் வேண்டும்.

நூல் செய்வோன் தனது நூலினை. நுகர்வோர்க்குக் கிட்டுகின்ற பயனை முன்னுரைப்பது நல்ல பண்பு. பாயிரத் தின் சிறப்பாகவும் சுட்ட முடியும். 'திருவினும் திருவாய்'...

என்ற பாடலில் உமறுப்புலவர் தரும் பயனுடைய செய்தி 'கருத்தனைப் பொருத்துதல் கருத்தே' என்பதாகும்.

உமறுப்புலவர் கர்த்தனை தம் மனத்தில் மட்டும் பொருத்திக் கொள்கின்ற விருப்பத்தில் இப்பாடலைப் பாடியிருப்பதாகக் கொள்வது முழுமையாகாது. கர்த்தனை, நூலினைப் படிக்கின்ற, படிக்கச்சொல்லிக் கேட்கின்ற அனைவருடைய மனத்திலுமே கர்த்தனைப் பொருத்துதல் தமது கருத்தாகப் பாடுகின்றார் உமறுப்புலவர் என்பதே நிறைவுடைய பொருளுடையதாகும். முகம்மது நபி (சல்) அவர்களின் வாழ்க்கையை தாம் சீறாப்புராணம் என்கின்ற பாரகாவியமாகப் படைப்பதன் கருத்து, பெருந்தவம் புரந்த கருத்தனை எல்லோருடைய மனத்திலும் பொருத்துகின்ற கருத்தில்தான் என்பதை, பாயிரமாக அமைத்து திருவினும் திருவாய் என்று தொடங்கும் பாடலை உமறுப்புலவர் பாடியிருக்கிறார் என்பதே சரி.

இந்த நோக்கில் கொண்டால் சீறாப்புராணத்திற்கு, உமறுப் புலவர் பாயிரம் பகரவில்லை என்கின்ற குறையும் நீங்கும்.

"திருவினும் திருவாய்......" என்று தொடங்குகின்ற உமறுப் புலவரின் சீறாப்புராண முதற் பாடல், கடவுள் நிலைக்கு இலக்கணமாக அமைந்திருப்பது ஒன்று. அந்தகு இறைவனை எல்லோருடைய மனத்திலும் பொருத்துவது கருத்து என்னும் நோக்கம் கூறுவதாக உளது மற்றொன்று. "எத்தகு இறைவனைக் கருத்தில் பொறுத்துவது" என்ற கேள்விக்கு, "இத்தகு இறைவனை" பொருத்துதல் கருத்து—அதாவது, உயர்ந்தது என்று சுட்டி உரைப்பதாக உளது இன்னொன்று. 'எப்படிப் பொருத்திக் கொள்வது?' என்னும் கேள்விக்கு "இப்படியெல்லாம் பொருத்திக் கொள்ளலாம்" என விளக்கணி கூறுவது வேறொன்று. ஆக, இந்தப் பாடல் பலபட விரித்துப் பொருத்தி, பொருளுணர்ந்து நவில் தோறும் நயம் காண்கின்ற தன்மையுடையது. இதுபோன்ற அரிய பாடல்களை. தமிழில் மட்டுமின்றி பிறமொழிகளிலும் கூடக் காண்பது அரிதே!

இதுபோன்று பயில்தொறும் புதுப்புது இன்பம் தருகின்ற பாடல்கள்—தமிழ்ச் சுவை, பொருட்சுவை, இலக்கண நயம், இலக்கிய மணம் கமழ்கின்ற பாடல்கள்—நூற்றுக் கணக்கில் சீறாப் புராணத்தின்கண் உள. விரிவஞ்சி ஒரு பாடலுடன் முடிக்கின்றேன்.

காப்பியம் படைக்கின்ற வாய்ப்பினைத் தமிழ்மொழி இழந்துநின்ற காலத்திலே தோன்றியவர் உமறுப்புலவர். ஆனால், வளமான காப்பியங்களைப் படைத்தளிக்கின்ற தகுதியுடையதாகத் தமிழ்மொழி திகழ்ந்த காலத்தே வாழ்ந்த புலவர்களின் வரிசையிலே முதலிடம் வகிக்கும் தன்மை பெற்றவராகத் திகழ்கின்றார். இதற்குச் சான்றாக அவர் படைத்தளித்துள்ள சீறாப்புராணம் விளங்குகின்றது.

'விதியவன்' போன்ற புதிய சொற்கள் பலவற்றைத் தந்து தமிழைச் சிறப்பித்திருக்கிறார். 'வள்ளியோர்' போன்ற பல சங்க காலத் தமிழ்ச் சொற்களையெல்லாம் எடுத்தாண்டு, தமிழ்ச் சொற்கள் வழக்கற்றுப் போகாமல் காப்பாற்றப்படுகின்ற பணியையும் புரிந்திருக்கிறார். 'கரிப்பு' என்பதையொத்த சிலசில கிராமிய வழக்குச் சொற்களையும் கையாண்டு, மக்களிடையே பேச்சு வழக்குச் சொற்களையும் இலக்கியத்தின் இடையே அவசியம் கருதி அங்குமிங்குமாக ஒன்றிரண்டு சொற்களைக் கையாளலாம் என்றும் காட்டியுள்ளார். பாத்திரங்களின் உரையாடல்கட்கு ஏற்ற அமைப்புக்களைக்கொண்ட யாப்புகளிலும் பாடல்கள் புனைந்துள்ளார். பாத்திரங்களின் குணங்களை விளக்குகின்ற சொற்களிலும் பாடல்கள் சில அமைந்திருக்கின்றன, ஈடு இணையற்ற தன்மையிலே இயற்கை வருணனை புரிந்திருக்கிறார். இசைக் கருவிகளின் ஒலிகளை யொத்தும் மிருகங்களின் தொனிகளைப் போன்றும் ஒலிக்கின்ற பாடல்களும் இருக்கின்றன. ஆக—,

தனக்கு முன்னோர்களை மதித்து. அவர்களை விஞ்சும் வகையிலே பாடல்கள் புனைய முயன்று வெற்றியும் கண்டிருக்கிறார் உமறுப்புலவர். மொத்தமாக—,

தன்னையொரு ஈடிணையில்லா மகாகவியாக ஆக்கிக் கொள்வதில் முயன்று வென்று திகழ்கின்றார் உமறுப்புலவர். விருத்தப்பாக்களை சந்தப்பாக்களாகத் திகழப் படைத்துள்ள பெருமையும் உமறுப்புலவருக்குண்டு. குறிப்பாக—,

பிற்காலப் புலவர் ஒருவர் முற்காலப் புலவர்களை விஞ்சும் வகையில், காவியம் படைத்தளித்துள்ள பெருமை உமறுப்புலவரை மட்டுமே சாரும்.

உமறுப் புலவர், சீறாப்புராணம் பாடியுள்ள காலத்தின் நிலைமையை வைத்து நோக்கும்போது—நோக்க வேண்டும்—சீறாப்புராணம் ஒரு அரிய படைப்பு; தமிழ்த்தாய்க்கு ஒரு புதிய அணிகலன்; தமிழர்கட்கு ஒரு புத்தொளிக் கருவூலம். தமிழர்கள் அனைவரும் படித்து உவக்க வேண்டிய பாரகாவியம் சீறாப்புராணம். தமிழர்கள் அனைவரும், சாதி சமய பேதமின்றி, கொண்டாடப்படவேண்டிய மகாகவி—புலவர் உமறுப்புலவர். இந்த உலக மகா கவிஞரை—புலவரை—மாணவர்கள் கற்றுத்தேர்வது தமிழ் வளர்ச்சிக்கு ஊக்கம் தருவதாகும். இதற்கு வழிகாண்பது நமது கடமை.

# உமறுவின் தனித்திறன்

ஜே. எம். சாலி, எம். ஏ.

தமிழில் தோன்றிய முதலாவது இஸ்லாமியக் காவியம் என்பதோடு மட்டுமின்றி சில தனித்துவ முத்திரைகளைப் பெற்றிருப்பது சீறாப்புராணத்தின் சிறப்பு. மற்ற தமிழ்க் காவியப் புலவர்களிலிருந்து சீறாப்புராணம் பாடிய உமறுப் புலவர் சற்று வேறுபடுகிறார். இந்த வேறுபாடு அவருக்குள்ள தனித்திறனை, தனித்துவத்தைக் குறிப்பதாகும். உமறு ஒரு தமிழ்ப் புலவர், அத்துடன் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர். இதுதான் மற்ற சமயப்புலவர்களினின்றும் உமறுவை வேறுபடுத்துகிறது என்பதைத் தவிர வேற்றுமைப்படுத்த வில்லை. இனத்தால் தமிழ்ப் புலவர்; ஏற்றுக் கொண்ட சமய தினால் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர் என்ற இரட்டைச் சிறப்பு அவருக்கு உண்டு.

உமறுப் புலவர் என்றோங்கிய வள்ளல்
நிது நூலிற்பியற் சீறாவென்ன
புது நூல் நாமமேசூட்டி முதுபயன்
அறம் பொருள் இன்பம் வீடனைத்துமடங்கிய
திறம் பெறும் காப்பியம் செய்தனர்.

என்று புலவர் போற்றும் புலவராகத் திகழ்கிறார் சீறாப் புலவர்.

காவியம் நாற்பொருள் பயக்கும் நெறித்தாக இருக்க வேண்டும் என்பது இலக்கணம். அறம், பொருள், இன்பம் வீடு என்பவை அவை. இன்பச் சுவை இன்றேல் காவியம் இல்லை எனுமளவுக்கு இன்பியல் தமிழ்க் காவியங்களில் தலைமையான இடம் பெறுகிறது. தன்னிகரில்லாத காவி யத் தலைவனின் திருமணம், முடிசூடுதல், பொழில்—புனல் விளையாட்டுகள், மக்கட்பேறு, ஊடல், கூடல் முதலானவை பாடப் பெற்றிருக்க வேண்டும். இலக்கியத்தில் நாயக—

நாயகி பாவம் என்ற நெறி உண்டு. 'இந்த பாவத்தை ஆளுவது கத்தியின் கூர்ப்பக்கத்தின் மீது நடப்பதைப் போன்ற கஷ்டமான காரியம். ஒரு வரம்பு இருக்கிறது. அதற்கு இப்புறம் அப்புறம் போய்விட்டால் அசந்தர்ப்பம் ஆகிவிடும்' என்று திறனாய்வாளர்கள் கூறுவார்கள்.

உமறுப்புலவருக்கு இத்தகைய சோதனைதான் ஏற்பட்டிருக்கிறது. கத்தி முனையில் நின்றே அவர் சீறாக்காவியத்தைப் பாடியிருக்கிறார் என்று சொல்லலாம். அவர் பாட வந்தது தமிழ்க் காப்பியம். அதிலும் இஸ்லாமியத் தமிழ்க் காப்பியம், உமறு கம்பராமாயணக் கடலில் ஊறியவர்; சிந்தாமணிச் சாகரத்திலும் நீந்தியவர். அந்தப் பயிற்சியின் காரணமாக ஒரு பாரகாவியத்தை எழுதி முடிப்பது அவரால் இயலக்கூடிய செயலேயாகும் ஆனால் இஸ்லாமிய நெறி முறைகளுக்கும் வரம்புகளுக்கும் உட்பட்டு காவியத்தைப் படைக்கும் பணி அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. காவியத் தலைவர் முகம்மது நபி இறைவனின் இறுதித் தூதர். இஸ்லாமிய நெறியைப் புரக்க வந்த செம்மல், எனவே, கற்பனையாகவோ, புனைந்துரையாகவோ காவியப் புலவர் வலிந்து எதையும் சொல்ல முடியாது.

'கலைமறை முகம்மதென்னும் காரணம் இல்லையாகில் உலகு விண் இரவி திங்கள் ஒளிர் உடுக்கணம் சுவர்க்கம் மலை கடல் நதி பாதாளம் வானவர் முதலாய் உம்மை நிலையுறப் படைப்பதில்லை என இறை நிகழ்த்தினானே' என்று போற்றப்படுவர் காவியநாயகர் முகம்மது. இத்தகைய தலைவரை தம் விருப்பம்போல் உமறுப் புலவர் பாட முடியாது, எனினும் காவிய நெறியைத் தழுவி நாற்பொருளை, சிறப்பாக இன்பச் சுவையைப் பாடியே யாகவேண்டும். இன்பச் செய்திகள் இல்லாவிட்டால் வெறும் அறநூலாகவல்லவா அமைந்து விடும்? என்ன செய்வார் உமறு?

நாயகரைப் போலவே அவருடன் தொடர்புடைய மாதர் திலகங்களும் மாண்புக்குரியவர்கள். தாயார் ஆமினா.

'அறத்தினுக்கு இல்லிடம், அருட்கோர் தாயகம், சிறப்பினுக் குவமையில்லாத செல்வி' யென்று புலவர் போற்றும் புகழ் பெற்றவர். மனைவி கதீஜா நாயகி 'பேரழகொழுகும் பெண்ணலங்கனி, பிரசமூரிய மொழிக் கரும்பு, ஆரணக் கடலுக்கு அமுதநாயகி' என்று போற்றப்படுபவர். மகளார் பாத்திமா நாயகியும் அப்படியே! புனிதமான இவர்களைப் பற்றி புனைந்துரை கற்பிக்கமுடியுமா! "எச்சரிக்கை! நீர் பாடுவது நபிகள் நாயகத்தின் வரலாறு. கத்தியின் கூர்ப் பக்கத்தில் நிற்பதை மறந்து விடாதீர்கள். எண்ணம் போல் இயற்றுவதற்கு உமக்கு அனுமதி இல்லை. எல்லைக்கோட்டுக் குள் நின்றே நீர் பாடவேண்டும்!" என்ற உள்ளொலி, மனக்குரல், உமறுவினுள்ளே ஒலித்துக்கொண்டேயிருக் கிறது.

தொடக்கத்திலேயே புலவருக்கு வரம்பும் கட்டுப்பாடும் விதிக்கப்பட்டுவிடுகின்றன இந்தக் கட்டுப்பாட்டை ஒரு சவாலாக, அறை கூவலாக ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

காவிய நாயகரும் நாயகியும் சந்திக்க வேண்டும் அவர் களிடையே நேசம் அரும்ப வேண்டும். தலைவர் முகம்மது வைப் பற்றி ஒரு கனவு காண்கிறார் கதீஜா நாயகி. பெரு மானார் ஊர்வலம் வருகிறார். குதிரைகள் வரிசையாகத் தொடர்ந்து வருகின்றன. வானவர்கள் வாசனைப் பொருட் களைத் தூவிக்கொண்டே வருகின்றனர். நாயகர் பவனி வருவதைப் பார்த்துக் கண்ணும் கருத்தும் களித்துப் போகிறார் கதீஜா நாயகி.

இந்தக் கனவுக்குப் பிறகு அவர் மனத்தில் அண்ண லாரைப் பற்றிய எண்ணங்கள் இடம்பெற்றுவிடுகின்றன. அடுத்து சந்திப்புக்குச் களம் அமைக்கப்படுகிறது. உமறு அதை எப்படிப் பாடுவாரோ என்று ஆர்வத் துடிப்போடு பார்க்கிறோம்.

நபிகள் திலகம் நாயகியாரின் இல்லத்திற்கு வாணிகம் பற்றிப் பேச வருகிறார். அவர் முகம் பேரொளி மிக்கது. வெள்ளம்போல் அங்கே பேரழகு பொலிந்து கொண்டிருக்

கிறது. அந்த அழகு வெள்ளத்தின் முன்னே கதீஜா நாயகியின் கரிய விழிகள் மீன்களாகி விடுகின்றன. அண்ணலின் முகமாகிய அழகு வெள்ளத்தை நோக்கி நாயகியின் கண்கள் கயல்களாகத் துள்ளிக் குதித்தோடி அந்த வெள்ளத்தோடு கலந்து விடுகிறது.

பேரொளி பரப்பிப் பெருகிய வழகு வெள்ளச்
சார்பினிற் கதீஜா வென்னுந் தையல் தன்
கரியவாட்கண்
கூருடைக்கயல்களோடிக் குதித்தன குளித்துத்
தேக்கி
வாரிய வதனஞ் சேர்ந்து மறுக்க முற்றிருந்தவன்றே''

அடுத்தது என்ன?

பார்த்த கண் பார்த்தபடியே இருந்தது பார்வைமீட்டுக் கொள்ள முடியாத நிலை. அதே சமயம் நாயகியை நாணம் சூழ்ந்து கொள்கிறது தம் ஆசை வெளிப்பட்டு விடக் கூடாதல்லவா? நாணம் என்ற போர்வையைப் போர்த்திக் கொள்கிறார். கற்பெனும் வேலியை உடனடியாக அமைத்துக்கொண்டு விடுகிறார். மனச் சஞ்சலத்தை வெகு நாகரிகமாக மறைத்துக்கொண்டு விடுகிறார் என்றாலும் நாயகியின் நெஞ்சில் ஒரு மயக்கம்; கலக்கம்.

''பார்த்த கண் பறித்து வாங்கப் படாமையால்
நறவஞ் சிந்தப்
பூத்த கொம்பனைய மெய்யினால் நாணெனும்
போர்வை போர்த்தக்
கூர்த்தவா வெளிப்படாமல் கற்பெனும் வேலி
கோலிச்
சேர்த்ததம் முளங்காணாது திருந்திழை
வருந்தி நின்றார்.''

தலைவரின் நிலை என்ன?

நாயகியை சந்திக்க வந்தவர் அவரைப் பார்க்காமல் இருக்க முடியுமா? பார்க்கிறார், பார்த்துக் கொண்டேயிருக்க முடியாதல்லவா? கதீஜா நாயகியின் வடிவைக் கண்ணால் பார்த்தும் பார்க்காதவர் போல், அதாவது நோக்கியும் நோக்காததும் போல் இருக்கிறார் அண்ணல். பார்வையை

நீளவிட்டால் அவர்தம் பெருமைக்குக் குறைவாகிவிடும். எனவே, நொடிப்பொழுதில் பார்வையைத் திருப்பிக் கொண்டு விடுகிறார். ஆனால் மனம்...? நாயகியிடம் விடைப் பெற்றுக் கொண்டு வீதிக்கு வந்தபிறகும் அந்த மாதரசியின் உருவம் மனத்தில் தொடர்கிறது. நாயகியின் பார்வை அவர்களைத் தொடர்ந்து வர வீதியிலே நடந்து வருகிறார் தலைவர். கதீஜா பிராட்டியின் கடலனைய கண்ணும் மனமும் பின் தொடர்ந்து வருகிறதாம்.

''காக்குதற்குதித்த வள்ளல் காரிகை வடிவைக்
கண்ணால்
நோக்கியும் நோக்காதும் போல் நொடியினி
னெழுந்தம் மாதின்
மாக்கடல னையகண்ணும் மனமும் பின்தொடர்ந்து
செல்லக்
கோக்குல வீதி நீந்திக் கொழும னையிடத்திற்
சேர்ந்தார்.''

நாயக-நாயகியரின் சந்திப்பை வரம்புக்குட்பட்டு எல்லை மீறாத இனிமையுடன் இயல்பாகச் சித்தரித்துக் காட்டுகிறார் உமறுப்புலவர். உமறுவின் எழுத்தாணி முறையாக இயங்குகிறது. கத்தி முனையில் நிறுத்தப்பட்டிருப்பதை உணர்ந்திருப்பதால்தான் அவர் காதலை காமச் சித்திரமாக்கி விடாமல் புனிதப் பொருளாகக் கையாண்டிருக்கிறார்.

உமறுவின் ஆவல் அடங்கவில்லை. இன்பச் சுவையை இன்னும் பாட இடம் கிடைக்காதா என்ற துடிப்புடன் களங்களை தேடுகிறார். முயற்சி வீண் போகவில்லை. தலைவன் தலைவியைப் பற்றித்தானே புனைந்துரைக்கக் கூடாது! வீதியிலே பெண்டிர்கள் இருக்கிறார்கள். பேதை முதல் பேரிளம் பெண்வரை ஏழு பருவ மகளிரும் எங்கணும் உலவுவார்களே, அவர்களின் எழிலை, இதய உணர்ச்சிகளை, மெய்ப்பாடுகளைப் பாடித்தீர்த்துவிட்டால் நெருங்கிய சுவையும் பாவமும் அமைந்துவிடுமல்லவா?

நபிகளாரின் திருச்செல்வி பாத்திமா நாயகிக்கும் மாவீரர் அலிக்கும் திருமணம். மணமகன் உலா வருகிறார், வீதியின் இருமருங்கிலும் 'மதிக்குலம் கடல் பூத்தது போல், மங்கையர் திரண்டு நிற்கின்றனர். பேதை இருக்கிறாள். பெதும்மை இருக்கிறாள். மங்கைப் பருவப் பெண் உண்டு. மடந்தையும் நிற்கிறாள். அரிவை இருக்கிறாள் தெரிவை இருக்கிறாள். பேரிளம் பெண்டிரும் உலாவைக் காண்கின்றனர். அவர்களின் எண்ணமெல்லாம் வீரர் அலியாரின் மீதுதான். அவருடைய பெருகிய அழகெல்லாம் ஒருத்திக்கே சொந்தமாகப் போகிறதே என்று அவர்கள் பொறாமையால் ஏங்குகிறார்கள். பாத்திமா நாயகியின் திருமணப் படலத்தில் இருநூற்றுக்கும் மேற்பட்ட பாடல்களை எண்ணம்போல் அமைத்து இன்பச் சுவையை அள்ளித் தெளித்திருக்கிறார் புலவர். இப்படி, வாய்க்கும் போதெல்லாம் வடிகாலை வகுத்துக் கொண்டிருக்கிறார் அவர். காவியத்தின் பெருமைக்கு எவ்வகையிலும் குறை ஏற்படுத்தாத வகையில் களங்களை அமைத்திருப்பது உமறுவின் தனிச்சிறப்புகளில் ஒன்றாகும்.

உமறுப்புலவர் உலகியல் அறிந்த மேதை. அவர் சார்ந்த சமயம் இஸ்லாமாக இருப்பினும் தாயகத்தில் மற்ற சமய நெறி முறைகளையெல்லாம் முற்றாக உணர்ந்தவர். இஸ்லாமிய சமய தத்துவங்களையும் நெறிமுறைகளையும் காவியத்தில் சொல்வதோடு நின்று விடாமல் சமயம் வாய்க்கும் போதெல்லாம் பொதுவான கருத்துகளையும் குறிப்பிட்டுச் சொல்கிறார், மேரு மலையையும்; ஆதிசேடனையும், லட்சுமியையும் காளியையும் கூட இஸ்லாமியத் தமிழ்க் காவியத்தில் இடம் பெறச் செய்கிறார் என்றால் வியப்பில் நாம் புருவத்தை உயர்த்துகிறோம்.

அண்ணல் நபி பிறந்த அரேபியாவுக்கும் செல்வத்துக் கரசியாக புராணங்கள் போற்றும் திருமகள் லட்சுமிக்கும் என்ன சம்பந்தம் இருக்கமுடியும்? இந்துப் பெருமக்கள் கொண்டாடும் தெய்வமல்லவா அவள் என்று வினவலாம். உமறுப்புலவரின் நோக்கும் போக்கும் அப்படிப்பட்டதல்ல. லட்சுமியை அவர் இறைவியாக எண்ணிப் பாடவில்லை.

ஒரு பெருமித நிலையை எடுத்துச் சொல்லவே கோமகளைக் குறிப்பிடுகிறார். அவ்வளவுதான்.

அபுத்தாலிப் நபிகள் பெருமானாரின் பெரிய தந்தையார், கொடையளிப்பதில் அவர் மேகத்தைப் போன்றவர். வீரமும், கல்வியும், வெற்றியும் மிக்கவர். செல்வம் குடியிருக்கும் அவருடைய இல்லத்தில் செல்வ நாயகியான கோமகள் லட்சுமி இருக்கிறாள் என்று சொல்வது பொருத்தமில்லையா? அபுத்தாலியின் வீட்டு முன்வாசலில் லட்சுமி பெருமையோடு அமர்ந்திருக்கிறாள். எப்படி?

"சலதரத்தை நேர்கரத்து அபுத்தாலிபு தன்பால்
குலவு வீரமும் கல்வியும் வெற்றியும் குடியாய்
நலம் உறப்புகுந்து இருந்தன நாள்தோறும்
வசைத்து
இலகு செல்வியும் இவர்மனை முன்றில்
வீற்றிருந்தாள்"

உமறுப்புலவர் இத்துடன் நின்று விடவில்லை. மக்கா நகரின் சிறப்பை எடுத்துச் சொல்ல மகா மேருமலையைத் துணைக் கழைக்கிறார். மேரு மலையையும் சக்கரவாளக்கிரியையும், சப்த தீவுகளையும் ஆதிசேடனையும் புராணங்களில் படிக்கிறோம். ஒரு காவியப் புலவனுக்கு இவை தெரியாமலிருக்க முடியுமா? உரிய இடத்தில் இவற்றை எடுத்தாள்வது புலவரின் கவித் திறனாக அமையும் அல்லவா?

"வடகரைப் புடைசூழ் நிலத்து எழுதீவும்
வரவழைத்து ஒரு தலத்து இருத்தித்
தடமுடிக் கிரணத் திகிரி மால் வரையைச்
சதுர்தரப் புரிசையாய் நிறுத்தி
இடன் அற நெருங்கும் பெரும்புறக் கடலை
இதற்கு அகழ் எனப் பெயரிட்டுப்
பட அரவரசன் திருமுடி மணியைப்
பதித்தது மக்கமா நகரம்".

இது உமறுவின் பாடல். மேருமலையினால் சூழப்பட்ட உலகின் ஏழு தீவுகளும் ஓரே இடத்தில் திரண்டிருந்தால் எப்படி

இருக்கும்? சக்கரவாளக்கிரியைக் கோட்டை மதிலாகவும், ஆழ்கடலைக் கோட்டையின் அழகாகவும் கொண்ட இடம் எப்படி இருக்கும்? பாம்பரசனாகிய ஆதிசேடனின் முடியிலுள்ள நாகரத்தினத்தைப் பார்த்தால் எப்படியிருக்கும். அப்படி நிகறற்று விளங்குகிறது மக்கமா நகரம் என்கிறார் அவர், மேருமலையைப் பல இடங்களில் உமறுப்புலவர் குறிப்பிட்டிருக்கிறார்,

அவ்வாறே காளியையும் சீறாக் காவியத்தில் பார்க்கிறோம். நாட்டு, நகரப் படலங்களில் தமிழ்நாட்டுப் பின்னணிகளை ஆசை தீர பாடித்தீர்த்த உமறுப்புலவர் பாலை நிலத்தைப் பாடும்போது காளியின் சித்திரத்தைக் கண் முன்னே நிறுத்துகிறார். காளியை பாலை நிலத்துக்குரிய கடவுளாகவும் பேய்களை அவருடைய படைகளாகவும் பாடப்படுவது தமிழ் மரபு இதையே உமறு,

> "முவிலை நெடுவேற் காளி வீற்றிருப்ப முறை
> முறை நெட்டுடற்கரும்பேய்
> ஏவல் செய்து உறைவது அலது மானிடர்கால்
> இடுவதற்கு அரிது..."

என்று சுரத்தில் புனலழைத்த படலத்தில் பாடுகிறார்.

இதில் என்ன சிறப்பு என வினவலாம், ஒரு தமிழ் புலவன் உவமையாகவோ, உருவகமாகவோ மேருவையும் ஆதிசேடனையும், இலட்சுமியையும் எடுத்தாள்வது புதுமையல்ல என்றாலும், ஓர் இஸ்லாமியத் தமிழ், காவியத்தில் ஒரு முஸ்லிம் தமிழ்ப் புலவனால் பேசப்படுவது சிந்தனைக்குரியது. மற்ற முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் அணுகாத ஓர் அரிய முயற்சி இது. உமறுவின் தனிப்பெரும் பண்புகளில் இதுவும் ஒன்று.

மற்ற காவியப் புலவர்களைப் போலவே உமறுப் புலவரும் ஒரு இலட்சிய உலகைப் படைத்துக் காட்டுகிறார். கம்பனின் கோசலமும், திருத்தக்கத் தேவரின் ஏமாங்கதமும் பொன் உலகங்களாகப் படைக்கப் பட்டிருக்கின்றன. இவ்விரு புலவர்களும் அயோத்தியையும், ஏமாங்கத நாட்டை

யும் முறையே, 'பொன்னகர்' பூமி என்றும். 'பொன்னுலகு' என்றும் வர்ணிக்கின்றனர். உமறுப் புலவரின் நோக்கில் மக்கா நகரம் எப்படியிருக்கிறது தெரியுமா? '...பொன்னுலகம் எட்டும் ஒன்றெனத் திரண்டு வந்திருந்த தொத்திருக்கும்' என்று பாடுகிறார்.

உமறுவின் இலட்சிய நாட்டில் மக்கள் மனதில் உயர்ந்த சிந்தனை இருக்கிறது. நிந்தனை இல்லை. மக்கள் மதுவருந்துவதில்லை. அருந்துவோர் யாராவது உண்டா என்றால் 'உண்டு' என்ற பதிலும் இருக்கிறது. ஆமாம், வண்டினங்கள் மலரின் மதுவை அருந்தும் காட்சியை மட்டுமே காணலாம். பொய் உண்டா? இல்லை, ஆனால் ஒரு பொய் மட்டும் உண்டு ஏன் ஊடல் கொண்ட பெண்டிரை அமைதிப்படுத்துவதற்காக ஆண்கள் பொய் சொல்ல வேண்டியிருக்கிறது. அவ்வளவுதான். கொலையோ களவோ அந்த நாட்டில் இல்லை. இருப்பதெல்லாம் பழக்குலைகள் தான்.

"நினைக்கும் பொற்பொருளே நிந்தனை மற்றோர்
நிந்தனை சிந்தனை இலையே
இனக்கருஞ் சுரும்பு மதுத்துளி அருந்தும்
இவை அலால் மதுப்பிரிது இலையே
சினக்கரி முனைக்கொட்டிள முலைப்புலவி
திருத்தும் பொய்யலது பொய் இலையே
வனக்கனி கருத்த குலைக்களவு அலது
மறுத்தொரு கொலைக்களவு இலையே"

என்பது உமறுவின் குரல். காவியங்களில் நாட்டு, நகரப் படலங்களில் இத்தகைய புத்துலகக் காட்சிகள் சமைக்கப் படுவது இயல்பு. உமறுப் புலவரும் அந்த மரபைப் பின்பற்றிப் பாடியிருக்கிறார் என்றாலும், இஸ்லாமிய நெறியை இலைமறைகாயாக எப்படி இங்கே அமைத்திருக்கிறார் என்பதைக் கவனிக்க வேண்டும். 'மதுப்பிறிது இலையே' என்ற சொற்றொடர் அழுத்தமான கருத்தை வலியுறுத்துகிறது. இஸ்லாம் மதுப்பழக்கத்தை ஏற்கவில்லை. ஆகவே, மது

வில்லாத நாட்டை உமறு படைத்துக்காட்ட வேண்டு மல்லவா? நுட்பமான கருத்துகளை இப்படி இயன்ற போதெல்லாம் அவர் எடுத்துச்சொல்கிறார்.

சொல்லாட்சியிலும் உமறுவின் கனித்திறன் துள்ளி வரக் காணலாம். ஒரு பகிய மணிப்பிரவாளத்தை அளவாக வும் அழகாகவும் பயன்படுத்திய பெருமை உமறுப் புல வருக்கு உண்டு. தமிழும் வடமொழியும் மணியும் பவளமும் போல் கலந்து எழுதப்பட்ட ஒரு மொழி நடை மணிப்பிர வாளம் என்று அழைக்கப்பட்டது. உமறுப் புலவருக்கு இதிலிருந்து சற்று மாறுபட்ட ஒரு நிலை. அரபு மொழிச் சொற்களைப் பெரும் எண்ணிக்கையில் பயன்படுத்த வேண் டிய ஒரு கட்டாய நிலைமைக்கு உட்படுகிறார். இஸ்லாமியத் தமிழ்க் காப்பியமாகையால் அரபுமொழிச் சொற்களை அவரால் தவிர்க்க இயலாது. தேவையான இடங்களில் அரபுச் சொற்களை அப்படியப்படியே பெய்தால்தான் இஸ்லாமிய மணமும் பின்னணியும் இருக்கும். அதே சமயம், காவியத்தைப் படிப்பவர்கள் தமிழ் மக்கள் ஆகை யால் தமிழ்க் காவிய நலன்களுக்கு அரபுச் சொற்கள் தடை யாக இல்லாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டிய பெரும் பொறுப்பு இருக்கிறது. இந்தச் சோதனைக்கு உட்பட்ட முதல் முஸ்லிம் தமிழ்க் காவியப் புலவர் உமறு என்று சொல்லலாம்.

அரபுமொழிச் சொற்கள் பயின்று வருவதால் சீறாப் புராணத்தை தமிழ் முஸ்லிம் அல்லாதார் படித்துச் சுவைக்க இயலாது என்று சொல்பவர்கள் உண்டு. இது சரியான கண்ணோட்டமன்று. உமறுப்புலவர் அதற்கு இடம் வைக்க வில்லை. சொல்லின் பொருளை சூழ்நிலையினால் விளங்க வைக்கும் தனிப்பெரும் ஆற்றல் உமறுவுக்குக் கைவந்த கலை. சுஜூது, மலக்கு, கலிமா, தீன், திக்று, ஈமான், போன்ற சொற்களும், கதை மாந்தர்களின் அரபுப் பெயர்களும், இடங்களின் பெயர்களும் காவியத்தில் விரவி வருகின்றன. அரபு மொழிச் சொற் பயிற்சி இல்லாதவர்கள் இவற்றை

எப்படி உணர்ந்து கொள்ள முடியும்? இஸ்லாமியத் தமிழ்க் காப்பியம் என்பதால் அரபுச் சொற்களைப் புலவரால் புறக் கணிக்க முடியாது. அவற்றின் பொருளையும் புரிய வைக்க வேண்டும். இதற்கு ஓர் அரிய உத்தியை சீறாப் புலவர் பின் பற்றுகிறார். முதலில் அரபுச் சொல்லை தன் விருப்பம் போல் எடுத்தாள்கிறார். அடுத்து இனிய தமிழ்ச் சொற் களைப் பெய்து முதலில் கூறிய அரபுச் சொல்லின் பொருளை அழகுற விளங்க வைக்கிறார். சில இடங்களில் சூழ் நிலையைக் கொண்டு அப்பாலும் இப்பாலும் போகா மலேயே பொருளை உணர்த்தி விடுகிறார் புலவர்.

''மறையின் மிக்கவர் ஓதிய ஓசையும், வரிசைத்
துறவின் மிக்கவர் 'திக்கிரின்' ஓசையும் சூழ்ந்தே
இறைவனைத் தொழுது இருகையும் ஏந்திய 'ஆமீன்'
முறை முறைப்படி கூறிய ஓசையும் முழங்கும்''

உமறு காட்டும் நாட்டில் நாளெல்லாம் ஓசைகள். என்ன ஓசை? வேத ஓசை, தியான ஓசை, பிரார்த்தனை ஒலி. புனித பூமியல்லவா? அங்கே திருமறையை மக்கள் ஓதிய வண்ணம் இருப்பதால் நாளெல்லாம் அந்த ஓசை கேட்டுக் கொண்டே இருக்கிறது. ஞானியரின் தியான ஓசையை 'திக்று' ஒலி கேட்கிறது. இரு கைகளையும் ஏந்தி இறைவனி டம் இறைஞ்சுவோரின் 'ஆமீன்' ஒலி அவ்வண்ணமே ஆகுக-எனும் ஒலி கேட்கிறது.

திக்று: ஆமீன் ஆகிய அரபுச் சொற்களின் பொருட்களை எளிதில் புரிந்து கொள்ள முடிகிறது. திருக்குர்ஆன் ஓதும் ஓசையையும், திக்று எனப்படும் தியான ஓசையையும் அழி யாத காவிய ஓசையாக்கி விடும் திறன் உமறுப் புலவருக்கு மட்டுமே வாய்த்த ஒன்று.

''...அடலுறு மக்கட்கெல்லாம் ஆதிபதி ஆதத்துக்கே
இடமுறும் அமரர் யாரும் சுஜூது செய்திடுக
வென்றான்''

என்பது தலைமுறைப் படலத்தில் ஓர் இடம். 'சுஜூது' என்ற

அரபுச் சொல்லின் பொருள் என்னவாக இருக்கும்? இதற்கு விளக்கம் அடுத்த பாட்டிலேயே கிடைக்கிறது.

"தூயவன் உரைப்பக் கேட்ட சொல்மறா தெழுந்து
தங்கள்
காயமும் மனமும் வாக்கும் கலந்தொன்றாய் மகிழ்வு
பொங்கி
நேயமுற் றிடப் பணிந்து நிரை நிரைக் கைக ளேந்தி
வாயினிற் புகழ்ந்து போற்றி மலக்குகள் வணக்கம்
செய்தார்."

இதைப் படித்த பிறகு 'சுஜூது' என்ற சொல் வணக்க நிலையைக் குறிக்கின்றது என்பது தெளிவாகும். சிர வணக்கமே 'சுஜூது' ஆகும், காயமும் மனமும் வாக்கும் கலந்து நேயத்தோடு இறைவனைப் பணியும் ஒரு நிலைதான் 'சுஜூது'. இந்தப் பாடலில் 'மலக்கு' என்ற சொல்லையும் அறிமுகப்படுத்தியிருக்கிறார் புலவர். மலக்குகள் யார்?

"வானவர் செய்யும் அந்த வணக்கத்தின் முறை
செய்யாமல்."

என்று வரும் அந்தப் பாடல் மலக்குகள் என்போர் வானவர் என்பதை விளக்கி விடுகிறது. உமறுப்புலவரின் தனிப்பெரும் உத்தி இது. தமிழ் மணமும், இஸ்லாமிய மணமும் இங்கெல்லாம் இரண்டறக் கலந்து நிற்பதைக் காண்கிறோம்.

இது மட்டுமன்று, பாத்திரங்களின் பெயர்களை உரிய முறையில் சொல்லிச் செல்வதிலும் உமறுப் புலவர் தனிப்பட்ட அக்கறை செலுத்த வேண்டிய நிலைமை இருக்கிறது. காரணம், காவிய மாந்தர்களின் பெயரனைத்தும் அரபுப் பெயர்கள்.

ஜிபுரயீல், அபூபக்கர், அப்துல்லா, இபுராகீம், இசுராயீல், இபுலீஸ் முதலான பெயர்களை அரபு மொழிச் சொற்பயிற்சி இல்லாத தமிழ் மக்களும் மனத்தில் கொள்ளும் படி அறிமுகம் செய்து வைக்கிறார் புலவர். 'வானவர்க்கு இறைவன் ஜிபுரயீல்' என்பதிலிருந்து ஜிபுரயீல் வானவர்

களின் தலைவர் என்பது தெரியவரும். 'திறலுறு ஜிபுரயீல்' என்று சொல்லி 'ஜிபுரயீல்' எனும் பெயர் மனத்தில் நிலை பெறுமாறு செய்துவிடுகிறார். சந்தக் குழிப்புகளைச் சொந்த மாக்கிக் கொண்டு 'ஜாலம்' புரிகிறார். 'அபுபக்கர்' என்ற பெயர் தமிழ்ச்சொல் அன்று. இத்தகைய சொற்கள் சந்தக் குழிப்புக்கு ஏற்ப வரும்போது தமிழ்ச் சொற்கள்போல் ஆகி விடும் எனவே 'தபுதக்க' என்று சந்தக் குழிப்பைப் பயன் படுத்தி அபுபக்கர் என்ற சொல்லை தொடர்ந்து வரச் செய் கிறார். இதுபோன்ற இடங்களுக்கு சந்த விருத்தப் பாடல் களை அமைத்துக் கொண்டு விடுகிறார் உமறுப்புலவர் அரபு மொழிச் சொற்களும் பெயர்களும் தமிழ்க் காவியத்தில் இணைந்துவர உமறுப் புலவர் பின்பற்றியுள்ள ஓர் இனிய உத்தி இது.

இன்பச் சுவையை ஓர் எல்லைக்குள் நின்று பாடி தனது தனித் திறனை நிலைநாட்டிக்கொண்டுள்ள சீறாக்காவியப் புலவர் நாற்பொருட்களில் இறுதியான 'வீடு' பற்றிப் பாடி யிருக்கிறாரா என்பது ஆராய்ச்சிக்குரிய ஓர் அம்சம். சீறாவைப்பற்றிக் கூறும் பெரும் புலவர் சேகனா. 'அறம் பொருள் இன்பம் வீடனைத்தும் அடங்கிய திறம்பெறும் காப்பியம்' என்று குறிப்பிட்டிருக்கிறார். 'வீடு' பற்றிய செய்திகளை ஒரு காண்டம் அமைத்து காவியப் புலவன் பாட வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. காவியத்தில் ஆங்காங்கே அவற்றை அமைத்துச் சென்றாலும் ஏற்கத்தக்கதேயாகும். சீறாப் புராணத்தில் 'வீடு' குறித்துப் பேசும் பாடல்கள் தீன் நிலைக்கண்ட படலம், புத்து பேசிய படலம், தொழுகை வந்த வரலாற்றுப் படலம் முதலானவற்றில் இடம் பெற்றி ருக்கின்றன.

''வானமும் புவியும் மற்றும் வகுத்தவன் உண்மைத்
தூதர்
ஆனவர் முகம்ம தென்பார் அவர் மொழி மறாது
நின்றோர்
ஈனமில் சுவன நன்னாடு எய்துவர் எங்கட்கு உற்ற
தீன்நிலை பொய்மை என்ற தேவரும நரகம
சேர்வார்.''

என்பது நின்நிலை கண்ட படலம் காட்டும் வீட்டின்ப நெறி' இந்த இறுதிப்பொருள் குறித்து விரிவாக ஆராய இடமிருக் கிறது.

''அருளே பொருளாய் அன்பே சொல்லாய்
ஆர்வமே பண்ணாய் அறிவே பயனாய்
பூவழகுடனே புதுமணம் போலத் தேனிசை
தழைத்த தெய்வக் கவிதை
சிந்தாமணி யெனத் தித்திக்கின்ற சீர்பெறும்
புராணம் சீறாப் புராணம்''

என்று சீறாப் புராணத்தைச் சிறப்பித்துச் சொல்கிறார் ஒரு புலவர். அருளே உமறுப்புலவர் கூறும் பொருள். அன்பே அவர் சொல்ல நினைக்கும் நெறி. அறிவே அவர்தம் காவியத் தின் பயன். இவற்றையெல்லாம் சொல்லும் முறையில் உமறுப் புலவர் கையாளும் உத்தி மற்ற புலவர்களிடமிருந்து அவரை வேறுபடுத்தி தனிச்சிறப்புக்குரிய ஒரு தமிழ்ப்புல வராக நிலைபெறச் செய்கின்றன. அவர் இரட்டைச் சிறப் புக்குரியவர். இஸ்லாம், தமிழ் ஆகிய இருபெரும் பண்பாடு களையும் இணைத்து இறவாத காவியம் பாடிய பெருமை உமறுவுக்கே உரியது. இரண்டு பண்பாடுகளைக் கலந்து பாடினாலும் இரண்டுமே தத்துவம் தனித்தன்மையை இழந்து விடாதபடி பாடியிருப்பது மற்றொரு சிறப்பு. உமறுவின் காவியத்தில் இல்லாத பொருள் இல்லை. தமிழ் மரபு இருக் கிறது. உண்மை இருக்கிறது. காவியமரபு இருக்கிறது. இஸ்லாமிய மரபு இருக்கிறது. உலகியல் இருக்கிறது. உண்மை இருக்கிறது. இவை அனைத்தையும் இணைத்து இறவாத் தமிழ்க் காவியம் படைத்த முதல் முஸ்லிம் தமிழ் காவியப் புலவர் உமறுதான். அதுவே அவருடைய தனித் திறன்.

# சீறாவின் காப்பியப் பண்புகள்

மயிலை சீனி வேங்கடசாமி

சீறாப்புராணம் என்னும் இஸ்லாமிய மார்க்க இலக்கியத்தை இயற்றியவர் தமிழ் முஸ்லிமாகிய உமறுப்புலவர். 16 ஆம் நூற்றாண்டில் எட்டயபுரத்தில் வாழ்ந்திருந்த உமறுப் புலவர் எட்டயபுரம் கடிகை-முத்துப் புலவரின் மாணவர். இவர் தம்முடைய ஆசிரியரான கடிகை முத்துப் புலவரைப் போலவே சரளமாகக் கவிபாடும் சிறப்புடையவர் இவர் இஸ்லாம் மார்க்க சார்பாக இயற்றின முதுமொழிமாலை, சீறாப்புராணம் என்னும் இரண்டு நூல்கள் மட்டும் நமக்குக் கிடைத்துள்ளன இவர் இயற்றின வேறு நூல்களும் செய்யுட்களும் கிடைக்கவில்லை. தமிழ் முஸ்லிம் புலவர்கள் தமிழ் மொழிக்கு அளித்த இலக்கியக் காணிக்கைகளில் உமறுப் புலவரின் சீறாப்புராணமும் ஒன்று. இவருடைய கவிதைகளில் தமிழ்மணம் கமழ்கிறது. பதினெட்டாம் நூற்றாண்டில் தமிழ்ப் புலவர்கள் கைக்கொண்டிருந்த தமிழ் நடையை இவருடைய சீறாப் புராணத்தில் காண்கிறோம். தாய் மொழியான தமிழ் மொழியில் இஸ்லாம் மதச் சார்பாக ஒரு காவ்யம் இல்லையே என்று சீதக்காதி மரைக்காயர், அபுல் காசீம் மரைக்காயர் போன்ற அக்காலத்துத் தமிழ் முஸ்லிம்கள் கொண்டிருந்த மனக் கவலையைப் போக்க உமறுப் புலவர் சீறாப்புராணத்தை இயற்றி முஸ்லிம்களை மகிழ்வித்தார். சீதக்காதி மரைக்காயரும், அபுல் காசிம் மரைக்காயரும் உமறுப்புலவருக்கு ஊக்கம் அளித்த பெரியார்களாவர்.

சீதக்காதி நொண்டி நாடகத்தை அரங்கேற்றினபோது அந்தச் சபையில் உமறுப் புலவரும் இருந்தார்.

"சந்த முத்தமிழ் தெரியுங் கல்வித்  
தலைவர் மகிழ் உமறுப் புலவருடன்  
செந்தமிழ்க் கந்த சுவாமிப் புலவரும்  
சீராட்டு நற்றமிழ்ப் பாராட்டவே"

சீறாவைப் புராணம் என்று கூறுவதைவிடக் காவியம் என்று கூறுவதே பொருத்தமாகும். சீறாப்புராணம் காவியப் பண்புடையது காவியத்தில் அறம், பொருள், இன்பம், வீடு, என்னும் நான்கு பொருள்கள் கூறப்படுகின்றன. சீறாப்புராணத்திலும் இந்த நான்கு பொருள்கள் கூறப்படுகின்றன. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களையும் தனியே கூறும் நூல்களைக் கீழ்க் கணக்கு என்பர். இந்த நாற் பொருளையும் தனித்தனியே விதந்து கூறாமல், காவியப் போக்கில் கதை அல்லது வரலாற்றோடு இடையிடையே இவைகளைப் கூறுவது காவியப் பண்பாகும்.

இஸ்லாம் மதத்தைப் பரப்பின நபிநாயகம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுகிறது சீறாப்புராணம். முகம்மது நபி (சல்) அவர்களும் இஸ்லாம் மதமும் அரபு நாட்டில் தோன்றினபடியால் இவர்களின் சிறப்பைக் கூறுகிற சீறாப் புராணத்தில் அரபு மொழிச் சொற்கள் கலந்திருப்பது தவிர்க்க முடியாத இயற்கையாகும். இஸ்லாம் மதத்தின் வேதமான குர்ஆன் நூலும் அரபு மொழியில் எழுதப் பட்டுள்ளது. முஸ்லிம்கள் எல்லோரும் அரபு மொழிக் குர் ஆனையே ஓதுகிறார்கள். ஆகவே சீறாப்புராணத்தில் அரபு மொழிச் சொற்களை நிறையக் காண்கிறோம்.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்கள் காவிய நூல்களில் இடம்பெற வேண்டும் என்னும் மரபு உள்ளதைக் கூறினோம். இவற்றில் வீடு என்பதைப் பற்றி ஒரு விளக்கம் கூறவேண்டும். வீடு அல்லது மோட்சம் என்பது மதங்களை அடிப்படையாகக் கொண்டது ஆகவே காவியப் புலவரின் சமயக் கொள்கைப்படி அக்காவியத்தில் வீட்டு நெறி வெவ்வேறாகக் கூறப்படுவது வழக்கம். உதாரணமாக ஜைனப் புலவர் தம்முடைய காவியத்தில் வீட்டைப் பற்றிக் கூறும்போது அதை ஜைன சமய நெறிபடக் கூறுவர். பௌத்தமதக் காவியம் இயற்றுவோர் வீட்டு நெறியைக் கூறும்போது அதைத் தம்முடைய பௌத்த நெறிப்படிக் கூறுவர்? அது போலவே சைவ, வைணவக் காவியம் இயற்று

வோர் தங்கள் மதக் கொள்கைப்படி வீட்டு வழியைக் கூறு வர் இந்த மரபுப்படியே உமறுப்புலவரும் தம்முடைய இஸ் லாம் மதக் கொள்கைப்படி வீட்டு நெறியைக் கூறுகிறார். மற்ற அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவாகையால் அவற்றில் வேறுபாடு இல்லை.

தமிழ்க் காவியங்களில் தொடக்கத்திலே நாட்டுப் படலம், நகரப்படலம் என்று இரண்டு படலங்களைக் கூறுகிற மரபு உண்டு. இவை காவியத் தலைவனுடைய நாட்டுச் சிறப்பையும் நகரச் சிறப்பையும் கூறுகின்றன. நாட்டுப்பட லம், நகரப்படலம் கூறுகிற மரபைத் தமிழில் முதன் முதலாக அமைத்தவர் கி.பி. 6ஆம் நூற்றாண்டிலிருந்த திருத்தக்கத் தேவர் என்னும் ஜைன சமயத்தவர். திருத்தக்கத்தேவர் தாம் இயற்றிய சீவக சிந்தாமணி என்னும் காவியத்தில் முதலாவ தான நாமகள் இலம்பகத்தில் நாட்டு வளம், நகர் வளம் என்னும் இரண்டையும் முதன்முதலாகக் கூறினார். அவர் காட்டிய வழியைப் பின்பற்றி பிற்காலத்துப் புலவர்களும் தங்களுடைய காவியங்கள் நாட்டுப்படலம், நகரப்படலங் களைக் கூறினார்கள். (சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய ஆதி காவியங்களில் நாட்டுப்படலம், நகரப்படலங்கள் கூறப் படவில்லை. ஏனென்றால், அக்காலத்தில் இந்த மரபு ஏற்பட வில்லை).

உமறுப்புலவரும் தம்முடைய சீறாப்புராணத்தின் தொடக்கத்தில் நாட்டுப்படலம், நகரப்படலம் ஆகிய இரண் டையும் கூறியுள்ளார். நாட்டுப்படலத்தில், நபிகள்நாயகம் அவர்கள் பிறந்து வாழ்ந்த அரபு நாட்டின் சிறப்பைக் கூறு கிறார். நகரப்படலத்தில் நபிகள் நாயகம் அவர்கள் பிறந்த மக்கமா நகரத்தின் சிறப்பைப் பாடுகிறார். நாட்டுப்படலத் தைப் படிக்கும்போது, அதில் அரபு நாட்டு இயற்கை வளம் காணப்படாமல் தமிழ் நாட்டின் சூழ்நிலைதான் காணப்படு கிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை, நெய்தல் என்னும் ஐந்து வகையான நிலப் பகுபாடுகள் எல்லா நாட்டுக்கும்

பொதுவானாலும், இவர் பாடுகிற நாட்டுவளம் தமிழ் நாட்டின் வளத்தையே நினைவூட்டுகிறது. குறிஞ்சி நிலத்து மலைகளிலே மழைபொழிய அதன் வெள்ளம் அங்குள்ள பொருள்களை அடித்துக் கொண்டு போய் முல்லை நிலத்தில் சேர்த்து, முல்லை நிலத்துப் பொருள்களை அடித்துக்கொண்டு போய் மருத நிலத்தில் சேர்த்து, மருத நிலத்துப் பொருள்களை அடித்துக் கொண்டு போய் பாலை நிலத்தில் சேர்த்து, பாலை நிலத்துப் பொருள்களை நெய்தல் நிலத்தில் சேர்த்தது என்று வழக்கமாகத் தமிழ்நாட்டு வளம் கூறப்படுவது போலத் தான் உமறுப் புலவரின் நாட்டுவள வருணனை காணப்படுகிறது. உமறுப் புலவர் அரபு நாட்டின் இயற்கைச் சூழ்நிலையை அறியாதவர் என்பது இதனால் தெரிகிறது. அரபு நாட்டுச் சிறப்புப் பொருள்களான ஒட்டை, குதிரை, கழுதை பேரீச்சமரம், மணல் பரந்த பாலைவனத்தின் இடையிடையே யுள்ள 'ஓயசிஸ்' என்னும் நீரூற்றுகள் முதலானவை நாட்டுப் படலத்தில் இடம் பெறவில்லை, இவை அரபு நாட்டுக்கே உரிய சிறப்புப் பொருள்கள் அல்லவா?

மழையையும் மழைக்குக் காரணமான மேகத்தையும் சிறப்புச் செய்து பாடுவது தமிழ்ப் புலவர் மரபு. ஆதி காவியமாகிய சிலப்பதிகாரத்தில், மாமழைப் போற்றுதும் மாமழை போற்றுதும்' என்று இளங்கோ அடிகள் மழையைப் போற்றினார். திருவள்ளுவரும் தம்முடைய திருக்குறளில் 'வான் சிறப்பு' கூறி மழையைச் சிறப்பித்துள்ளார். உமறுப் புலவரும் நாட்டுப்படலத்தை, மேகத்தையும் மழையையும் முன் வைத்துத் தொடங்குகிறார். மேகத்தை நபிகள் நாயகம் அவர்களின் புகழுக்கும் அதன் செயலாகிய மழையை அவருடைய அருட் கொடைக்கும் உவமைப்படுத்திக் கூறுகிறார். இச்செய்யுள் படித்து இன்புறத்தக்கது.

தருங்கொடை நயினார் கீர்த்தி சகமெலாம் பரந்து
முஞ்சி
நெருங்கியே விசும்பில் அண்ட முகடுற
நிறைந்தவே போல்

இருங்கண வெள்ளை மேகம் இரைபசுங் கடல்
வீழ்ந்துண்டு ஓர்
கருங்கட லெழுந்த தென்னக் ககனிடை
செறிந்து மீண்ட[1]''

நபிகள் நாயகத்தின் புகழ் உலகமெங்கும் பரந்து மேலும் பரவ இடமில்லாமல் வானத்திலும் சென்று பார்த்திருந்தது. அதுபோல மேகமானது வானத்திலே எங்கும் பரந்து விட்டது பிறகு நபிகள் நாயகம் அவர்களின் அருட்கொடையைப் போன்று மேகமானது மழையைப் பொழிந்தது என்று புலவர் கூறுவது மிகச் சிறப்பாக இருக்கிறது. நபிகள் நாயகத்தின் புகழுக்கு மேகமும் அவருடைய அருட்கொடைக்கு மழையும் உவமிக்கப்படுவது காண்க.

இந்தச் செய்யுளில் நபிகள் நாயகம் நயினார் என்று உமறுப்புலவர் சிறப்பித்துக் கூறுகிறார். நபிகள் நாயகத்தை நயினார் என்று கூறுவதில் உமறுப்புலவர் பெருமிதங் கொள்கிறார். இச்சொல்லை சீறாப்புராணத்தில் பல இடங்களில் வழங்கியுள்ளார். அவற்றில் ஒன்றை மட்டும் எடுத்துக் காட்டுவோம்.

''அரவினை வதைத்த கரதல நயினார்
அருங்கரம் பொருத்திய நயினார்
பரல்செறி சுரத்திற் புனல்தரும் நயினார்
பணி பணிந்திட வரும் நயினார்
வரியளி உலம்பும் புயனபுல் காசீம்
மனத்துறை வரிசை நம் நயினார்
தேர்மலர் கதீஜா நாயகி நயினார்
செல்வமுற் றினிது வாழ்ந் திருந்தார்.'' [2]

இவ்வாறு, நபிகள் நாயகம் அவர்களைப் புலவர் பெருமான் நயினார் என்று சிறப்பித்துக் கூறுவதைப் பல இடங்களில் காணலாம்,

1. சீறா, நாட்டுப் படலம் 1
2. சீறா. மணம்புரி படலம் 118

மேலும் நபிநாயகம் அவர்களை 'தருங்கொடை நபினார் என்று கொடைவள்ளலாகக் கூறுகிறார். மழையைப்போல் அவர் கொடை வழங்கினார் என்றுமேலும் சில இடங்களிலும் கூறுகிறார். 'மங்குலங் கவிகை வள்ளல்' என்றும் (சீறா. பாத்திமா திருமணப் படலம் 1) எழிலி முற்றும் கரந்தாங்கிய நல் அருள் பெருகும் ஹபீபு முகம்மது'' என்றும் (சீறா. உமறு கத்தாபு ஈமான் கொண்ட படலம் 89) கூறுவது காண்க. முகம்மது நபி (சல்) அவர்களை வெறுங்கொடை வள்ளல் என்று கூறாமல், மேகத்தைப் போன்ற கொடை வள்ளல் என்று உமறுப்புலவர் கூறுவதற்கு உட்பொருள் ஒன்று இருப்பது போலத் தோன்றுகிறது. ஏழை எளியவருக்குப் பொருள் கொடுத்து உதவினார் என்று கூறுவதாகத் தோன்றவில்லை. இதற்கும் அப்பாற்பட்ட வேறுபொருள் இருக்கிறதென்று தோன்றுகிறது. மேகம் மழையைப் பொழிந்து மக்களுக்கு வாழ்க்கையைத் தருகிறது. மழை பொழியும் மேகத்துக்கு மனிதர் யாரும் கைம்மாறு செய்ய முடியாது. மேகமும் கைம்மாறு எதிர்பார்ப்பதில்லை, நபிநாயகம் அவர்கள் ஆண்டவன் அருளினால் கிடைத்தற்கு அரிய வீட்டு நெறியைக் கைவரப் பெற்றார். அவர் அந்த அருள் நெறியைத் தனக்கு மட்டும் வைத்துக் கொள்ளாமல், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதற்கிணங்க, 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' ஆக உலக மக்களுக்கும் வழங்கினார். எந்தப் பிரதிபலனையும் கருதாமல் அவர் தாம் கண்டு கைவரப் பெற்ற அரும் பெறற் கொள்கையை (இஸ்லாம் மார்க்கத்தை) உலக மக்களுக்கு வழங்கினபடியால் அது அவர் வழங்கின அருட்கொடை என்று உமறுப்புலவர் கருதினார். ஆகவே தான் நபிநாயகத்தை 'மங்குலங் கவிகை வள்ளல்', 'எழிலி முற்றும் கரந்தங்கிய நல் அருள் பெருகும் ஹபீபு முகம்மது' என்றும் கூறினார் என்று தோன்றுகிறது.

தமிழ்ப் புலவர் இயற்றும் நூல்களில் அவையடக்கம் கூறுவது மரபு. அந்த மரபுப்படியே உமறுப் புலவரும் தம்முடைய காவியத்தில் அவையடக்கம் கூறியுள்ளார். கற்றறிந்த பெரும் புலவர்க்கு முன்னிருந்து தாம் கவிபாடுவது

பெருஞ்சூறாவளிக்கு எதிராகச் சிற்றெறும்பு மூச்சு விடுவது போலவும், இடிமுழக்கத்துக்கு எதிராக விரல்களை நொடித்து ஓசையுண்டாக்குவது போலவும் இருக்கிறது என்று அவையடக்கம் கூறியுள்ளார்.

புலவர்கள் தங்களை ஆதரித்துப் போற்றிய புரவலர்களுக்குத் தம்முடைய நூல்களில் நன்றி நவில்வது உண்டு. கவிச்சக்கரவர்த்தி கம்பர் தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலைத் தம்முடைய இராமாயணக் காவியத்தில் சில செய்யுட்களில் கூறியுள்ளதைப் பலரும் அறிவார்கள். உமறுப்புலவரும் தம்முடைய சீறாப்புராணத்தில் தம்மை ஆதரித்துப் போற்றிய அபுல்காசீம் மரைக்காயரைப் போற்றியுள்ளார். அந்த செய்யுட்கள் இவை:

'செந்நெலிற் பெருச்சின் கனைகுரற் சகடந்
திசைதொறு மலிந்தன செருக்குங்
கன்னலங் கழனி புகுந்தறுத் தடைந்த
களமர்கள் ஒலிகுரற் செருக்குந்
துன்னுபூங் கமுக சிதறுசெம் பழுக்காய்
சுமட்டவர் கம்பலைச் செருக்கு
மன்னவன் வகுதைத் துரையபுல் காசீம்
வளமனைச் செருக்குமொத் திருக்கும்' [1]

'வடுவிழித் தடமுலை யார்கண் மாமதன்
அடறரும் உசைன் நயினார்தம் ஆருயிர்க்
கடகரி யெனுமபுல் காசீம் செல்வம்போல்
இடனறப் பெருகியங் கிருந்த வாவியே,' [2]

அபுல்காசீம் வள்ளல் தம்முடைய மனத்தில் நபிநாயகம் அவர்களை எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவர் என்று உமறுப் புலவர் கூறுகிறார்.

''வரியளி அலம்பும் புயன் அபுல் காசீம்
மனத்துறை வரிசைநற் நபினார்'' [3]

1. சீறா. நாட்டுப் படலம் 41
2. சீறா. புனல் விளையாட்டுப் படலம் 8
3. சீறா. மணம்புரி படலத் 118

"முருகு ண்டு அறுகாற் சஞ்சரிகள்
முரலும் புயத்தார் உசன் நயினார்
அருமைத் தவத்தால் பந்துதித்த
அபுல் காசீம் தன் செழுங்சரம் போல்
பெருகத் தருஞ்செவ் இனக்குலங்கள்
பிறங்கும் பிறங்கள் இடத்திருந்த
வரிசை நபியை நோக்கிப் பின்னும்
வந்தார் வானோர் கோமானே"[1]

கரட முகப் மதக் கரிநிகர் துரையபுல் காசீம்
இரவ லர்க்களித்து அவனிரு நிதிபெரு கின போல்
மரும லர்த்தடவாவியும் கழனியும் வழிதேன்
முருகொ டுங் கனி தரும்பொழில் அனைத்து
முன்னினால்"[2]

உமறுப் புலவர் முஸ்லிம் ஆகையினால் இந்த காவியத்தைப் பக்தியோடும் மத நம்பிக்கையோடும், ஆர்வத்தோடும் எழுதியுள்ளார். இந்தக் காவியத்தில் தமிழ் மணமும், இஸ்லாம் மணமும் கலந்து கமழ்கின்றன. நெடுக இடையிடையே அரபு மொழிச் சொற்கள் கலந்திருப்பது தவிர்க்க முடியாதது முஸ்லிம் அல்லாத தமிழர் இதைப் படித்து பொருள் தெரிந்து கொள்வது கடினம். காவிய நடை எளிய நடைதான். இடையிடையே அரபு மொழிச் சொற்கள் கலந்திருப்பதனால் இது மணிமிடை பவளம் போன்று இருக்கிறது. ஆகவே அரபுத்தமிழ் அகராதி ஒன்று வேண்டியிருக்கிறது.

உமறுப்புலவர் சீறாப்புராணத்தை விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜுறத்துக் காண்டம் என்னும் மூன்று காண்டமாக வகுத்திருக்கிறார். விலாதத்துக் காண்டம் கடவுள் வாழ்த்தை நீக்கி நாட்டுப் படலம் முதலாகக் கருபத்துல்லா வரலாற்றுப் படலம் ஈறாக இருபத்து

1. சீறா. தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 35
2. சீறா. ஹபீபு மக்கத்துக்கு வந்த படலம் 42

மூன்று படலங்களைக் கொண்டது. நுபுவத்துக் காண்டம் நபி பட்டம் பெற்ற படலம் முதலாக விருந்தூட்டுப்படலம் ஈறாக இருபத்தொரு படலங்களை உடையது. ஹிஜுறத்துக் காண்டம் மதீனத்தார் ஈமான் கொண்ட படலம் முதலாக உறனிக் கூட்டத்தார் படலம் ஈறாக நாற்பத்தேழு படலங் களையுடையது. சீறாப்புராணம் முழுவதும் முற்றுப் பெற வில்லை. நபிநாயகம் அவர்களின் வாழ்க்கை வரலாறு இக் காவியத்தில் முற்றுப் பெறவில்லை. எக்காரணத்தாலோ உமறுப் புலவர் அதனை முடிக்காமல் விட்டார். முற்றுப் பெறாத எஞ்சியப் பகுதியைப் பனு அகமது மரைக்காயர் அவர்கள் செய்து முடித்தார். இதற்கு 'சின்ன சீறா' என்று பெயர் வழங்குகிறது.

தமிழில் இஸ்லாம் சமய இலக்கியம் இல்லை என்ற குறையை உமறுப்புலவர் சீறாப்புராணம் பாடி நிறைவாக் கினார். பின்னர் வெளிவந்த இராஜநாயகம் போன்ற சிறந்த நூல்கள் தோன்றுவதற்கு முன்னே அந்நூல்களுக் கெல்லாம் முன்னோடியாக இருந்து வழி காட்டியவர் உமறுப் புலவர்.

உமறுப் புலவரின் கவிதை நடையை அறிய வேண்டு மானால் அந்நூலைப் படித்துத்தான் அறிய வேண்டும். ஆயினும் அக்காவியத்திலிருந்து இரண்டொரு செய்யுட் களைக் காட்டி, இதனை முடிக்கிறேன்.

கபுகாபு என்னும் சிறுவனை அவனுடைய பெற்றோர் எப்படி அருமையாக வளர்த்தார்கள் என்பதை உமறுப் புலவர் இவ்வாறு உறுகிறார்.

''உத்தமர் செல்வம் போன்றும் உளத்தணுமா
சொன் றில்லா
பத்தியர் தவமே போன்றும் பகரரும் விசும்
பிற்றோன்றும்
சித்திர மதியம் போன்றும் செவ்வியர் இருவர் ஆவி
வைத்ததோர் உடம்பு போன்றும் நாட்கு நாள்
வளர்ந்திட்டாரால்.''1

1. சீறா. கபுகாபுப் படலம்

நபிநாயகத்திடம் வந்த உமறு கத்தாபுவை நோக்கி எங்கு வந்தீர் என்று கேட்டபோது அவர் கூறியதாக உமறுப்புலவர் இசைக்கும் பாட்டு இது:

''வரிசை நபியே! முகம்மதுவே!
வானோர்க் கரசே! புவிக்கரசே!
உரிய தனியோன் முதற் றூதே!
உமது கலிமா உரைத்தபடியே
அரிய மறை தேர்ந்(து) ஈமான் கொண்டு
அறந்தா றொழுகும்படி கருத்திற்
கருதி இவணிவ் வடைந்தேன் என்
றுரைத்தார் உமறு காத்தாபே'' [1]

கீழ்க்கண்ட கடவுள் வாழ்த்துச் செய்யுளின் ஓசைநயத்தைக் கண்டு மகிழலாம்.

''ஆலகால வாரிபோல மாகொடூரம் ஆகிய
காலகேள்வி தானடாத காரணீகர் ஆளவே
தாலமீதில் ஆதிதூதர் சாரமேவு வாழ்வினோர்
நாலொடாறு பேர்கள் பாதம் நாவில் நாளும் ஓதுவாம்'' [2]

1. உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம் 90
2. சீறா. கடவுள் வாழ்த்து 44

# உமறுப்புலவரின் இலக்கியத்திறன்

டாக்டர் க. ப. அறவாணன்,
எம். ஏ., எம். லிட்; பிஎச். டி.

எது இலக்கியம்? செய்யுள் வடிவத்திலேயே செய்யப் பட்ட எல்லாம் இலக்கியமா? பாட்டு உருவத்திலே இசைக் கப்பட்ட எல்லாம் இலக்கியமா? கதைக்கப்படும் கதை எல்லாம் இலக்கியமா? அளக்கப்படும் கற்பனை எல்லாம் இலக்கியமா? விரிக்கப்படும் வருணனை எல்லாம் இலக்கியமா? அல்ல, அல்லவே அல்ல. எந்தத் தனி ஒன்றும் இலக்கியம் ஆவதில்லை. இலக்கியத்தை ஆக்குவதில்லை, தேவையான எல்லாம் தேவையான அளவு, தேவையான அழகில் சொல்லப்படுவதே இலக்கியம், சுவைத்து உண்டு மகிழும் அல்வாப் பண்டம் கோதுமை ஒன்றால் மட்டும் செய்யப்படுவதா கோதுமையுடன் கூடச் சில பொருள்களும் பக்குவமாகச் சேரும்போதே சுவையான அல்வாக் கிடைக்கும். இலக்கியம், பலபொருள்களின் கூட்டுக் கலவையே! பாவலனின் நெஞ்சப் பாண்டத்தில் செய்யப்பட்ட பாட்டுப் பண்டம் அது

படிப்பாளரின் அறிவுப் பசிக்கு படைப்பாளனின் படைப்பு விருந்தாக நின்று பசி நீர்க்க வேண்டும்; மருந்தாக நின்று உள்ள நோய்களைப் போக்க வேண்டும். விருந்தும் மருந்தும் ஓரிலக்கியத்திலே இருந்து இனிப்பது தமிழிலக்கிய மரபு. இலக்கியத் திறன் என்றால் என்ன? எது எது அல்லது எவை எவை, இலக்கியத்தை இலக்கியம் ஆக்குகின்றதோ அதுவே அல்லது அவையே இலக்கியத்திறனின் கூறுகள்.

இலக்கியத்தை, இலக்கியம் ஆக்கும் அடிக்கூறுகளே அதன் திறன். அதனை எடுத்துக் காட்டுவதே திறனாய்வு! அடிக்கூறுகளை அறிவதும், அவற்றை அறிவிப்பதும் எளி தன்று. கேட்பது இனிது, கொடுப்பது எளிதன்று. இலக்கி

யத்தின் அல்லது கவிதையில் அடிக்கூறுகளாகக் கருதத்தக்கன மூன்று. அவை உருவம், உள்ளடக்கம், உணர்த்துமுறை.

உருவம் என்பது கவிஞன் பாட்டை வனையும் முறை. யாப்பு என்பதும், வடிவம் என்பதும் இதனைத்தான், கவிதை தனக்குள் அடக்கி இருக்கும் கருத்தே உள்ளடக்கம். அதனைப் பாவிகம் எனலாம். உள்ளத்தில் பொங்கி வழியும் அனுகூலத்தை உணர்ந்த அளவில், நினைந்த பொருளில் கவிஞன் வெளிப்படுத்திக் கையாளும் லாவகமே, பாவமே. உத்தியே உணர்த்து முறை. மணப்பெண்ணின் அழகைப் போன்றது உருவம். அவளது அறிவுத் தகுதியை போன்றது உள்ளடக்கம் அவளுக்குரிய குணங்களுக்குநிகரானது உணர்த்துமுறை. நல்ல மணப்பெண் அழகு, அறிவு, குணம் மூன்றும் பெற்றிருத்தல் வேண்டும் என்று எல்லாரும் விரும்புவர். கவிதை உருவம், உள்ளடக்கம், உணர்த்துமுறை என்ற மூன்றையும் பெற்றிருத்தல் வேண்டும் என்று எல்லோரும் விரும்புவர்

## சீறாவின் உருவம்

சீறாப்புராணப் பாக்களின் உருவம், உள்ளடக்கம் உணர்த்து முறை என்ற மூன்றின் பாங்கையும் விண்டுரைத்தால் அவையே உமறுப்புலவரின் இலக்கியத் திறனை எடுத்துணர்த்தும் கவிஞர் தம் கட்டுப்பாடு வருத்தத்தைப் போக்கும் ; நீக்கும். வளமை சான்ற யாப்பு விருத்த யாப்பு. பாவலனின், எண்ண ஓட்டத்திற்குத்தக நெகிழ்ந்து கொடுத்து படைப்பவனுக்கும் படிப்பவனுக்கும் மகிழ்வு ஊட்டுவது விருதப்பாவின் இயல்பு. உமறுப்புலவர், தம் காவியத்தை 5027 திருவிருத்தங்களாகப் படைத்துள்ளார். எண்ணங்கள், பாட்டு வடிவத்தில் வந்து விட்டால் போதும்—கவிதை பிறந்து விட்டது என்று கருதலாம். கதறலாம் என்பது இல்லை. யாப்பு வடிவத்தில், சில கவிதைகள் 'இறந்து' கூடப்பிறக்கின்றன. வெற்றுச் செய்திக்குறிப்புகள், யாப்புக் கோப்பில் உயிர் பெறுகின்றன. ஆனால் அவை எல்லாம்

பாக்கள் அல்ல. பாட்டுருவத்தில் நடிக்கும் பகட்டுகளே? பின்னே பாட்டின் உருவம் எப்படி இருத்தல் வேண்டும்? பாட்டின் கருப் பொருளுக்குத்தக, அதன் வடிவமும் வனையப் பட்டிருத்தல் வேண்டும். கவிஞன் பேசும் பொருள், பல திறத்தது. காதல், அவலம், சினம் என எல்லா உணர்வுகளும் அவன் கவிதைகளில் பொங்கித் ததும்பும். உணர்த்த வரும் உணர்விற்குத்தக, அவன் பாடும் கவிதைகளும் அழும்; விழும்; எழும்; சிரிக்கும்; குதிக்கும்.

சீறாப்புராண உருவ வெற்றிக்கு ஒரு சான்று.

நபி அவதாரப் படலத்தில் நபியின் அவதாரம் அறிந்து அந்தன் பொன்னகர் அனைத்தும் அணி செய்யப்படுகின்றது; ஊர் எங்கும் விழாக் கோலம். இதனை அறிகிறான் 'இபுலீசு' வேந்தன். அவன் நடுங்கினான்; வாயில் நீர் வறண்டது; நா உலர்ந்தது. உடலும் ஒடுங்கியது; ஐம்பொறி மயங்கியது; நெஞ்சம் உடைந்தது. நெடுமூச்சுச் சுழன்றது. அப்போதைய அவனைப் பாவலர் படம் பிடிப்பதைப் பாருங்கள்:

"கரைவன் ஏங்குவன் மலங்குவன் கலங்குவன் கதறி
இறைவன் கன்னத்தில் கையை வைத்திருந்து
எழுந்திருப்பான்"[1]

இங்ஙனம் உணர்விற்குத் தக்கவாறு, சொல்லவரும் பொருளுக்குத் தக்கவாறு துடிக்கும் பாடல்கள் பல சீறாப் புராணத்தில் விரவிக் கிடக்கின்றன.

நாட்டு வளத்தைக் காட்டவரும் ஒன்று; எப்படி ஒலியோடும் சுவையோடும் படம் பிடிக்கிறது பாருங்கள்:

"குருகின மிரியப் புள்ளினம் பதறக்
கொக்கினம் வெருவிட வெகினம்
விரிமலர்க் கமலப் பாயல்விட் டகல
மென்சிறைப் பெடையனந்துடிப்பச்
சொரிமதுத் துளித்துக் குவளையாய் சிதறச்

1. நபி அவதாரப் படலம் 22

சுருட்டிவால் விசைத்திடத் துள்ளி
வரிவராற் பகடு வளைநில வெறிக்கு
மடைத்தலை கிடந்துழச் செறியும்''[1]

**உள்ளடக்கம் :** இலக்கியம் எதனைச் சொல்ல வருகிறது ஒன்றோ பலவோ — எனக் கருத்துச் சொல்ல வருகிறது. அந்தக் கருத்தே கவிதையின் உள்ளடக்கம், உள்ளீடு, கொளு, பொருள், விஷயம், கரு, பாவிகம் என்று அதனை எப்படி வேண்டுமானாலும் குறிப்பிடலாம் -பிறனில்' விழை வோர் கிளையொடும் கெடுப' என்பது இராமயாணக் கருப் பொருள். 'பொறுமையிற் சிறந்த கவசம் இல்லை' என்பது பாரதப் பொதிபொருள்; 'வாய்மையிற் கடியதோர் வாளி (அம்பு) இல்லை' என்பது அரிச்சந்திர புராண அடிப்பொருள். அரசியல் பிழைத்தோாக்கு அறங்கூற்று ஆவதும், உரை சால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவதுப், ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதுப் சிலப்பதிகார உள்ளீடுகள். நபியின் நீதிப் பாட்டையை எடுத்துக்காட்டி நிலைநாட்டு வதே சீறாப்புராண நோக்கம், இதில் வரலாறு தலைக்காட்டி னும் அது கருத்தாறுக்குக் கரை என்றே கருதுதல் வேண்டும். கறை-என்று கருதுதல் ஆகாது; குறை என்று குமுறுதல் கூடாது.

**உணர்த்துமுறை :** இலக்கியம் பாடப்படும் உருவம், இலக்கியத்தில் அடங்கியுள்ள உள்ளடக்கம். இவற்றைவிடக் கவிதை சொல்லப்படும் முறையே ஓரிலக்கியத்தின் கவிதை வெற்றியைக் கணிக்கிறது. எனவே, உருவம், உள்ளடக்கம் என்ற இரண்டையும விட, உணர்த்து முறையே இலக்கியத் தின் இதயம் ஆகிறது.

'உணர்த்து முறை, உத்தி, பாணி பாவம் எல்லாம் ஒரு கருத்தைக் குறிப்பனவே, உணர்த்து முறைக்குக் கொடுக்கப் படும் முதன்மையைக்கொண்டு மற்ற உருவம், உள்ளடக்கம் ஆகியன கவிதைக்குத் தேவையானதே அல்ல என்று முடிவு

---

1. நாட்டுப் படலம் 35

சட்டவேண்டா. முறை உயிர் ஆனாலும், உயிர் சிறப்பது உள்ளத்தாலுமே. ஆகவேதான் உணர்த்துமுறை—கவிதையின் உயிர் எனவும், உள்ளடக்கம்—கவிதையின் உள்ளம் எனவும் உருவம் கவிதையின் உடல் எனவும் கருதவேண்டும். மூன்றும் ஒன்றையொன்று சார்ந்து நிற்கவே கவிதை முழுமை பெறுகிறது. ஏதேனும் ஒன்று ஊனமானாலும் கவிதை நொண்டி ஆகிவிடும். உயர்த்து முறை—என்ற உயிரில்லாத சொற் கூட்டம் வெறும் சடலமே. உள்ளடக்கம் இல்லாமல் கவிதை எதுவும் பிறப்பதே இல்லை. மூன்றும் சரிசம விகிதமாக அளவாக இருக்கும்போது கவிதை முழுமை பெறுகிறது.

சீறாவின் சீரான உணர்த்து முறையைச் சாற்றுவன நூற்றுக்கணக்கானவை. அவற்றுள் ஒரு மூன்றை மட்டும் இப்போது போற்றிக் காட்டுவன். 1. அவையடக்கப் பாடல்கள் கவிஞனின் நாவடக்கம் காட்டுபவை. எனினும் கவிஞனின் பாமுழக்கம் நீட்டுபவை. கம்பர் சில பாணியில், அவையடக்கப் பா இசைப்பார். வில்லிபுத்தூர் ஆழ்வார், தன் பாங்கில் கவிதை படைப்பார். உமறு மற்றவர் பாதையில் போகாமல் புதுப் பதையில் கவிதை படைக்கிறார்.

மழை கொட்டுகிறது. இடி இடிக்கிறது; மின்னல் வெட்டுகிறது இவற்றுடன் கொடும்புயலும் வாட்டுகிறது. கடல் அலைகள் கரம் உயர்த்திக் கரையை மோதுகின்றன; கடலுக்கும் கரைக்கும் போரோ? விண்ணுக்கும் மண்ணுக்கும் பகையோ? நிலை குலையா மலையே குலையுமாறு மழை பொழிகிறது; புயல் சீறுகிறது. அந்தப் புயல் சீற்றத்திற்கு முன்னே — ஒரு புல் எறும்பு — சிற்றெறும்பு மூச்சு விட்டால் எப்படி இருக்கும்? அப்படித்தான், நற்றமிழ்ப் புலவர்களின் முன் தான் காவியம் படைப்பது — என்று எழுதுகிறார் உமறு; அந்தப் பேரிடிக்கு முன்னே, இவர்தம் கவிதை கையால் நொடிக்கும் சின்ன ஒலியாம்.

"படித்த லத்தெழு கடல்குல கிரிநிலை பதற
வெடுத்து வீசிய சண்டமா ருதத்தினுக் கெதிரே

மிடித்து நொந்தசிற் றெறும்பொரு மூச்சு
விட்டது போல்
வடித்த செந்தமிழ்ப் புலவர்மு னியான்சொலு
மாறே
"அடிய டித்தொறும் வழுவலால் விதிவிலக்
கறியேன்
படிய டித்தசெஞ் சொற்புல வோர்முனம் பகர்த
லிடியி டிக்கிடு மாரவா ரத்தினுக் கெதிரோர்
நொடி நொடிப்பது போலுமொத் திருந்ததென்
னாலே." 1

உமறுப்புலவர் தம் அடக்கம் அல்ல இங்கே பொருள். அவர் தம் கவிதை ஆட்சி கவிதை மாட்சியே இங்கே பொருள்.

நானில மக்களை எல்லாம் ஈர்த்துச் சேர்க்கும் நகரம் மக்கா. அந்நகரம் மணவளம் மிக்கது; அன்றியும் மணிவளம் மிக்கது. அங்கு விண்ணை முட்டும் மாளிகைகள் மாளிகையின் உள்ளே வெண்ணிலாக்கள்; பெண்ணிலாக்கள்! அவர்கள் பேசும் பேச்சில், பாட்டுப் பண் இசைக்கிறது; குழந்தையின் கொஞ்சலும், கெஞ்சலும் மக்கா நகர மகளிரின் உரையாட்டில் குழைகிறது. அவர்கள் தத்தம் மாளிகையில் தம் கூந்தலுக்கு சாம்பிராணிப்புகை ஊட்டிக் கொள்கிறார்கள்! கவிஞர் உமறு சொல்ல வந்த பொருள் இதுதான். ஆனால் சொன்ன முறை கற்கண்டாய் இனிக்கிறது; கனிச்சாறாய்ச் சுவைக்கிறது.

மகளிர், கூந்தலுக்கு ஊட்டிக் கொண்ட புகை திரண்டு விண்ணை முட்டுகிறது. அது மண்ணுக்கும் விண்ணுக்கும் போட்ட ஏணியாகப் புகை ஏணியாக இலங்குகிறது; தாம் விளங்குகிறதாம். பாட்டைக் கேளுங்கள்:

வெண்ணில வெறிக்கு மிரசதத் தகடு
வேய்ந்தமே னிலைவயின் செறிந்து
பண்ணிருந் தொழுகு மொன்மொழிக் குதலைப்
பாவையார் செழுங்குழல் விரித்து

1. கடவுள் வாழ்த்து 18, 20

நண்ணிய துகிலுங் கமழ்தர வூட்டு
நறும்புகை சுருண்டெழுந் தொழுங்காய்
விண்ணினிற் படர்வ தேணியொன் றமைத்து
விசும்பினுக் கிடுவது போலும்'' 1

காலத்தின் கோலம் ஊர்விட்டு ஊர் போகின்றனர், சில குடும்பத்தினர். ஒரு வீட்டில் கணவன், மனைவி சின்னக் குழந்தைகள், கணவன் மனைவியைப் புறப்படப் பணிக்கிறான். அவளும் வேறு வழி இல்லாமல் கணவன் உடன் புறப்படுகிறாள். (அச்சமயம்) அவளோ தாய். தாயாகி ஒரு குழந்தையைத் தாங்குபவள்; இன்னொரு குழந்தைக்குத் தாயாக இருப்பவள்! ஆம் அவள் ஒரு கர்ப்பிணி, இடுப்பில் ஒரு குழந்தை; இடை வயிற்றில் ஒரு குழந்தை! நடக்கிறாள்; சோர்கிறாள்! மூச்சு வாங்குகிறாள். கணவன் மேலே கடுப்பு, கடுங் கோபம்; என்றாலும் அவர் இட்ட வழியே தொட்டுப் போகிறாள்; செல்லும் வழியோ, கல்லும், முள்ளும் அவளோ! மாங்காய் வடுவைப் பிளந்து இரு பக்கமும் நட்டு வைத்தாற் போன்ற மலர் விழிகளை உடையவள். அங்கு ஓடும் மானின் மருட்சிப் பார்வைக்கு உரியவள்!—இடுப்பில் ஒரு குழந்தையும்! இடையில் ஒரு குழந்தையுமாக அவள் அதோ—தன் கணவனுடன் கலங்கித் தயங்கி மயங்கி நடந்து செல்லும் காட்சி:

இடுக்கிய குழந்தையு மேந்து பிள்ளையும்
வடுப்பிள வனையகண் மான னார்களும்
கடுப்பினிற் கணவன்மா ருடனுங் கற்குவைத்
திடர்ப்படு சிறுநெறிச் செல்கின் றாரரோ'' 2

சீறாப்புராணம்—நல்ல கவிதைகளின் களஞ்சியம்! கற்பனைத் திறன்களின் கருவூலம்! கருத்துக்களின் உருவப் பேழை! கவரும் உவமைகளின் பெட்டகம்! இலக்கிய இன்பம் பெற விழைவோர்க்கு அமுதக் கடலாக விளங்குகிறது சீறாப்புராணம் எனக் கூறின் அஃது மிகையன்று.

1. நகரப் படலம் 13
2. சீறா அலிமா முலையூட்டுப் படலம் 24

# உமறு தரும் சீறாவில் தமிழ்ப் பண்பாடுகள்

சிலம்பொலி சு. செல்லப்பன்

## பொதுச் சொத்து

கவிஞர்கள் உலகின் பொதுச் சொத்து; அவர்தம் படைப்புகளும் அங்ஙனமே! எந்தக் கவிஞனையும் எவரும் "இவன் எம் நாட்டிற்கு மட்டுமே சொந்தம்" என உரிமை கொண்டாட முடியாது. அங்ஙனம் கொண்டாலும் அக் கவிஞன் அவர்களுடைய கட்டிலிருந்து அவர்கள் அறியாமலேயே விடுபட்டு உலகத்திற்கே உரிமையுடையவனாகிவிடுகின்றான். காரணம் அவனுடைய 'படைப்புகள் தனிப்பட்ட ஒருவனுடைய அல்லது ஒரு சாராருடைய உணர்ச்சிகளை, நன்மை தீமைகளை, சாதாரண நிகழ்ச்சிகளை மட்டும் பிரதிபலிப்பனவாய் இல்லாமற் அவற்றில் உலக மகிழ்ச்சி, உலக நன்மை, உலக ஒருமைப்பாடு முதலியன இழையோடிக் கிடப்பதோடு, அல்லலும் மனித உள்ளங்களை அவை எங்கிருந்தாலும் ஆற்றுவித்து மகிழ்ச்சியையும் தெம்பையும் நல்குவதாலேயாம். அதனாற்றான் வான்புகழ் வள்ளுவரும், சிலம்பு தந்த இளங்கோவும், கவியரசர் கம்பரும், வால்மீகியும், தாகூரும், ஷேக்ஸ்பியரும் உலகிற்கே உரியவராகின்றனர். 'யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பதை உள்ளக் கிடக்கையாகக் கொண்டவர்கள் உலகுக்குக் கேளிராகத் தானே இருக்கமுடியும்!

## கவிஞரின் உரிமைகள்

உலகம் போற்றும் உயர் கவிஞர்கள் தம் படைப்புக்கென எதையும் எடுத்தாள்வர். உயரிய வாழ்க்கைத் தத்துவங்களும், இறையுணர்வும், இயற்கை வளங்களும் அவர்களின் கவிதைப் பொருளாயிருக்கலாம்; அன்றிக் கயிறு

புனைவோன் கைக்கோள் நாரும், காட்டில் ஓடும் நரியின் ஓட்டமும் கூடப் பாடு பொருளாகலாம். அவர்கள் பாடுவது தம் நாட்டுக் கதையாயுமிருக்கலாம்; அன்றிப் பிறநாட்டு—பிற மொழிக் கதையாயுமிருக்கலாம் எந்நிகழ்ச்சி கொண்டு எந்நாட்டைப் பற்றிப் பாடினாலும் அவர்களுடைய படைப்புகளைக் கூர்ந்து நோக்கும்போது அவற்றில் மூல நிகழ்ச்சிகளின் கருவும் நோக்கமும் ஒருங்கு இருந்தாலும் படைக்கும் கவிஞனின் நாடு மொழி, சமுதாயப் பண்பாட்டுச் சிறப்புக் கூறுகள் இழையோடாமலிராது என்பதை உணர முடியும் அவ்வாறு பாடுவதில் தவறுமில்லை; தவறு காணவும் கூடாது. தமிழ் நாட்டுச் சந்தனம் வேற்று நாட்டாரின் மார்பில் பூசப்பட்டாலும் தன் மணத்தைத் தருவதன்றி வேற்றுநாட்டான் என்பதற்காக மாற்று மணம் தருவதில்லையே!

## உமறுப்புலவர் உள்ளம்

மேலே கூறியவற்றைக் கருத்தில் கொண்டு அரபு நாட்டு நிகழ்ச்சியாகிய நபிகள் நாயகத்தின் வரலாற்றினைத் தமிழகத்தில் வாழ்ந்த உமறுப்புலவர் சீறாப்புராணமாகப் பாடியதில் எந்த அளவு தமிழ் நாட்டுச் சூழலும் பண்பாடும் இழையோடியிருக்கின்றன என்பதை ஈண்டுச் சிறிது காண்போம். உண்மை வரலாறு என்பதால் நாயகத்தின் வரலாற்றில் ஆசிரியர் எவ்வித மாற்றமும் செய்யவில்லை; செய்யவும் கூடாது. ஆயினும் அவ்வுண்மை வரலாற்றைப் படைக்கும்.

## அவையடக்கப் பண்பு

கல்வி கேள்விகளிலும் செல்வத்திலும் நம் முன்னோர் உயர்ந்தேயிருந்தபோதிலும் அவர்கள் அடக்கத்தை அணிகலனாகக் கொண்டு ஆன்றவிடந்தடங்கிய சான்றோராய் விளங்கியிருந்தமையையே நாம் காணமுடிகிறது. அதனால் தான்போலும் வரலாறு காணமுடியாப் புகழ் வாய்ந்த போது அவ்வரலாற்றுப் பின்னணிகளில் — கருப்பொருள்கள் — நிகழ்ச்சி அமைப்புகளில் — செயல் விளக்கங்களில் தமிழ்ப் பண்பாடுகளையும் இணைத்துச் சொல்வதில் அவர் தவறவில்லை.

பண்டைத் தமிழர் தமக்கென ஒரு வரலாறு காணாமலேயே சென்றுவிட்டனர். அடக்கமுடைமைக்கு ஓர் அதிகாரமே வகுத்துவிட்டார் வள்ளுவரும். இவ்வடக்கத்தின் காரணமாகவே 'உம்' எனும் முன்னே ஓராயிரம் கவிபாடுந் திறமை கொண்டிருந்த புலவர் பெருமக்கள் அவையடக்கமாகத் தங்களைக் 'சடலினை நக்கப் புகுந்ததொரு பூனை போல' என்று சொல்லிச் செல்லக் காண்கிறோம். உமறுப்புலவரும், செந்தமிழ்ப் புலவர்முன் சீறாப்புராணத்தை அவர் விளம்புவது, "திக்கனைத்தும் வென்ற செங்கோலரசன்முன் கூலி வேலை செய்தும் பிழைக்க முடியாத ஒருவன் சமமாக அமர்வது போலும்" என்றும், "பெரும்புயலின் எதிரே சிற்றெறும்பொன்று பெருமூச்சு விடுவது போலும்" என்றும், "இடி இடித்திடும் ஆரவாரத்தினுக்கு எதிர் ஓர் நொடி நொடிப்பது போலும்" என்றும் அவையடக்கம்[1] கூறுதல் தமிழ்ப் பண்பாட்டின் வெளிப்பாடேயாம்!

## பாலை நிலத்தில் பைந்தமிழ் நாடு

நபிகள் நாதரின் வரலாற்றினைக் கூறுகின்ற உமறுப் புலவர் நாட்டுப் படலமாகப் பாடவேண்டியது அரபு நாட்டுப் படலமே. அவர் பாடியதும் அதைத்தான். ஆயினும் அங்கு நாம் முத்தமிழ் நாட்டையே முழுமையாகக் காண்கிறோம். மிகக் கொடிய வறண்ட பாலை நிலமான அரபு நாட்டில் எழில் கொஞ்சும் தமிழ்நாட்டு வளத்தைக் கண்டு மகிழ்கிறோம். இறைதூதர் தோன்றிய இடத்தைப் பாலையாகப் படைத்துக் காட்டக் கவிஞர்க்கு மனமில்லை போலும்! உமறுவின் கவி வளத்தால், பாலையே படிவமாய் அமைந்த அரேபியாவில், தமிழகத்தின் நானில வளங்களும் நன்கு படிந்து விடுகின்றன! அவர் பாடுகிறார்; "அரபு நாட்டு மலைகளில் மிகுதியான மழை பொழிந்து நீர் பெருக்கெடுக்கிறது அம் மழையில் நனைந்தமையால் யானை, மான், புலி, அணில், உடும்பு, குரங்கு, தேவாங்கு, கரடி,

1. சீறா. அவையடக்கம் 1, 2, 3 பாடல்கள்

செந்நாய் முதலிய விலங்கினங்கள் குளிரால் நடுங்குகின்றன. நீர்ப்பெருக்கு குறிஞ்சி நிலத்திலுள்ள வேங்கை, சண்பகம், நெல்லி, அசோகு, ஆசினி, குங்குமம், நாரத்தை மரங்களை வேரோடு சாய்த்துத் தள்ளுகிறது, மலைவாழ் குறவர்களின் குடிசைகளையும் தினையையும் வாரிச் சுருட்டி உருட்டுகிறது. மலையரசனைத் தழுவி அவன் செல்வங்களைச் சுருட்டிக் கொண்டு நழுவுகின்ற விலைமகள் போல மலையிடத்துள்ள சந்தனம், முத்து, தந்தம் முதலிய உயர்ந்த பொருள்களை வாரிக் கொண்டு அருவியாக இழிகிறது. குறிஞ்சி நிலத்தைக் கடந்து செல்லும் வெள்ளம் பாலை நிலத்தில் புகுந்து வேடர்குல மங்கையரும் சிறாரும் வயிற்றிலடித்துக் கொண்டு ஓடும் வண்ணம் வெருட்டுகிறது. முல்லை நிலத்தையும் அவ்வெள்ளம் விட்டபாடில்லை. ஆயர்மகளிர் வைத்திருந்த பால், தயிர், நெய் அவை வைக்கப்பட்டிருந்த பாண்டங்கள், மகளிர் புடவைகள், ஆயர் ஊதும் புல்லாங் குழல்கள், பாய் படுக்கைகள் முதலியவற்றைக் கவர்ந்து கொண்டு ஆட்டின் கூட்டமும், கன்றுக் குட்டிகளும் சிதறியோடும்படியாகப் பாய்ந்து செல்லுகிறது இவ் வெள்ளம் மருத நிலத்தை மட்டும் விட்டுவிடுமா? வாய்க்கால் வயல்கள், குளங் குட்டைகள், தடாகங்களெல்லாம் நீரால் நிறைகின்றன. அங்கிருக்கும் அன்னங்கள் அஞ்சிப் பறக்கின்றன. உழவரும் உழத்தியரும் வெள்ளத்தைக் கண்டு மகிழ்கின்றனர். பாவம்! அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே ஏரி குளங்களை உடைத்துக் கொண்டு வெள்ளம் சேரியிலும் கொல்லைகளிலும் புகுந்து பலா மரங்களையும் ஒருங்கே சாய்க்கிறது. சேரி வாழ்நர் கள்ளுண்டு, ஒன்று கூடி, அணைகளில் நீரைத் தேக்கி, வயல்களை வெட்டி, ஏருழுது, நாற்று விட்டு, நடவு நட்டு, பயிர் வளர்த்து, அறுவடையும் செய்கிறார்கள். அவர்கள் அறுவடை செய்து அடித்துக் குவித்த நெல்லின் தோற்றம் எப்படி இருக்கிறது தெரியுமா?

''இசைந்திட நிறைத்துக் குவித்த நெற்போர்கள்
எங்கணும் இலங்கிய தோற்றம்

விசும்பினைத் தடவ வரைசத கோடி
வீற்றிருந் தனவெனச் சிறக்கும்'' [1]

வண்ணம் நெற்போர்கள் குவிந்து கிடக்கின்றன. இவ்வாறு மருதநிலத்தைச் செழிக்க வைக்கும் வெள்ளம் கடல்காணும் விருப்பில் நெய்தல் நிலத்திற்கும் சென்று சேர்கிறது!''

அந்நாட்டில் பொருளை வெறுக்கும் நிந்தனையைத்தவிர வேறு நிந்தனையில்லை; வண்டுகளைத் தவிர மதுவருந்துதல் வேறில்லை: ஊடலை நீக்குவதற்காக மங்கையரிடம் ஆடவர் கூறும் பொய்ச் சூள் தவிர வேறு பொய்யில்லை. வனங்களி லுள்ள கனிகளை வழிப்போக்கர்கள் அடித்துச் சுவைக்கும் களவைத் தவிர வேறு களவில்லை என்பதை உமறுப்புலவர்,

''நினைக்கும்பொற் பொருளே நிந்தனை மற்றோர்
நிந்தனை சிந்தனை இலையே;
இனக்கருஞ் சுரும்பு மதுத்துளி அருந்தும்
இவையலால் மதுப்பிறி (து) இலையே;
சினக்கரி முனைக்கோட் டிளமுலைப் புலவி
திருத்தும்பொய் அலதுபொய் இலையே;
வனக்கனி கறுத்த குலைக்கள(வு) அலது
மறுத்தொறு கொலைக் கள(வு) இலையே!'' [2]

என்று பாடிக் களிக்கிறார்.

அரபு நாட்டின் நடுநாயகமாய் விளங்கும் மக்கமா நகரத்திற்குத் தான் என்ன குறை? பல்வகை வளங்களும் மகிழ்ச்சியும் நிரம்பப் பெற்று ஒரு சுவர்க்க உலகமாக வன்றோ அது காட்சியளிக்கிறது. உமறு காட்டுவதால், தமிழ் நாட்டு மரங்களும், விலங்குகளும், பறவைகளும் மணப் பொருள்களும், நில வளமும் கொண்ட நாட்டு வளத் தையும் நகர வளத்தையும் வறண்ட பாலையாகிய அரேபி யாவில் நம்மால் காணமுடிகிறது.

1. சீறா. நாட்டுப் படலத்திம் 39
2. சீறா. நாட்டுப் படலம் 56

### காதற் சூழ்நிலை

தமிழிலக்கியங்களில் காதற் காட்சிகள் மலையும் மலை சார்ந்த குறிஞ்சிப் பகுதிகளிலும், இன்பந்தரும் சோலைகள், ஆறு குளங்கள் நிறைந்த முல்லை—மருத நிலப் பகுதிகளிலும் கடற்காற்று வீசும் நெய்தல் நில இனிமையிலும் முகிழ்த்துச் சிறப்பதை அறிவோம். நபிகள் நாயகத்தின் மேல் நாட்டம் செலுத்தும் கதீஜாப்பிராட்டியார்க்கு அரபுப்பாலைவனத்தில் இவ்வினிய சூழ்நிலைகள் கிடைக்க வழியில்லை என்றாலும் உமறுவின் பாடலால் அவை அவருக்குக் கிட்டி விடுகின்றன. ஊசா அவர்களின் விருந்தேற்றுக் கொண்ட நபிகள், 'நீர்ப் பூக்கள் முகையவிழ்ந்து நகை விரிக்கும் வாவிகளையும், அரியேறு பாயக் கண்ட மதகரி தன் பிடியுடன் அஞ்சியொதுங்கும் மலைகளையும், மானினத்தை வீழ்த்தி உண்ணும் வேடுவர் உறைந்த சிற்றூர்களையும் மந்தொலி மாறாத ஆய்ச்சியர் வாழ்விடங்களையும் கடந்து ஒரு சோலையில் தங்கினார். அப்போது தேவதூதர்கள் விண்ணிலிருந்து இறங்கி நபிகளுக்குக் குங்கும மலர் மாலைகள் சூட்டி, ஒப்பற்ற இருக்கையில் ஒட்டகத்தின் மீது அமர்த்தி, பல்வகை வாத்திய ஒலிகளுடன் தேவர்களிரும் புடைசூழ உலாவரச் செய்கிறார்கள். அவ்வூர்வலம் கதிஜாப்பிராட்டியின் வீதியிலும் வர அதனைக் கண்ட பிராட்டியார் தம் விழியும் மனமும் மெய்யும் மகிழ்வுறும்படியாக நபி நாதரின் அடிகளில் வீழ்ந்து இறைஞ்சி ஒன்றுகிறார்கள்.

பரித்திரள் தொடர வானவர் ஈண்டிப்
பரிமளப் பொன் அலர் தூற்றத்
தெருத்தலை புகுந்து பவனியின் உலவிச்
செழும்புகழ் முகம்மது வரவுங்
கருத்துடன் கண்ணுங் களிப்புற நோக்கிக்
கவின்மலர்ப் பதம்பணிந் திறைஞ்சத்
திருத்திழை மணியிற் குருத்தெனும் கதீஜா
தெரிதரக் கனவுகண் டெழுந்தார்.'' 1

1. கதீஜா கனவு காண் படலம் 1...15

ஆம்! இத்தனையும் உண்மையில் அல்ல; கதீஜாவின் கனவில் நிகழ்ந்தவையாம்! கனவுக் காட்சியை அமைத்தேனும் அரபு நாட்டில் தமிழ்நாட்டு நானிலக் காதற் சூழலை உருவாக்க வேண்டுமென உமறு எண்ணியிருப்பதை இங்கே உணர முடிகிறது.

## அறன் வளர்த்தல்

உமறுப்புலவர் சீறாப்புராணத்தில் தமிழ்ச் சான்றோர் வற்புறுத்தும். 'அறஞ் செய்கைப்' பண்பாட்டினை அழகுற எடுத்தோதுவதைக் காணலாம். நாயகத்தின் தொடர்ந்த வரலாற்று நிகழ்ச்சிகளில் இதனைக் கவிஞர் ஆண்டாண்டு சொல்லிச் செல்கின்றார் என்றாலும் ஓரிடம் நம் உள்ளத்தைக் கவரும் வகையில் அமைந்து இன்புறுத்து கிறது. நபிகள் நாயகம் 'ஹிறா' மலையில் தங்கிருந்தபோது வானவர் தலைவர் 'ஜிபுறயீல்' தோன்றி அவரை இறுக அணைத்து, 'இறைவனின் வேதத்தை ஓதுக' என்று சொல் வித் தந்த நிகழ்ச்சி அவருக்கு அச்சத்தைத் தந்துவிட்டது. அதனால் காய்ச்சலுற்று நடுங்கிக் கிடந்தார்கள் நபிகள் நாயகம். அப்போது அன்னை கதீஜா அருகிருந்து,

> "தாங்கும் மெய்ப்பொருள், அறிவு அருள் குணம்
> தயவு இரக்கம்
> நீங்கி டாது அறம் பெருகிட வளர்க்குநன்
> நெறியீர்!
> ஓங்கு மாநிலத்து இடத்துறை பவர்களால்
> உமக்குத் [1]
> தீங்கு உறாதென உரைத்தனர் மடந்தையர் திலதம்"

என்று தேற்றியதாகக் கவிஞர் கூறுகிறார். இம் முத்தாய்ப் பான பாடலில் மெய்ப் பொருள், அறிவு, அருட்குணம், தயவு, இரக்கம் நீங்கிடாமல் அறம் செய்வோர் அழிவதில்லை என்று தமிழரின் அறப் பிழிவு அன்னை கதீஜாவின் வாய்ச் சொல்லாகக் காட்டப்படுகிறது.

---

1. சீறா. நபிப்பட்டம் பெற்ற படலம் 38

## உவமைகளும் கற்பனைகளும்

அரபிய நிகழ்ச்சிகளை விளக்கி நிற்கும் உவமைகளிலும் கற்பனைகளிலுங்கூட உமறுப்புலவர் தமிழ் நாட்டுக் கருப் பொருள்களைக் கையாள்வதைக் காண்கிறோம். வீரரான 'ஹலரத் அலி இப்னு அபுத்தாலிப்' இஸ்லாத்தில் சேர்ந் தார் என்பதை விளக்க வந்த கவிஞர் அவரைச் 'சுதந்திரப் புலி என்னும் தோன்றல்.''[1] என்றும் ஹலரத் உமறுகத் தாப் (ரலி) 'கலிமா' உரைத்து 'ஈமான்' கொள்ளவே இங்கு வந்தேன் என்று நபிகளிடம் கூறியபோது அதைக் கேட்ட நபிகளின் மகிழ்ச்சியை, 'செல்வி கமல முகம் மலர்ந்தது'[2] என்றும் ஆசிரியர் உவமை வாயிலாக விளக்கு கிறார்.

இவை போன்ற உமறுவின் கற்பனைகளும் தமிழ் நிலத் துக் கற்பனைகளாகவே காட்சி தருவதைத் 'தசைக் கட்டி யைப் பெண்ணுருவமைத்த படலத்தில்' காண முடிகிறது. வள்ளல் நபியிடம் ஹபீபு அரசர் தசைக் கட்டி உருவினளான தம் மகளைப் பெண்ணுருவாக ஆக்கித் தருமாறு வேண்டிக் கொண்டார். அதன்படி நபிகள் ஆக்கியருளிய அழகிய இளம்பெண்ணைக் கவிஞர் வருணிக்கும் கற்பனைதான் என்னே? அவளுடைய கூந்தல் மேகத்திலும் விரிந்து 'நஞ் சினும் கறுத்து, கறுமணலைப்போல் அடுக்கடுக்காகக் காட்சி யளித்தது; பல்வண்ணமும் பற்களும் முல்லை மலரையும் இறகடிக் குருத்தையும் வரிசையாக வைத்து, முத்துக்களைப் போல் ஒளிவிடும் அவ்வரிசைகளை மாணிக்க மணிகளில் பிரித்து முறையாக அடுக்கி வைத்திருந்தது போன்றி ருந்தது; மொழியோ பாலென, கனியென, பசுமடல் தேனென, கிளியென, அமுதென இருநததாம். முகமோ மதியமாம்; தோளோ மூங்கிலையும் கரும்பையும் மெல்லிய பஞ்சனையையும் வென்று விடுமாம்! இவ்வாறு அவள் தோற்றம்.

---

1. சீறா. தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 16
2. சீறா. உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம் 91

"வெய்யவன் அலர்த்த விகசிதம் பொருந்தி
விரிநரைக் கமலமென் மலரிற்
செய்யவள் இருப்பது என எழில் சிறந்து" [1]

இருந்ததாம் 'செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகள்' என்ற தமிழ் வழக்கினை சீறாப்புராணத்தில் ஏற்றி விடுகிறார் உமறுப்புலவர்.

## போர்க்களக் காட்சிகள்

உமறு விவரிக்கும் போர் நிகழ்ச்சிகளும் காட்சிகளும் அவை அரபு நாட்டில் நடந்தனவா அன்றித் தமிழ் நாட்டில் நடந்தனவா என்று எண்ணுமளவுக்கே அமைந்து கிடக்கின்றன. அபூஜஹில் என்பவன் தன் முப்பெரும் வீரர்களாகிய சைபத்து, ஒலீது, உத்பத்து ஆகிய மூவரும் மடிந்தார்கள் என்பதறிந்து கடுமையாகப் போரிடுகிறான். இதனைக் கவிஞர்,

"படர்ந்து கொன்றனர் சிலர்சிலர்; இழிந்து
வெப்பரியை
நடந்து கொன்றனர் சிலர் சிலர்; நடையுமற் றொழிந்து
கடந்திருந்து கொன்றனர் சிலர் சிலர்; மனங்கனன்று
கிடந்து கொன்றனர் சிலர்சிலர்; வீரர்கள் கெழுமி" [2]

என்று குறிப்பிடுகிறார். இக்காட்சி கலிங்கத்துப் பரணியின்,

"எறிகடலொடு கடல் கிடைத்தபோல்
இருபடைகளும் எதிர் கிடைக்கவே;
மறி திரையொடு திரை மலைத்த போல்
வரு பரியொடு பரி மலைக்கவே" [3]

என்னும் காட்சியினை நினைப்பூட்டுகிறதல்லவா!

மேலும் வீரன் ஒருவன் தன் மாற்றாரை அம்புகளால் தாக்கிக் கொண்டிருக்கிறான். அம்பறாத் தூணியில் அம்புகள்

1. சீறா. தசைக் கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம் 25
2. சீறா. பதுறுப் படலம் 201
3. கலிங். பரணி

தீர்ந்து விட்டன; மற்றாரோ எதிர்க்கின்றனர்; என்ன செய்வது? வீரன் அஞ்சவில்லை. மாற்றார் விட்ட அம்புகள் தன் மார்பகத்தில் நூற்றுக்கணக்கில் தைத்திருப்பதைப் பிடுங்கி வில்லில் தொடுத்துப் பகைவரை மாய்க்கிறான். இதனை உமறுப்புலவர்.

''அடுத்துப் பிற்புறத் தூணியில் கிடந்த அம்பனைத்தும்
தொடுத்து மள்ளரைத் துணித்து அறத் தொடுசரம் இலவான்
மடுத்து மார்பகங் கிடந்தஅம் பனைத்தையும் வாங்கி
விடுத்து நின்றனன் சிலைகுழைந் திடவொரு வீரன்''[1]

என்ற பாடலால் விளக்குகிறார். இஃது அரபு நாட்டுப் போர்க்களமெனினும்,

''கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்''[2]

என்னும் வள்ளுவரின் பைந்தமிழ் நாட்டுப் போர்க்களமாக அல்லவா காட்சி தருகிறது!

மற்றொரு வீரன் தன் இரு கைகளையும் கால்களையும் இழந்தும் பூமியின் மேல் கிடந்து, ''என் உடலால் உங்களை அழிப்பேன்; அதனால் என்னை ஒதுக்காமல் மீண்டும் போருக்கு வருக !''—என்று பகைவர்களை அழைக்கின்றான். இதனை உமறுப்புலவர்,

''ஆவி யோசினமோ பெரிதென அறிகிலன் போர்த்
தாவிப் போக்கினன் கரத்தொடும் இருதுணைத் தாளும்
பூவின்மேற் கிடந்து ஆர்ப்பொடும் வயவரைப் புகழ்ந்து
கூவி ஒய்ந்திலன் 'போர்வருகென' ஒரு குரிசில்''[3]

1. சீறா. பதுறுப் படலம் 147
2. குறள் 774
3. சீறா. பதுறுப் படலம் 154

என்று குறிப்பிடுகிறார். இது, கால்களும் கைகளும் அற வீழ்ந்த பின்னும் பல்லாலும் மெய்யாலும் போரிட்டுப் பலரைக் கொன்ற ''கும்பகர்ணனின்'' இராமாயணப் போர்க் களத்தை நினைவூட்டக் காணலாம்.

## பழக்க வழக்கங்கள்

மேற் சொல்லப்பட்ட பல செய்திகளையன்றி, இன்னும் உமறு கண்ட சீறாவை ஊன்றிப் பார்ப்போமாயின் எண்ணற்ற தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளும், பழக்க வழக்கங்களும் அதில் பொதிந்து கிடப்பதை அறிந்து கொள்ள முடியும்.

தமிழ்ப் பெண்கள் தம் உயிரினும் மேலாகக் கற்பினைப் போற்றி வருபவர்கள். இதனை உமறுப்புலவர் வியந்து பாராட்டத் தலைப்படுகிறார். எனவேதான் வயலில், காய்த்துத் தலைசாய்த்து கிடந்த செந்நெல்லின் காட்சியானது.

> ''ஒருமனைப் பிறந்து ஒருமனை யிடத்தினில் உறைந்து
> கருவரத் தரித்து ஈன்று தன்கணவனை இகழாப்
> பெருவரம் புறும்பெண் கொடியெனத் தலைசாய்த்துத்''[1]

தோற்றமளித்தது என்று பாடுகிறார்.

செய்நன்றி மறவாச் செந்தமிழ்ப் பண்பாடும் சீறாப் புராணத்தில் போற்றப்படுகிறது. கவிஞர் அரபு நாட்டு வளத்தை குறிப்பிடும்போது மலையெனக் குவித்த நெற் போர்களும், பலவகைச் செருக்குகளும், மலை ஆறு காட்டு வளங்களும், மகிழ்ச்சியும் நிறைந்து காணப்படும் அந்த நாடு.

> ''மன்னவன் வகுதைத்துரை அபுல்காசீம்
> வளமனைச் செருக்கும் ஒத்திருக்கும்''[2]

என்கின்றார். நம்மை ஆதரித்தவர் அபுல்காசீம் என்பதால் கவிஞர் செய்ந்நன்றி மறவாது அவரையும் பாடுகிறார்.

---

1. சீறா. ஷாம்-நகர் புக்க படலம் 11
2. சீறா. நாட்டுப் படலம் 41

மேலும் வேதத்தை ஓதிப் பார்ப்பதற்காக 'உமறு' என்னும் வீரர் தெளிந்த நீரால் பரிசுத்தம் செய்து கொள்கிறார். அது எத்தன்மையான நீர் தெரியுமா? கவிஞர் அதனை,

"மன்னவன் அபுல்காசீம் தன்
மனத்தெளி வதனின் மிக்காய்—தெளிந்த நீர்[1]"

என்பதாலும் செய்ந்நன்றி மறவாச் செந்தமிழ்ப் பண்பு போற்றப்படுவதை உணரலாம்.

ஹலரத் அபுத்தாலிபை ஊரைவிட்டே துரத்தி விடுவோம் என்று குறைஷியர்கள் முனைந்தபோது அபுத்தாலிபுவின் தம்பியாகிய 'அபூலஹப்',

"எனக்கு முன்னவன் தலை இடர் விளைத்திடல் எனது
மனக்கு றைப்படல் இவைதவிர்த் திடீர்...—"[2]

என உறுமிச் சீறியெழுந்ததைப் பார்க்கிறோம். 'அபூலஹப்' பிற்கும் அவர் அண்ணனுக்கும் எவ்வளவோ கொள்கை வேறுபாடுகளிருந்தாலும் இந்த நேரத்தில் அவர் அண்ணனை விட்டுக் கொடுக்கவில்லை. இப்பண்பு, கொள்கையில் மாறுபட்டாலும், "நெடிது நாள் வளர்த்துப் பின்னைப் போர்க் கோலம் பூணவிட்டா" ராகிய இராவணனுக்காகவும் துரியோதனுக்காகவும் கும்பகர்ணனும்—கர்ணனும் காட்டிய செய்ந்நன்றி மறவாக் கடப்பாட்டை நினைவூட்டுகிறது அல்லவா?

இது போலவே விருந்தோம்பற் பண்பாடும் சிறப்பிக்கப் பட்டிருக்கிறது. விருந்துண்ண வந்தவர்களையெல்லகம் முகமலர வரவேற்றார் இசுறா. பிறகு, "வந்திருந்த எல்லோரையும் இங்கு அழைத்து வந்து விட்டீர்களா" என்று கேட்டார் அவர். அதற்கு 'அபூஜஹ்லு' என்பான், "அஹமது என்ற ஒருவனல்லால் எடுக்க அருந்தவத்தின்

---

1. சீறா. உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம் 72
2. சீறா. ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்திற்குப் போந்த படலம் 33

மேலாய் யாவரும் அடுத்தோம்"[1] என்றான். அஹமது என்பவர் மட்டும் வெளியில் இருக்கிறார். அவரை விட்டு வந்துவிட்டேன் என்று அவன் கூறியதும் பார்க்கவேண்டுமே 'இசிறா'வின் துயரத்தையும், சினத்தையும்! கவிஞர் கூறு கிறார்:

"தீயினும் கொடிய மாற்றம்
செவிமடல் துளையில் ஓடிப்
போயது சிந்தை யூடு
புகைந்திடப் புழுங்கிப் பொங்கி
வாயில்நீர் வறந்து கண்ணில்
வளர்தழல் கொழுந்து காட்டி
சாய்ச்சின ஏறு போன்றான்
கவலுநூற் புலமை யோனே"[2]

'ஒருவனைத் தவிர மற்றவர் வந்தோம்' என்ற போதெழுந்த சீற்றம் இது.

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும வேண்டற்பாற் றன்று"[3]

என்று திருக்குறள் செப்பும் பண்பாடு கவிஞர் உமறுவின் 'இசுறா' வாய்ச்சொல்லாக சீறாவில் வெளிவருவதைக் காண் கிறோம்.

தமிழ்நாட்டின்—தமிழ்ப் புலவர்களின் இலக்கிய வழக் கிலும் உலக வழக்கிலும் பயின்று வரும் பல பழக்க வழக் கங்களுப் கூட சீறாப்புராணத்தில் இடம் பெற்று நிற்பதைப் பல இடங்களில் பார்க்கலாம். மிகப் பெருஞ்சிறப்புக்கோ வலிமைக்கோ உவமை சொல்லும்போது தமிழுலகில் 'மேருவை'க் குறிப்பிடுதல் உண்டு. இம்மேருவை உமறுப் புலவர் அரபு நாட்டிற்கும் கொண்டு செல்லுகிறார். போரிடு வதற்காக நபி அவர்கள் பேரீச்சம் பாளையை எடுத்து ஆயுத

1. சீறா. இசுறாகாண் படலம் 28
2. சீறா. 29
. குறள் 82

மாக ஹலரத் அப்துல்லாவிடம் கொடுக்க, அதன் வலிமை "விண்ணினைப் பிளக்குமோ? நீண்ட மேருவைப் பிளக்கும்."[1] படியாக இருந்தது என்று கவிஞர் பாடுகிறார். அரபுநாட்டில் 'மேரு' எப்படி வந்தது?... கவிஞரின் மரபுப் பழக்கத்தால்; அதுபோல நபிகளை "வரிசை நபியே முகம்மதுவே, வானோர்க்கரசே புவிக்கரசே!"[2] என்றும், "ஆதிதன் தூதே பேரின்ப விளக்கே! அமர் உலகினுக்கும் நல் அரசே"![3] என்றும் கூறுவதால் தேவருலகத்தைக் கூறும் தமிழ் வழக்கம் சுட்டப்படுகிறது. "ஒருவனே நாயன் மற்றொழிந்த தேவதம் இருமையும் பேறு இலாது இழிவு கொண்டது" என்று நபிகள் கூறுவதாகக் கவிஞர் பாடுவதால் இம்மை மறுமை கூறும் தமிழ் வழக்கமும் குறிக்கப்படுகிறது. தமிழிலக்கியங்களிலும் வழக்கிலும் பாற்கடல் அமுதம் வந்து சுவையூட்டுதல் மிகுதியும் உண்டு. அரபு நாட்டில் 'அமுதம்' இல்லாமலா போய் விடும்? நபிகளின் ஊர்வலத்தைக் காணும் பெண்களை, "ஆரவாருதியில் தோன்றும் அமுதனார்"[4] என்றும், கதீஜாப் பிராட்டியை "ஆரணக் கடலுக்கு அமுதநாயகியை"[5] என்றும் குறிப்பிட்டு அரபு நாட்டில் தமிழமுதம் தருகிறாரே இத்தமிழ்க் கவிஞர்! அடுத்து, வருகின்ற நிகழ்ச்சிகளை முன் கூட்டியே அறிந்து கொள்ளும் வகையில் மங்கையர்கள் கனவு காணும் வழக்கமும் தமிழிலக்கியங்களில் உண்டு. இது நன்னிகழ்ச்சிக்கும் அஃதல்லாத நிகழ்ச்சிக்கும் பொருந்தும். அதற்குப் 'பலன் கூறுதலும்' உண்டு.

"வாரணமாயிரஞ் சூழ வலம் வந்து
நாரணநம்பி நடக்கின்றான்"[6] என்று சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாள் கண்ட கனவினையும், தீ நிமித்தக் கனவாக,

---

1. சீறா. உகுதுப் படலம் 200
2. சீறா. உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம் 90
3. சீறா. மதியை அழைப்பித்த படலம் 180
4. சீறா. மணம்புரி படலம் 62
5. சீறா. மணம்புரி படலம் 111
6. சீறா. நாச்சியார் திருமொழி. வாரணமாயிரம் 1

"குடையொடு கோல்வீழ"[1]
—கோப்பெருந்தேவி கண்ட கனவினையும் காண்கிறோம்.

இப்பழக்கம் அரபு நாட்டில் உண்டோ, இல்லையோ? ஆனால் உமறு தரும் அரபு நாட்டில் நிச்சயமாக உண்டு. கதீஜாப் பிராட்டி கனவு காணுகிறார்! என்ன கனவு? இதோ கவிஞர்; ஒரு மரபானது.

"வயிரவேர் ஊன்றிச் சேர்ந்து
 மாணிக்கப் பணர்விட் டோங்கி
இயன்மர கதத்தின் சோதி
 இளந்தளிர் குழைப்ப ஈன்று
நயனுறு நகரை மூடி
 நற்கனி யுகுத்து வாசச்
செயமலர் இடைவி டாது
 சிரமிசை சொரிய மாதோ!"[2]

—இக்கனவைக் கேட்டதுமே மிக இனிமையான செயல் ஒன்று நடக்கப்போவதாக நமக்கும் தெரிகிறதல்லவா? அதன்படியேதான் அக்கனவுக்கு நற்பலனும் கூறப்படுகிறது —அதன் வழியே நபிகளுடன் கதீஜாவுக்குத் திருமணமும் நிறைவேறுகிறது!

'திருஷ்டி கழித்தல்'—என்பது தமிழ் நாட்டுத் தாயர் மேற்கொள்ளும் தொன்றுதொட்ட முறை. தன் குழந்தையின் சிறப்புகளை மற்றவர் பார்த்து மகிழ்வதோடு பாராட்ட வேண்டும் என்று தாய் விரும்புகிறாள். ஆனால் அதே நேரத்தில் மற்றவர்கள் தன் குழந்தையைப் பாராட்டிப் புகழ்வதால் அவர்களின் கண்பட்டுவிடுமோ என்றும் அஞ்சுகிறாள்! குழந்தை மீது அவ்வளவு அக்கறை அவளைத் தவிர வேறு யாருக்கு இருக்க முடியும்? எனவே தன் குழந்

1. சிலம்பு. வழக்குரை காதை-வரி 1
2. சீறா. மணம் பொருத்து படலம் 21

தைக்குத் 'திருஷ்டி கழித்து' விட்டால் அப்பொல்லாங்கு வராது என நம்பி அங்ஙனமே செய்கிறாள். இது தமிழ் நாட்டு மாதரிடம் மறைக்க முடியாத பழக்கமாக ஆகிவிட்டதால் புலவருலகத்திலும் உயர்ந்த இடம்பிடித்துவிட்டது. இதனை இலக்கியங்கள் 'கண்ணேறு கழித்தல்—என்று பேசுகின்றன. இப்பழக்கம் அரபு நாட்டிற்கும் சென்ற மாயந்தான் என்ன! நபிகள் நாயகம் ஷாம் நகரிலிருந்து திரும்பி மக்கமாநகர் வந்து சேருகிறார். அனைவருக்கும் ஒரே மகிழ்ச்சி நபிகளின் பெரிய தகப்பனார் அவரை ஆரத்தழுவி மகிழ்கிறார். ஆனால் நபிகளின் பெரிய தாயார் என்ன செய்கிறார் தெரியுமா? கண்ணிறை அயினி நீரால் கண்ணெச்சில் கழுவினார்கள்'' பிள்ளையின் புகழ் உலகெங்கும் பரவி வருவது கண்டு, கண்ணேறு கழிப்பது இன்றியமையாதது என்பது அவருக்குத் தானே தெரியும்! அந்தத் தாய் அரபு நாட்டுத் தாய் என்றாலும் கவிஞர் தமிழ் நாட்டவர் ஆதலால் அவளும் தமிழ் நாட்டுத் தாயாகிறாள்!

அரபு நாட்டு நிகழ்ச்சியையே கூறப் புகுந்தது—அவ்வாறே கூறியது—சீறாப்புராணம் என்றாலும், அந்த உமறு கண்ட 'சீறா'வில் ஒரு செந்தமிழ் நாடும் அதன் சீர்த்திமிகு பண்பாடும் பழக்க வழக்கங்களும் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன என்னும் பேருண்மையை இதுகாறும் கூறியுள்ள செய்திகள் வலியுறுத்தி நிற்பதை நாம் நன்குணரலாம்.*

# சீறாப்புராணத்தில் இயற்கை வர்ணனைகள்

டாக்டர் சி பாலசுப்பிரமணியன்
எம். ஏ: எம். லிட்; பிஎச். டி;

இயற்கையே இறைவன். இறைவனை வணங்குவதால் உண்டாகும் மன அமைதி, இயற்கைக் காட்சிகளைக் காண்பதாலும் உண்டாகிறது ஓங்கி உயர்ந்த மலை அதில் பொங்கி வீழும் அருவி, சலசலவென ஓடும் தெளிந்த நீரோடை, நீரோடை இருமருங்கும் செழித்து, வானளாவ வளர்ந்துள்ள மரங்கள், பூத்துக் குலுங்கும் பல நிற, பல மண மலர்கள், அங்கே கூடுகட்டி வாழும் பறவைகள்—இவை போன்ற எண்ணற்ற இயற்கைக் காட்சிகளே, அலையும் நம் எண்ணங்களை, ஒருமைப்படுத்தி, உயர்வுபடுத்தும் ஆற்றல் வாய்ந்தனவாய் உள்ளன. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த நம் மூதாதையர்கள் இவ்வியற்கை எழில் காட்சிகளைத் துய்த்து வாழ்ந்த வாழ்வு, இன்று நமக்குக் கிட்டுவதாக இல்லை

இற்றைமக்கள் வாழும் வாழ்வு இயந்திர வாழ்வு. அன்றாட மக்களின் வாழ்வில் இயற்கை தலைமையான இடம் பெற்றிருந்தது அன்று; மக்களை இயந்திரங்களே ஆட்டி வைப்பது இன்று. டாக்டர் மு.வ. அவர்கள், தாம் இயற்றியுள்ள 'பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை' என்ற நூலில் முடிவுரையின் கண் ''வயிற்றை நிரப்பும் கடமையில் தொழிலும் பொருளும் தேடி, ஓடிக்கொண்டே இருக்கின்ற இன்றைய மனிதனுக்கு இயற்கையை மனமார அனுபவிக்க நேரம்தான் இல்லை'' என்று கூறிக் கீழ்க்கண்ட வோர்ட்ஸ்வொர்த் அவர்களின் கவிதையை எடுத்துக் காட்டுகிறார்.

''உலகியலில் முழுகிவிட்டோம் உணர்வதற்குப்
பொழுதுமில்லை
பலவும் பெற்றழிக்கின்றோம் பாழுக்கே இறைக்கின்றோம்
நமதுடமைச் செல்வமென நம்மைச் சூழ்ந்தினிதிருக்கும்

அமைவுடைய இயற்கையினில் அழகிருந்தும்
கண்டோமா?
குலைகுலையாய்க் கொட்டிவைத்துத் தொடுக்காமல்
தூங்குகின்ற
மலர்களைப்போல் இயற்கை எழில் மதிப்பற்றுக்
கிடக்குதய்யா''

உமறுப்புலவர் ஓர் இயற்கைக் கவி. அமைவுடைய இயற்கையிலே, மனதை அழப் பறிகொடுத்து ஆர்வமுடன் அவற்றைப்பாக்களாக்கிச் சீறாப்புராணத்திற்குச்சிறப்பினைக் கொடுத்திருக்கிறார். தண்டியலங்காரம் என்னும் அணிநூல், காவியம் கொண்டிருக்க வேண்டியவைகளுள் இன்றியமை யாத ஒன்றாகக் கூறுவது இயற்கை வருணனை. ''மலை கடல் நாடு வளநகர் பருவம் இருசுடர்த் தோற்றம் என்று இனை யன புனைதலும்'' பூம்பொழில் நுகர்தல், புனல்விளையாடல் கூறலும் காவிய ஆசிரியர் கடமை என்று அணி இலக்கணம் கூறியுள்ளதைத் தலைமேற் கொண்டு, இயற்கை வருணனை களுக்குத் தலையாய இடம் தந்து, சீறாப்புராணக் காவியத் தை சிறப்புறச் செய்திருக்கிறார் உமறுப் புலவர். கம்பர் காவியத்தைக் கற்றுத் தெளிந்தவரான உமறு கம்பரை அடியொற்றியே இயற்கையைத் தம் காவியத்தில் வருணித் திருப்பதை இங்கே குறிப்பிடுவது இன்றியமையாததாகும்.

## கம்பரும் உமறுவும்

கம்பர், இராமாயணத்தை ஆற்றுபடலம், நாட்டுப்பட லம், நகரப்படலம் என்று தொடங்குகின்றார். சீறா பாடிய உமறுவும் ஆற்றுபடலத்தை நாட்டுபடலத்தில் உள்ளடக்கி நாட்டுப்படலம் நகரப்படலமெனத் தொடங்குகிறார். மழை பெய்து, வெள்ளம் பெருக்கெடுத்தோடும் நிகழ்ச்சியோடே இவ்விரு பெருங் காவியங்களும் தொடங்குகின்றன. வெண் ணிற வானம் கடல்நீரை முகந்து கருமேகங்களாய்த் திரும்பு வதை இருபெருங் கவிஞர்களும் கண்டு, கண்டதை உவமை யோடு அமைத்துப் பாடியிருக்கின்றனர்.

வெண்மேகம், வெண்ணீறு அணிந்த சிவபெருமானாக வும், கார்மேகம் கருநீல வண்ணனாகவும் தெரிகின்றது கம்பருக்கு.

"நீற ணிந்த கடவுள் நிறத்தவன்
ஆற ணிந்து சென்று ஆர்கலி மேய்ந்துஅகில்
சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் மீண்டவே"[1]

என்கிறார் கம்பர்.

இந்தியரின் தலையாய கொள்கைககளில் ஒன்றுதான் சகிப்புத் தன்மை; சமரசம்; அச் சமசரக் கொள்கையையே கம்பர், மேற்கூறிய பாடலில் பாடியிருக்கிறார். சைவ வைணவ சமரசத்தை வற்புறுத்துவதாக அமைந்திருப்பது அப்பாடல்; இஸ்லாமியரின் தலையாய கொள்கைகளில் ஒன்று கொடை; கொடுத்து வாழும் வாழ்வு. முகம்மது நபி அவர்களால் வற்புறுத்தப்பட்டது; சீதக்காதி மரைக்காயர், அபுல்காசிம் மரைக்காயர்—இவ்விரு வள்ளல்களின் கொடையால் உருப்பெற்றதே இச் சீறா—காவியம். கொடையாளன் புகழ், சகமெலாம் பரந்து, விசும்பின் அண்ட முகடுற நிறைவது போல் வெண்மேகங்கள், கடல் நீரை உண்டு கருமேகங்களாய் வானிடைக் குழுமின என்கிறார் உமறுப் புலவர்; அவர் பாடிய கவி வருமாறு:

"தருங்கொடை நபினார் கீர்த்தி சகமெலாம் பரந்து மிஞ்சி
நெருங்கியே விசும்பி லண்ட முகடுற நிறைந்த வேபோல்
இருங்கணி வெள்ளை மேகம் இரைபசுங் கடல்வீழ்ந் துண்டேன்
கருங்கடல் எழுந்த தென்னக் ககனிடை செழுந்து மீண்ட"[2]

1. கம். பாலகாண்டம். ஆற்றுப் படலம் 216
2. சீறா. விலாதத்துக் காண்டம். நாட்டுப் படலம் 1

கொடையாளன் கீர்த்தி போல் கருமேகங்கள் பரந்தன என்கிறார் உமறுப் புலவர். கொடையாளன் கொடுப்பது போல் பொழிந்தன மேகம் என்கிறார் கம்பர்.

> "உள்ளி உள்ளவெல் லாம்உவந்து ஈயும்அவ்
> வள்ளி யோரின் வழங்கின மேகமே." 1

என்பது கம்பர் பாடல்.

மழையின் விளைவால், வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. அவ் வெள்ளப் பெருக்கைப் பலபட வருணித்திருக்கின்றனர். இவ்விரு பெரும் கவிஞர்களும். இக்கவிஞர்களின் கண்களுக்கு, அவ்வெள்ளப் பெருக்கு விலைமகளாயும், வணிகராயும் தோன்றுகிறது. மலையின் முடி, நடு, அடி ஆகிய பகுதிகள் வழியாய்ப் பாயும் வெள்ளம், மலையிடத்து உள்ள பொருள்களையெல்லாம் அடித்துக்கொண்டு செல்கின்றது. வருவோரின் தலை, ஆகம், தாளைத் தழுவிப் பொருளைக் கொள்ளை கொள்ளும் விலைமகளிரின் செயலாகப் படுகிறது, அவ்வெள்ளத்தின் செயல் கவிஞருக்கு.

> "தலையும் ஆகமும் தாளும் தழீஇயவே
> நிலைநி லாதுஇறை நின்றது போலவே
> மலையின் உள்ளவெலாம் கொண்டு மண்டலாவ்
> விலையின் மாதரை ஒத்தது அவ் வெள்ளமே." 2

என்பர் கம்பர்.

> "மலையெனும் அரசன் புயங்களைத் தழுவி
> மகிழ்ச்சிசெய் தவனுழைச் சிறந்த
> நிலைகெழு பொன்னும் உரகஎசம் மணியும்
> நித்தில ராசியும் கவர்ந்து
> தொலைவிலப் பண்டம் அனைத்தையும் வாரிச்
> சுருட்டிமெய எல்லைவிட் டகலும

1. கம்ப, பாலகாண்டம். ஆற்றுப் படலம் பா. 16
2. கம்ப, பாலகாண்டம். ஆற்றுப் படலம் பா. 18

விலைமகள் போன்று பலபல முகமாய்
வெள்ளரு வித்திரள் சாயும்''[1]

என்கிறார் உமறு.

கம்பர், சுருங்கிய வார்த்தைகளில் சொல்லியிருப்பதையே உமறு அவர்கள் இன்னும் விளக்கமான முறையில் கூறியிருக்கிறார். மலையிலே விளைவதாகிய சந்தனம், அகில், யானைத் தந்தங்கள் முதலியவைகளை அடித்துக் கொண்டு வரும் வெள்ளத்தை இவ்விரு கவிஞர்களும் வணிகருக்கு உவமித்துக் கூறியிருக்கின்றனர்.

''கிடந்த சந்தனம் காரகில் கிளைமணி கரிக்கோடு
உடைந்த முத்தம்வெண் தந்தமுச் சுடரொளி
யொதுங்கக்
கடந்த செம்மணிப் பையுடன் கொடுகடலேற
நடந்த வாணிக னொத்தது செழுங்கழை நதியே.''[2]

என்கிறார் உமறு.

''மணியும் பொன்னும் மயிற்றழைப் பீலியும்
அணியும் ஆனைவெண் கோடும் அகிலுந்தண்
இணையில் ஆரமும் இன்ன கொண் டேகலான்
வணிக மாக்களை ஒத்தவ் வாரியே.''[3]

என்கிறார் கம்பர்.

குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய ஐவகை நிலங்களிலும் உள்ள பொருள்களை அடித்துச் செல்லும் வெள்ளப் பெருக்கை அழகிய பல உவமைகளில் இவ்விரு கவிஞர்களும் பாடியிருக்கின்றனர். வெள்ளப் பெருக்கு எல்லா இடங்களிலும் பாய்ந்து, குளங்கள், வயல்களெல்லாம் நிறைகின்றன. இச்செயலுக்கு இவ்விரு கவிஞர்கள் கூறும் உவமையும் ஒன்றாகவே இருப்பது சுட்டத் தக்கது.

1. சீறா. விலாதத்துக் காண்டம். நாட்டுப் படலம் 9
2. சீறா. விலாதத்துக் காண்டம். நாட்டுப் படலம் 12
3. கம்ப, பாலகண்டம் ஆற்றுப் படலம், பா. 19

"தாதரு சோலைதோறும் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணற் றடங்கள்
தோறும்
மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்க டோறும்
ஓதிய உடம்பு தோறும் உயிரென உலாய தன்றே."[1]

என்கிறார் கம்பர், உடம்பு தோறும் உயிர் சென்று உலாவும் இதே உவமையை அமைத்து உமறுவும்,

"தடமும் ஏரியும் வாவியுங் கழனியும் சலசக்
கிடங்கும் எங்கணும் நிறைதரப் பெருகு
கிலாவங்
குடம்பை யின்பல பேதமா கியசதா கோடி
உடம்பு தோறினும் உயிர் நின்ற நிலையினை
ஒக்கும்"[2]

என்று பாடுகிறார். இவ்வாறு இவ்விரு கவிஞர்களும் இயற்கையை இனிதுற வருணித்துக் கூறியிருப்பதும் ஒன்றே போல் அழகிய உவமைகளை அமைத்திருப்பதும் எண்ணி எண்ணி மகிழத்தக்கது.

## பிற கவிஞர்களும் உமறுவும்

நற்றிணையில் முப்பத்தைந்தாம் பாடலில், அம்மூவனார் முறுவலை உண்டாக்கும் இயற்கை நாடகக் காட்சி ஒன்றினை காட்டுவர். நாவற்கனிகள் பல நீரில் மிதந்து வருகின்றன; நீரில் மிதந்து வரும் மலர்களில் உள்ள தேனை நக்கியபடி வண்டுகளும் வருகின்றன. நாவற்கனி உண்ண விழையும் நண்டு ஒன்று, நாவற்கனியும் வண்டும் உருவத்தில் ஒத்துத் தோன்றுவதால், கனியென்று வண்டைப் பிடிக்கிறது, நண்டின் பிடியில் சிக்குண்ட வண்டு ஓலமிட, அவ்வோசையைக் கேட்டுக் கரையில் காத்திருந்த இரைதேர் நாரை ஒன்று, பறந்து வந்து நண்டைப் பிடிக்க, நண்டு தன் பிடியிலிருந்து வண்டை விட்டுவிடுகிறது.

1. கம்ப, பாலகண்டம். ஆற்றுப் படலம் பா. 12
2. சீறா. விலாதத்துக் காண்டம், நாட்டுப் படலம் 17

"புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி பழஞ்செத்துப்
பல்கால் அலவன் கொண்டகோட் கசாந்து
கொள்ளா நரம்பின் சிமிரும் பூசல்
இரைதேர் நாரை எய்தி விடுவிக்கும் "

என்பதே அப்பாடல். இது போன்ற இயற்கை நாடகம் சீறாவிலும் உண்டு.

ஆற்றில் குளிக்கின்ற மகளிர், நீரில் மிதந்து வருகின்ற நாவற்கனிகளை எடுத்து உண்ணுகின்றனர். அப்போது மங்கை ஒருத்தி, வண்டினையும் கனியென்று மயங்கிக் கையில் எடுக்க, அக்காரிகை கையினின்றும் விடுவித்துக் கொண்டு வண்டு சிறகடித்துப் பறக்கின்றது. அச்சமும் மயக்கமும் அம்மங்கையை ஆட்கொள, நீரில் மிதந்துவரும் உண்மை நாவற்கனிகளையும் வண்டென்றே எண்ணி, எடுக்காமல் விட்டுவிடுகிறார்.

"மறிந்து தூங்கிய நாவலின் கனிகையோர் மங்கை
எறிந்து பார்மது கரத்தினைக் கரத்தினா லெடுப்ப
மறிந்து போதவிற் துணிக்கின்கை உதறி
மெய்பதறிச்
செறிந்து சூழ்தரச் சொரிந்தமைக் கனியையும்
தீண்டாள்"

என்னும் சீறாவின் பாடல் முகிழ்க்கக் காரணமாயிருந்தது மேலே எடுத்துக் காட்டிய சங்கப் பாடலே என்பது தெளிவாகும்.

சிலம்பில் இளங்கோ அடிகள், வையை ஆற்றைப் பெண்ணாக உருவகித்துக் கூறுவர். கயற்கண்களையும், அவிர் கூந்தலையும், புண்ணிய நறுமலர் ஆடையும் போர்த்து வையை மகள் திகழ்வதாக அவர் பாடுகிறார்.

"விலங்குநிமிர்ந் தொழுகிய கருங்கயல் நெடுங்கண்
விரைமலர் நீங்கா அவிரறற் கூந்தல்
உலகுபுரந் தூட்டும் உயர்பே ரொழுக்கத்துப்

புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி
..................................................
புண்ணிய நறுமலர் ஆடை போர்த்து "[1]

என்று பாடுகிறார் இளங்கோ.

உமறுவும், சீறாப்புராணத்தில் வாவிகளைப் பாவையருக்கு உருவகப்படுத்திப் பாடுவர். வாவியில் மலர்ந்திருக்கும் தாமரையே மங்கையின் முகமாகும்; குவளை மலர்களே விழிகளாகும்; மலர்களின் மலராத மெல்லரும்புகளே மார்பாகும்; வாவியைப் போர்த்திருக்கிற பசிய இலைகளே, உடுத்திருக்கும் அழகிய ஆடையாகும்.

"நலங்கொள் தாமரை முகமலர் தரநறுங் குவளை
விலங்கி வள்ளையில் விழியெனக் கிடப்ப,
மெல்லரும்பு
துலங்கு மென்முலை தோன்றிடப் பச்சிலை
துகில்போர்த்
திலங்கு வாவிகள் அணியிழை மகளிர்ஒத் திருந்த."[2]

எனும் சீறாவின் உருவகப் பாடல் எழ, உயிர்க் காரணமாய் இருப்பவர் இளங்கோவே எனலாம்.

## நிலவில் மயங்கும் உமறு

முழுநிலவின் ஒளி வெள்ளத்தில்—எழில் வடிவில் மயங்காத கவிஞரும் இல்லை; நிலவுக்கு இடம் கொடாத கவிதைகளும் இல்லை. உமறுவோ இயற்கையே இறைவன் என்னும் கருத்துடையவர். சூரியனாயும், நிலவாயும், நட்சத்திரங்களாயும், மலையாயும், கடலாயும் கடவுளே விளங்குகிறான் என்பதைக் கடவுள் வாழ்த்துப் பகுதியிலேயே உமறு வலியுறுத்தியிருக்கிறார்.

1. சிலம்பு. புறஞ்சேரியிறுந்த காதை. 116-172
2. சீறா. நாட்டுப் படலம். 44

"கடலினை கலையைக் கதிர்மதி யுடுவைக்
ககனமற் றறுஷொடு குறுசைப்
புடவியைச் சுவனப் பதியினை யமரர்
பொருந்திட மடுக்கடுக் கவையை
வடிவுறத் தனது பேரொளி யதனால்
வருத்துவெவ் வேறென வமைத்தே
உடலினுக் குயிராய் உயிரினுக் குடலாய்
உறைந்தமெய்ப் பொருளினைப் புகல்வாம்."[1]

என்ற இப்பாடலில் இயற்கைச் சக்திகள் அனைத்துமாயும் இறைவனே இருப்பதை உமறு கூறியிருக்கிறார். அவற்றுள்ளும் இறைவனின் அருட்பேரொளி நிலவே ஆகும். புனிதர் முகம்மதுவின் முகத்தை மதியோடு உவமித்துக் கூறி, உவகையுறுகிறார் உமறு.

"பெருகிய கோடிசந் திரப்பிர காசமாய்
வருமொரு பெருங்கதிர் மதியம் போலவே
கருணைவீற் றிருந்தசெங் கமலக் கண்ணிணைத்
திருநபி வருமல தாரஞ் செப்புவாம்"[2]

உலகமே இறியாமை இருளில் மூழ்கி, மயங்கிக் கிடந்தது. இருளகற்றி, ஒளியைப் பாய்ச்ச மறுவிலா தெழுந்த முழுமதி யாய் வந்து தோன்றினர் முகம்மது.

"நெறிநிலை திரியா மருண்மத மிகுந்து
நெடுநில மெங்கணும் பரந்து
துறவறந் தவறி இல்லறம் மடிந்து
சுடரிலா மனையது போலக்
குறைபடுங் காலம் இருளெனும் குபிரின்
குலமறுத் தறநெறி விளக்க
மறுவிலா தெழுந்த முழுமதி போல
முகம்மது நபிபிறந் தனரே."[3]

1. சீறா. கடவுள் வாழ்த்து 4
2. சீறா, நபியவதாரப் படலம் 1
3. சீறா. நபியவதாரப் படலம் 91

என்ற பாடலில் முழுமதியாய் புனிதர் முகம்மதுவை உவமித்திருக்கிறார்.

மதிமுகம் கொண்ட முகம்மதுவிற்குத்—தாலாட்ட வானிலிருந்து இறங்கி வரும் மதியே என்று பாடியிருக்கிறார். உமறு வானிலிருந்து மண்ணிற்கு இறங்கி, பிறர் அறியாதவாறு வேறுருக் கொண்டு, முகம்மது துயிலிடம் சென்று, அவருடைய மலர்த்தாளை நாள்தோறும் வருடியும், கதிர் மணித்தொட்டிலை யாட்டியும், சந்திரன் மகிழும்.

"மாமயில் அலிமா கண்துயில் காலை
முகம்மது துயிலிடம் நோக்கித்
தாமறி யாது சந்திர னிறங்கித்
தன்னுரு மாறிவேற் றுருவாய்க்
காமறு மலர்த்தாள் மெல்லென வருடிக்
கதிர்மணித் தொட்டிலை யாட்டிப்
பூமண மனைக்குள் இருந்தடி பணிந்து
போவது தினந்தொறும் தொழிலே".[1]

என்பது அப்பாடல்.

முகம்மது வாவியுள் இறங்கிக் குளித்துத் எழுதலைப் பாடும் கவிஞர், அக்காட்சி, கடலிடை நிலவு முளைத்தெழும் காட்சி போன்றுளது என்று உவமிப்பது இங்கே சுட்டத் தக்கது,

"வடிவுறு முகம்மது வாவித் தண்புனல்
இடைக்குளித் துயர்தர விலங்கும் வான்முகம்
படிமிசை ஆயிரம் கலைகொள் பான்மதி
கடலிடை முளைத்தெழும் காட்சி போன்றதே"[2]

சீறாப்புராணம் நுபுவ்வத்துக் காண்டத்தில் மதியை அழைப்பித்த படலம் என்ற ஒரு படலம் இருப்பதும், நிலவின்பால் உமறு கொண்டிருந்த ஈடுபாட்டைத் தெளி

1. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 82
2. சீறா. புனல் விளையாட்டுப் படலம் 16

வுறுத்துவதாகும். புனிதர் முகம்மது அழைத்திட முழுமதி கடல் வேந்தனுக்குக் கலித்திடும் வெண்தரள மணி முடியாய் தோன்றியது என்கிறார் உமறு.

"......பரவைவேந் தனுக்குவெண் டரள
மணியினில் அமைத்த செழுமுடி நிகர்ப்ப
வந்தது நிறைந்த வெண் மதியம்"[1]

இன்னும் அவ்வாறு தோன்றும் நிலவு, "முகம்மதுவைச் சார்ந்தோரே சொர்க்க பூமி சேர்வர், சாராதார் கெடு நரகு அடைவர்" என்று உலகிற்கு அறிவிப்பதாகவும் கற்பனை செய்திருக்கிறார் உமறு.

"நெடியவன் படைப்பெப் பொருட்குமுன் னொளியாய்
நின்றுபின் அப்துல்லா வயிற்றில்
வடிவுறு அரசா யுதித்தநன் னபியே
முகம்மதே தனியவன் தூதே
படியினும் கலிமாப் பகர்ந்தவர் சுவனப்
பதியடை குவர்பக ராதார்
கெடுநர கடைவர் சரதமென் றெவர்க்கும்
கிளத்திநின் றதுசெழு மதியம்" [2]

முகம்மதுவின் முகத்தை மறுவிலா முழுமதிக்கு உவமித்துள்ள உமறு, அவ்வாறே அவர் அவதரித்துள்ள திருநகரில் வாழும் பெண்களின் முகத்தையும், மறுவிலா முழுமதிக்கு உவமித்துக் கூறுவதையும் இங்கே சுட்டவேண்டும்.

உழத்தியர், நாற்று நடும்போது, சிதறும் சேறு, அவர்கள் முகத்தைக் கறைபடுத்துகிறது. கறைபடுமுன், களங்கமில்லா நிலவாய் இருந்த அம்மங்கையர் முகம், சேற்றுக் கறை பட்டமையால், கலங்கமுடைய நிலவை ஒத்து ஒளியுடன் திகழ்கிறது என்கிறார் உமறு.

1. சீறா. மதியழைப்பித்த படலம் 166
2. சீறா. மதியழைப்பித்த படலம் 172

"கையினிற் செறிந்த முடியினைச் சிதறிக்
கடைசியர் கரங்கள்தொட் டொழுங்காய்ச்
செய்யினிற் பதிப்பத் துளிகாஞ் சேறு
தெறித்திடும் செழுமுகச் செவ்வி
துய்யவெண் டிரைப்பாய்ச் சுருட்டிமே வெறியும்
தொடுகடல் முகட்டிடை யெழுந்து
வையகம் சிறப்ப வருமுழு மதியும்
மறுவும் ஒத்திருந்தன மாதோ".[1]

இன்னும், ஆசிரியர், நிலவைப் பாடுமிடத்துக் கூறும் ஒரு கற்பனையையும் இங்கே கூறவேண்டும், வான வீதியிலே வலம் வரும் நிலவோ மறுவுடைய நிலவு. நகரில் வாழும் மங்கை யாரோ, மறுவிலாத மதிமுகத்தினர். மதியின் மறுவைத் துடைத்து விட்டால்தான் அம்மதிக்கு மங்கையரை உவமிக்க முடியும். ஆகவே அரண்மனையின் மேலே பறக்கின்ற கொடி அரண்மனையில் உறைகின்ற மகளிர் தம் முகத்தைப் போலவே நிலவையும் கறையில்லாதது ஆக்கத் தன் கைகொண்டு துடைப்பதாகக் கற்பனை செய்திருக்கிறார் உமறு.

"...கடுவினை யடர்ந்த கொடுவினை விழியார்
கறைதவிர் மதிமுகம் கண்டோ
படர்தரு மாடக் குடுமியின் விசித்த
பைங்கொடி மதிமறுத் துடைக்கும்" [2]

## இனிய இயற்கைக் காட்சிகள்

கம்பர், இளங்கோவை அடியொற்றி ஆசிரியர் அமைத்துள்ள இயற்கை வருணனைகளையும், நிலவின்பால் அவர் கொண்டிருந்த ஈடுபாட்டையும் கண்ட நாம், இந்நூலில் இன்னும் அமைத்துள்ள இனிய இயற்கைக் காட்சிகளையும் காண்போம்.

---

1. சீறா. நாட்டுப்படலம் 30
2. சீறா. நகரப்படலம் 4

மெல்லிழை மகளிர் நீராடுகின்றனர். புனலிடை இறங்கி அவர்கள் கூந்தலில் சூடியுள்ள மலர்களில் வண்டுகள் மொய்த்திருக்கின்றன. அவ்வண்டுகள் புனலில் மிதந்து வரும் குவளை மலர்கள் மேல் பாய்ந்தும் தேனை உறிஞ்சுகின்றன. அவ்வாறு மங்கையர் கூந்தலில் தங்கியிருந்த வண்டுகள், புனலிடை மிதந்துவரும் குவளைகள் மேல் பாய, மகளிர் கண்களுக்கு அக் குவளைகள் பொருந்துவன—அல்லவாதலால், அவ்வண்டுகள் அக்குவளைகளைத் தாக்குகின்றன என்று கற்பனை செய்து பாடியிருக்கிறார் உமறு.

"இருந்து மெல்லிழை மடந்தையர் புனலிடை
திளைப்பச்
சரிந்த கூந்தலி விருந்தவண் டெழுந்துழந் தடத்தில்
விரிந்த காவியில் வீழ்வது மின்னனார் விழிக்குப்
பொருந்து மோவெனச் சினத்துடன் உதைப்பது
போலும்"[1]

வானில் வலம் வரும் பிறை நிலவின் இனிய தோற்றம் வாவி நீரில் தெரிகிறது. தெளிந்த வாவி நீர், பூந்தாது உதிர்ந்து விழுதலால் அலைவுறுகிறது. அலைவுறும் நீர் அலைகளுக்கு இடையே தெரியும் பிறைநிலவின் பிரதிபிம்பம் ஓடமொன்று, திரைகளிற் றத்தி ஓடுவதுபோல் தெரிகிறது கவிஞருக்கு,

"தோட விழ்ந்துபூந் தாதுகக் குடத்தினச் சுரும்பு
பாட வாவியுள் இளநிலாத் தோற்றிய பான்மை
சாடும் வார்புனல் அலைதரத் திரைகளிற் றத்தி
ஓடமோடுவ தொத்திருந் தனவென ஒளிரும்". [2]

வண்டுகளும் சுரும்புகளும் பாடும் பாடலோசை முகம் மதுவை வாழ்த்தும் வாழ்த்தோசை என்று கற்பனை செய்திருக்கிறார் உமறு.

---

1. சீறா. நாட்டுப்படலம் 48
2. சீறா. நாட்டுப்படலம் 4

''மதுமலர்த் தேனையுண் டிருந்த வண்டினம்
புதுமணச் சுரும்பொடு இசைத்த பொங்கிசை
சதுமறை முகம்மது தழைத்து வாழ்கவென்று
அதிவிதப் புகழெடுத் தறைதல் அன்னதே''.[1]

இன்னும் ஒரு பாடலில் தேனுண்ட வண்டுகள் முகம்மது வின் புகழைப் பாட, களிமயில்கள் நடனமாடுவதாகக் கற்பனை செய்திருக்கிறார் உமறு,

''வரிபசுந் தோடு விண்டு மென்முகை அவிழ்க்கும் பூவி
னரியளி குடைந்து தேனுண்டு அகமுதின் புகழைப் பாட
மரகதக் கதிர்விட் டோங்கு மணிச்சிறை விரித்து நீண்ட
கரைகளிற் றருவி னிழற் களிமயில் ஆடு மன்றே'' [2]

## காவியத் தலைவனுக்கு ஏவல் செய்யும் இயற்கை

முகம்மது நபி, குழந்தையாய் இருக்கும்போது, அவருக்கும் பாலூட்டும் பேற்றினைத் தரும்படி விலங்குகள் அனைத்தும் வாய்திறந்து கேட்பதாகப் பாடியிருக்கிறார் உமறு.

''நான்மறை நபியைஎம் இடத்தில் நல்கினால்
பால்முலை கொடுத்தியாம் பரிப்பம் தம்மென
மான்மரை விலங்கினம் அனைத்தும் வாய்திறந்து
ஈனமில் லவன்தனை இரந்து கேட்டவே'' [3]

விலங்குகளைப் போலவே பறவையினங்களும் பாலனைத் தம்மிடத்தில் தரும்படி வேண்டுகின்றன.

''இரைத்தெழும் புள்ளெலாம் ஏகன் தன்னிடத்து
உரைத்திடும் எங்கள்பால் உதவின் அந்நபி

1. சீறா. புனல் விளையாட்டுப் படலம் 19
2. சீறா. இசுறா காண் படலம் 17
3. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 3

வருத்தமொன் றின்மையா மதுரத் தேன்கனி
யிருத்தியாம் வளர்ப்பதற் கையமில் லையே'' [1]

முகம்மது செல்லும் பாதையில், செறிந்துள்ள செடி கொடிகளும், கல்லும் மண்ணும்கூட அவருக்குச் சலாமிட்டுத் தம் வணக்கத்தைத் தெரிவிக்கின்றன.

''மல்லுயர் திண்தோள் ஆடவர் பலரும்
வனமுலை மடக் கொடி யவரும்
செல்லுநன் னெறியால் வயின்வயின் செறிந்த
செடிகளும் மரந்தலை எவையும்
கல்லுங்கற் குவையும் யாவரும் கேட்பக்
கடிதினிற் தெளியவாய் விண்டு
செல்லுயர் கவிகை முகம்மது நபிகருத்
தெரிதரச் சலாமுரைத் தனவே'' [2]

காவியத் தலைவன், சாதாரண மானிடனாக இருந்தால், இவ்வாறு இயற்கை அவர்களுக்கு ஏவல் செய்வதாக எழுதுவது மரபில்லை. இறைவனே—இறைவனின் தூதுவனே காவியத் தலைவன் ஆகும் போது, அவனுக்கு இயற்கை ஏவல் செய்வதாக எழுதுவது ஒரு மரபு. கம்ப இராமாயணத்தில் காவியத் தலைவன் இராமன்; அவன் திருமாலின் அவதாரம்; அவன் தாதை ஏவலை தலைமேற் கொண்டு, நாடு துறந்து கானகம் செல்லும் போது, மரம் செடி கொடிகள் எல்லாம் ''இராமா இராமா'' என்று அரற்றுவதாகப் பாடுகிறார் கம்பர்; இராமர் போந்த பாதையும் கூட துயர் தாங்காமல் ''இராமா இராமா'' என்று அரற்றுவதாகக் கம்பர் பாடுகிறார்.

''கிள்ளையொரு பூவை அழுத கிளர்மாடத்
துள்ளுறையும் பூசை அழுத வுருவறியாப்

1. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 4
2. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 66

பிள்ளை யழுத பெரியோரை யென் சொல்ல
வள்ளல் வனம் புகுவான் என்றுரைத்த
மாற்றத்தால்''. [1]

''ஆவும் அழுத அதன் கன்றலர்ந்த கன்றவர்ந்த
பூவும் அழுதபுனதற் புள்ளழுத கள்ளொழுகும்
காவும் அழுத களிறழுத காலவயப்போர்
மாவும் அழுதன அம்மன்னவனை மானவே'', [2]

இம்மரபினை அடியொற்றியே உமறுவும் தம் காவியத்தில் இயற்கை முகம்மதுவிற்கு ஏவல் செய்வதாகப் பாடியிருக்கிறார். அவர் அழைத்த உடனே நிலவும் தோன்றுகிறது; நிலவுடன் தோன்றுவதற்கு முன், கதிரவன் மறைதல் இயற்கை நியதி. இதோ கதிரவன் மறைவை வருணிக்கும் கவியின் பாடல்:

''எறிந்த வெண்டிரைக் கடல்முகட் டெழுந்து
விண்ணேகிச்
செறிந்த பார்மனுக் கடலினைக் கண்களாற்
தெரிசித்
துறைந்த திண்கதிராயிரம் கரங்களு மொடுங்கிக்
குறைந்த கார்திகொண் டிரவிமேற் கடலிடைக்
குதித்தான்''. [3]

இவ்வாறு மறையும் இரவி, முகம்மது ''நிலவுடன் நீயும் இரு'' என்று அண்ணல் முகம்மது கட்டளையிடுவாரானால் மறுக்க முடியுமா? நிலவும் இரவியும் ஒன்றாய் விளங்குவது இயற்கைக்கு மாறானதல்லவா! ஆகவே அத்தகு விந்தைக் கட்டளை, மனிதப் புனிதர் முகம்மதுவிடம் இருந்து எழு முன்னே மறைந்து விடுதல் நன்று என்று பரபரப்புடன் மறந்துவிடுகிறதாம் இரவி.

1. கம்ப. அயோத்தி நகர் தங்குபடலம் 100
2. கம்ப. அயோத்தி நகர் தங்குபடலம் 102
3. சீறா. மதியழைப்பித்த படலம் 43

"மதியி னைப்பகிர் தரநபி மலைமிசை வானோர்
துதிசெ யத்தனி நின்லனர் கதிரையும் தொடர்ந்து
பதியி னிற்றரு சென் றிடிற் பகர்வதென் னெனத்தன்
இதயம் அச்சம்முற் றடைந்தபோல் அடைந்தான்
இரவி." 1

இவ்வாறு இரவி முதலாக இயற்கைச் சக்திகள் அனைத்தும் புனிதர் முகம்மதுவிற்கு ஏவல் செய்வனவாக இருத்தலை இந்நூலில் காணலாம்.

## சில இயற்கை உவமைகள்

புனிதர் முகம்மதுவின் முகத்திற்கு முழுநிலவைச் சூரியனை, நட்சத்திரக் கூட்டங்களை உவமை சொல்ல விழை யும் உமறு மாமனிதர் முகம்மதுவின் முகப் பொலிவிற்கு அவையெல்லாம் ஒவ்வா என்று கூறுகிறார்.

"வெங்கதிர் பரப்பி உலகெலாம் வினக்கித்
திரிதின கரனும்வெண் ணமுதம்
தங்கிய கிரணச் சசியும் அந் தரத்திற்
தவழ்தரு உடுக்குல மனைத்தும்
பொங்கொளி எவையும் சுவனநா டனைத்தும்
பூதலம் விசும்புமற் றனவும்
இங்கெழில் முகம்ம தொளிவினில் என்றால்
இவர்க்கெவை உவமைசொல் லுவதே" 2

இவ்வாறே காவியத் தலைவி கதீஜா பிராட்டியாரை உவமிக்கும் போதும்,

"தென்கடல் அமிர்தும் திக்கிற் திகழ்வரை
அமிர்தும் சூழ்ந்த
மீன்கட நடுவிற் தோன்றும் வெண்மதி அமிர்தும்
துய்ய
கூன்கட வளையார் வெண்பாற் குரைகடல்
அமிர்தும் சோதி
வான்கடல் அமிர்தும் ஒன்றாய் வடிவெத்
தனைய பாடுவை."3

---

1. சீறா. மதியழைப்பித்த படலம் 145
2. சீறா. நபியவதாரப் படலம் 93
3. சீறா. பாதை போந்த படலம் 11

என்று அமிர்தங்கள் திரண்ட அமிர்தவல்லியாகக் கதீஜா வைக் காட்டுகிறார்.

அவ்வளவில் அமையாது கனியோடும் கதீஜாவை உவமிக்கிறார். நல்ல குலமெனும் விருக்கத்தில், உறவெனும் கிளையில் நலனுறு செல்வ மென்னும் நறுந்தழையில், பவளச் செவ்வாயாம் செம்பொற் பூவில் கலனனி நறவஞ் சிந்தும், கனியாய்த் தோன்றிய சன்னியே கதீஜா.

"குலமெனும் விருக்கம் தோன்றிக் குழுஉக்கிளைப் பணர்விட் டோங்கி
நலனுறு செல்வ மென்னும் நறுந்தழை யீன்று வண்ணச்
சிலைநுதற் பவளச் செவ்வாய் யனையெனும் செம்பொற் பூவிற்
கலனனி நறவஞ் சிந்தும் கனியினும் கனிந்த பாவை"[1]

வறுமை வெயிலால் வாடிய மானிடப் பயிர் செழிக்க, பொருளெனும் மழை பெய்தது; அம்மழையால் மறை யாகிய மலர் பூத்தது. அம்மலர் அறிவினும் கனியாய்க் காய்த்தது; அக் கனியை உண்ட செழுங் கொழுந்தனைய பாவையே கதிஜா என்று இன்னுமொரு பாடலில் உவமிக் கிறார் உமறு.

"வறுகலி வெயிலால் வாடு மானுடப் பயிர்கட் கெல்லாம்
பொருளெனு மாரி சிந்திப் பூவிடத் தினிது நோக்கி
அருமறை மலருட் காய்த்த அறிவெனும் கனியை உண்ட
திருநமர் குலச்சம் சீவிச் செழுங்கொழுந் தனைய பூவை".[2]

## இயற்கையின் வறட்சி

இறைவனே இயற்கையாய் இருந்து. இருநிலத்தில் ஆட்சி செய்து வந்திருக்கிறான்; இயற்கை இன்றேல் இரு

1. சீறா. பாதை போந்த படலம் 12
2. சீறா. பாதை போந்த படலம் 17

நிலம் இல்லை. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானிலங்களே இயற்கை நிலங்கள். இயற்கை வறண்டால் குறிஞ்சியும், முல்லையும், மருதமும், நெய்தலும் உருமாறி ஏற்படும் வற்றிய நிலமே பாலை. பாலையில் உயிரினங்கள் மகிழ்ந்து வாழ முடியாது; நீரும், உணவும் கிடைக்காமல் உயிரினங்கள் துடிதுதுச் சாகும். இயற்கையின் வறட்சி, பெரும்பாலும் மழையின்மையாலேயே உண்டாகும். விசும்பின் மழைத்துளி விழாவிடில், மண்ணில் புல் நுனியையும் காண்பது அரிது மழை பெய்யாமல் மாநிலம் பஞ்சத்தால் துடிக்கும் இயற்கையின் வறட்சிக் காட்சிகளையும் உமறு இந்நூலில் வடித்துக் காட்டியுள்ளார்.

''கருங்கடல் நீரையுண் டெழுந்து கார்க்குலம்
பெருந்தரை எங்கணும் பெய்தல் இல்லையால்
இருந்தமைங் கூழெலாம் கருகி எங்கணும்
பரந்தது சிறுவிலைப் பஞ்ச மானதே''. 1

''காயிலை கிழங்கெலாம் கருவ றுத்துக்கான்
மேய்விலங் கினம்பல கொன்று மென்றுமே.
தீயவப் பசிப்பிணி தீண்டவாற் சன
மாய்வுறு சடலம்பல மலிந்த காலமே'' 2

என்ற இரு பாடல்களிலும், இயற்கையின் வறட்சியை ஆசிரியர் வருணித்துள்ளார்.

## இயற்கையின் வளமை

வறட்சி ஒருபுறமும், வளம் மறுபுறமும் ஆட்சி செலுத்துவதைத்தானே இவ்வையத்தில் கண்டு வருகிறோம். காவிய ஆசிரியனும், இவ்விருவேறு முரண் சித்திரங்களைத் தம் காவியத்தில் வடித்துக் காட்டுகிறான். உமறுவும் இயற்கையின் வளமைக் காட்சியாய்த் தேனாறு பெருக்கெடுத்தோடுவதைக் காட்டுகிறார். கழனிகளின் வரப்புக்களை, எருமைகள் சொரிகின்ற பால் வெள்ளமும், வாழைக் கனி உடுத்த

1. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 8
2. சீறா. அலிமா முலையூட்டும் படலம் 13

உயிறுந் தேன் வெள்ளமும், பலாவின் பசுங்கனிச் சுளை ஊற்றிலிருந்து ஓடிவரும் தேன் வெள்ளமும் சேர்ந் துடைப்பதாகப் பாடுகிறார் உமறு.

"படர்மருப் பெருமைக் குடம்புரை செருத்தற்
பருமுலைக் கண்டிறந் தொழுகி
நடைவழி சொரியும் அமுதமும் வாழை
நறுங்கனி உருத்தசெந் தேனும்
உடைபடு பனசப் பசுங்கனிச் சுளையில்
ஊற்றிருந் தோடிய தேனும்
கடிமலர் போர்த்த வரம்பினைத் தகர்க்கும்
கழனியிற் பரந்துபாய்ந் துடைக்கும்". [1]

இன்னும் உமறு,

"ஏல வார்குழற் கிடுபுகை மஞ்சினோ டிகலும்
சோலை வாய்தொறும் முக்கனித் தேன்மழை
சொரியும்
மாலை வாய்தொறும் சுரும்புடைத் தாறெடுத்
தோடும்
நீல வாய்மலர் வாவிகள் பெருங்கடல்
நிகர்க்கும்". [2]

என்றும்,

"அருமறை நெறியும் வணக்கமும் கொடையும்
அன்புமா தரவுநல் லறிவும்
தருமமும் பொறையும் இரக்கமும் குணமும்
தயவும்சீ ரொழுக்கமும் உடையோர்
பெருகிய செல்வக் குடியொடு கிளையும்
பெருந்தினி திருந்துவாழ் வனபோல்
மருமர்ப் பழனக் காடெலாம் நெருங்கி
வளர்ந்தது நெட்டிலை நாற்றே" [3]

1. சீறா. நாட்டுப் படலம் 2
2. சீறா. நாட்டுப் படலம் 54
3. சீறா. நாட்டுப் படலம் 28

என்றும், நீர்நிலை சிறப்பு, நாற்று வளர்ப்புக் காட்சிகளைக் கவினுற எடுத்துக் காட்டியுள்ளார். காய்ந்த கதிர்மணி களை அறுத்துப் போரடித்து உழவர் ஆரவாரிக்கும் வயல் வெளிக் காட்சிகளையும் நம்மால் கண்டு மகிழ முடிகிறது இந்நூலில்.

## முடிவுரை

மலை நிலங்களுக்குச் செல்லாமலே மலைவளத்தைக் கண்டோம்; வயல் வெளிகளுக்குச் செல்லாமலே, பயிர்ப் பரப்பைப் பார்த்தோம்; ஆற்றோரங்களுக்குச் செல்லாமலே அவற்றின் அழகுணர்ச்சியில் திளைத்தோம்; மயிலினங் களின் ஆடலுடன் குயிலினங்களின் கூவலையும் சுவைத் தோம்; இயற்கையாய் இவ்வுலகில் ஆட்சி செய்யும் இறை வனின் திருக்கோலத்தைக் கண்டு பரவசமுறுவோர் நிலையை இன்று நாம் அடைந்தோம்; உமறுவின் இயற்கை வருணனை சிறப்பால், சீறாப்புராணம், சீரிய புராணமாய்த் திகழ் கிறது; கற்பாரின் கண்களிலே கவின்மிகு இயற்கைக் காட்சி களைக் காட்டி காலமெல்லாம், அவர் நெஞ்சில் மாறாத நினைவுகளாய் நிற்கிறது. ✩

# சீறாவில் வரலாற்றுக் குறிப்புகள்

டாக்டர், எம். எம். உவைஸ்,
எம். ஏ; பி எச். டி.

இலக்கியம் வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது. வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்களை சுவையுடன் வருணிக்கிறது. இத்தகைய வருணனைகள் கற்பனை நயம் மிக்கனவாய் அமைகின்றன. கற்பனை உலகில் சஞ்சரிக்கின்றவன் கவிஞன் என்று காரணங்காட்டி இலக்கியத்தைப் புறக்கணிப்பவர்கள் கூட இல்லாமல் இல்லை. மெய்ம்மையான நிகழ்ச்சிகளை மூடி மறைக்கக் கூடியனவாக கற்பனை நிறைந்த இலக்கியம் அமைகின்றது என்பது உண்மையே எனினும் வருணனைகளை அகற்றிவிட்டு இலக்கியத்தை ஆராய்ந்தால் அங்கே வரலாற்று நிகழ்ச்சிகள் தத்ரூபமாக விவரிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்,

ஈடிணையற்ற இலக்கியப் படைப்புக்களில் கற்பனை நிகழ்ச்சிகளும் கட்டுக் கதைகளும் கற்பனை நயத்துடன் வருணிக்கப்படுகின்றன. கற்பனையில் உருவான தனிப்பெருந் தலைவர்கள் அத்தகைய இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளனர். வரலாற்றில் காண முடியாத வீரர்கள் வருணிக்கப் படுகின்றனர், வரலாற்றில் இடம் பெறாத சம்பவங்கள் கவிதைக்கு அடிப்படையாக அமைகின்றமையைக் காணலாம். இவ்வாறு கருதப்படுவதற்குரிய காரணம் அத்தகையவை வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் நிகழ்ந்திருப்பதேயாகும். வரலாற்றுக்கு உட்பட்ட, வரலாற்றுடன் நெருங்கிய தொடர்புடைய சம்பவங்களையோ பெரியோர்களையோ விவரிக்கும் இலக்கியங்களில் கூட கற்பனை நயம் மிளிரக்காணலாம். வரலாற்றில் இடம் பெற்று மெய்ம்மையான சம்பவங்களையும் உண்மையிலேயே வாழ்ந்த பெரியோர்களையும் வருணிக்கும் கற்பனை நயம் மிக்க இலக்கியக் கருவூலங்கள்

தமிழ் இலக்கியப் பரப்பிலே சுடர்விட்டுப் பிரகாசிப்பதைக் காணலாம். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய அத்தகைய இலக்கியப் பொக்கிஷங்களில் ஒன்று சீறாப்புராணம் என்னும் காப்பியம்.

உண்மையிலே வாழ்ந்த, வரலாற்றில் விவரிக்கப்படும் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது சீறாப்புராணம். உலக மக்களுக்கு முன்மாதிரியாக வாழ்ந்த தனிப்பெரும் பண்புகளைக் கொண்டு ஒழுகிய நபிகள் பெருமானாரின் வாழ்க்கைக் குறிப்புகள் சீறாப்புராணத்தில் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். அண்ணல் நபி (சல்) அவர்களின் வாழ்க்கை பற்றிய குறிப்புகள் உண்மையிலேயே வரலாற்றுக் குறிப்புகள் எனக் கூறின் அது மிகையாகாது. இனி, சீறாப்புராணத்தில் இடம் பெற்றுள்ள வரலாற்றுக் குறிப்புகளைச் சுருக்கமாக ஆராய்வோம்.

உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் பிறந்த ஆண்டைக் குறிப்பிடுகிறார். அண்ணல் நபி (சல்) அவர்கள் கி.பி. 570இல் பிறந்தார்கள் என்பது பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மையாகும். ஆனால் சீறாப்புராணத்தில் இந்தக் கிறித்துவ ஆண்டு குறிப்பிடப்படவில்லை. உமறுப்புலவர் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பிறந்த ஆண்டை வேறுவிதமாகக் குறிப்பிடுகின்றார். இவ்வரலாற்றுக் குறிப்பை அமைத்துப் பாடியுள்ள செய்யுளை முதலில் எடுத்துக்கொள்வோம்.

"வீசு தெண்டிரைக் கடன்மலை யடங்கவெண் குடைக்கீ
ழாசி லாதசெங் காசனத் திருந்தசிக் கந்தர்
காசி னிக்கர சியற்றுதல் கருணையின் கால
மாசி லாக்கணக் கெட்நூற் றெண்பத்தோர் வருடம்" 1

1. சீறா. நபியவதாரப் படலம் 14

இங்கே சிக்கந்தர் என்னும் துல்கருனைன் ஆட்சி குறிப்பிடப் படுகிறது. சிக்கந்தர் என்னும் துல்கருனைன் எனப்பட்டது மகா அலெக்சாந்தர் என்பவரே என்பது பெரும்பாலானோ ரின் கருத்தாகும். மகா அலெச்சாந்தர் கி.மு. 356-லிருந்து 323 வரை வாழ்ந்தவர். பல நாடுகளை வெற்றிக்கொண்ட வர் ஐரோப்பா, ஆசியா, ஆஃப்ரிக்கா ஆகிய மூன்று கண் டங்களினதும் வரலாற்றையே மாற்றியமைத்தவர் எனப் பாராட்டப்படுபவர். அவர் 33 ஆண்டுகளே உலகில் வாழ்ந்தார் எனினும் அவருடைய செல்வாக்குப் பல நூற்றாண்டுகளுக்கு உலகில் நிலவியது 'தமது வெள்ளிய குடையின் கீழ் தெள்ளிய அலைகளை எறியா நிற்கும் கடல் களும் மலைகளும் அடங்குப்படி, குற்ற மேதும் இல்லாத சிங்காசனத்தில் வீற்றிருந்த சிக்கந்தர் என்னும் இயர்பெய ரையும் துல்கருனைன் என்னும் காரணப் பெயரையும் கொண்ட பேரரசர் அரசு செய்யும் காலத்தினின்று மறு வற்ற கணக்கிலே எண்ணூற் றெண்பத்தோர் வருடத்தில்' அண்ணல் நபி (சல்) அவர்கள் பிறந்தார்கள் எனக் குறிப் பிடுகிறார் உமறுப்புலவர். மகா அலெக்சாந்தரின் ஆட்சி யிலிருந்து 881 வருடங்களுக்குப் பின்னரே நபிகள் பெரு மானார் பிறந்தார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

கிறித்தவ ஆண்டோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது 881-லிருந்து நபிகள் பெருமானார் பிறந்த கி.பி. 570-ஐக் கழித்தால் 311 என வருகிறது. எனவே இது கி.மு. 311 ஆகும். கிறித்தவக் கணிப்பின்படி ஓர் ஆண்டில் உள்ள நாட்களுக்கும் மகா அலெக்சாந்தரின் ஆட்சியினை அடிப் படையாக வைத்துக் கணிக்கப்படும் ஆண்டில் உள்ள நாட் களுக்கும் வித்தியாசம் இருத்தல் வேண்டும். இவ்வாறு முன்னைய ஆண்டை விட பின்னைய ஆண்டில் ஏறக்குறைய 15 நாட்கள் குறைவாகவே இருத்தல் வேண்டும். இவ்வாறு பார்க்கும் பொழுது மகா அலெக்சாந்தரின் ஆட்சி முடிவுற்ற கி.மு. 323-லிருந்தே இக்கால எல்லை கணிக்கப்பட்டிருத்தல் வேண்டும். செய்த் அமீர் அலி அவர்கள் தமது Spirit of

islam என்னும் நூலின் (8 ஆம் பக்கத்தில் உள்ள) அடிக் குறிப்பொன்றில் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் பிறந்த ஆண்டு 'கிஸ்றா அனுசர்வான் ஆட்சியின் 40 ஆம் ஆண்டின் இறுதிப் பகுதி' என்றும், 'செலுக்கஸ் ஆட்சியின் 880 ஆண்டின் இறுதிப் பகுதி' என்றும் குறிப்பட்டுள் ளமை ஈண்டு நோக்கற்பாலது.

இந்த ஆண்டு 'ஆமுல் பீல்' என்றும் வழங்கப்படுகிறது இதன் கருத்து யானை வருடம் என்பதாகும். அப்றஹா என்ற யெமன் நாட்டு அபிஸீனிய ஆளுநர் கஃபத்துல்லாவை அழிக்கும் நோக்கத்துடன் யானைகளுடன் வந்து அழிந்து போன சம்பவத்தைக் குறிக்கும் முகமாகவும் முதன் முதலில் மக்காவில் யானைகள் காணப்பட்டமையாலும் அந்த ஆண்டு ,யானை வருடம்' என வழங்கலாயிற்று. அந்த யானை வரு டத்திலேதான் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் பிறந் தார்கள் என்று சீறாப்புராணத்தில் இவ்வாறு குறிப்பிடப்பட் டுள்ளது.

''கரைத்த மின்னெளித் தெழுத்தெனச் சிறக்குமக்
காவி

விரைத்த கார்க்குலத் திரண்டெனக் களிறுக
ணெருங்கி

யிரைத்த டர்ந்துமும் மதங்களை வாரிதின் நிறைத்து
வரைக்கு லங்கள்போல் வந்ததற் கொருமுதல்
வருடம்,,[1]

நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் கி.பி. 507 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 20 ஆம் தேதி அன்று பிறந்தார்கள் என்று பெரும்பான்மையான வரலாற்று ஆசிரியர் ஒப்புவர். அண்ணல் நபி (சல்) அவர்களின் பிறப்பு அப்றஹா மக் காவை ஆக்கிரமித்த அதே நாளிலே நிகழ்ந்தது என்று சிலர் கூறுவர். இது நிகழ்ந்தது அப்ரஹா மக்காவை ஆக்கிரமித்து பன்னிரண்டு நாட்களிலென்றும் நாற்பது நாட்களிலென்றும்

1. சீறா. நபியவதாரப் படலம் 15

ஐம்பது நாட்களிலென்றும் பலரும் பலவாறாகக் கூறுவர். எனினும் உமறுப்புலவர் அண்ணல் நபி (சல்) அவர்களின் பிறப்பு 'யானைக் கலகம் தீர்ந்த பின்னர் ஐம்பதாவது நாளில் அழகிய சந்திர மாதமாகிய 'றபீ உல் அவ்வல்' பிறை 12 திங்களிரவில் நிகழ்ந்தது என்று இவ்வாறு வருணிக்கிறார்.

''செம்மையங் கோட்டுக் கடகரிக் கலகந் தீர்ந்தபி
னைம்பதா நாளி
லம்மதி மாசத் தொகைதனில் றபீயுலவ்வலிற் பனி
ரண்டாந் தேதி
யெம்மனைக் கும்பே றெனவரும் பொருளா யிசைத்
திடுந் திங்களிராவி
மும்மையென் றுரைக்கும் புவனமும் புரக்க முகம்மது
நபி பிறந்தனரே.''1

இப்பொழுது நவீன கட்டடம் ஒன்று நூல் நிலையமாகக் காட்சி அளிக்கும் 'மௌலீதுன் நபி' என்னும் இடத்திலே தான் நபிகள் பெருமானார் பிறந்தார்கள் என்று கூறப்படு படுகிறது. 'ஸக்கத்துல் மௌலீது' என அப்பொழுது அந்த இடம் அழைக்கப்பட்டது. இந்த இடத்தில் இருந்த இல்லம் அபீதாலிப் அவர்களுக்குச் சொந்தமாயிருந்தது என்றும் நபிகள் பெருமானார் ஹிஜ்றத்துச் சென்ற பின்னர் அபீதா லிப் அவர்களின் புதல்வர்களுள் ஒருவரான அகீல் அவர்கள் அதன் உரிமையாளராக இருந்தார் என்றும் கூறப்படுகிறது. சீறாப்புராணத்திலும் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் அபீதாலிப் அவர்களின் இல்லத்திலே பிறந்தார்கள் என்றும் அவரது இல்லம் ஜெமுறத்துலுஸ்தா என்னும் இடத்தின் நடுவே அமைந்திருந்தது என்றும், அந்த இடம் மக்கமாநகரில் உள்ள புனித கஃபத்துல்லாஹ்வின் வடகிழக்குத் திசையில் இருந்தது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பூதலத் தரசு பதியென வுதித்த புகழ்பெரு மக்கமா
நகரிற்
சீதவொண் கதிர்சேர் கஃபத் துல்லாவின்
றிசையினில் வடகிழக் காக

1. சீறா நபியவதாரப் படலம் 89

வேதமொன் றணுகாச் செழுமறத் துலுஸ்நா
வெனுமொரு தலத்தினி லெழிலே
மாதவ ரபித்தா லிபுதிரு மனையின் முகம்மது நபி
பிறந்தனரே.''[1]

நபிகள் பெருமானர் (சல்) அவர்கள் தங்களது இளம் பிராயத்திலே சிரியாவிலிருந்து திரும்பி வரும் பொழுது ஓர் சொல்லனின் உலைக் கூடத்தில் தங்கினார்கள். முகம்மது நபி (சல்) அவர்களிடம் அவர்கள் தம் தலைமுறைப் பெயர், ஊர்ப் பெயர் முதலியவற்றை அக்கொல்லன் கேட்டான். அவர்களும் உரிய பதிலை அளித்தார்கள். அந்தப் பதிலில் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் ஊர்ப்பெயரும் மூதாதையரின் பெயர்களும் இடம் பெற்றிருந்தன. கிலாப் என்பவர் மூதாதையர் என்றும் அவருடைய புதல்வன் குசை என்பவர் என்றும் அவருடைய வழித்தோன்றல் அப்துல் முனாப் என்றும் அவருடைய புதல்வன் ஹாசீம் என்றும் அவருடைய புதல்வன் அப்துல்லா முத்தலிபு என்றும் அவருடைய புதல்வன் அப்துல்லா என்றும் அப்துல்லாவின் புதல்வர் தாம் என்றும் தங்களது பெயர் முகம்மது என்றும், நபிகள் நாயகம் (சல்) அவர்கள் கூறினார்கள். இக்கூற்றினையே உமறுப்புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

''மக்க மூர்கிலா பருள்குசை யப்துல் முனாபிக்
ககக மானஹா சீமுத லப்துல் முத்தலிபு
தக்க மன்னவர் மைந்தரி லப்துல்லா துவத்தான்
மிக்க னென்பெயர் முகம்மது வெனவிளம்
பினரே.''[2]

பின்னர் ஊசா என்னும் முதிய அறிஞருக்குத் தங்களைப் பற்றிக்கூறுகையில் தங்களின் கிளை அதுனான் கிளை என்றும் தங்களின் குலம் ஹாசீம் குலம் என்றும் தங்கள் பிதிராநிலை

1. சீறா. நபியவதாரப் படலம் 90
2. சீறா. ஊசாவைக் கண்ட படலம் 13

—தந்தையாகிய நிலையில் இருந்தவர் அபுத்தாலிப் அவர் களின் இளைய சகோதரன் அப்துல்லா என்றும் தாங்கள் அவர்தம் புதல்வர் என்றும் கூறினார்கள். இக்கருத்துக்களே சீறாப்புரணத்தில் இவ்வாறு அமைந்துள்ளது,

"அதுணாங்கிளை ஹாசீம்குல மமரும்பதி மக்கம்
பிதிராநிலை யபித்தாலிபு பின்னோரபு துல்லா
சுதனாமுகம் மதுநாமெனச் சொன்னார்."[1]

அண்ணல் நபி (சல்) அவர்கள் கதீஜா (றலி) அவர் களைத் திருபணம் புரிந்த நிகழ்ச்சி வருணிக்கப்படுகின்றது. இங்கே அண்ணல் நபி (சல்) அவர்கள் திருமணம் புரியும் போது அவர்களுடைய வயது குறிப்பிடப்படுகிறது. அப் பொழுது அவர்களுக்கு இருபத்தைந்து ஆண்டுகளும் இரண்டு மாதமும் இரண்டு நாட்களும் ஆகியிருந்தன என்று குறிப்பிடப்படுகின்றது. அச்செய்யுள் வருமாறு:

"திண்டிறற் புலியின் முகம்மது தமக்குத் திருவய
திருபத்தைந் தினின்மேற்
கண்டதிங் களுமோ ரிரண்டுநா ளிரண்டிற் கனக
நாட்டவர்கண் களிப்ப
வெண்டிசை முழுதுந் திருப்பெயர் விளங்க விநறில
மணிக்கதீ ஜாவை
வண்டுறை மரவச் செழுந்தொடை புனைந்து
வரிசைமா மணம் பொருந்தினரே."[2]

அண்ணல் நபி (சல்) அவர்களுக்கும் கதீஜா நாயகி அவர்களுக்கும் பிறந்த பிள்ளைகள் கஃபத்துல்லா வரலாற் றுப் படலத்தில் உள்ள முதல் மூன்று செய்யுட்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளனர். ஸயினப் அம்மையாரைப் பெற் றெடுத்தமை 'பெருகுமிள மயில் கதீஜா ஸயினபெனும் பசுங்கிளியைப் பெற்றா ரன்றே' என முதலாவது செய்யுளி லும் அடுத்து ருக்கையா அம்மையாரையும் உம்முகுல்தும்

1. சீறா. ஊசாவைக் கண்ட படலம் 19
2. சீறா. மணம்புரி படலம் 117

அம்மாரையும் பெற்றெடுத்த தன்மை பற்றி, 'குயின் மொழி ருச்கையாவை யீன்றும் குல்துமை யீன்று' என்று இரண்டாம் செய்யுளின் முதற் பகுதியிலும் அவர்களின் ஆண்பிள்ளைகளான காசீம், தையிப், தாகிர் என்பவர் களைப் பெற்றெடுத்தமை பற்றி,

''செயிரறநா லாவதிலாண் பிள்ளைகா சீமெனவோர் செம்மலீன்று
நயமுறப்பின் தையிபெனுஞ் சேயீன்று தாகி றைறவு நல்கினாரே''

என்று இரண்டாம் செய்யுளின் பிற்பகுதியிலும் விவரித்த உமறுப்புலவர் பாத்திமா நாயகி பிறக்கும் பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வயது முப்பதைந்து என்றும் இப்பூவுலகத்திலுள்ள பெண்களுக்கும் சுவர்க்க லோகத்தில் உள்ள பெண்களுக்கும் எந்நாளும் அரசென்று விளங்க பாத்திமா நாயகி (றலி) அவர்கள் பிறந்தார்கள் என்றும் கஃபத்துல்லா வரலாற்றுப் படலத்தில் உள்ள மூன்றாம் செய்யுளில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

''மன்றல் கமழ் முகம்மதர்க்கை யேழாண்டு
நிறைந்த பின் மறுவிலாத
மின்றவழ்வ தெனவொளிருங் கதீஜாநா
யகியுதரம் விளங்கச் சோதி
துன்றுமணி யெனப்பூவின் மடைந்தயர்க்குஞ்
சுவனபதித் தோகைமார்க்கு
மென்றுமர செனவிருப்பப் பாத்திமா
வெனுமயிலை யீன்றா ரன்றே.''

மக்கமா நகரில் அமைந்துள்ள புனித கஃபத்துல்லா அமைக்கப்பெற்ற வரலாறு கஃபத்துல்லா வரலாற்றுப் படலத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. இப் படலத்தில் உள்ள 6ஆம் 7ஆம் செய்யுளில் ஆதிபிதா ஆதம் (அலை) அவர்கள் கட்டியமையும் 8ஆம் செய்யுளில் நூகு நபி (அலை) அவர்களின் காலத்தில் ஏற்பட்ட பிரளயத் தால் கஃபா இடிந்ததையும் 9ஆம் செய்யுளில் நெடு நாட் களுக்குப் பின்னர் நூகு நபி (அலை) அவர்களின் பதினொரா

வது தலைமுறையில் வந்த இபுறாகீம் நபி (அலை) அவர்கள் புனரமைப்புச் செய்ததையும் விவரிக்கப்படுகிறது. 10 முதல் 16 வரையுள்ள செய்யுட்களில் காலத்துக்குக் காலம் கஃபத்துல்லாவுக்கு ஏற்பட்ட இடைஞ்சல்களும் திருத்தங்களும் வருணிக்கப்படுகின்றன. பின்னர் குறைஷிகள் ஒன்று கூடி புனித கஃபாவில் பொருத்தப்பட்டிருக்கும் ஹஜறுல் அஸ்வத் என்னும் கல்லை யார் அந்த இடத்தில் வைக்கும் பாக்கியத்தைப் பெறுபவர் என்பதில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அடுத்த இரண்டு செயயுட்களிலும் இந்நிகழ்ச்சி விவரிக்கப்படுகிறது. அங்கு கூடியிருந்தவர்கள் ஒரு முடிவுக்கு வந்தனர். பனீ ஹாசிம் என்னும் வமிசத்தைச் சேர்ந்தவர்களும் கஃபத்துல்லாவுக்கு முதன் முதலில் வருபவரே அந்தப் புனித கல்லை உரிய இடத்தில் வைப்பதற்கு அருகதை உள்ளவர் என்று அனைவரும் ஒப்பினர். இக்கருத்துக்களையே உமறுப் புலவர் இவ்வாறு வருணிக்கிறார் கஃபத்துல்லா வரலாற்றுப் படலத்தில் உள்ள 19 ஆம் செய்யுளில்,

"அன்ன காலையிற் செவ்விய நெறிபனீ ஹாசீ
மென்னும் வங்கிடத் தொருவரிப் பள்ளியி னிடத்து
முன்ன தாகவந் தவர்நிறு வுவரென முதலோன்
பன்னு மாமறை தெளிந்தவர் சிலர்பகர்ந் தனரே."[1]

அவ்வாறு முதன் முதலில் அங்கு வந்த முகம்மது நபி (சல்) அவர்கள் தங்களது திருமேனியிலிருந்த போர்வையை எடுத்து குறைஷி மக்களுள் நான்கு தலைவரைத் தெரிந்தெடுத்து போர்வையின் நான்கு புறங்களிலும் பிடிக்கச் செய்து அந்தப் போர்வையிலே ஹஜறுல் அஸ்வத் என்னும் கல்லை வைத்து தங்கள் கைகளாலே தூக்கி அதனை உரிய இடத்தில் வைத்தார்கள். இதனால் மூள இருந்த ஒரு பெரும் போரும் தவிர்க்கப்பட்டது. பெருமானார் (சல்) அவர்கள் நடந்து கொண்ட விதத்தினையே உமறுப்புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

1. சீறா, கஃபத்துல்லா வரலாற்றுப் படலம் 19

"வெற்றி மன்னவர் தலைவரி னால்வரி விளித்துப்
பொற்ற டந்துகின் முந்தியி னான்கிலும் பொருந்த
விற்று ராவகை யெடுமென விவரொடு மெடுப்பக்
குற்ற மூன்றிமுற் றலத்திடை யிருத்தினர்
குறித்தே."[1]

வரலாற்றுக் குறிப்புக்கள் நிறைந்த மற்றொரு படலம் நபிப்பட்டம் பெற்ற படலம். ஹிறா மலைக்குகையில் தியானத்தில் ஈடுபட்டிருந்த முகம்மது (சல்) அவர்களுக்கு அப்பொழுது முப்பத்தெட்டு வயதாக இருந்தது. இதனை 'ஆறாறிரண்டு' (2) என ஆசிரியர் இங்கு குறிப்பிடுகிறார். அச்சமயத்தில் அவர்கள் கண்களுக்கு 'வெள்ளிடையதனிற் சிறிதொளிதிரண்டு விழிக்கிடும் விழிக்கெதிர் தோன்றும்' என அங்கும் இங்குமாக ஒளி தோன்றியது எனக் குறிப்பிட்டுள்ளது. இவ்வாறு கூறிய உமறுப்புலவர் ஜிபுறீல் (அலை) அவர்கள் ஹிறா மலையை அடைந்த நிகழ்ச்சியை குறிப்பிட முற்படுகிறார் அப்பொழுது நபி பெருமானாருக்கு நாற்பது வயதாகும். அந்த ஆண்டு அல்லாஹ்வின் அருளால் ஆதி பிதா ஆதம் நபி (அலை) அவர்கள் உலகில் தோன்றிய ஆறாயிரத்து ஒரு நூற்றி இருபத்து மூன்றாவது ஆண்டாகும் என்றும் முகம்மது நபி (ஸல்) அவர்கள் உலகில் பிறந்து நாற்பது ஆண்டுகளாகும் என்று ஜிபுறீல் (அலை) அவர்கள் முதன் முதலில் வந்தது றபீஉல் அவ்வல் மாதம் எட்டாந்தேதி சனிக்கிழமை இரவு என்றும் உமறுப்புலவர் இவ்வாறு கூறுகிறார்:

"துய்யவ னருளா லாத மனுவாய்த் தோன்றிய
வவனியின் வருட
மையவி லாறா யிரத்தினி லொருநூற் றிருபத்து
மூன்றினி லழகா
வையக மதிக்கு முகம்மதின் வயது நாற்பதில்
றபீயுலவ் வலினி
லெய்திய வெட்டாந் தேதியிற் சனியி னிரவினிற்
கிறாமலையிடத்தில்".[2]

1. சீறா. கஃபத்துல்லா வரலாற்றுப் படலம் 23
2. சீறா. நபிப்பட்டம் பெற்ற படலம் 11

அடுத்த நாளிரவிலும் ஜிபுறீல் (அலை) அவர்கள் வந்தார்கள் என்பதை 'மற்றைநாட் பருதி ராவில் கிறாமலையிடத்தில்' (41) எனக் குறிப்பிடுகிறார். ஞாயிறு இரவையே 'பருதி ராவ்' என்கிறார். ஜிபுறீல் (அலை) அவர்கள் மீண்டும் அடுத்த நாள்—சங்கை பொருந்திய றபீ உல் அவ்வல் மாதம் பத்தம் நாள் திங்கட்கிழமை இரவில் ஹிறா மலைக்குகைக்கு வந்தார்கள் என்பது சீறாப்புராணத்தில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

''வரிசைநேர் றபீவு லவ்வல் மாதமீ ரைந்து நாணிற்
றெரிதர விளங்குந் திங்க ளிரவினிற் சிறப்பு மிக்கோ
னருளினில் ஜிபுற யீல்வந் தருவரை யிடத்தில் வைகுங்
குரிசிறன் கமலச் செங்கண் குளிர் தர வெதிர்ந்து நின்றார் ''1

திருக்குர்ஆன் அருளப்பட்டது லைலத்துவ் கத்ர் இரவிலாகும். இந்த இரவு றம்ளான் மாதம் 27 ஆம் நாள் இரவு என்பதே பொதுவான நம்பிக்கை, றம்ளான் மாதத்தின் பிந்திய பத்து நாட்களில் வரும் ஒற்றை நாட்களின் இரவு என்றும் கூறுவர். 'றஹ்மத்துல் லில் ஆலமீன்' என்னும் கிரந்தத்தில் முதன் முதலில் திருக்குர்ஆன் அருளப்பட்டது றபீ உல் அவ்வல் மாதம் பிறை ஒன்பது திங்கட்கிழமை எனக் கூறப்படுகின்றது. இது கி.பி. 610 பிப்ரவரி 12 ஆம் தேதி என்பர். திருக்குர்ஆன் முதன் முதல் அருளப்பட்டது றபீ உல் அவ்வல் மாதம் 12 ஆம் நாள் என்று கூறுவாரும் உளர். ஆனால் உமறுப்புலவர் தமது சீறாப் புராணத்தில் றபீ உல் அவ்வல் மாதம் 10 ஆம் நாள் என்று குறிப்பிடப்படுவது ஈண்டு நோக்கற்பாலது. 'ஓதுவீராக' என்று கோன் கூறியதும் தங்களுக்கு ஓதத் தெரியாது என்று பெருமானார் கூறியதும் இவ்வாறு உரையாடல் மூன்று முறை

1. சீறா. நபிப்பட்டம் பெற்ற படலம் 16

நடைபெற்றது என்பதை அடுத்தடுத்த பாடல்களில் குறிப்பிடும் உமறுப்புலவர் இறுதியாக ஜிபுறீல் (அலை) அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு 'இக்றவு' என்று ஆரம்பித்து 'மாலம் யஃலம்' வரை உள்ள ஆயத்துக்களை ஓதிக் காட்டினார்கள் என்பதை இவ்வாறு குறிப்பிடுகிறார்.

''மிக்குயர் மறையின் வள்ளல் விளம்பவிண் ணவர்கள் கோமா
னிக்குறவு வெனும்கூ றத்தி லிருந்துநா லாயத் தின்ப
மெய்க்குற மாலம் யஃல மெனுமட்டும் விளம்பு வீரென்
றொக்கலி லுயிரின் மிக்கா யுறுநபிக் குணர்த்தி னாரால்.''[1]

நபிப்பட்டம் பெற்ற படலத்தில் உள்ள இறுதிப் பாடல்களில் முகம்மது நபி (சல்) அவர்கள் தங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தைப் பற்றி வறக்கத் இப்னு நவ்பல் என்னும் மூதறிஞருக்கு எடுத்துக்கூறிய விவரங்களும் அவை உண்மை என்பதற்குரிய அடையாளங்கள், இவை என்று அம்முதியவர் கூறியவையும் இடம்பெற்றுள்ளன

நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அருளப்பெற்ற பின்னர் இஸ்லாம் இரகசியமாகப் போதிக்கப்பட்டது. பெண்களுள் முதன் முதலில் இஸ்லாத்தைத் தழுவிய பெருமை அவர்கள் தம் பாரியாராகிய கதீஜா (றலி) அவர்களையே சாரும். அவ்வம்மையார் இஸ்லாத்தைத் தழுவியமைபற்றி,

''முல்லையங் குழற்கதீ ஜாமின் னேமுத
லில்லறத் தொடுமிசு லாத்தி லாயினார்.'' [2]

இவ்வாறு குறிப்பிடுகிறார் கவிஞர் உமறு. வயது முதிர்ந்தவர்களுள் இஸ்லாத்தைத் தழுவியவர் அபூபக்கர் (றலி) அவர்

1. சீறா. நபிப்பட்டம் பெற்ற படலம் 27
2. சீறா. தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 5

சள் என்பதனை '...அடல பூபக்கர்...நல்லிய லொடுமிச லாத்தி னண்ணினார்' (15) என்றும் சிறுவர்களுள் இஸ் லாத்தை முதன் முதலில் தழுவியவர் அலி (றலி) அவர்கள் என்பதனை,

"சுந்தரப் புலியலி யென்னுந் தோன்றலு
வந்தனை செய்துதீன் வழியி லாயினார்."

என்றும் அடிமைகளுள் இஸ்லாத்தை முதலில் தழுவியவர் ஆரிதென்பவரின் புதல்வராகிய ஸைத் (றலி) என்பதனை,

"அடிமையில்.....................
மிடலவர் ஸைதெனும் வீர கேசரி
யிடரறுங் கதியிசு லாத்தி லாயினார்"

என்றும் விவரித்துள்ளார். இவர்களைத் தொடர்ந்து இஸ் லாத்தைத் தழுவியர்களுள் குறிப்பிடத்தக்கவர்களுள் அப் துல் றகுமான் (றலி அவர்களும் சுபைர் (றலி) அவர்களும் தல்ஹா (றலி) அவர்களும் சஃது (றலி) அவர்களும் உது மான் (றலி) அவர்களும் என்பதனை,

"கரும்பெனு நபிகலி மாவைக் காமுற
விரும்பிய பேர்களிற் றலைமை மிக்கவ
ரரும்புவிக் காசபு துற்றஃ மானுடன்
தரும்புகழ் சுபைறுதல் காவுஞ் சஃதுவும்" (23)

என்றும்,

"அருமறைப் பொருட்குரை யாணி யாகிய
வரிசைநன் னெறியுது மானு மாசிலாத்
திருநபி பெயர்க் கலி மாவைச் செப்பிய
பரிசனத் தொடுந்தனி பழகு நாளில்." (24)

என்றும் உமறுப்புலவர் விவரித்துள்ளார். இவ்வாறு இவர் அனைவரும் இஸ்லாமியத் திருத்தொண்டர் முன்னணியில் நின்றனர். ஜிபுறீல் (அலை) அவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு தொழுகை நடத்தப்படவேண்டிய முறையைச் செய்து காட்டிக் கொடுத்தார்கள். இஸ்லாத்தைத் தழுவிய அனைவரும் அதன்படி ஒழுகலானார்கள்.

நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு திருக்குர்ஆன் அருளப்பட்டு நபிப்பட்டம் வழங்கப்பட்டு நான்கு ஆண்டு கள் கடந்துவிட்டன. இன்னமும் இரகசியமாகவே இஸ்லா மியப் போதனைகள் நடத்தப்பட்டன. நான்காம் ஆண்டு அல்லாஹுத்த அலாவின் கட்டளையை எடுத்துக்கொண்டு அமரர் கோமான் ஜிபுரீல் (அலை) அவர்கள் நபிகள் பெருமா னார் (சல்) அவர்களிடம் வந்தார்கள். எல்லோருக்கும் இஸ் லாத்தைப் பகிரங்கமாக விளக்கும்படியும் தொழுகையைக் கடைப்பிடிக்கும்படி போதிக்கும்படியும் கூறினார்கள். இக் கருத்துக்களை,

> ''சீதவொண் கவிகை நீழ றிருந்திய குரிசி லாமோர்
> தூதென நபியின் பட்டந் துலங்கிய நான்கா மாண்டில்
> வேதநல் வணக்க மியார்க்கும் விரித்துற விளக்கு
> மென்ன
> வாதிதன் பருமான் மேற்கொண் டமரர்கோ
> னுரைத்துப் போனார்.''[1]

இச்செய்யுளில் 'பருமான்' என்னும் பாரசீகச் சொல் 'கட் டளை' என்னும் பொருளில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள தைக் காணலாம்.

இஸ்லாத்தைப் பகிரங்கமாகப் போதிக்கத் தலைப் பட்டார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள் இதனைக் குறைஷிக் காபிர்களால் சகித்துக் கொண்டிருக்க முடிய வில்லை. நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பாது காவலனாக இருந்த பெரியார் அபுதாலிப் அவர்களிடம் சென்றனர் அக்குறைஷியர். தமது தம்பி மகனை இஸ்லாத் தைப் போதிப்பதிலிருந்து தடுக்கும்படி அபுதாலிப் அவர்களை வலியுறுத்தினர். அபுதாலிபும் செய்வதின்னது என அறி யாமல் குறைஷிக் காபிர்களின் வன்செயல்களுக்கு அஞ்சி அண்ணல்நபி (சல்) அவர்களின் இஸ்லாமிய போதனையைக் கைவிட்டு விடுமாறு கேட்டுக் கொண்டார்கள். இதனைச்

1. சீறா. தீனிலை கண்ட படலம் 1

செவியுற்ற அண்ணல் நபி (சல்) அவர்கள் பெரியார் அபு தாலிப் அவர்களுக்குப் பதில் அளித்தார்கள். அவர்களுடைய பதிலை உமறுப்புலவர் இரண்டு செய்யுட்களில் அமைத்துப் பாடியுள்ளார். 'தங்களது வலதுகையில் சூரியனையும் இடது கையில் சந்திரனையும் வைத்தாலும் தங்களது இனத்தவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து தங்களை எதிர்த்துப் போரிட்டாலும் தங்களது போதனைகளைப் பெரியார் அபுதாலிப் அவர்கள் ஏற்காவிட்டாலும் இவையேயன்றித் தங்களுக்கு ஏதேனும் இடைஞ்சல் ஏற்பட்டாலும் அல்லாஹுத் தஆலாவின் தூதன் என்ற முறையில் இஸ்லாத்தைப் போதிப்பதிலிருந்து தங்கள் மனம் சற்றும் தளர்ச்சி அடையாது' என்று அழுதவண்ணம் கூறியவற்றை இவ்வாறு தந்துள்ளார் கவிஞர்.

"பருதியைக்கொணர்ந் தணிவலக் கரத்திடைப் பதித்து
மரித னிற்சசி கொணர்திடக் கரத்தினி லமைத்து
மொருமொ ழிப்பட வினத்தவ ரொங்குற நெருங்கிப்
பொருத டக்கினு நும்மனம் பொருந்திலா திருந்தும்."
"ஈத லாற்சில விடரெனை யடுக்கினு மிறையோன்
றூத னியானெனச் சுருதியை விளக்குவ தலது
யேதி யாதென தகமென முகம்மது பிரியாத்
தாதை யோடுரைத் தனரிரு விழிமழை தயங்க".

இஸ்லாத்தைப் பகிரங்கமாகப் போதிக்கத் தலைப்பட்டு மக்காக் குறைஷியர்களை அண்ணல் நபி (சல்) அவர்கள் இஸ்லாத்தின் பால் அழைத்தார்கள். இந்த அழைப்பைக் கேட்ட அபூலஹப் என்னும் அப்துல் உஸ்ஸா, நபிகள் பெருமானார் (சல்) அவர்களை வாயாறத் தூற்றினான், கொடுமைகள் புரியத் தலைப்பட்டான். இதனால் பெரும் பாவியாகும் தகுதியை அபூலஹப் பெற்றுக் கொண்டான். இச்சந்தர்ப்

பத்திலே 'தப்பத்யதா' என்னும் சூறா அபூலஹப்புக்கும் அவனது மனைவிக்கும் நடக்க இருக்கும் கேட்டினைக் குறித்து அல்லாஹ்ஊத் ஆலாவினால் இறக்கப்பட்டது. இவ்வுலகிலும் மறு உலகிலும் கேடுடையவனாவான் என இவ்வாயத்துக் களின் மூலம் அபூலஹப் சபிக்கப்பட்டான் இக்கருத்துக் களே இங்கு இவ்வாறு இடம் பெற்றுள்ளது:

"அடர்ந்தெதிர்ந் துரைத்த கொடியவ னபூல
கபுபுவி யிடத்துமா கிறத்து
மிடைந்திடும் பெருங்கே டுடைய னிவான
யென்னுமப் பொருளுரை பிறப்பத்
துடங்குதப் பத்ய தாவெனத் தோன்றுஞ்
சூறத்தொன் றிறங்கிய துலகிற்
கிடந்தமும் மறையிந் தெரிதரப் புகழ்ந்த
கிளரொளி முகம்மது நபிக்கே."[1]

இவ்வாயத்துக்களில் குறிப்பிட்டதுபோல் அபூலஹ்பும் அவனது மனைவியும் பெருங்கேட்டுக்கு இலக்காயினர் என்பது கண்டு குறிப்பிடத்தக்கது. இஸ்லாத்தைத் தழுவிய காரணத்துக்காக பிலால் (றலி) என்னும் தனது அடிமை யைக் கொடுமைக்கு ஆளாக்கிய இபுனுகலப் என்பவனின் கொடிய தொழில்களும் பிலால் (றலி) அவர்களை அபூபக்கர் (றலி) அவர்கள் விடுவித்த விதமும் தீனிலை கண்ட படலத்தில் 141 முதல் 149 வரை உள்ள செய்யுட்களில் விவரிக்கப் பட்டுள்ளன.

நபிகள் பெருமானார் (சல்) அவர்களுக்கு நபிப் பட்டம் கிடைக்கப் பெற்று 4 ஆண்டுகள் கழிந்து விட்டன. ஐந்தாம் ஆண்டு ஆரம்பமாகியது. இஸ்லாத்தைப் பகிரங்கமாகப் போதிக்கும்போது அண்ணல் நபி (சல்) அவர்கள் பல இன்னல்களை எதிர்நோக்க வேண்டி இருந்தது. அப்பொழுது குறைஷி மக்களிடையே பெருஞ் செல்வாக்கைப் பெற்றவர் களாக உமறு அவர்களும் அபூஜஹலும் திகழ்ந்தனர். இவர் கள் மிக்க வீரம் உடையவர்களாகவும் இருந்தனர். இவர்

1. சீறா தீனிலை கண்ட படலம்

களில் ஒருவரை — உமறை அல்லது அபூஜஹ்லைத் தங்கள் பக்கம் சேர்த்துத் தருமாறு நபிகள் நாயகம் (சல்) அவர்கள் அல்லாஹ்விடம் இறைஞ்சினார்கள்; துஆ கேட்டார்கள். இந்த நிகழ்ச்சியே இவ்வாறு சீறாப்புராணத்தில் அமைந்துள்ளது.

"வருட நான்குசென் றைந்தினின் முகம்மது
மொருநா
ளிரவி னிறநனி மிகுந்திரு கரமெடுத் தேந்திப்
பொருளி லாமுத லிறைவனை யீறிலாப் பொருளை
யுருகு மெய்ம்மன வாக்கொடும் புகழெடுத்
துரைத்தார்

உலகி னிற்கரு தலர்கட லரியுமா றினைக்கொண்
டலது பூஜஹி லினிக்கொடு தீனிலை யதனைப்
பலனு றும்படி யெனக்கருள் பிறிதிலை யெனவே
நலனொ டுந்துஆச் செய்தனர் முகம்மது
நபியே."[1]

அண்ணல் நபி (சல்) அவர்கள் துஆ கபூல் செய்யப்பட்டது. அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. நபிகள் பெருமான் (சல்) அவர்களைக் கொல்வதற்கு முற்பட்ட உமறு அவர்கள், பின்னர் திருக்குர் ஆனை ஓதிக்கொண்டிருந்த நமது சகோதரியையும் அவரது கணவரையும் துன்புறுத்தத் தலைப்பட்டார். அப்பால் திருக்குர் ஆனால் கவரப்பட்டார். இஸ்லாத்தைத் தழுவுவதற்காக நபிகள் பெருமானார் (சல்) அவர்களிடம் ஓடோடிச் சென்றார். அண்ணல் நபி (சல்) அவர்களிடம் இஸ்லாத்தைத் தழுவவே தாம் வந்துள்ளமையை உமறு கத்தாப் (றலி) அவர்களின் கூற்றாகவே உமறுப்புலவர் இவ்வாறு செய்யுள் யாத்துள்ளார்.

"வரிசை நபியே முகம்மதுவே வானோர்க்
கரசே புவிக்கரசே
யுரிய தனியோன் முதற்றூதே யுமது கலிமா
வுரைப்படியே

1. சீறா உமறு கத்தாப் ஈமான் கொண்ட படலம் 23

புரிய மறைதேர்ந் தீமான் கொண் டறத்தா
றொழுகும் படிகருத்திற்
கருதி யிவணி லடைந்தேனென் றுரைத்தா
ருமறு கத்தாபே." 1

இஸ்லாத்தைத் தழுவிய ஆரம்ப முஸ்லீம்களுக்கு மக்கா குறைஷியர் சொல்லொணாத் துயர் இழைத்தனர். மக்காவில் தொடர்ந்து வசிப்பது அவர்களின் உயிருக்கே ஆபத்து வந்துவிடும் போல இருந்தது. இதனை உணர்ந்த அண்ணல் நபி (சல்) அவர்கள் தமது மகள் ருக்கையா அம்மையாரையும் அவர்தம் கணவர் உதுமான் இப்னு அப்பாஸ் (றலி) அவர்களையும் அபிஸீனியா என்று வழங்கப் படும் ஹபஷா நாட்டுக்குச் செல்லும்படி பணித்தார்கள். அப்பொழுது அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அருளப்பெற்ற ஐந்தாம் ஆண்டாகும். இவர்கள் இரகசியமாகவே மக்கத்தை விட்டுப் புறப்பட்டார்கள். இது நிகழ்ந்தது றஜபு மாதத்தில் எனக் கூறப்பட்டுள்ளது இந் நிகழ்ச்சியே சீறாப்புராணத்தில் இவ்வாறு பாடப் பட்டுள்ளது.

"ஷ்ரகி றங்கிநன் னபியெனும் பெரும்பெயர்
தரித்த
வருட மைந்தென வரவரு மிரஜபு மாதந்
தரும நேருது மானொடு ருக்கையா தமையு
மிருளும் போதனுப் பினர்ஹப ஷாவெனுந்
தேயம்."2

இது முதல் ஹிஜ்றத் என வருணிக்கப்படுகிறது. சொந்த நாட்டை விட்டு வேற்று நாட்டுக்குப் பாதுகாப்புத் தேடிச் சென்ற இந்த ஹிஜ்றத் பயணத்தில் பதினைந்து நபித் தோழர் கள் பங்குபெற்றனர். அண்ணல் நபி (சல்) அவர்களின் மகளார் ருக்கையா அம்மையாருடன் வேறு மூன்று பெண்

1. சீறா. உமறு கத்தாபு ஈமான் கொண்ட படலம் 90
2. சீறா. ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம் 7

களும் அவ்வம்மையாரின் கணவரான உதுமான் (றலி) அவர்களுடன் வேறு பத்து ஆண்களும் மக்காவிலிருந்து அபிஸீனியாவுக்கு ஹிஜ்றத் சென்றனர். இந்த வரலாற்று நிகழ்ச்சி சீறாப்புராணத்தில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

"திருந்துந் திண்புய நபிதிரு மகளுடன் சிறப்ப
விரிந்த பூங்குழன் மடந்தையர் மூவரும் வியப்பப்
பொருந்தந் தீனதர் பதின்மரும் புகழுது மானும்
பிரிந்தி டாதுசென் றந்தநா டடைந்த
பின்னர்."[1]

இதே படலத்திலுள்ள 9வது செய்யுளில் இப்பயணத்தில் பங்கு பற்றிய ஜஃபறிப்னு அபுதாலிப் பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளது.

'அமுல் ஹுஸ்ன்' என்றால் 'துக்ககரமான ஆண்டு' என்பது பொருள். நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வாழ்க்கையிலும் இத்தகைய துக்ககரமான ஓர் ஆண்டு ஏற்பட்டுள்ளது என வரலாறு கூறுகின்றது. அந்த ஆண்டிலே தான் அண்ணல் நபி (சல்) அவர்களின் பெரிய தந்தையும் பாதுகாவலருமான அபுதாலிப் அவர்கள் இவ்வுலகை விட்டு பிரிந்தார்கள். அவருடைய இறப்பை,

"இரைப்பெ ருங்கட லெனவினஞ் சூழ்தர விறந்தார்
மறைப்ப தத்தபித் தாலியென் றழகுறும் வள்ளல்"[2]

என விவரிக்கிறது சீறாப்புராணம். இது வரலாற்று முக்கியத்துவம் பொருந்திய நிகழ்ச்சி என்பதனால்இச்சம்பவம் நிகழ்ந்த நாளை நுணுக்கமாகக் குறிப்பிடுகிறார், உமறுப்புலவர். அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் அருளப் பெற்று பத்து வருடங்களும் எட்டு மாதங்களும் பதினொரு நாட்களும் கழிந்த பின்னரே அபுதாலிப் அவர்கள் உயிர் நீத்தார்கள் என இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

---

1. சீறா. ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம் 3
2. சீறா. பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 7

"வட்ட வாரிதிப் புவியிடை முகம்மது தமக்குப்
பட்ட மென்பவந் திறங்கிய வருடம்பத்
ததின்மே
லெட்டு மாதமும் பதினொரு நாளுஞ்சென்
றிதற்பின்
சட்ட கந்தனை விட்டுயிர் பிரிந்தவன்
சார்ந்தார்"[1]

அபுதாலிப் அவர்களின் மரணத்தைத் தொடர்ந்து மூன்று நாட்களே கழிந்தன. இஸ்லாத்தை முதன் முதல் தழுவிய பெண்மணியும் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு எல்லா வகையிலும் உறுதுணையாக விளங்கியவரும் இருபத்தைந்து ஆண்டுகளாக அண்ணல் நபி (சல்) அவர்களின் வாழ்க்கைத் துணைவியாக விளங்கியவருமான கதீஜா (றலி) அவர்கள் இவ்வுலக வாழ்வை விட்டுப் பிரிந்தார்கள். அல்லாஹ் விதித்த வழிக்கிணங்க குவைலிது அவர்களின் மகளார் இவ்வுலகப் புகழை நிறுத்தி விண்ணுலகத்தில் புகழ் விளங்க அங்கு சென்று விட்டார்கள் என்று உமறுப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

"அகத்தி னிற்பெறுந் துன்பொடு மிருக்குமுன்
றாநாள்
வகுத்த நாயகன் விதிவழி குவைலிது மகளா
ரிகத்தி னிற்புகழ் நிறுத்திவிண் ணகம்புக ழிலங்கத்
தகுத்தொ டும்பெரும் புதுமையிற் திருவடி
சாய்ந்தார்."[2]

அபுதாலிப் அவர்களின் மரணத்துக்கு ஒரு மாதத்துக்குப் பின்னரே கதீஜா (றலி) அவர்கள் வபாத்தானார்கள் என்று சிலர் கூறுவர். வேறு சிலர் ஒரு மாதமும் ஐந்து நாட்கள் கழிந்ததன் பின்னர் என்றும் மற்றும் சிலர் ஐம்பது நாட்கள் சென்ற பின்னர் என்றும் கூறுவர்.

வியாபாரிகளாகவும் யாத்திரிகர்களாகவும் யத்ரிப் நகரிலிருந்து அறுவர் மக்கமா நகருக்கு வந்திருந்தனர். அந்த

1. சீறா. பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 8
2. சீறா. பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 1

அறுவரையும் சந்தித்து இஸ்லாமிய போதனையை மேற் கொண்டார்கள் எம்பெருமானார் (சல்) அவர்கள். அடுத்த ஆண்டில் யத்ரிபிலிருந்து அந்த அறுபேரும் மற்றும் ஆறு பேருடன் வந்திருந்தனர். அவர்களை அக்பர் என்னும் இடத் தில் அண்ணல் நபி (சல்) அவர்கள் சந்தித்து மீண்டும் இஸ் லாமிய போதனையை மேற்கொண்டார்கள். இரண்டாவது தடவை வந்தவர்களும் அவ்ஸ், கஸ்றஜ் கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் இருந்தனர். இவர்கள் இஸ்லாத்தை ஒப்புக் கொண்டு இஸ்லாமிய முறைப்படி ஒழுக இணங்கினர். இந்த ஒப்புதல் "அகபா வார்த்தைப்பாடு" என வழங்கப்படு கிறது. இங்ஙனம் யத்ரிபிலிருந்து பன்னிருவர் வந்து இஸ் லாத்தை ஒப்புக் கொண்டமையே இவ்வாறு விவரிக்கப் பட்டுள்ளது.

"தன்னுயி ரென்ன நீங்கார் தலைமையி னுரிய
தோழர்
பன்னிரு வருக்கு நேர்ந்த பண்புட நெறிகள் கூறிப்
பின் அக பாவென் றோதும் பெருந்தலத் துறைந்து
காட்சி
மன்னிய முகம்ம தின்றண் மலர்ப்பதம் வந்து
கண்டார்."

மதீனத்தார் வாய்மை விளக்கிய படலத்திலும் யத்ரிப் வாசிகள் வந்து வார்த்தைப்பாடு கொடுத்த விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மக்கமா நகரிலிருந்து மதீனமா நகருக்குச் செல்லும் பொருட்டு அல்லாஹ்வின் உத்தரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவ்வாறு செல்லவேண்டிய நாளும் நிர்ணயிக்கப்பட்டட, அவ்வாறு செல்ல இருந்த நாளை இங்கு குறிப்பிடுகிறார் உமறுப்புலவர் இறைவனிடமிருந்து அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் கிடைத்த பதினான்காம் ஆண்டே றபீஉல் அவ்வல் மாதம் ஐந்தாம் நாள் திங்கட்கிழமை இரவினில் மக்கமா நகரிலிருந்து மதீன மாநகருக்குச் செல்ல இருந்தார் கள் என்பது இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

"திருமுகம் மதுநம் மிறையவன் தூதாய்
நபியெனும் பட்டமே தரித்து
வருமுறை பதினான் காண்டினின் மாசத்
தொகையினில் றபீவுலவ் வலினிற்
றெரிதருந் தேதி யைந்தினிற் றிங்க
ளிரவினிற் சிறப்பொடு மதீனாப்
பெருநகர்க் கேக விருந்தன ரிஃது
பிறந்தது காபிர்க டமக்கே"[1]

இந்த நிகழ்ச்சி நடைபெற்றது நபித்துவத்தின் 13 ஆம் ஆண்டு என்று கூறுவர். ஸபர் மாதம் 28 ஆம் நாள் திங்கட்கிழமை அன்று நிகழ்ந்தது என்று கருதுவாரும் உளர். மற்றும் சிலர் றபீஉல் அவ்வல் மாதம் முதல் மூன்று இரவுகளில் ஒன்றில் நிகழ்ந்தது என்றும் தெரிவித்துள்ளனர். திங்கட்கிழமை நிகழ்ந்தது என்று கூறுவதில் ஓரளவு கருத்தொற்றுமை இருக்கக் காணலாம்.

மதினமாநகருக்கு ஹிஜ்றத் செல்லும்பொழுது மூன்று நாட்கள் தௌர் குகையில் தங்கிவிட்டுச் சென்றார்கள் என வரலாறு கூறுகின்றது, தௌர் குகையினுள்ளே அண்ணல் நபி (சல்) அவர்களும் அவர்களின் இணைபிரியாத் தோழர் அபூ பக்ர் (றலி) அவர்களும் இருந்தனர். குகைக்கு வெளியே எதிரிகளின் காலடிச் சத்தம் கேட்டது. அவர்களின் முழந்தாள்களும் தென்பட்டன. அப்பொழுது அபூ பக்கர் (றலி) அவர்கள் 'யா றசூலுல்லாஹ், நாங்கள் இருவரே இங்கு இருக்கின்றோம். எதிரிகள் உள்ளே வந்தால்?" என்றார்கள். அப்பொழுது நபி (சல்) அவர்கள் 'இங்கு நாம் இருவர் இருப்பது, உண்மைதான். உலகத்திலுள்ள பல்லுயிர்களையும் காக்கும் ஒருவன் எங்களுடன் நீங்காது இருக்கின்றான், ஆதலினால் எதிரிகளான காபிர்களால் ஒன்றும் செய்ய முடியாது என்றார்கள். அப்பொழுது அண்ணல் நபி (சல்) அவர்கள் குகையிலே புகுந்துள்ள சூரியனைப் போன்று

1. சீறா. யாத்திரைப் படலம் 65

காட்சியளித்தார்கள். இக்கருத்துக்களே சீறாப்புராணத்தில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

> "இருவர் நா மிருப்பப் பூவி னிருந்தபல் லுயிருங் காக்கு
> மொருவனம் மிடத்தை நீங்கா துடனுறந்திருப்பக் காபிர்
> தெரிதருங் கண்ணிற் காணச் செயலுமற் றுண்டோ வென்றா
> ரருவரை முழையிற் புக்கி யருக்கனொத் திருக்கும் வள்ளல்."[1]

இருவரும் மூன்று நாட்கள் தௌர் குகையில் தங்கிவிட்டு நான்காம் நாள் அங்கிருந்து புறப்பட்டனர் என்று 'அடுக்க லின்புற மூன்று நாலிலிருந்து நாலா நாள்' (சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் 1) எனக் கூறப்படுகிறது.

இவ்வாறு மக்கமா நகரை விட்டுப் புறப்பட்டுச்சென்ற அண்ணல் நபி (சல்) அவர்களும் அவர்கள் தம் தோழர் அபூ பக்கர் (றலி) அவர்களும் மதீன மாநகரை அடைவதற்கு முன்னர் குபா என்னும் இடத்திற்கு வந்து சேர்ந்தனர். 'இன்பச் செல்வமே, தருகுபா வென்னுமத் தலத்தை நண்ணினார்' (மதீனம் புக்க படலம் 25.) என இது வருணிக்கப் பட்டுள்ளது. இருவரும் மதீன மாநகருக்கு அணித்தாயுள்ள குடபா என்னும் நகரை றபீஉல் அவ்வல் மாதம் 12ஆம் நாள் திங்கட்கிழமை அன்று வந்தடைந்தார்கள் என்பது பொதுவாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தாகும். இதனையே உமறுப்புலவரும் இவ்வாறு குறிப்பிடு கிறார்.

> "ஆசிலா தவரொடும் றபீயு லவ்வலின்
> மாசம்பன் னிரண்டினில் வதிந்த திங்களிற்
> பாசமுற் றவரிடம் பரிந்து நந்நபி
> வாசமுற் றுறைந்தனர் மகிழ்வின் மாட்சியால்."

---

1. சீறா. யாத்திரைப் படலம் 111
2. சீறா. மதீனம் புக்க படலம் 26

அங்கே ஒரு பள்ளிவாசல் கட்டப்பட்டது. நபிகள் பெருமானாரினாற் கட்டப்பட்ட முதல் பள்ளிவாசல் இதுவாகும். 'மஸ்ஜிதுந் தக்வா' என அழைக்கப்படும் இப்பள்ளி வாசல் (அல்குர் ஆன் 9, 109) காய்ந்த ஓலையினால் வேயப்பட்ட கூரையை உடையதாய் இருந்தது. இதனைக் கட்டி எழுப்புவதில் பெருமானாற் (சல்) அவர்களும் தீவிரமாக ஈடுபட்டார்கள் எனக் கூறப்படுகிறது. இந்தப் பள்ளிவாசல் 'ஒலி பரப்பிக் கொண்டிருக்கும் வெண்மையான சுண்ணாம்பினால் பூச பட்டிருந்தமையினால் எல்லா இடங்களும் அழகு மிக்கதாய் இருந்தன' என கவிதை நயம் ததும்ப இவ்வாறு உமறுப் புலவரால் பாடப்பட்டுள்ளது.

> "அவிரொளி முகம்மது மாலி போன்றவ
> ரெவருமற் றின்புற விருந்தவ்வூரினிற்
> சவிதருப் வெண்சுதை தயங்க வெங்கணுங்
> கவினுறப் பள்ளியொன் றிதிற் கட்டினார்."[1]

இங்கே தான் இஸ்லாமிய வரலாற்றிலே முதற் குத்துபாப் பிரசங்கம் பெருமானார் (சல்) அவர்களினால் நிகழ்த்தப் பட்டது. அன்று முதல் இறுதிநாள் வரை குத்துபா ஓத வேண்டும் என்று நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பணித்தமையை உமறுப்புலவர் இவ்வாறு வருணிக்கிறார்.

> "அத்தலத் துறைந்துபி னடுத்த வெள்ளிநா
> ளுத்திபத் தமரொடவ் வுறைந்த பேர்கட்கு
> மித்திலத் தின்று தொட் டீறு நாண்மட்டுங்
> குத்துபா வெனநபி குறித்துக் காட்டினார்."[2]

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் அன்று குத்துபா தொழுவித்தமை 38 ஆம் செய்யுளில் குறிப்பிடப்படுகிறது

அண்ணல் நபி (சல்) அவர்களின் தாயாரான ஆமினா அம்மையாரின் உறவினர் மதீனாவில் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் பனீ நஜ்ஜாறுகள் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்

1. சீறா. மதீனம் புக்க படலம் 7
2. சீறா. யாத்திரைப் படலம் 26

கள் உறவு முறையில் நபிகள் பெருமானாரின் தாய்மாமன் மாரைச் சேர்ந்தவர்கள். மதீனாவிலே ஒரு காணி நிலம் வாங்கத் திட்டமிட்டார்கள் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள். நிலத்தை விலைக்கு வாங்க வேண்டும் என்றார்கள். பனீ நஜ்ஜாறுகளோ 'நிலத்தைத் தருகிறோம், பொருள் பெற மாட்டோம்' என்றனர். ஆனால் அபூபக்ர் (றலி) அவர்கள் விலைக்கே விற்கப்படல் வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். இச்சம்பவம் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''மதிமுகம் மதுதா யாமினாக் குரிய
மாதுலர் பனீநச்சாறு களின்
முதியரை யழைத்திந் நிலம் விலைப்படுத்தித்
தருகென மொழிதலு மெவர்க்கும்
புதியவ னெமக்கு விலைகொடுத் தருள்வ
னும்மிடம் பொருள் கொளோ மென்ன
விதமொடு முரைப்ப வவர்தமக் கெதிரி
னபூபக்க ரினிதெடுத் துரைப்பார்.''[1]

நிலத்திற்கான விலை முடிவு செய்யப்பட்டது. பத்துப் பொற்காசுகள் என அந்நிலத்தின் விலை நிர்ணயிக்கப்பட்டது. இந்தப் பத்து வெண் பொற்காசுகளையும் அபூபக்ர் (றலி) அவர்கள் வழங்கி நிலத்தை வாங்கி நபிகளார் (சல்) அவர்களிடம் ஒப்படைத்தார்கள். அங்கே ஒரு பள்ளியையும் வீட்டையும் கட்டுவதற்குத் திட்டம் வகுக்கப்பட்டது. அவ்வாறு கட்டி முடிக்குமளவும் அண்ணல் நபி (சல்) அவர்கள் ஏறிவந்த ஒட்டகம் சுயமாகவே நின்ற இடத்தின் சொந்தக்காரரான அபூ அய்யூப் அன்ஸாரி அவர்களின் இல்லத்திலே தங்கி இருந்தார்கள். இந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியே இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''தங்கமோ ரீரைந் தளித்தபூ பக்கர்
வாங்கிய தலத்தினை யினிதின்

1. சீறா. விருந்திட்டு ஈமான் கொள்வித்த படலம் 1

கொங்கிருந் துலவு முகம்மது நபிக்குக்
கொடுத்தன ரந்நிலத் திடத்தின்
பங்குறோய்த் திலங்கும் பள்ளியு மனையும்
வகுத்தெடுத் தியற்றிட வருளிச்
சிங்கவே றனைய அபூ அய்யூப் மனையி
னிருந்தனர் முருநெறிச் செம்மல்." [1]

பெருமானார் நபி (சல்) அவர்கள் மதீனம் வந்ததைத் தொடர்ந்து அண்ணல் (சல்) அவர்களின் நெருங்கிய உறவினர்கள் மதீன மாநகரை வந்தடைந்தனர். அவ்வாறு வந்த உறவினர்களின் பட்டியல் ஒன்றை உமறுப்புலவர் குறிப்பிடுகிறார். அந்தப் பட்டியலில் செளதா (றலி) அவர்களும் அபூ

கொங்கிருந் துலவு முகம்மது நபிக்குக்

பக்கர் (றலி) அவர்களின் மனைவியாரும் ஆயிஷா (றலி) அவர்களும் அலி (றலி) அவர்களின் தாயார் பாத்திமா அம்மையாரும் நபிகள் பெருமானாரின் புதல்வியர் நால்வரும் அவர்களின் அடிமைகள் இருவரும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

"ஆயிழை செளதா அபூபக்கர் மனைவி தன்
னோடு மாயிஷா றலியின்
றாயெனும் வரிசைப் பாத்திமா நபியினர் தரும்
புதல் வியர்களால் வரையுஞ்
சேயிறு மினிய வடிமைக ளிருவர் திருத்தலர்
நோக்கிலா வண்ணம்
நாயகப் பதியென வோதிய மதினா நகரினி
லழைத்துவந் தனரால்" [2]

அடிமைகளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அவர்களை புதல்வர்களைவிட இனியவர்கள் என்று உமறுப்புலவர் வருணிக்கிறார். புதல்வர்களைப் போன்றே அடிமைகள் பராமரிக்கப் படல் வேண்டும் என்பது தொனிக்கப் பாடியுள்ளமை நயக்கத்தக்கதாகும்.

1. சீறா. விருத்திட்டு ஈமான் கொள்வித்த படலம் 3
2. சீறா. உகுபான் படலம் 3

சீறாப்புராணம் மூன்று காண்டங்களாக விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜுறத்துக் காண்டம் என பிரிக்கப்பட்டுள்ளது போன்று மூன்று காண்டங்களிலும் மூன்று விதமான காலக் கணிப்புகள் இடம் பெற்றுள்ளன. விலாதத்துக் காண்டத்தில் யானை ஆண்டை அடிப்படையாக வைத்தே வரலாற்றுக் குறிப்புகள் தரப்பட்டுள்ளன. அத்தோடு அண்ணல் நபி (சல்) அவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் சுட்டப்படும் பொழுது அவர்கள் தம் வயது அடிப்படையில் அந்நிகழ்ச்சிகள் குறிப்பிடப்படுகின்றன. நபிகள் பெருமானாருக்கு நபி பட்டம் என்னும் 'நுபுவ்வத்' அளிக்கப்பட்ட பின்னர் நுபுவ்வத்துக் கிடைத்த இத்தனையாம் ஆண்டு என அக்காலத்தில் அண்ணல் நபிகளாரின் வாழ்க்கையோடு சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் எல்லாம் குறிக்கப்படுகின்றன. ஹிஜ்ரத்துக்குப் பின்னர் நபிகள் பெருமானாரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் வரலாற்று அடிப்படையில் இத்தனையாம் ஹிஜ்றி ஆண்டு என விவரிக்கப்படுகின்றன. உமறுப்புலவரைப் போன்றே ஏனைய முஸ்லிம் புலவர்களும் ஹிஜ்றி நிகழ்ச்சியைக் குறிப்பிடும் பொழுது 'மக்கமா நகரத்திலிருந்து' மதீன மா நகருக்குச் சென்ற' இத்தனையாம் ஆண்டு என்றே வருணிக்கின்றனர். அண்ணல் நபி (சல்) அவர்கள் மதீன மாநகரை அடைந்த ஓராண்டைக் குறிப்பிடுவதற்கு,

"பூண்டநன் கலம்போற் காரண வரைகள்
புடையுடுத் திருந்தமக் காவிற்
கூண்டிருந் தெழுந்து மதீனமா நகரிற்
குவத்தொடு மினிதுறப் புகுந்தோ
ராண்டுசென் றதற்பின்........" [1]

இன்னொரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி முஸ்லிம்கள் தொழும் திசையாகிய கிப்லா மாற்றப்பட்டமை பாகும். அப்பொழுது இறை தூதர் (சல்) அவர்கள் பைத்துல் முகத்தஸ் எனும் ஜெருசலத்தின் திசையையே கிப்லா

1. சீறா. சல்மான் பாரிசுப் படலம் 1

வாகக் கொண்டு தொழுது வந்தார்கள். கஃபாவின் திசைக் குக் கிப்லாவை மாற்ற விருப்பம் கொண்டிருந்த போதிலும் அதற்கான அல்லாஹ்வின் உத்தரவை அண்ணல் நபி (சல்) அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப் பொழுது ஹிஜ்றி நிகழ்ச்சி நிகழ்ந்து ஓராண்டுக்கு மேலாகி யது. சஹ்பான் மாதம்.

‘ மகிதலத் தினிலுயர் மக்க மாகிய
நகர் விடுத் தணிமதி னாவை நண்ணிச்சூழ்
புகழொடுந் தீனெறி புரந்து வைகுநாட்
டிகழ்சகு பானென விளங்குந் திங்களில்'' [1]

இந்த சஹ்பான் மாதம் 15ஆம் நாள் செவ்வாய்க்கிழமை மத்தியானத் தொழுகை நேரமான லுஹறுவேளை, லுஹறுத் தொழுகையின் இரண்டு றக்கஆத்துக்களைத் தொழுது முடித்துவிட்டார்கள் அண்ணல் றசூல் (சல்) அவர்களும் ஏனையோரும். இந்நிகழ்ச்சி இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளது.

''மிக்கநற் றேதிமு வைந்தின் மேவிய
தக்கசெவ் வாயினி லுஹறு நேரத்தில்
றக்கனை யிரண்டிறக் ஆத்துத் தான்றெழு
தொக்கலோ டிசைநபி யுறையு மொல்லையில்.''[2]

இது நிகழ்ந்தது லுஹறு நேரத்தில் என்று சிலரும் அஸ்ர் நேரத்தில் என்று வேறு சிலரும் கருத்துத் தெரிவிப்பர். இச் சந்தர்ப்பத்தில் அமரர் கோன் ஜிபுறீல் (அலை) அவர்கள் மண்ணுலகுக்கு இறங்கி அண்ணல் நபி (சல்) அவர்களிடம் அல்லாஹ்வின் கட்டளையை அறிவித்தார்கள். அல்லாஹ் வின் வீடான கஃபதுல்லா என்னும் புனித பள்ளி வாசலை நோக்கித் தொழவேண்டும் என்னும் இறைவன் கட்டளை அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. இதுவே,

1. சீறா. கஃபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் 4
2. சீறா. கஃபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் 6

"இறைவன் கருபத்துல் லாவென் றெய்திய
துறையுயர் பள்ளியை நோக்கித் தான்றொழு
மறையுரை வழங்கினை னென்ன மன்னபி
முறையிதென் றாநந்தக் கடலில் மூழ்கினார்" 1

என அமைந்துள்ளது. இந்த அறிவிப்பினால் பேரானந்தம் அடைந்தார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள், ஜெருஸலத்தை எதிர்நோக்கித் தொழுது இரண்டு றக்கஆத்துக்களை நிறைவேற்றிய நபிகள் பெருமானார் (சல்) அவர்களும் தோழர்களும் உடனே கஃபத்துல்லாவின் திசையை நோக்கி அதனை கிப்லாவாக்கி எஞ்சியிருந்த இரண்டு றக்கஆத்துக்களையும் தொழுது தொழுகையை நிறைவேற்றினார்கள் என்பதே இவ்வாறு இந்தச் செய்யுளில் அமைந்துள்ளது.

"முன்னரி ரண்டிறக் ஆத்து முற்றிய
பின்னரிற் கருபத்துல் லாவைப் பெட்புற
வுன்னினர் நோக்கின ரோதும் பாதியுந்
துன்னிய குருவுடன் றொழுது வைகினார்" 2

முஸ்லிம்களின் கிப்லா மாற்றப்பட்டு மூன்று நாட்களில் முஸ்லிம்களுக்கு நோன்பு விதியாக்கப்பட்டது. அதே ஹிஜ்ரி ஆண்டில் அதாவது 2 ஆம் ஆண்டில் முஸ்லிம்களுக்கு றமளான் மாதத்தில் நற்கதி பெறுவதற்காக நோன்பு பறுலாக்கப்பட்டது. விதியாக்கப்பட்டது என்னும் திருக்குர்ஆன் ஆயத்து அல்லாஹுத்தஆலாவினால் இறக்கப்பட்டது. இதனையே உமறுப்புலவர்,

"நெறியொடும் புறுக்கா னன்னோர் நிகழு மவ்
வருடந் தன்னிற்
பெறுகதி றமளா னென்னப் பெருகிய நோன்பு
தன்னை
யுறுதிகொண் டெவர்க்குஞ் செவ்வி யுறுபறுலாக்கி
னோனென்

1. சீறா. கஃபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் 6
2. சீறா. ,, ,, 7

றிறையவ னருளி னாயத் திறங்கிய தெவர்க்கு
மன்றே''.[1]

றமளான் 17 ஆம் நாள் வெள்ளிக்கிழமை முஸ்லிம்களுக்கும் மக்கத்தைச் சேர்ந்த குறைஷிக் காபிர்களுக்கும் இடையே போர் மூண்டது. இஸ்லாத்தின் வரலாற்றிலே முதலாவது போர் என இது கணிக்கப்படுகிறது. இப்போர் கற்பனை நயத்துடன் சீறாப்புராணத்தில் உள்ள பதுறுப் படலத்தில் விரிவாக வருணிக்கப்படுகிறது. முஸ்லிம்களின் சாரி பில் பதுறுப்போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கையை உமறுப்புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிடுகிறார்,

''இயன்மறை தெரிமு ஹாஜி ரீன்களெண் பத்து
மூன்று
பெயருமன் சாரி மாரிற் பேர்பெறுந் தலைமை
மிக்கோ
ருயரிரு நூற்று முப்பத் தொருபெய ரவருங் கைவா
ளயருறா வெற்றி வீரத் தவருட னீண்டி னாரால்''.[2]

இங்கே பதுறுப் போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கை வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. பதுறுப் போரிலே மக்கமா நகரிலிருந்து வந்து பங்கு கொண்ட முஹாஜிரீன்களின் எண்ணிக்கை 83 என்றும் மதீனா மாநகரைச் சேர்ந்த அன்சாரிகளின் தொகை 231 என்றும் ஒவ்வொருவரும் ஒரு கைவாளுடனே வந்திருந்தனர் என்றும் இங்கு விவரிக்கப்பட்டுள்ளது. பதுறுப்படலத்தில் உள்ள மற்றொரு செய்யுளில் பதுறுப் போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் மொத்த எண்ணிக்கை 314 என்று 'பதுறிலடர்ந்த முந்நூற்றுடன் பதினான்கு. இதமுறுந் தலைவர்க்கும்பர்மா ராயமுண்டு...' (பதுறுப்படலம் 245) குறிப்பிடப்பட்டுள்ளதும் கண்டு நோக்கற்பாலது. இப்போரில் பங்கு

1. சீறா. பதுறுப் படலம் 1
2. சீறா. பதுறுப் படலம் 13

கொண்ட குறைஷிக் காபிர்களின் எண்ணிக்கை ஆயிரம் என்று 'அந்நக ரறபிக் காபி ராயிரம் பெயாகள்' (55) என இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இப்படலத்தில் உள்ள 204 வது செய்யுளில் ஒரு பிடி மண் எடுத்து எதிரிகளின் பக்கம் அண்ணல் நபி (சல்) வீசிய நிகழ்ச்சி குறிப்பிடப்படுகிறது. இந்த பதுறுப் போரிலே குறைஷிக் காபிர்களுள் 70 பேர் சிறைபிடிக்கப்பட்டனர் என்பதை '...எதிர்ந்த தலைமை மன் னவரி லெழுபது பெயரினை... பிடித்தனர் மாதோ' (21) எனவும் அவ்வாறு பிடிபட்டவர்களை' ......முகம்மதின் பிதா பின் னான அப்பாசையு...... அபித்தா லிபுதரு மலிமுன் வந்த வுக் கயிலையும்......ஆரிதரு திருச் சேய் நௌபலென்பவனை யும்......' (212) எனவும் முஸ்லிம்களுள் விண்ணுலகெய்தி யோர்...' இறந்த தீனவர் பதினான் கமருறுந் தலைவர்...' (213) எனவும் கைப்பற்றப்பட்ட யுத்தக் கைதிகள் ஒவ்வொரு வரும் நாலாயிரம் பொற்காசுகள் செலுத்தித் தத்தம் தாயகம் திரும்பினர் என்பதை 'உறுதலை விலைநாலாயிரத் திருகம் மொவ்வொரு வருக்கினி தளித்து...' (252) எனவும் விவரிக்கப்பட்டுள்ளது. பதுறுப் போரிலே பங்கு கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கை 313 என்று பல இடங்களில் கூறப்படுகின்றன. சிறைக் கைதிகளிடமிருந்து ஆயிரம் முதல் நாலாயிரம் தீனார் வரை பெறப்பட்டதாகவும் கூறுவர். இவ் வாறு றமலான் மாதம் முடிவாகும் பொழுது நபிகள் பெரு மானார் (சல்) அவர்களுக்குப் பித்றா பறுலாக்கப்பட்டது என்னும் திருக்குர் ஆன் ஆயத்தும் இறங்கியது என்பதை,

''முதலவன் விதித்த விறமலா னோன்பு
முடிவினி லியாவரு மறிய
அதிசயம் பிறப்பப் பித்துறாப் பறுலென்
றாயத்தும் நபிக்கிறங் கியதான் ...''.[1]

எனக் குறிப்பிட்டுள்ளார் உமறுப்புலவர். பணஞ் செலுத்த முடியாத கைதிகளைக் கொண்டு படிப்பு வாசனையற்றவர்

1 சீறா. பதுறுப் படலம் 256

சனுக்குக் கற்பித்துக் கொடுக்கச் செய்து அத்தகையோருக்கும் விடுதலை அளிக்கப்பட்டது என்ற செய்தி சீறாப்புராணத்தில் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் இஸ்லாத்தின் அடிப்படையான மூலமந்திரமான கலிமாவை விதைத்த மக்கமா நகரிலிருந்து மதீன மாநகர் வந்து அப்பொழுது மூன்றாம் ஆண்டு நடைபெற்றுக் கொண்டிருந்தது. இவ்வாறு மூன்றாம் ஆண்டு நிகழ்வதை உமறுப்புலவர்,

"மருந்தெ னுங்கலி மாவுரை விதைத்துமக் காவி
லிருந்து மாமதீ னாவிடத் தினிதெழுந் தருளித்
திருந்த வாண்டொரு மூன்றினில்........"[1]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

இந்த ஹிஜ்றி மூன்றாம் ஆண்டில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சில சம்பவங்களை உமறுப்புலவர் இங்கு குறிப்பிடுகின்றார். இங்கே றசூல் நாயகப் (சல்) அவர்களுடைய வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடைய சில விவரங்களை வருணிக்கிறார். அசனார் பிறந்த படலத்தில் இந்த விவரங்கள் இடம் பெறுகின்றன. '......தலைவு நீள்புகழுமறுகத் தாபெனுங் குரிசில்' (2) என்று வருணிக்கப் பட்டுள்ள உமறு கத்தாப் (றலி) அவர்களின் புதல்வியான,

"அருந்த வத்தினி லீன்றெடுத் துவந்தபெண்
ணரசைக்
கருந்த டங்கயற் கண்ணியை நறுமொழிக் கனியை
வருந்து மெல்லிழைக் கொடியைமென் பிடிநடை
மயிலைப்
பொருந்து மாரமு தையபு சாவெனும் பூவை". [2]
'குறைஷி யங்குலக் காவினி லுறைந்தகோ
குலத்தைப்
பொறையு நீதியு மொழுக்கமும் விளைத்தபொன்
னிலதனை

---

1 சீறா. அசனார் பிறந்த படலம் 1
2 ,, ,, 3

யுறையுங் கற்பினுக் குறையிடத் தினையொளிர்
மணியை
மறையி னேர்நபி முகம்மது வதுவையின் மணந்
தார்''. 1

என்று உமறுப்புலவரால் வானளாவப் புகழப்பெற்ற ஹப்ஸா (றலி) அம்மையார் அவர்களை ஹிஜ்றி மூன்றாம் ஆண்டிலே 'மறையி னேர் நபி முகம்மது வதுவையின் மணந் தார்.' என வருணிக்கப்பட்டுள்ளது. இதே ஆண்டில் தான் அண்ணல் நபி (சல்) அவர்களின் புதல்வியருள் ஒருவரான உம்மு குல்தும் (றலி) அம்மையாரை (மாதருக்கா கும்முக் குல் தூமணி விளக்கை—(6) உதுமான் இப்னு அப்பாஸ் (றலி) அவர்களுக்கு (கோதி லாவுது மான்மனங் களிப்புறக் கொடுத்தார்—(6) திருமணம் செய்துவைக்கப்பட்டது. இங்கே நபிகள் பெருமானாரின் மற்றொரு திருமணம் குறிப் பிடப்படுகிறது. உசைமா அவர்களின் புதல்வி ஸெயினப் (றலி) அம்மையாரை (செல்வி யையழில் ஸெயினைப் பெறைச்செழு மழுதை—(8) அண்ணல் நபி (சல்) அவர்கள் திருமணம் புரிந்து எல்லா வளங்களோடு வாழ்ந்தார்கள் என்று குறிப்பிடப்படுகிறது. அதே ஆண்டில் பாத்திமா (றலி) நாயகி அவர்கள் ஒரு புதல்வரைப் பெற்றெடுத்தார் கள்.

"இறம வான்பதி னைந்தினில் வெள்ளியி னிரவின்
மறுவில் கற்புடை பாத்திமா வெனுந்திரு மடமா
னறமும் வெற்றியு மோருரு வெடுத்தென வரிதிற்
பொறையு யிர்த்தன ரொளிதர வொருபுதல்
வனையே''.2

அப்புதல்வனுக்கு நபிகள் பெருமானார் பெயர் இட்டமை யும் இங்கு வருணிக்கப்பட்டுள்ளது.

---

1. சீறா. அசனார் பிறந்த படலம் 4
2. ,, ,, 11

"........................ ............................ செம்மல்
வசைய றுங்கரத் தெடுத்தாம் பேரனை வாழ்த்தி
யசனெ னச்செழுந் திருப்பெயர் தரித்தன ரன்றே"[1]

ஹிஜ்றி மூன்றாம் ஆண்டில் இஸ்லாமியா வரலாற்றிலே இரண்டாவது முக்கியமான போர் நிகழ்ந்தது. மதீனாவுக்கு அருகாமையில் உள்ள உகுது மலை அடிவாரத்தில் நிகழ்ந்தமையால் அப்போர் உகுதுப் போர் என அழைக்கப்பட்டது. அன்று வெள்ளிக்கிழமை ஷவ்வால் மாதம் 14 ஆம் நாள். குத்துபாத் தொழுகைக்குப் பின்னர் முகம்மது (சல்) அவர்கள் போருக்கு ஆயத்தமானார்கள் இந்நிகழ்ச்சி,

"பேத மற்ற ஷவ் வாலென வுரைத்திடும் பெரிய
மாத மேழிரண் டினில்வெள்ளி வாரத்தின் வணங்கி
யோது குத்துபாத் தொழுதபின் மறையிய மொலிப்பத்
தீத றும்படி யெழுந்தனர் ஹபீபெனுஞ் செம்மல்."[2]

என சீறாப்புராணத்தில் வருணிக்கப்பட்டுள்ளது. உகுதுப் போரில் பங்கு கொண்ட முஸ்லிம்களின் எண்ணிக்கை (700) 'தீனவரேழுநூறு (85) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. உகுதுப் போரிலே முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட பேரிழப்பு அண்ணல் நபி (சல்) அவர்களின் சிறிய தகப்பனாரான ஹப்பர் இப்னு அப்துல் முத்தலிப் (றலி) அவர்கள் வபாத்தானமையேயாம். வஹ்சி என்பவனின் குத்துவாளுக்கு இரையான ஹம்ஸா (றலி) அவர்கள் தள்ளாடித் தள்ளாடி அல்லாஹுத்த ஆலாவையும் அதாவது திருத்தூதரையும் நினைவு படுத்திக் கொண்டு படிக்கும் நல்ல மொழியாகிய கலிமாவை அடிக்கடி கூறிக் கொண்டவராய் நிலத்திலே வீழ்ந்தார்கள்.

1. சீறா. அசனார் பிறந்த படலம் 18
2. சீறா. உகுதுப் படலம் 77

அவருடைய உயிர் பிரிந்தது. அவரும் சுவன பதிக்கு ஏகி விட்டார். இக்கருத்துக்களை இவ்வாறு அமைத்துப்பாடுகி றார் ஆசிரியர்.

''மெல்ல நின்றுநின் றசைந்தசைந் துணர்வுமே
லாட
இல்ல லாவையும் ஹபீபையு முளத்தினி
லிருத்திக்
கல்லு நன்மொழி வாக்கினி லடிக்கடி கலிமாச்
சொல்லி வீழ்ந்தனர் போயின குறைந்தனர்
சுவனம்''[1]

உகுதுப் போரிலே அண்ணல் நபி (சல்) அவர்களின் ஒரு பல் ஒரு கல் தாக்கியதனால் சேதமுற்றது சிதைந்தது. இதன் பயனாக உணர்வு உள்ளவர்களாக பூமியில் சரிந்தார்கள். அசுகாபிமார் சகீதாகவும் வபாத்தாகவும் பெருமானார் (சல்) அவர்களின் பல் சகீதாகவும் சிதையவும் அல்லாஹ்வின் ஏவலே காரணம் எனக் கூறிய உமறுப்புலவர் ஒரு கேள்வி யையே எழுப்புகிறார். எந்த உலகத்திலும் துன்பம் இல்லாத வர்கள் யார்தான் இருக்கின்றனர்? ஒருவருமில்லை என்ற பதிலைத் தொனிக்க வைக்கிறார். இக்கருத்துக்கள் அடங்கிய இரண்டு செய்யுட்களையும் பார்ப்போம்.

',ஈத லாதொரு கவண்கல் கீழ் வாப்புறத்
திலங்குஞ்
சோதி மூரலுஞ் சிதைத்திடத் தைத்தது தொகுத்த
பூதலத்தினி லுணர்வுடன் சாய்ந்தனர் பொருவா
மாதி ரத்தொடு மதியொடும் பேசிய வள்ளல்.''
''பத்தி மீறிய தீனவர் படவுமக் கவணாற்
றத்தி தத்தியிற் படரொளி முகம்மது தமக்குங்
கத்த னேவலிற் றுனிவந்து கருதிய தென்றா
லெத்த லத்தினு மியாவரே துன்பமி லாதார்''[2]

1. சீறா. உகுதுப் படலம் 241
2. சீறா. உகுதுப் படலம் 244-245

உகுதுப் போரிலே வீரமரணம் எய்திய முஸ்லிம்களின் தொகை 65 என்பதை உமறுப்புலவர் 'அறுபத்தைத்து' 264 எனக் குறிப்பிடுகிறார்.

அடுத்து ஹிஜ்றி நான்காம் ஆண்டில் நிகழ்ந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சம்பவங்கள் விவரிக்கப்படுகின்றன. இந்த ஆண்டிலே தான் 'கஸ்றுத்' தொழுகை முஸ்லிம்களுக்கு விதியாக்கப்பட்டது. கஸ்றுத் தொழுகையைப் பறுலானதாக்கும் இறை வசனம் இறங்கியது. இஸ்லாமிய சன்மார்க்கத்தில் விலக்கப்படாத பிரயாணத்தில் ஈடுபடுவோர் அதாவது ஏறத்தாழ 80 மைல் தூரப் பயணத்தில் ஈடுபடுவோர் 'அதாவாக' இருந்தாலுமோ 'களாவா' இருந்தாலுமோ நான்கு றக்கஆத்துள்ள பறுளுத் தொழுகையை இரண்டு றக்கஆத்துக்களாகச் சுருக்கித் தொழலாம். இத்தகைய தொழுகையே கஸ்றுத் தொழுகை என அழைக்கப்படுகிறது. ஹிஜ்றி நான்காம் ஆண்டில் கஸ்றுத் தொழுகை முஸ்லிம்களுக்குப் பறுளாக்கப்பட்டதென்னும் இறைமறை வசனம் இறங்கிற்று என்று உமறுப் புலவர்.

''வநத தெண்ணிய கிஜுறத்து நான்கெனும்
வருடஞ்
சிந்தைக் கூர்தரக் கசறெனுந் தொழுகையைச்
செய்த
லெந்த நாட்டினு மேகுவோர் மேல்பறு லென்ன
வந்த மில்லவ னாரண மிரங்கின வன்றே''[1]

இவ்வாறு கூறுகிறார். அதே ஆண்டில் அபூ உமையா அவர்களின் புதல்வி உம்மு ஸல்மா (றலி) அவர்களை அண்ணல் நபி (சல்) அவர்கள் திருமணம் புரிந்தார்கள். இதனையே உமறுப்புலவர், ''.........அபூ உமையா, பெறி னால் வரும் பேதைய ரும்முசல் மாவை........., ஈறிலானபி திருமணம் முடித்தனர்.........'' (உசைனார் பிறந்த படலம் 2) என

1. சீறா. உசைனார் பிறந்த படலம் 1

வருணித்துள்ளார். உசைன் (றலி) அவர்களின் பிறப்பு அடுத்து வருணிக்கப்படுகின்றது. அதே ஆண்டு சஹபான் மாதம் ஐந்தாம் நாள் உசைன் (றலி) அவர்கள் பிறந்தமை இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

"பின்னு மவ்வரு டஞ்சகு பானெனப் பேசு
மன்ன திங்களிற் றேதியோ ரைந்தினி லழகார்
மின்னு பூணணி பாத்திமா வயிற்றினில்
விளங்கி
யுன்னு காரணத் துடனுசை னார்நிலத்
துதித்தார்." 1

இந்தப் படலத்தில் உள்ள 7 ஆம், 8 ஆம் செய்யுட்களில் அபு தாலிப் அவர்களின் அருமை மனைவியார், அண்ணல் நபி (சல்) அவர்களை நாள்தோறும் வளர்த்த தாய்க்குப் பதில் தாயாக இருந்த பாத்திமா அம்மையார் அவர்களின் மறைவு பற்றிக் குறிப்பிடப்படுகிறது. 17 ஆம் பாடலில் இவ் வம்மையாரின் புதல்வர்களினதும் புதல்வியர்களினதும் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

வாஷிங்டன் இர்வின் (washington Irvin) என்னும் வரலாற்று ஆசிரியர் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை வெகுவாகப் பாராட்டியுள்ளார். தாதுர் என்னும் காட்டறபிக்கும் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கும் இடையே நடந்த சம்பவத்தையே அவர் அவ்வாறு புகழ்ந்து எழுதியுள்ளார். நபிகள் பெருமானார் அவர்களுக்கு அல்லாஹுத் தஆலா மீதிருந்த அளப்பரிய நம்பிக்கை மிக்க அபாயகரமான சந்தர்ப்பத்திலும் கூட அவர்களுக்குப் பேருதவியாக இருந்தது என்பதைத் தெள்ளிதிற் புலப்படுத்திக் கொண்டிருக்கிறது அச்சம்பவம். கதபான் வெற்றிக்குப் பின்னர் முகம்மது நபி (சல்) அவர்களும் தோழர்களும் திரும்பி வந்து கொண்டிருந்தனர். பாலையைக் கடந்து ஒரு காட்டினில் தங்கினார்கள்.

1. சீறா உசைனார் பிறந்த படலம் 3

அங்கே ஓரிடத்தில் எல்லோரும் நித்திரை கொண்டார்கள்' நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மற்றவர்களைவிடச் சற்றுத் தள்ளி தூங்கிக் கொண்டிருந்தார்கள். நபிகள் பெருமானாரைக் கொல்லக் கருதியவனாக நித்திரை செய்து கொண்டிருக்கும் நபிகள் பெருமானாரின் கைவாளை தன் கையில் எடுத்துக்கொண்டான் அந்த அறபி, இதனை உமறுப் புலவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

"துன்ற ருங்குணத் தூதர்கை வாளினைச்
சென்றெ டுத்தடற் செங்கையிற் சேர்த்தினான்." 1

நபிகள் பெருமானாரின் சிறந்த பண்பினைக் குறிப்பிட 'நெருங்குதற்கு அருமையான குணத்தை உடையவர்' என பொருள்பட்ட 'துன்றருங்குணம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது இரத்தந் தோய்ந்த இந்த வாளினைக் கையில் எடுத்தவனாய் முஸ்லிம்களைப் பழிக்கு முகமாக உம்மை இரண்டு துண்டாக்குவேன். உம்மைத் தப்பிப்பவர் யாவர்? என்று மமதையுடன் கேட்டான். அவன் 'ஒருவரும் இல்லை' என்ற பதிலையே எதிர்பார்த்தான். இக்கருத்துக்கள் பொதிந்த செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

"மண்டு செம்புன லாடியவாளுரீஇக்
கொண்டு தீனர் குறைபட வேயிரு
துண்ட மாக வுனைத்துணிப் பேனது
கண்டி யாவர் விலக்குவர் காணென்றான்."

நபிகள் பெருமானார் அஞ்சா நெஞ்சினராய் இவ்வாறு பதிலளித்தார்கள். 'எனது வாள் (நாந்தகம்) உன் கையிலாயது. வெற்றியைத் தமதாக்கிக் கொண்ட வீரர்களான சஹாபாக்களும் நித்திரை கொள்கின்றனர். என்னை மடக்குவதற்காக இவ்வாறு பேசினாய். அல்லாஹ் ஒருவனே என்னைக் காப்பாற்றுபவன். வேறொருவருமில்லை' என்றார்கள். இக்கருத்துக்கள் பொதிந்த பாடல் இதோ,

1. சீறா. தாத்துற்றஹாக்குப் படலம் 47

"உறைகொ ணாந்தக முன்கைபி னாயின
விறல்கெ ழீ இவய வீரருந் துஞ்சினர்
பெறுக நீயெதி ரிம்மொழி பேசினை
யிறைவ னேயெனைக் காப்பன்மற் றில்லென்றார்." 1

இதனைக் கேட்டதும் அவன் கையில் ஏந்திய வண்ணம் இருந்த பிரகாசமான வாள் (கோணம்) அவனது சிவந்த கையிலிருந்து நிலத்தில் விழுந்துவிட்டது. ஒருவர் நினைத்த படி இன்னொருவரைக் கொல்ல முடியுமோ என ஒரு கேள்வி யையும் இங்கே எழுப்புகிறார் கவிஞர். இதுதான் அந்தச் செய்யுள்,

"அன்ன காலையி னாங்கவ னேந்திய
மின்னு கோணம் விரல்கள் சிறப்புற
மன்னு செங்கை பறித்துமண் வீழ்ந்தன
வுன்னு மப்படி கொல்லவு மொண்ணுமோ." 2

தாதுர் எதிர்பாராத பதில் அவன் கையிலிருந்து விழுந்த வாளினை (வைவாள்) நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஒரு நொடிப்பொழுதில் நிலத்திலிருந்து எடுத்து 'இனி உன்னு டைய இனிய உயிரை வானலோகத்தின்கண் போகச் செய்வேன். அதனைத் தடை செய்யக்கூடியவர் உலகில் யாவர்? ஒருவருமில்லை' என்று கூறினார்கள். இக் கருத்துக்களே,

"விடுத்த தண்ணிடை வீழ்ந்தவை வாளினை
யெடுத்து வள்ள லினியுன தாருயிர்
படுத்து விண்ணுல கேற்றுவன் பாரினிற்
றடுத்து நிற்பவ ரியாரெனச் சாற்றினார்" 3

என அமைந்துள்ளன. தனக்கு உதவி செய்ய அங்கு எவரு மில்லை என்பதை உணர்ந்துகொண்ட அந்த தாதுர் என்னும்

1. சீறா. தாத்துற்றஹுக்குப் படலம் 50
2. ,, ,, 51
3. ,, ,, 52

அறபி தான் செய்த பெரிய குற்றத்தை ஆண்டவனுக்காக மன்னித்தருளும்படி வேண்டி நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் சரணடைந்தான். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு கூறுகிறார்.

"பிறர்க்க டாத பெருப்பிழை நெஞ்சினிற்
குறிக்கு நீர்மையன் செய்தவிக் குற்றமே
மறைக்க ணின்று வளரிறைக் காகநீர்
பொறுக்க வேண்டு மெனச் சரண் பூண்டனன்"[1]

தாதுர் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியை வருணிக்க உமறுப் புலவர் உபயோகித்த செய்யுட்களிலே வாளைக் குறிக்க கைவாள், நாந்தகம், கோணம், வைவாள் என்பன பயன் படுத்தியுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

பனு முஸ்தலக் கோத்திரத்தவர் மதீன மாநகரின் சுற்றுப்புறத்தில் கலகம் விளைவித்துக் கொண்டிருந்தனர். இவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் முறைஸீக் என் னும் இடத்தில் சண்டைமூண்டது. இவர்கள் தோற்கடிக்கப் பட்டனர். பலர் கைது செய்யப்பட்டனர். இவர்களுள் பனு முஸ்தலக் கோத்திரத்தின் தலைவரான ஹாறித் பின் அபீலர்றார் என்பவரின் புதல்வி ஜுவைறியா (றலி) அம்மையாரும் ஒருவர். தாபித் இப்னு கைஸ் (றலி) அவர்களின் பங்காக அவர்களுக்கு ஜுவைறியா அம்மையார் கொடுக்கப் பட்டார். இந்நிகழ்ச்சி இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

"தருமத்திகழ் தாபித்தென வரு மன்னவர் சார்பின்
வருமந்திகழ் தருஆரிது வரத்தாலவ தரித்த
திருவுங்குண நலனும் பெறு செயலும் பொறை
நிறையு
முருவந்தமு முறவந்தனள் ஜுவைறாவென
வொருமான்"[2]

1. சீறா. தாத்துற்றஹூாக்குப் படலம் 56
2. சீறா. முறைசீக்குப் படலம் 45

ஒன்பது மிஸ்கால் தங்கம் தந்து 'உமதுடன் மீளுதி யென்றார் தாபித் (றலி) அவர்கள். (47) இந்தச் சொல்லைக் கேட்டதும் ஜுவைறியா (றலி) அம்மையார் நபி திருமுன்னரின் வந்தாள்' (48) வந்து தான் தாபித் என்பவரின் சிறைக் கைதி என்றும் அவர் 'தலை விலை ஈந்து நீ போ' எனக் கூறினார் என்றும் ஆதலினால் இங்கே வந்ததாகவும் ஹயிறாக இருக்கும் என்றும் அதற்கான பொருள் தருமாறும் கேட்டார். இக் கருத்துக்களையே உமறுப்புலவர் இவ்வாறு கூறுகிறார்.

''தீனோர்களில் தாபித் தெனுந் திறன் மன்னவர்
சார்பி
லானேன் றலை விலையீந்தினி நீபோகென வறைந்
தார்
வானுர்மதி யலையீர்மன மகிழ்ந்தேகயி றாக
யானேயிவ ணடைந்தேன் சில பொருளீகுமினையா''[1]

அண்ணல் நபி (சல்) அவர்களும் அவ்வாறே பொருளை ஈந்து ஜுவைறியா (றலி) அம்மையாரை விடுதலை செய்வதற்கான வழி கோலினார்கள். அவ்வம்மையாரே விடுதலை பெற்றுத் தமது தந்தையாருடன் செல்ல மறுத்து தாம் றசூலுல்லாஹ்வின் சமூகத்திலேயே வாழ விரும்புவதாகக் கூறினார்கள். அவர் தம் விருப்பப்படி அடிமையாக பிடிக்கப்பட்டு விடுதலை பெற்ற ஜுவைறியா (றலி) அம்மையாரைத் திருமணம் புரிந்தார்கள். இதனை அறிந்த ஏனையோரும் தத்தம் அடிமைகளை விடுதலை செய்தனர் என்று உமறுப்புலவர் இவ்வாறு பாடுகிறார்.

''மட்டார் தொடைப் புயத்தாரிது மகளார்
ஜுவை றாவை
யொட்டாதரும் புகழ் மாநபி மணமெய்தலு
மெவருங்
கட்டாய்ப்படி சிறையவையுங் கடிதின் பய
னுரிமை
விட்டாரிவர் நகர்மேவிய சுற்றம்மெனும் விருப்
பால்''[2]

1. சீறா. முறைக்குப் படலம் 51
2. ,, ,, 60

இந்த ஹிஜ்றி ஆண்டிலே மற்றொரு முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி நடந்துள்ளது. நீரில்லாதவிடத்து நீரில்லையே, ஒலுச் செய்ய முடியாமல் இருக்கிறதே, அதன் பயனாகத் தொழ முடியாமல் இருக்கிறதே, கடமைகளை நிறைவேற்ற முடியாமல் இருக்கிறதே என்று கவலை கொள்ளாமல் இருந்தற் பொருட்டு பறுளான கடமைகளைத் தப்பாது செய்வதற்கு ஒரு வழியாக தயமும் செய்து கொள்ளலாம் என்று அல்லபஹூத்த ஆலா விதித்தான் என்று ஜிபுறீல் (அலை) அவர்கள் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அறிவித்தார்கள். இதன் பயனாக நீர் கிடைக்கவில்லையே என்ற கவலையும் அகன்றது. இக்கருத்துக்களையே உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

''நெஞ்சாகுல மறநீரக மில்லாவிட நியமந்
துஞ்சாவகை தயமுஞ்செய்து தொழமேலவன்
விதியின்

மிஞ்சாரண மொழியாரமு திஃதென்ன விரைந்து
மஞ்சார் வெளி வழியேகொடு வந்தார்ஜிபு றீலே''[1]

இதனை அறிந்ததும் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் இம்முறைமையை மேற்கொண்டார்கள் என்பதனை,

''................இவருப்பிற ருளரு
முருகும்படி பிறிதொன்னையு நினையாதொரு
பொருளைத்

தருமந்திர நெறியின்மடி தயமுஞ்செய்து தொழு
தார்''.[2]

1. சீறா. முறைசீக்குப் படலம் 29
2. ,, ,, 40

அபூ சுபியானின் தலைமையில் பத்தாயிரம் போர் வீரரைக் கொண்ட ஒரு சைனியம் மதீன மாநகரைத் தாக்கும் பொருட்டு முன்னேறி வருவதை எம்பெருமானார் (சல்) அவர்களுக்குச் செய்தி எட்டியது. இதனைத் தடுக்க எடுக்கவேண்டிய நடவடிக்கைகளைப் பற்றி தங்கள் தோழர் அசுகாபிமாருடன் கலந்து ஆலோசித்தார்கள் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள். இவ்வாறு கலந்தாலோசித்த பொழுது சல்மான் பாரிசி (றலி) அவர்கள் தமது கருத்தைத் தெரிவித்தார்கள். 'வண்மைத் தக்க தருவென வுதவுஞ் சல்மான் பாரிசி —— சொல்வார்.' (கந்தக்குப் படலம் 42) கத்பான், அசத் அவுஸ் சனானா, யூதர் முதலிய கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். மக்காவிலிருந்து வந்த முஸ்லிம் அல்லாதாரின் அணியில் இடம் பெற்றனர் என்பதை உமறுப்புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார். ஒவ்வொரு கோத்திரத்தாரையும் வெவ்வேறு அடைமொழி கொடுத்து வருணித்துள்ளமை கண்டு நோக்கற்பாலது.

'வசையிலாக் கத்பா னென்னு மாயமு மதிப்பில் லாத
அசதெனுங் குழுவு மிக்க அவுசெனுங் கணமு மூரித்
திசைபுகழ் தருங்கனானாச் சங்கமுந் திரட்டி யென்று
மிசையறு மெஹூதிக் காபிர் தம்மொடு மீண்டினா
னால்'’.[1]

சல்மான் பாரிசி (றலி) அவர்கள். தீனர்சூழ்தர வகழொன்று திருத்துவ மென்றார் (45). இவ்வாறு 'தூய பேரக ழிழியற்றியிங் கிருந்தனர். 82). உயை வந்த படலத்தில் அகழ்ப் போர் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. அமீர் இப்னு அப்துத் என்பவனுக்கும் அலி (றலி) அவர்களுக்கும் மும்முரமாக நடைபெற்ற போர் இப்படலத்தில் நுணுக்கமாக விவரிக்கப் படுகிறது. இப்படலத்தில் 72 முதல் 77 வரை உள்ள செய்யுட்களில் எதிரிகளின் தோல்வி விரிவாக வருணிக்கப்பட்

1. சீறா. கந்தக்குப் படலம் 39

டுள்ளது. அகழ்ப் போரில் ஏற்பட்ட தோல்வி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

"கங்கு தப்பிய கத்துபான் குழுவும்ம னானாச்
சங்க முப்பெரும் படைக்கட லசத்தெனுஞ் சவையும்
பங்க மெய்திடும் பனீகுறை லாவெனும் படையு
மங்கி ருந்தில சிதன வோடின வன்றே". 1

இச் செய்யுளிலும் வெவ்வேறு கோத்திரங்கள் வெவ்வேறு அடைமொழிகளால் வருணிக்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது. இந்தப் போர் மதீனாவின் முற்றுகை 27 நாட்கள் நடைபெற்றது என்று வரலாறு சருதுகிறது. ஆனால் உமறுப்புலவரோ தமது சீறாப்புராணத்தில் அகழ்ப்போர் நடைபெற்ற கால எல்லையை இருபதுநாலும் சொச்சமும் எனக் குறிப்பிட்டுள்ளார். 'இனைய மன்னர் விருபதுஞ் சின்னமு மிருந்து மனமு மூன்றகம் வெருவியோ டினர்"...

இச்செய்யுளில் 'சின்னம்' என்னும் சொல் 'சொச்சம்' என்னும் பொருளில் உபயோகிக்கப்பட்டுள்ளது.

ஹிஜ்றி நான்கு ஆண்டுகள் நிறைவு பெற்று ஐந்தாம் ஆண்டு நடைபெற்றுக் கொண்டிருந்த ஜுமாம் ஈமான் கொண்ட படலத்தில் இச்செய்தி '... விலக்கரிய வருடமொரு நான்கு நிறைந் தைந்தாண்டு மேவும் போதில்...' எனக் குறிப்பிட்டுள்ளது. இந்த ஆண்டும் இஸ்லாமிய வரலாற்றிலே முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சிகள் நடந்தேறியுள்ளன. உலகில் உள்ள முஸ்லிம்களுக்கு இஸ்லாமிய கடமைகளுள் ஐந்தாவதான ஹஜ் கடமை விதியாக்கப்பட்டுள்ளது '...அவனி மீதிற் றுலக்கமுற வந்த ஹஜ்ஜு பறுலான தின்று முதற்றொழுவீ ரென்றே.'

இருதயத்தின் இடத்துள்ள அறிவை நீக்குதல் அருமையானது. அத்தகைய அறிவையும் அகலச் செய்ய வல்லது

1. சீறா. உயை வந்த படலம் 181

ஒன்று உண்டு. சரீரத்திற்கு மயக்கம் வருதல் அபாயகர மானது. அத்தகைய அபாயகரமான மயக்கத்தையும் உண்டாக்க வல்லது அது. நண்பர்களைப் பிரிப்பதும் எளி தான காரியம் ஒன்றன்று. அத்தகைய நட்புறவையும் நொடிப்பொழுதில் உடைத்தெறிந்து நண்பர்களை எதிரிகளாக்க வல்லது அது. எப்பொழுதும் ஒருவன் பேசும் போது பொறுப்புணர்ச்சியுடனே பேசுதல் வேண்டும். ஆனால், அதுவோ பேசுவது இன்னது என அறியாது ஒருவனைப் பேசவைக்கும் சர்வ வல்லமையும் உள்ளது. அதுதான் மது. கள்ளாகிய உணவும் வெறியை-போதையை உண்டாக்கும் மதுபானமாகிய குடியுமாகும். அது இஸ்லாத்தில் தடுக்கப் பட்டிருக்கிறது. ஹறாமாக்கப்பட்டிருக்கிறது. இந்த ஹிஜ்றி ஐந்தாம் ஆண்டிலேதான் அல்லாஹு தஆலா வினால் மதுபானம் முஸ்லீம்களுக்கு ஹறாமாக்கப்பட்டது. இத்தகைய தடை விதித்து அருளப்பட்ட திருமறை வாக் கியங்களை அண்ணல் நபி (சல்) அவர்கள் தங்களது அசு காபித் தொழர்களுக்கு அவற்றின் முக்கியத்துவத்தை விளக்கிக் காட்டினார்கள். இக்கருத்துக்களையே உமறுப் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

"தள்ளரிய மனத்தறிவு தனையகற்றி
மெய்மயக்கந் தந்து நட்பா
யுள்ளவரைப் பகையாக்கி யுரைப்பதிவை
யெனவறியா துரைக்கப் பண்ணுங்
கள்ளுணவும் வெறிமதுவும் ஹறாமெனவ
யத்துவரக் கண்டன் பாகி
விள்ளரிய மறைப்பொருளை சகுபிகளுக்
குரைத்தெவர்க்கும் விளக்கினாரே".[1]

ஹிஜ்றி ஐந்தாம் ஆண்டிலேதான் ஸெயினப் (றலி) அம்மையாரை நபிகள் பெருமானார் திருமணம் புரிந்தார்கள். இவர் சகுசு (ஜஹ்ஷ்) என்பவரின் புதல்வி. ஸெய்னப் (றலி) அவர்களை வருணிக்க வந்த உமறுப்புலவர் உருவக வாயிலாக

1. சீறா, ஈமான் கொண்ட படலம் 2

அம் மாது சிரோமணியை வாயாற வாழ்த்துகிறார். பெண்களைக் கவிஞர் கொம்புக்கு ஒப்பிடுவர் கொம்பர் என வழைப்பர் ஸெய்னப் (றலி) அம்மையாரைக் கொம்போ என விளிக்கிறார். கொம்பு வளர்ந்தோங்க அன்பு என்னும் வித்து அவசியம், அன்பு என்னும் வித்தில் தோன்றிய புண்ணியம் என்னும் வேரூன்றி, புகழ் என்னும் கிளைகள் பரப்பி, கற்பு என்னும் ஒப்பற்ற மலர் நெருக்கமாக மலர்ந்து, நாடோறும் இன்பம் என்னும் என்னும் காய்களைக் காய்த்து, ஏக இறைவனான அல்லாஹ்வின் திருவருளை பழுக்கப் பெற்று வளர்ந்தோங்கி இருந்தது. அந்த அழகே உருவான சகுசு (ஜஹ்ஷ்) என்பவரின் மகளான ஸெய்னப் நாச்சியார் என்னும் கொம்பே என உமறுப்புலவர் இவ்வாறு நயம்படப் பாடியுள்ளார்.

> "அன்பெனும் வித்திற் றோன்றி யறமெனுஞ்
> சடைகள் விட்டுத்
> தன்புகழ் தழைத்துக் கற்பாந் தனிமலர் செறிந்து
> நாளு
> மின்பமாங் காய்கள் காய்த்திட் டிறையருள்
> பழுத்த கொம்பே
> தென்பயில் சகுசு செற்ற செயினபு நாச்சி
> யாரே".[1]

சடை என்னும் சொல் வேர் என்னும் பொருளிலும் தென் என்னும் சொல் அழகு என்னும் பொருளிலும் உபயோகப் பட்டுள்ளதைக் காணலாம் நபிகள் பெருமானாரின் அடிமையும், சுவீகாரப் புத்திரருமாகிய ஸெய்த் பின் ஹாரிஸா (றலி) என்பவர் இவரை மணந்தனர். இறுதியில் இருவரும் பிரிய வேண்டிய நிலை ஏற்பட்டது. ஸெய்த் (றலி) அவர்கள் தமது மனைவியைத் தலாக் சொல்லிவிட்டார்கள். அடிமையின் மனைவியாக இருந்தமையினால் அம் மாது சிரோன்மணி

1. சீறா. செயினபு நாச்சியார் கலியாணப் படலம் 4

மறுமண வாய்ப்பில்லாமல் இருந்தார். இத்தகைய சந்தர்ப்பத்தில் அண்ணல் நபி (சல்) அவர்கள் (றலி) அம்மையாரை திருமணம் புரிந்து கொண்டார்கள். இச்செய்தியையே,

"அன்றவர் கிருபை யாகி யகமகிழ்ந் திவரோ
டென்றும்
ஒன்றிய மனமாய்க் கற்பி லுயர்ந்தவ ரென்ன
வாழ்ந்தார்"[1].

உமறுப்புலவர் இவ்வாறு விதந்தோதுகிறார்.

இந்தத் திருமணத்தின் பின்னரே பெண்களுக்கு நாணம் ஓர் அணிகலம் என்னும் இறைமறைத் திருவாக்கு அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அருளப்பெற்றது. இதனையே உமறுப் புலவர், '......இரு நிலக் கிழமை பூண்ட, மாதர்க ளெவர்க்கு நாண மணியணிப் பூணா மென்றார்." என வருணித்துள் ளமை ஈண்டு நோக்கற்பாலது.

இந்த அடிப்படையிலேதான் பருதா முறை முஸ்லிம் பெண்களிடையே புகுத்தப்பட்டது.

"தனிமுதற் றூத ராறா மாண்டினிற் றகைமை
பெற்ற
வனைகழல் சகுபி மார்கள் வழுத்திட விருக்கு
நாளில்".[2]

என ஹிஜ்றி ஆறாம் ஆண்டு ஆரம்பமாகியது பற்றி குறிப்பிடு கிறார் உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில். இந்த ஆண்டிலேயே தான் புனித உம்றாவை நிறைவேற்ற அண்ணல் நபி (சல்) அவர்கள் அசுகாபித் தோழர்களுடன் மக்கமா நகருக்குச் சென்றது. '...மக்கத்தி,லோது ஹஜ்ஜுமுறாச் செய்ய உன்னியே, போதுந் தன்மை......' (உமுறாவுக்குப் போன படலம் 2) என்று இதுவே குறிப்பிடப்படுகிறது. மதீன மாநகரிலிருந்து மக்க மாநகருக்கு ஹிஜ்றி ஆறாம்

1. சீறா. செயினபு நாச்சியார் கலியாணப் படலம் 16
2. சீறா. செயினபு நாச்சியார் கல்யாணப் படலம் 23

ஆண்டிலே உம்றா நிறைவேற்றச் சென்றவர்களின் எண்ணிக்கை 1,400 என்னும் வரலாற்று உண்மையினை உமறுப் புலவ 'ஆற்றன் மிக்கவராயிர மேலுநா னூற்றி லக்க முடையரும்...நபியிற சூலினை...ஈண்டினார், (உம்றாவுக்குப் போன படலம் 6) எனக் குறிப்பிட்டுள்ளார். பெருமானார் (சல்) அவர்கள் உம்றா நிறைவேற்ற மதீனாவ விட்டுச் செல்லுமுன் மதீனாவுக்கும் பொறுப்பாக நுமைலா (றலி) அவர்களை நியமித்தும் சென்றார்கள் என்பது,

> "இமய வெற்பென் றிலங்கிய மாடங்க
> ளமையுஞ் செல்வ மதீனத்தை யாழ்கென
> நுமையி லாவைமுன் னோக்கி யுரைத்தவர்
> தமைய வூர்க்குத் தனியென வைத்தனர்." 1

என விவரிக்கப்பட்டுள்ளது.

நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையதும் இஸ்லாமிய வரலாற்றிலே முக்கியத்துவம் வாய்ந்ததுமான இஸ்லாமிய வரலாற்றிலே ஒரு திருப்பமாகவும் விளங்கிய ஓர் இடம்தான் ஹுதைபியா. இது மக்க மாநகரிலிருந்து ஐந்து மைல் தூரத்தில் அமைந்துள்ளது. கஃபாவின் புனித எல்லையிலே உள்ளது. அண்ணல் நபி (சல்) அவர்களும் தோழர்களும், ஹுதைபியா என்னும் இடத்தை அடைந்தமை சீறாபுராணத்திலே இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

> "திண்மை மீறிய தீனர்க ளியாவரு
> முண்மை சேர்பய காம்பரு மோங்கிய
> வண்மை சேர்மக்க மாநக ருக்கரு
> கண்மிகச் சேர்ந்தன ராண்டுஹு தைபிய்யா" 2

இங்கே நபி, தூதர் என்னும் பொருளில் பயகாம்பர் என்னும் பாரசீகச் சொல் உபயோகிக்கப்பட்டுள்ளது. நபிகள்

1. சீறா. மழையழைப்பித்த படலம் 1
2. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 76

பெருமானாரும் கூட்டத்தினரும் அங்கு வந்ததைச் சந்தேகக் கண்கொண்டு நோக்கிய மக்காக் குறைஷிக் காபிர்கள் ஆளுக்கு மேல் ஆளனுப்பிப் பார்த்தார்கள். இக்கூட்டத் தினர் உம்றா செய்யவே வந்துள்ளனர் என்று அனைவரும் திருப்தி அடைந்தனர் இறுதியாக சொற்பயின் மதியான் மிக்க சுகயிலென் றொருவன் வந்தான்' நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் சுகயில் என்னும் பெயருக்குக் கொடுத்த கருத்து இலேசு என்பதும் இங்கு, ''பதித்திவ னாம சாரம் பார்த்திடி லேசாம்...' (76) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு சுகயில் என்னும் பலத்தின் பொருளை முகம்மது நபி (சல்) அவர்கள் ஆராய்ந்து சொல்ல அற்புதமான நபிகள் பெருமானாரை நோக்கி சுகயில் ஒன்று கூறினார். எங்கள் இருசாராருக்கும் இடையில் உற்பனமாக—விந்தையாகச் செய்ய வேண்டிய கருமங்களுக்கு எல்லாம் உற்பனமாக— நன் நிமித்தமாகச் செய்ய வேண்டியது ஒன்று உண்டு' என்றான். அதாவது இரு சாராருக்கும் இடையே ஒரு சீட்டு எழுதப்படல் வேண்டும் என்று கூறினான். இக்கருத்துக் களே,

> ''சொற்பொருண் முகம்ம தாய்ந்து சொல்லிட
> சுலயி லெங்போ
> னற்புதர் தம்மை நோக்கி யறைகுவ னிருவ ருக்கும்
> விற்பன மாகச் செய்ய வேண்டுகா ரியங்கட்
> கெல்லா
> முற்பன மாகச் சீட்டொன் றெழுது த லுறுதி
> யென்றான்.''[1]

எனச் சீறாப்புராணத்திலே இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இதற்கிணங்கினார்கள் உம்மி நபி (சல்) அவர்கள். அலி (றலி) அவர்களை அழைத்துச் 'சீட்டினை எழுதும்படி பணித்தார்கள். 'ஏமநற் புகழீர் சீட்டி லெழுதுவக் கணையே தென்றார்' (78) இது அலி (றலி) அவர்கள் எழுப்

1. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 77

பிய கேள்வியாகும். வச்சனை என்பது கடிதம், சீட்டு முதலியவற்றின் முகப்பில் எழுதும் வாசகத்தைக் குறிக்கிறது. வச்சனை எவ்வாறு எழுதப்படல் வேண்டும் எனக் கேட்டதற்கு அண்ணல் றசூல் (சல்) அவர்கள் 'பிசுமில் லாகிற் றகுமா னிற்ற கீப்' என எழுதுமாறு பணித்தார்கள். இதனைக் கேட்ட சுகயில் என்பவன் 'பிஸ்மில்' என்பதன் தாத்பரியம் தனக்குத் தெரியும் என்றும் 'அற்றஹ்மா னிற்ற ஹீப்' என்பதனைப் பற்றி நான் இதற்கு முன்னர் கேட்டதில்லை என்றும் சுகயில் கூறினான். இதனைக் கேட்டதும் அண்ணல் நபி (சல்) அவர்கள் தொடர்ந்து கூறினார்கள். இக் கருத்துக்கள் இரண்டு செய்யுட்களில் இவ்வாறு அமைந்துள்ளன.

''இன்புறும் பிசுமில் லாகிற் றகுமா னிற்ற
கீமென்
றன்புறு முதலிற் கோட்டென் றகுமது வந்து
கூற
முன்புறு சுகைலென் போனு மொழிகுவன்
லாவின்
றன்பெயர் நடக்கும் வண்ண மறிகுவந் தரணி
மீதில்.''

''அற்றகுமா னிற்றகீ மென்ன வறைகின்ற
வார்த்தை யாங்க
டிறனுறக் கேட்ட தில்லை யம்மொழி தீட்ட
வேண்டா
நிறைபுக ழுடையீர் ரென்று சுகைலினி
தியம்பக் கேட்டு
பறைபயி லிறசூலுல்லா மகிழ்ந்தொரு
வசனஞ் சொல்வார்.''[1]

சீட்டின் அடுத்த வசனமாக,

'சொல்லிய விறையா மல்லா தூதரா முகம்ம
தென்றுங்
கல்வி சீருடைய வள்ளல் கவுல் கொடுத்
திட்ட வாறென்' (18)

1. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 79-80

அதாவது 'இறைவன் அல்லாஹ் ஒருவனே; அவன் திருத்தூதர் முகம்மது' என்று எழுதப்படி கூறினார்கள். இதற்கும் எதிர்ப்புத் தெரிவித்தான் சுகயில். 'உங்களை அல்லாஹ்வின் றசூல் என்று ஏற்றுக்கொண்டோமேயானால் இந்தப் பகைமை எதுவுமே ஏற்பட்டிராதே' என்று பதில் அளித்த சுகயில் அவ்வாறு எழுதுவதற்கும் எதிர்ப்புத் தெரிவித்தான். கவுல் என்னும் சொல் உடன்படிக்கை யைக் குறிக்கின்றது. இதனையே ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளில் கவிஞர்,

''ஆதிதன் றூத ரென்ன வும்மையா மறிந்தோ
மாகில்
வேதனைப் படுவ துண்டோ பகைசில விளைவ
துண்டோ.'' (82)

எனக் குறிப்பிட்டுள்ளார். இச் சொற்றொடரை ஏற்க மறுத்ததனால் நபிகள் பெருமானாரும் அதனை மாற்றும்படி உத்தரவிட்டார்கள். மாற்றி அந்தச் சொற்றொடரை நீக்கி சமாதானத்தையே நாடியவர்களாய் அதற்கு மாறாக 'அப்துல்லா மகன் முகம்மது அன்போடு கொடுத்த இணக் கத்துக்கிணங்க இம்முறை உம்றா நிறைவேற்ற மக்காக் குறைஷியர்கள் வழிவிடவேண்டும்' என்று எழுதுமாறு பணித்தமையை உமறுப்புலவர்,

''அரியதோர் புகழ்சேர் வண்மை யப்துல்லா
முகம்ம தென்போர்
பரிவோடு கவுல்தா மீந்த படியுமு றாச்செய்
தேக
வரிசையாய் மக்கத் துள்ளோர் வழிவிடக்
கடவ தென்று
தெரிவுறத் தீட்டு கென்றார் சுகயில்பின் சிறிது
சொல்வான்.'' [1]

1. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 83

எனக் குறிப்பிட்டுள்ளார். இந்த நிபந்தனைக்கு மாறாக வேறொரு நிபந்தனையை இந்த உடன்பாட்டில் எழுதுமாறு கூறினான் சுகயில். 'இந்த ஆண்டு திரும்பிச் செல்லுங்கள். அடுத்த ஆண்டு வாருங்கள். அவ்வாறு வந்தால் உங்களையும் உங்கள் கூட்டத்தாரையும் ஹஜ்ஜையும் உம்றாவையும் நிறை வேற்ற விடுவோம்' என்று ஒரு நிபந்தனை எழுதுமாறு கூறினான். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு வருணிக் கிறார்:

அம்மொழி பொருந்தா திந்த வாண்டினுக்
ககன்று போகிச்
செம்மையா யெதிர்ந்த வாண்டின் மீண்டிவண்
செறிந்த காலை
யும்மையாஞ் செறுத்தி டாம லுவந்து ஹஜ்ஜு
முறாச் செய்ய
வெம்மையி லாது விட்டு விடலென வெழுக
மென்றான்."

சுகயிலென்பவன் சொன்ன நிபந்தனையை எழுதும்படி அண்ணல் நபி (சல்) அவர்கள் அனுமதி வழங்கினார்கள். அலி (றலி) அவர்கள் அவ்வாறே எழுதினார்கள். அதனை நபிகள் நாயகம் (சல்) அவர்கள் கொடுக்க சுகயில் என்பவன் அதனைப் பெற்றுக்கொண்டு மிக்றசு என்பவனுடன் மக்க மாநகரை அடைந்தான். இந்நிகழ்ச்சி சீறாப் புராணத்தில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

"எழுதின ரலியு மன்னோ ரியைந்திடும் படியே
சற்றும்
வழுவறக் கடுதா சின்கண் வரைந்தவுத்
தரத்தை யென்றும்
பழுதிலான் றூதர் நல்கப் பரிந்தந்த சுகயில்
வாங்கி
யெழுகென மிகற சோடிவ் விருவரு மக்கம்
புக்கார்."[1]

1. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 87

முஸ்லிம்களுக்கும் முஸ்லிம் அல்லாதாருக்கும் இடையில் ஹுதைபிய்யா என்னும் இடத்தில் ஏற்பட்ட உடன்படிக்கையில் இடம் பெற்ற எல்லா நிபந்தனைகளும் சீறாப் புராணத்தில் வருணிக்கப் படவில்லை உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் உள்ள உமறாவுக்குப்போன படலத்தில் உம்றா பற்றிய செய்தியையே விவரிக்க முற்பட்டாராகையால் உடன்படிக்கையில் இடம் பெற்ற ஏனைய நிபந்தனைகளை விட்டிருக்கலாம். முஸ்லிம்கள் அணியிலிருந்த பலருக்கு இந்த உடன்படிக்கையில் நியாயமற்றவை எனத் தோன்றிய நிபந்தனைகளைப் பற்றியும் அத்தகைய எதிர்ப்பினைத் தெரிவித்தவர்களைப் பற்றியும் உமறுப்புலவர் குறிப்பிடவில்லை. அந்தச் சம்பவங்களும் இந்தப் படலத்துக்குப் பொறுத்தமற்றவை எனக் கருதப்பட்டிருக்கலாம். மக்காக் காபிர்களின் சார்பில் உடன்படிக்கையில் கைச்சாத்திட்ட தீமையே உருவெடுத்தவர்களான சுகயிலும் மிக்றசும் மக்காவுக்குத் திருப்பிச் சென்று விட்டனர். ஆனால் நபிகள் பெருமானார் (சல்) அவர்களுக்கும் அவர்களது தோழர்களுக்கும் அவ்வாறு திருப்பி மதீன மாநகருக்குச் சென்று விடமுடியாது. ஏனெனில் அவர்கள் ஒரு குறிக்கோளை நிறைவேற்றவே அங்கு வந்தவர்களானர். ஹஜ்ஜோடு சம்பந்தப்பட்ட உம்றா நிறைவேற்றும் நோக்கத்தோட அவர்கள் அங்கு வந்தார்கள். அதற்காக நிய்யத்தை வைத்திருந்தார்கள் அந்த அவர்களது நிய்யத்தை— எண்ணத்தை நிறைவேற்றும் முகமாக ஓர் ஒட்டகத்தைக் குறுபானி கொடுத்தார்கள். அர்ப்பணித்தார்கள். உடலில் கத்தூரி மணம் (நாணம்) கமழும் அண்ணல் (சல்) அவர்கள் இவ்வாறு தோழர்களுடன் சேர்ந்து நியாயத்தை நிறைவேற்றியமை பற்றி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

''மாயத்தின் வடிவ தாக வந்தவர் போய
பின்னைச்
சாயத்தி னானை வீசும் பீபுஜூ மறாச் செய்ய

நீயத்து நினைந்த தன்மை தடையற நீங்க
வேண்டித்
தேயத்தோர் புகழ் வொட்டை யறுத்துநற்
குறுபான் செய்தே.''[1]

ஹுதைபிய்யா உடன்படிக்கையை விவரித்த பின்னரே உமறுப்புலவர் உதுமான் (றலி) அவர்கள் மக்காவுக்கு அனுப்பப்பட்ட நிகழ்ச்சியை குறிப்பிடுகிறார். நபிகள் பெருமானார் உதுமான் (றலி) அவர்களை வேண்டியதும் அவர்கள் அங்குச் சென்றதும் ஒரு செய்யுளில் இவ்வாறு விவரிக்கப்படுகிறது.

''மடிவிலா வுதுமா னென்னும் வள்ளலை
யினிது கூவித்
துடவைசூழ் மக்க மென்னுந் தொன்னகக்க
கேகு மென்னப்
படிபுகழ்ந் தேத்த வன்னோர் பரிவுற மகிழ்ந்து
போனார்.''[2]

அண்ணல் நபி (சல்) அவர்களும் தோழர்களும் மதீன மாநகரை நோக்கி நடந்தார்கள் என்றும் பின்னர் மக்க மாநகரிலே உதுமான் (றலி) அவர்களை எதிரிகள் கொன்று விட்டனர் என்று ஒரு வதந்தி பரவியது என்றும் வருணிக்கட்பட்டுள்ளது.

''.........மதீன முதூர் வளநக ரடுக்கும் போதிற்
றரைபுகழ் மக்கந் தன்னிற றகைபெறு முதுமா
னென்னுங்
குரைகழற் சோலைக் கொன்றா ரெனுமொழி
பிறந்த தன்றே'' [3]

இச் செய்தி முஸ்லிம்களிடையே பரபரப்பை ஏற்படுத்தி விட்டது. வெற்றி வாழ்வு அல்லது வீர மரணம் என்னும்

1. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 88
2. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 105
2. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 106

தோரணையில் முஸ்லிம்கள் ஆலோசனை நடத்தினர். அண்ணல் நபி (சல்) அவர்கள் உடனே தங்கள் அருமைத் தோழர்களை ஒன்று திரட்டி கலந்தாலோசித்தார்கள். உதுமான் (றலி) அவர்களின் கொலைக்குப் பழிவாங்க வேண்டும் என்று திட்டமிட்டார்கள். இத்துறையில் ஈடுபடுவதற்கான உறுதிமொழி தோழர்களிடமிருந்து கோரப்பட்டது. ஒருவர் பின் ஒருவராக உறுதிமொழி கூறினர். வாய்மைப்பாடு நிகழ்த்தினர். இதற்கிடையில் உதுமான் (றலி) அவர்கள் கொலை செய்யப்பட்டது பொய் என்னும் செய்தி பெறப்பட்டது. இத் தருணத்தில் அல்லாஹ்விடமிருந்து ஓர் ஆயத்து இறங்கியது. அந்த ஆயத்திலே 'வாய்மைப்பாடு நிகழ்த்தின எல்லோருக்கும் அல்லாஹுத் தஆலா நல்லருள் பாலித்தான்' என்று கூறப்பட்டிருந்தது. இந்தக் கருத்துக்களை கொண்டதே இந்தச் செய்யுள்.

> "மறையுண ருதுமா னென்னு மன்னவ ரிறத்தல் பொய்யென்
> றறைதரு வசனங் கேட்டங் ககமகிழ்ந் திருந்த பின்னர்
> நிறைதரு வாய்மைப் பாடு நிகழ்த்தின பேர்கட் கெல்லா
> மிறையவ னருளி னாலே யாயத்தொன் றிறங்கிற் றன்றே." 1

இவ்வாறு அல்லாஹுத் தஆலாவினால் இறக்கப்பட்ட அந்த இறைமறை வாக்கியத்தின் கருத்தினைப் புரிந்து கொண்ட அண்ணல் நபி (சல்) அவர்கள் அங்கிருந்த தோழர்களுக்கு அதன் தாத்பரியத்தை விளக்கினார்கள். அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு உறுதிமொழி வழங்கியவர்கள் சுவர்க்க லோகத்தை (உவணை) அடைவார்கள். அவர்களுக்கு நரக லோகம் (நிரையம்) உரித்தாக மாட்டாது. இவ்வாறு அதன் தாத்பரியம் விளக்கப்பட்டமையே இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடப்பட்டுள்ளது.

---

1. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 110

"வந்தவா சகத்தைத் தேர்ந்து தீன வர் வதனை நோக்கிப்
பந்தனை வாய்மை யெற்குப் பகர்ந்தது யோர்க ளெல்லாம்
விந்தைசே ருவணை மீதின் மேவுவர் நிரைய மில்லென்
றந்தமி லிறைவன் றூத ரறைந்தன ருளங்க ளிந்தே."[1]

இப்பால் றசூல் (சல்) அவர்களும் தோழர்களும் மதீனா மாநகரை நோக்கிச் சென்று கொண்டிருக்கையில் மற்றொரு திருமறை [வசனப் பெருமானார் (சல்) அவர்களுக்கு இறங்கியது. கயவர்களாகிய இஸ்லாத்தைப் பின்பற்றும் முஸ்லிம்களான தீனவர்களுக்கு அன்பாய் வெற்றியைக் கொடுத்தோம் என்ற அல்லாஹுத் தஆலா கூறுவதாக அமைந்திருந்தது அவ்விறை வாக்கியம். இதனையே உமறுப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

"ஈனமி லாயத் தொன்றங் கிறங்கின கயவா மீதில்
தீனவ ரெவர்க்கு மன்பாய்க் கொடுத்தனஞ் செயம தன்றே."[2]

சீறாப்புராணத்தில் இறுதியாக விவரிக்கப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி பல பெரியார்கள் இஸ்லாத்தைத் தழுவியமை பற்றி குறிப்பிடுவதாகும்.

"பரிவி னாலிசு லாமினிற் புகவெனுப் படியா
லரிய திண்டிறல் வயவர்கள் வந்தன ரவரின்."[3]

அவர்களுள் நால்வர் குறிப்பிடத்தக்கவர்களாவர். அந்நால் வரும் பல்வேறு துறைகளில் இஸ்லாத்தின் பாதுகாப்பிற் காகவும் வளர்ச்சிக்காகவும் அரும்பாடு பட்டவர்களாவர்

1. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 111
2. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 112
3. சீறா. சல்மா பொருத படலம் 3

காலிது இப்னு வொலீத் (றலி) என்பவர் ஒருவர். இவரது வேலாயுதத்தில் எப்பொழுதும் மாமிசம் இருக்கும் என்ற அவரது வலிமை போற்றப்படுகிறது. மற்றவர் அமீர் இப்னு ஆஸ் (றலி) அவர்களாவார். இவர் கண்ணைக் கவரும் அழகு மிக்கவர் என்றும் மானின் கண்கள் போன்றிருக்கும் மை தீட்டப்பட்ட கண்களை உடைய மகளிர் மையல் கொள்ளக் கூடிய அழகினை உடையவர் என்றும் வருணிக்கப்பட்டுள்ளார். மூன்றாமவர் உகைல் இப்னு ஹூத்தாலிப் (றலி) அவர்கள். இவர் எப்பொழுதும் வாசனை கமழ்கின்ற மலர்களினாலான மாலையை அணிந்திருப்பவர் என்று பாராட்டப்பட்டுள்ளார். இஸ்லாத்தைத் தழுவிய நான்காமவர் உதுமான் இப்னு தல்ஹா (றலி) என்பவராவார். இவரோ காமதேனுவைப் போன்று காட்சி அளிக்கும் கைத்தலத்தை உடையவர் என்று புகழப்பட்டுள்ளார். இக்கருத்துக்களையே உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் சிறப்பாக இவ்வாறு விவரித்துள்ளார்.

ஊன்கி டந்தவேற் கரனொலீ துதவுகா லிதுவு
மான்கி டந்தவ விழிமின்னார் மால்கொளும் அமுறுங்
கான்கி டந்தமா லிகையபீத் தாலிபுக் கையிலு
மான்கி டந்தகைத் தலத்தலகா வருளுது வானும்''[1]

இவ்வாறு இஸ்லாத்தில் பலர் சேர்ந்து நன்மை பெற்றமை குறிப்பிடப்படுகின்றது.

ஆறு ஹிஜ்றி ஆண்டுகளில் நிகழ்ந்த சம்பவங்களுள் ஒரு சில விவரிப்பதுடன் சீறாப்புராணம் முடிவுறுகிறது. உறனிக் கூட்டத்தார் படலம் சீறாப்புராணத்தின் இறுதிப் படலமாக அமைந்துள்ளது. அண்ணல் நபி (சல்) அவர்கள் மக்க மாநகரிலிருந்து மதீன மாநகரத்துக்கு ஹிஜ்றத்துச் சென்று அங்கு பதினொராவது ஆண்டிலே தான் நபிகள் பெருமானார் (சல்)

1. சீறா. சல்மா பொருத படலம் 4

அவர்கள் வபாத்தானது இந்த அடிப்படையில் பார்க்கும் பொழுது நபிகள் பெருமானாரின் மதீனா வாழ்க்கையுடன் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளுள் ஏறத்தாழ சரி பாதி கால நிகழ்ச்சிகளே சீறாப்புராணத்தில் இறுதிக் காண்டமான ஹிஜ்றத் காண்டத்தில் இடம்பெற்றுள்ளமையைக் காண லாம். ஆறாண்டுக்கால வரலாற்று நிகழ்ச்சிகளை விவரிக்க சீறாப்புராணத்தில் 47 படலங்கள் பயன்படுத்தப் பட்டுள் ளன. ஹிஜ்றத்துக்கு முந்திய நபிகள் பிரானின் வாழ்க்கை சீறாப்புராணத்தில் 45 படலங்களிலே விவரிக்கப்பட்டுள்ளதை ஈண்டு நோக்கற்பாலது. எனவே, நபிகள் பெருமானாரின் இறுதி ஐந்து அல்லது ஆறு ஆண்டு வாழ்க்கையை வருணிக்க உமறுப்புலவர் மேலும் நாற்பதுக்கு மேற்பட்ட படலங்களைப் பயன்படுத்தி இருத்தல் வேண்டும். ஏனெனில் நபிகள் நாதரின் வாழ்க்கையின் இறுதி ஐந்து ஆறு ஆண்டுகளில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல நிகழ்ச்சிகள் நிகழ்ந் துள்ளன. நபிகள் நாயகத்தின் இறுதி ஐந்து ஆறு ஆண்டு களில் நடைபெற்ற வரலாற்றுச் சம்பவங்கள் சீறாப்புராணத் தில் இடம்பெறாமைக்குரிய காரணம் இவற்றை வருணிக்க முயல்வதற்கு முன்னரே உமறுப்புலவர் இறையடி சேர்ந் துள்ளார் என்பதேயாகும். வாய்ப்புக்கிட்டி இருந்தால் நிச்சயமாக உமறுப்புலவர் நபிகள் பெருமானார் (சல்) அவர் களின் வபாத்து உட்பட வரலாற்று முக்கியத்துவம் உள்ள பல சம்பவங்களை வருணித்திருப்பார். அத்தோடு சீறாப் புராணத்தையும் பூரணத்துவம் பெற்ற தொன்றாக அமைத் திருப்பார்.

எனவே இதுகாறும் கூறியவற்றிலிருந்து புரிந்து கொள் வது? உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் நபிகள் பெரு மானார் (சல்) அவர்களின் வாழ்க்கையோடு நெருங்கிப் பின்னப்பட்ட வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல நிகழ்ச்சிகளை மிக நுணுக்கமாக வருணித்துள்ளார். அவற் றைச் சொற்சுவை மிக்கனவாய்ப் பாடியுள்ளார்.

பொருளாழம் உடைத்தனவாய் அமைத்துள்ளார். கவி வளம் நனி சொட்டச் சொட்ட அவற்றை செய்யுட்களாக வடித்துள்ளார். ஓசை நயம் ததும்புவனாக அவற்றைக் கவிதை உருவில் அளித்துள்ளார். சந்தர்ப்பத்துக்கும் சூழலுக்கு ஏற்ப அவற்றைப் பல் சுவையும் வழிந்தோடு வனவாகப் பா வடிவில் தீட்டியுள்ளார். சுருங்கக்கூறின் தமிழ் மரபை பேணும் அதே நேரத்தில் இஸ்லாத்துக்கு முற்றிலும் முரணாகாத வகையில் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர் புடைய வரலாற்று முக்கியத்துவம் நிகழ்ச்சிகளைத் தத்ரூபமாக வருணிப்பதில் உமறுப்புலவர் மாபெரும் வெற்றி ஈட்டி உள்ளார் எனக் கூறின் அது மிகையாகாது.

# உமறு தரும் பெண்மை நலம்

டாக்டர் கிருட்டிணா சஞ்சீவி, எம்.ஏ., பிஎச்.டி.,

'உலகம் பெண்—ஆண் என்னும் இருபாலாலும் ஆக்கப்பட்டிருக்கிறது இரண்டுஞ் சேர்ந்த ஒன்றே உலகம் என்பது. இரண்டும் ஒன்றி இயங்கினாலன்றி உலகம் நல்வழியில் நடைபெறாது'.

'பெண் தாயாகலான், பெண்ணலன் பெரிதும் ஓம்பப் பெறல் வேண்டும். பெண்ணலன் ஓம்பப்படாத இடத்தில் வேறு எவ்வித நலனும் நிலவல் அரிது. ஒரு நாட்டு நலன் அந்நாட்டுப் பெண்மக்கள் நிலையைப் பொறுத்தே நிற்கும்' —என்பது 'பெண்ணின் பெருமை என்ற நூலின் ஆசிரியர் திரு.வி.க. அவர்களின் முன்னுரை தரும் பொன்னுரை.

கி.பி. 6ஆம் நூற்றாண்டில் பாலை நிலமான அரபு நாட்டில் தோன்றினார் (இறுதி) நபிகள் நாயகம் (சல்). இவர் தீனுல் இஸ்லாமை நிறுவினார். இவரது வரலாற்றைத் தமிழ் நாட்டில் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து சிறப்புற்றிருந்த உமறுப்புலவர் தமிழ் இலக்கிய மரபுகளைத் தழுவித் தமிழ்க் காப்பியமாகப் பாடியுள்ளார். உமறு பாடிய சீறா வரலாறு தழுவிய காப்பியம். வரலாறு நிகழ்ந்த இடம் அரபுநாடு எனினும் காப்பியத் தலைவர் அரபு நாட்டினர் எனினும் தமிழ்நாட்டுக் காட்சிகளும் தமிழ்ப் பண்புகளுமே சிறக்கப் பரக்கச் சீறாவில் பேசப்படுகின்றன. காப்பியத்தில் காணப் படும் தாய்க்குலத் திலகங்களைத் தமிழ்ப் பண்பாட்டிலே திளைத்தவர்களாகவே காட்டுகிறார் புலவர். ஒரு நாட்டின் பெருமையும் நாட்டு மக்களின் பெருமையும் அந்நாட்டுப் பெண்கள் பெருமையினாலேயே சிறப்புப் பெறும். ஆகையால் அரபுப் பெண்களின் பெண்மை நலங்களைத் தமிழ்ப் பண்பின் பின்னணியில் கண்டு புகழ்ந்து பாடுகின்றார் உமறுப் புலவர்.

எனவே, தண்டமிழ்ப் புலவர் உமறு தமிழ்நாட்டுப் பெண்களின் அன்புக்கும் அருளுக்கும், அறத்திற்கும் ஆற்றலுக்கும், உண்மைக்கும் உறுதிக்கும், எழிலுக்கும் ஏற்றத்திற்கும், ஒழுக்கத்திற்கும் உயர்வுக்கும், கடமைக்கும் கற்புக்கும், பண்பிற்கும் பணிவுக்கும், பொறுமைக்கும் பெருமைக்கும், வீரத்திற்கும் தியாகத்திற்கும் ஏற்றவாறு காப்பியப் பெண்களையும் சித்திரித்துச் சொல்கிறார்.

உமறு பாடிய 92 பாடல்களுள் 6 படலங்கள் பெண் பாத்திரகளின் பெயர்களைக் கொண்டு விளங்குகின்றன இரண்டு படலங்கள் காப்பிய நாயகி கதீஜா பிராட்டியாரின் திருமணம் பற்றிப் பேசுகின்றன 'விலாதத்து' காண்டத்துள் 'அலிமா முலையூட்டுப் படலம்', 'கதீஜா கனவு கண்டபடலம்', 'நுபுவத்து காண்டத்துள் பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம்', 'ஹிஜிறத்து' காண்டத்துள் 'பாத்திமா திருமணப் படலம்', 'செயினபு நாச்சியார் கலியாணப் படலம்', 'கவுலத்தை விட்டுக் கூட்டின படலம்', முதற் காண்டத்திலேயே 'மனம் பொருந்து படலம்', 'மணம்புரி படலம்' என்ற திருமணம் பற்றிய இரண்டு படலங்களும் காணப்படுகின்றன.

ஆமினா, அலிமா, சிற்றன்னை பாத்திமா, மகள் பாத்திமா, மனைவியர் கதீஜா பிராட்டியார், ஆயிஷா, அபுசா, செயினபு, உம்முசல்மா, ஜுவைரு, சயினபு நாச்சியார், ஆசிறு மனைவி சுமையா, உமறு கத்தாபு உடன் பிறந்தாள் பாத்திமா, நபிகள் மகள் ருக்கையா, கவுலத்து ஆகிய பெண்களின் பெருமைகளைக் கற்பனை வளமும் கருத்துச் செறிவும் கவிதை நயமும் ஒருங்கே அமையப் பாடியுள்ளார் உமறுப் புலவர். புலவர் காட்டும் பெண்மை நலங்களைக் காண்போம்.

**ஆமினா:** நாயகத் திருமேனி அவர்களின் நற்றாய் ஆமினா. அன்னை ஆமினாவின் இளமைக்கும் எழிலுக்கும் ஏற்றவாறு அவர்களை மென்கொடி, பூங்கொடி, குலக்கொடி, மலர்க்

கொடி, மயில், மான், குயில் என இனிமை ததும்ப எடுத்துக் கூறுகின்றார் புலவர்.

| | |
|---|---|
| மென் கொடி யாமினா.......................... | 5:32 |
| குலக்கொடி மயில் | 5:48 |
| மென் மயில் | 5:34 |
| மடமயில் | 5:44 |
| மயில் | 5:46 |
| பொன் மயில் | 5:47 |
| அன்னமோ மயிலோா வெனுமொரு<br>மடமா னாமினா | 5:80 |
| பூமலர்க் குழலி யாமினா வென்னும்<br>பூங்கொடி | 5:124 |
| கோட்டு மாங்குயி லாமினா | 6:54 |
| செம்பொற் பூங்கொடி யாமினா | 6:56 |
| பொற்றொடி | 6:93 |
| மலர்க்கொடி | 6:94 |
| ஆமினா வெனுங் குலக்கொடி | 6:98 |
| பொறிநிக ராமினா வென்னும் பூங்கொடி | 8:2 |

பேரெழில் வாய்ந்த அன்னை ஆமினாவின் குழலழகை உமறுப்புலவர் விளக்கும் திறன் பாராட்டற்குரியதாகும்.

| | |
|---|---|
| மஞ்சு வார்குழ லாமினா | 5:33,68 |
| போது பேர்குழ லாமினா | 5:52 |
| மன்ற லங்குழ லாமினா | 5:53,64 |
| செறிந்த வார்குழ லாமினா | 5:55 |
| வளைக்க ருங்குழ லாமினா | 5:60 |
| மருமலர் செறிந்து வண்டுகண் படுக்கு<br>மஞ்செனுங் கருங்குழன் மடந்தை | 5:113 |
| வண்டணி குழலா ராமினா வெனும்<br>பேர் மடந்தை | 5:119 |

| | |
|---|---|
| கொந்து லாங்குழ லாமினா | 6:55 |
| கானமர் குழலா ராமினா | 6:93 |
| கடிம லர்க்குழ லாமினா | 7:88 |
| வண்ண வார்குழ லாமினா | 7:89 |
| போது லாங்குழ லாமினா | 7:91 |

நபிகள் நாயகத்தின் அன்னை ஆமினா அவர்களின் தோற் றத்தில் காணப்படும் எழிலையும் உறுப்பு நலன்களையும் உமறுப்புலவர் பாடும் திறம் கற்போர்க்கு களிப்பேருவகை ஊட்டுவதாகும்.

| | |
|---|---|
| ...ஆமினா வென்னு மடந்தை | 5:109 |
| சேயிழை யாமினா | 5:112 |
| அணியிழை சுமந்த ஆமினார் | 5:125 |
| அரிவை யாமினா | 6:37 |
| மடந்தையிற் சிறந்த லாமினா | 6:94 |
| இலங்கிழை யாமினா | 6:95 |
| ...தங்குலத் திருத்திழை யாமினா | 8:31 |
| சிலைநுதற் கயற்க ணாமினா | 5:116 |
| நவ்விநேர்க் குறுவ்விளி யாமினா | 6:56 |
| அரந்துடைத் தொளிருங் கதிரிலை வேற் கண்ணாமினா | 6:76 |
| விட்டொளிர் விளங்குமி னாமினா | 8:34 |
| கொடியிடை யாமினா வென்னுங் கோதை | 8:35 |
| கருவிளை வரிவிழிக் கன்னி யாமினா | 8:36 |
| குறைவறாக் கற்பெனுங் கோதை மாது | 8:39 |
| சிறுநுத லாமினா | 8:41 |
| நகைமணி முறுவ லாமினா | 7:24 |
| அலத்தக மலர்ப்பதத் தாமினா | 8:1 |
| பிடிநடை யாமினா | 8:4 |

இனிமையும் அருளும் ஒருங்கே அமைந்த அன்னை ஆமினாவின் மொழிச் சிறப்பினை, 27 1

இக்கெனும்மொழி யாமினா 5
தேன்மொழி யாமினா 2:56
கண்டெனு மொழியார் 6:79, 119
சூதர மொழியா ராமினா 5:99
கனிமொழி 5:93
அனநடைச் சின்மொழி யாமினா 9:5

என்று நயப்படப் பாடுகிறார் உமறுப்புலவர்.

பெருமானார் நபிகள் நாயகத்தைச் சுமந்து பெற்ற ஆமினா இருந்து வாழ்ந்த மனையின் சிறப்பை வியந்து பாடும் உமறுப்புலவர் மனைக்கு விளக்காய்த் திகழ்ந்த குலக்கொடி ஆமினாவின் சிறப்புகளையும் ஒன்று சேர்த்துப் புகழ்ந்து மனைச்சிறப்பை மாண்புடையதாக்குகின்றார்.

இந்து வாணுத லாமினா மனை 5:61
வரைத்தனிக்கொடி யாமினா
மனை 5:65
விரிஞமி றுதறிக் கருங்குழன் முடித்த
மடக்கொடி ஆமினாமனை 5:70
ஆமினா திருமனை 5:71;77;82;100.
சூன்முதி ராமி னாமனை 5:72
மண்ணகத் திருந்த வாமினா மனை
வானவர் பதியென லாமால் 5:76
நவ்விவேல் விழியா ராமினா
விருக்கு நறைமனை 5:81
அறந்திக ழாமி னாதிரு மனை 5:97
பானலங் கடந்து சேலெனப்
பிறழ்ந்து
பரந்துசெவ் வரிக்கொடி யோடி
மான்மருள் விழியா ராமினா
விருந்த வளமனை 5:105
முருகுகொப் பளிக்கு மாமினா
மனை 5:107

கருவிழிக் கனிமொழித்
துவர்வாய்
பொலங்கொடி யாமினா
மணி மனை 5:118
மடந்தை யாமினா மனை 7:90.

ஆண்களில் அழகுமிக்கவர் அன்புடையவர் அப்துல்லா. பெண்களில் எழில்மிக்கவர் ஆமினா. அப்துல்லாவை விரும்பி மணம் செய்து கொள்ள வந்த செல்வப் பெண்டிர் பலர், ஆமினாவின் அழகை விரும்பி அவளை மணக்க முன் வந்தவர் பல செல்வந்தர்கள். இறையருளாலே 'சினவு வேற்கரத் தப்துலா வெனுமொரு சிங்க'த்தை 'ஆமினா வெனுங்குல மடமான்' மணம் செய்து கொண்ட செய்தியை,

"எனக்கு னக்கென மடந்தையர் மணத்தினுக்
கிகலத்
தனக்கு நேரிலா லாமினா ளெழுதிய படிதனி
முடிந்து
வனக்க ருங்குழ லாமினா வெனுமட மானைச்
சினக்கும் வேற்கரத் தப்துல்லா மணத்
தொடுஞ் சேர்ந்தார்." 1

என்று கவிதை நயஞ் சிறக்கப் பாடுகின்றார் உமறுப்புலவர்.

களிறு போன்ற வீரப் பெருமகனாராகிய அப்துல்லா அவர்களுக்கு உற்ற துணைவியாகவும் (பிடி) அவருடைய உயிராகவும் வாழ்ந்தார்கள். ஆமினா 'தலைவன் தாள் தலைப்படல்' தலைமகளுக்குரிய சிறந்த பெண்மைப் பண் பல்லவா?

"...களிறுக்கோர் பிடியும் போலவர்
உயிரென விருந்தசைந் தொசிந்த பூங்கொடி
மயிலெனு மாமினா வென்னு மங்கையே".2

1. சீறா. நபியவதாரப் படலம் 60
2. சீறா. நபியவதாரப் படலம் 9

என்று சிறப்பிக்கும் உமறுவின் உவமைத்திறன் ஆமினாவின் பெண்மை நலத்திற்குப் புகழ் காட்டுகிறது.

அன்னை ஆமினா அப்துல்லா இல்லில் புகுந்து சுடர் விட்டு எழும் முழுமதியாக இருந்தார்கள். ஒளிமிக்க மாணிக்க மாக விளங்கினார்கள். தனிச் சிறப்புகளைத் தன்னிடத்தே கொண்ட தங்கக்கொடி 'நற் பூவையார்', 'கற்பெலாம் திரண்டு உருக்கொண்ட கன்னி' என்று ஆமினாவின் உள்ளத் தூய்மையையும், ஒழுக்கச் சிறப்பினையும் தெரிவிக்கும் உமறுப்புலவர் இன்று ஒருபடி மேலே சென்று,

"அறத்தினுக் கில்லிட மருட்கோர் தாயகம்
பொறுத்திடும் பொறுமையிற் பூமிக் கெண்
மடங்
குறைப்பெருங் குணத்தினுக் கொப்பி
லாமணி
சிறப்பினுக் குவமையில் லாத செல்வியே".[1]

என்று பாடி, நபிகள் நாயகத்தின் அன்னையின் புகழை உயர்த்துவதோடன்றி அன்னையின் பெண்மை நலத்திற்கு அழியாத முத்திரையையும் பொறித்து விடுகின்றார். உவமையே இல்லாத உயர்ந்த நிலையை நல்கி மகிழ்கின்றார். புலவர் மன்பதை காக்க வந்த புண்ணியனைப் பெற்ற தாய்க்கு தாய்மைக்கு புலவர் செய்யும் கைம்மாறு அல்லவா இது!

அறச்சிறப்பு, அருட்சிறப்பு, பொறைச்சிறப்பு. குலச் சிறப்பு நான்கும் நாயகத் தாயார்க்கு நவிலப்படுகின்றன.

உலக மக்கள் உள்ளத்திலே உயர்ந்ததாக, கிடைப்ப தற்கு அரிதாக, ஆழ்கடலில் ஆழ்ந்து வளரும் செம்பவளம் கொம்பை ஆமினாவுக்கு உண்மையாக்கி காட்டுகிறார். உமறுப்புலவர் குலத்தின் பெருமையை உயர்த்திய பெருங் கொடி ஆமினா. குறைஷியர் குலத்தை ஒரு பெருங்கட

1. சீறா. நபியவதாரப் படலம் 11

னுக்கு ஒப்பிடுகிறார். இயல்பாகக் கடல் தன்னிடத்தே யுள்ள செல்வங்களைத் தன் அலைவீச்சுகளால் கரையில் ஒதுக்கும் தன்மையுடையது. அத்தகைய வலிமை வாய்ந்த அலைவீச்சுகளால் தாழ்ந்துவிடாது உயர்வாக நிற்கின்ற செய்பவளக் கொப்பு போன்றவர்கள் ஆமினா ஆகலின் குறைஷியா குலம் எத்தனை பெரிய சிறப்புகளைப் பெற்றிருப்பினும் ஆமினா பெற்ற சிறப்பே தலையாய சிறப்பு என்று போற்றுகின்றார் புலவர்.

அடுத்து, ஆமினா அவர்களின் நகையழகையும், மொழி இனிமையையும் பாராட்டிப் பேசுகிறார் உமறு. முத்த வெண்ணகையினையும், 'கனிமொழி'யினையும் பெற்ற 'குலமயில் ஆமினா'வும் 'மோகன சித்திர அப்துல்லா என்னும் செம்மலும்', 'ஒத்து இனிது அமுதம் உண்டு' வாழ்ந்தனர் என்பது கவியின் கூற்று.

நவமணிகளில் உயர்ந்தனவும் சிறந்தனவுமாகிய மாணிக்கம் பவளம், முத்து மூன்றையும் பண்பும் பயனும் குறித்து உவமிக்கும் நயம் உமறுப்புலவரின் புலமைத் திறனுக்கு எடுத்துக்காட்டாயமைகிறது.

இன்பியலைத் தொடங்கிய விரைவிலேயே துன்பியலையும் காண வேண்டிய நிலை வந்துவிடுகிறது. அன்னை ஆமினா அவர்களுக்கு, நபிகள் நாயகம் அவர்களைச் சூல் கொண்ட ஏழாம் மாதத்தில் அப்துல்லா வாணிபத்திற்காகச் சென்ற இடத்தில் இறந்துவிட்டார். ஆமினாவின் துன்பம் தொகுத்துரைக்கத் தொலையாத ஒன்றாகிவிடுகிறது. உலக மக்கள் துன்பத்தை மாற்ற வந்த பெருமானார் நபிகள் நாயகத்தின் தாய் கணவனை இழந்து நிற்கும் துன்பத்திற்கு இலக்கானார் என்றால் அவரைத் தேற்ற வல்லார் யார்? உலகியல் உணர்ந்தும், உறவினர் கூறிய மொழிகளாலும் தன்னைத் தானே தேற்றிக் கொள்ளும் திறம் பெறுகின்றாள் ஆமினா.

''மாற்றங் கேட்டலு மடமயின் மனமுடைந் தலறித்
தோற்று மாமழை சொரிந்தெனக் கண்ணினீர்
சொரிய''

... ... ... ... ... 5:44

வருந்தி நொந்தழு தாமினா ... ... ... 5:45

''சலித்து விம்மிய மயிலினைக் கண்டுமெய் தளர
வலித்த தொகை விதிகொலோ மகப்பெறும் பலனோ
பலித்த தேதென வறிகிலோ மென்பதை பகைத்தே
யொலித்ததை யோவென விரங்கின ரூரினிலுளரே.''[1]
5:46

''இனத்து ளார்சொலு நல்வழிக் குருகிநெஞ்
சிடைந்து
நினைத்த பற்பல துன்பமு மகற்றிநீ ணிலத்தி
லனைத்தை யும்விதித் தவன்செய வினையுமற் றறிந்து
மனத்தி னிற்றெளி வாகினர் குலக்கொடி
மயிலே.''[2]
5:48

ஒரு பெண்ணுக்குப் பெருமை தரும் நிகழ்ச்சி மகப்பேறு. அந்த மகப்பேறிலும் கூட இன்பம் காண இயலாதபடி அமைந்த இறைவன் சோதனையை விதி என்று ஏற்றுக் கொண்டார் ஆமினா. எனினும் சூலுற்ற மகளுக்குரிய உணர்வுகள் ஆமினாவுக்கு எப்படி இருந்தன என்பதை சபர் என்ற பெண்ணின் சலிப்புகளாகக் காட்டுகிறார் புலவர்.

''மண்ணருந்திலள் புளிப்பையும் விரும்பிலள்
வயினோ
யுண்ணி றந்தில மெய்பல வருந்தில வுதரக்

1. சீறா. நபியவதாரப் படலம் 46
2. சீறா. நபியவதாரப் படலம் 4

கண்ணி ருந்தபூப் பொன்றுமே கண்டில
கனிகென்
பண்ணி ருந்தவாய் வெளுத்தில பயன்பெறும்
படியே.''[1]
''சிறுத்த மெல்லிடை பருத்திருந் திலதிரு
வுதரம்
பொறுத்து வீங்கில வுந்திமேற் புடைத்தில
பொருப்புங்
கறுத்தி ருந்தில பசுநரம் பெழுந்தில
பொருப்புங்
கறுத்தி ருந்தில பசுநரம் பெழுந்தில கவின்கள்
வெறுத்தி ருந்தில கருப்பமென் றழகுறும்
விதமே.[2]

அப்துல்லாவின் மரணத்திற்குப் பின் வறுமையில் வாடிய ஆமினாவுக்குத் தன் குழந்தையைச் செவிலித்தாய மைத்துப் பாலூட்டி வளர்க்க வாய்ப்பில்லாதிருந்தது. அலிமா என்ற பெண் அண்ணல் முகம்மதுவுக்குப் பாலூட்டி வளர்க்க முன்வந்தபோது, உள்ளம் உருகி, தன் நிலையை வறுமையிலும் செம்மையாக எடுத்துச் சொல்லி உதவி மறுக்கின்ற பண்பினை,

''பெறுமொரு தந்தையு மில்லைப் பின்னிய
வறுமைபெத் தீம்தரு மதலை யுண்டுகொ
லறிவுற முலைகொடுத் தாக்கஞ் செய்வதற்
குறுவதோ நும்மன மென்ன வோதினார்.''[3]

என்று விளக்குகிறார் ஆசிரியர்.

நபிகள் நாயகத்திற்குப் பாலூட்டி வளர்க்க இசைந்த அலிமாவுடன் ஆமினா தன் பிள்ளையை வழிகூட்டி அனுப்பிய

1. சீறா. நபியவதாரப் படலம் 62
2. சீறா. நபியவதாரப் படலம் 63
3. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 34

காட்சி இரக்கமுடையார் நெஞ்சத்தை இளகவைப்பதா யமைந்துள்ளது. தாய்க்குத் தன் குழந்தையைப் பிரிவது போன்ற துன்பம் வேறென்ன இருக்க இயலும்!

திருமண இன்பத்தையன்றி வேறெந்த இன்பத்தையுமே காணாத ஆமினா-கணவன் மறைவால் ஏற்பட்ட கலக்கம், இனத்தார் துணையில்லாததால் ஏற்பட்ட துன்பம், வறுமைத் துன்பம் ஆகியவற்றால் உழன்று இதோ இப்பொழுது பெற்ற பிள்ளையையும் பிரியும் துன்பமாகிய பெருந்துன்பத் திற்கும் ஆளாகின்றார். தாய்—சேய் பிரிவை உமறு உருக்க மாக உரைக்கின்றார். பெற்ற தாயின் பேரன்பும், தன் பிள்ளையை வளர்க்க இசைந்த செவிலியைத் தன் உடன் பிறந்தாளாகக் கருதும் பரந்த அன்புள்ளமும், நம் மகன் எதிர்கால வாழ்வில் கொண்ட கருத்தும் புலவர் கூற்றிலே சிறந்து நிற்கின்றன.

"தப்ப திச்செல விருவருஞ் சாற்றிய மாற்றஞ்
செப்பொற் பூங்கொடி யாமினா கேட்டுளத் திடுக்கிட்
டப்ப ரத்தெழு முழுமதி நிகரகு மதுவைக்
கப்ப ணிந்தசெங் கரத்தெடுத் துவகையிற் கலுழ்ந்
தார்",[1]

"தேன்கி டந்தசெங் கனியிதழ்ப் பவளவாய் திறந்து
வான்கி டந்தொளிர் மதியினு மொளிர்முகம் மதுவை
கான்கி டந்தமெய் யுறமுத்த மிட்டுடன் களிப்ப
வூன்கி டந்தவேல் விழிமல ரிணையிலொத் தினரே" [2]

ஆமினா நபிகளாரை உச்சிமுகந்து, முத்தமிட்டு, உடல் களிக்கக் கண்ணால் கண்டு முகத்தோடு முகம் இணைத்து விடை பெறுகின்றார்.

"அமரர் நாயக மேபுவி யரசருக் கரசே
தமரி னுக்கொரு தீலதமே யார்க்குந் தாயகமே

---

1. *சீறா.* அலிமா முலையூட்டுப் படலம் 56
2. *சீறா.* அலிமா முலையூட்டுப் படலம் 57

நமது யிர்க்குயி ராகிய முகம்மது நபியே
கமைத ருங்கட லேயெனப் போற்றினர்
கனிந்தே.''[1]

'மாற்றலருக் கரியே' என்று மைந்தனை வாழ்த்தி, அலிமாவைத் தன் உடன் பிறந்தாளாகப் போற்றிக் கட்டியணைத்து 'அலிமாவே, இந்த முகம்மது என் பிள்ளையல்ல, உன் பிள்ளையே' என்று கையில் கொடுத்து அனுப்புகிறார் ஆமினா.

எவரையும் தமராய்க் கொள்ளும் எளிய அன்பும், தெய்வத் தொண்டனின் திருத்தாயின் தாயன்பும் உமறுவின் பாக்களிலே ஒன்றி நிற்கின்றன.

இரண்டாண்டுகளுக்குப் பின் பால் மறப்பித்தபின் நபிகள் நாயகத்தைக் கொண்டு வந்து ஆமினாவிடம் சேர்க்கின்றாள் அலிமா, பிரிந்த மகனைப் பெற்ற தாயின் பேருவகையை இதோ எதிரொலிக்கின்றார் புலவர்.

''மடந்தையர் சிறந்த வாமினா வென்னு
மலர்க்கொடி முகம்மதை வாங்கி
யிடம்பெறப் பிறழ்ந்து சிவந்தவே லென்னு
மிணைவிழி முகத்தொடுஞ் சேர்த்திக்
குடங்கையி லேந்தி மார்புறத் தழுவிக்
குமுதவாய் முத்தமிட் டுவந்து
கிடந்தன மனத்திற் றுயரெலா மகற்றிக்
கிளர்தரு முவகையிற் குளிர்ந்தார்.''[2]

'புனித முகம்மதுவைப் பாலூட்டி வளர்த்த தாயிடம் ஆமினா காட்டிய நன்றிப் பெருக்கு நல்லவர் உள்ளத்தில் நன்றியுள்ளோர் உள்ளத்தில் நின்று மகிழ்வூட்டும் பெற்றியுடையது.

---

1. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 63
2. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 94

"செய்ந்நன்றி கொன்றார்க்கு உய்வில்லை" அல்லவா! இதோ! நன்றி பாராட்டும் அன்னை ஆமினாவின் தூய அன்புள்ளத்தைப் போற்றுகின்றார் உமறுப்புலவர்.

"... ... ...
முகிலெனுங் குழலலி மாவை
யிலைத்தளிர் விரல்கண் முதுகுறப் பொருந்த
வின்னுயிர் பொருந்தல்போற் றழுவி
நிலைத்த பொற் பாவையெனவரு கிருத்தி
நெறியுடன் பலமொழி புகழ்ந்து
மலைத்தடப் புயத்தா ரீதையும் போற்றி
மகிழ்ந்தன ராமினா வன்றே"[1]

மதினை மாநகரத்திலுள்ள உறவினரைக் காணச் சென்ற ஆமினாவிடம், நபிக்கு இன்னலிழைத்திடப் பகைவர் அங்கும் உள்ளனர் எனவே மக்க மாநகர் செல்வது சிறந்ததென்று உறவினர் எச்சரித்தனர். அவர் சொற்கேட்டு உள்ளம் வெம்பிய ஆமினா தம் மகன் முகம்மதுவுடன் 'பிடியும் களிறும்' போல அடவிகள் பல கடந்து வந்தனர். இந்தப் பயணத்தில் தன்னை வெற்றி கண்டு வந்த துன்பத்தையே வெற்றி கண்டு விட்டார் அன்னை ஆமினா அப்துல்லா மரணமடைந்த அபுலா எனும் தலத்திலேயே சுரம் கண்டு இறந்துவிட்டார். ஆமினா அவர்களுக்கு 20 ஆண்டுகள்: அன்னை ஆமினா ஈன்ற முகம்மதுவுக்கு ஆறு ஆண்டுகள் ஒரு மாதம்.

நபியின் இளமைப்பருவம், திருமணம், இல்வாழ்க்கை, அவர் நிறுவிய தீனுல் இஸ்லாம், அவர் பெற்ற சமயச் சிறப்புகள் எதையுமே காணக் கொடுத்து வைக்கவில்லை ஆமினா. என்றாலும் முகம்மதுவின் திருமணக்காட்சியைக் கண்டு களித்த தாய்மார்கள் புனிதர் முகம்மதுவின் தாய் ஆமினாவை நினைவு கூர்ந்து இரங்கிக் கூறுவதாய்ப் பாடும் உமறுவின் பாட்டு நம் உள்ளத்தைத் தொடுகிறது.

1. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 95

"கண்ணகன் ஞால மெல்லாங் களிப்புறு மரிய
காட்சி
யண்ணறன் மணத்தின் கோல மாமினா வென்னு
மந்தப்
பெண்ணிருந் தினிது காணப் பெற்றிலள் காணு
மென்பர்."[1]

ஆப்! நீர்மையுடையார் நெஞ்சத்தில் நினைவாகிவிட்டார் அன்னை ஆமினா. அன்பே உருவாய் துன்பமே துணையாய் வறுமையே வழிகாட்டியாய்க் கொண்டு—மக்கள் துணையின்றி மலக்குகள் துணையாலே வாழ்ந்து மறைந்த ஆமினா நிலத்திலும் எண்மடங்கு பொறுமையுடையவர் என்பது வெள்ளிடை மலையாய் விளங்குகின்றது.

## அலிமா

பெருமானார் (சல்) அவர்களின் வளர்ப்புத்தாய்
—செவிலித் தாய் அலிமா
அலிமாவையும் அழகுப் பாவையாகவே
சித்திரிக்கிறார் உமறுப்புலவர்,
அலிமாவின் தோற்றப் பொலிவினை,

ஆயிழை யெனுமலி மா 6:28
இலங்கிழை யலிமா 7:10;7
செகமகி ழலிமா வென்னுந் திருந்திழை 7:24
காரிகை யலிமா 7:37

என்றும்,

அவருடைய குழலழகினை,

மன்ற லங்குழ லாளலி மாவெனு மடந்தை 6:5
அவ்வலங் குழலலிமா 6:36

என்றும்,

அவளுடைய வடிவத்தினை,

புதிய நல்வடி வாகிய பூங்கொடி யலிமா 6:49

1. சீறா. மணம்புரி படலம் 57

தேன்பபய் விரைமலர் செருகுங் கூந்தன்
மென்கொடி யலிமா 7:6
குற்றமி லலிமா வென்னுங் கொடி 7:13

என்றும்,

அவளுடைய சாயலினை,
இலங்கிழை மடமயி லலிமா 6t45
மாமயி லலிமா 6:82
செல்வம், பூண்டமா மயிலே யன்ன பொலன்கொடி
யலிமா 7:2

என்றும்,

அவளுடைய விழியின் எழிலினை,
கூற்ற டர்ந்தவேல் விழியலி மா 6:59
மைநிறப் பாவைக் கயல்விழி யலிமா 9:96
வரி விழியலி மா 7:57
அடர்ந்த செவ்வரிக் கொடிபட ரரிவிழி
யலிமா 7:90

என்றும்,

இடையின், மென்மையை,
முலைச்சுமை கிடந்த சிற்றிடை திரண்ட
முகிலெனுங் குழலலி மா 6:95
கொடியென வயங்கு நுண்ணிடை யலிமா 6:97
தூ நகைத் தளரச் செவ்வாய்த் துடியிடைக்
கொடி 7:5
சிற்றிடை யலிமா என்னும் சேயிழை 7:12
கொடியிடை யலிமா... 7:41
வாடு மெல்லிழைப் பாதிநுண் ணிடை மயி
லலிமா 7:46
திருந்து மென்மலர்க் கொடியிடை 7:70

என்றும் புகழ்ந்து பாடுகின்றார் காப்பியப் புலவர் உமறு.

பெற்ற தாயைவிட செவித்தாய் உற்ற தாயாக விளங்குவது உலகியல்பு. அலிமா நாட்டில் ஏற்பட்ட பஞ்சம் காரணமாகப் பிறர் பிள்ளைகளுக்குப் பாலூட்டி வறுமை களைய வந்த ஆரணங்கு 'புனைய ணிப்புய ராரிதுக் குயிரெனப் பொருந்து மனைவி.' ஆரிது அவர்களின் அன்பு டைய மனைவி, பண்புடைய மனைவி, செல்வம் தேடி வறுமை களைய எண்ணிய தாய், சூம்பிய மார்பும், செழுமையற்ற மக்களுமுடைய அலிமா வறுமையில் வாடிய ஆமினாவின் மகன் முகம்மதுவுக்குப் பாலூட்ட முன் வந்ததற்குக் காரணம் அவள் கண்ட கனவும் ஆரிது கூறிய உலகியலும், செல்வம் வரவேண்டுமென விதி இருப்பின் அது எளியவர் களிடமிருந்தும் வரலாம். செல்வந்தரிடமிருந்து தான் வரவேண்டுமென்பதில்லை. எனவே ஆமினாவின்பிள்ளைக்கே பாலூட்டிச் செல்வம் பெறும் விதியுடையோமானால் உறுதி யாக நலம் விளையும் என்று ஆரிது நல்வாக்கு கூறிய பின் னரே குழந்தையைக் கொண்டு வரச் சொல்லி அதன் முகம் நோக்கினர் இருவரும்.

"......கவினொளி கதிர்விட்
டெண்டி சையிலும் பரந்திரு
சுடரினு மிலங்கப்
பண்டு கண்டிலாப் புதுமைகொ லெனவுளம் பயந்து
விண்டு ரைத்திடா திருவரு மயங்கிமெய் மறந்தார்."[1]

குழந்தைக்குப் பாலூட்டி வளர்க்க இசைந்து தம்மிருப்பிட மாகிய குனையினையடைந்தனர்.

"நிதியமும் பேறும் படைத்தன ரலிமா
நிகரிலை யிவர்க்கினி"

என்று பிறர் போற்றும் வகையில் நலம்பல பெற்று வள மாய் வாழ்ந்தனர்.

1. சீறா, அலிமா முலையூட்டுப் படலம் 43

ஊதியத்திற்காக உழைக்காது உள்ளன்போடு முகம் மதுவை வளர்த்த பெருமையை,

'பிள்ளைமென் கனியே செல்வம் பெறுந்தவப்
பலனே யெந்த
முள்ளகத் துயிரே மாமை யோங்கிய
முகம்மதே' 7:14

என்று அலிமா விருப்பத்தோடு விளிப்பதில் விளக்கிச் சொல் கிறார் உமறு.

'முகம்மதைக் கொன்றார்' என்ற செய்தி செவிபுகுந்த வுடனே மயங்கி வீழ்ந்து,

'பூண்ட கலன்பல திசையுஞ் சிந்த
வேறியங் குழன்மா மேக மின்னென மேனி தேம்பிப்
பாரினிற் புரண்டே றுண்ட மயிலெனப்
பதைத்து' 7:37

எழுந்து மைந்தன் அப்துல்லா வழிகாட்ட,

கமலப் பாத முதிரங்கொப் பளிப்பக் கானின்
மிதித்தலைந் திடுங்கொம் பொப்ப' 7:38

விரைவினில் நடந்துவந்து, கோட்டுவாய் நிழலில் வானோக்கி நின்ற முகம்மதுவைக் கண்டு,

''கண்ணினின் மணியே யெந்தங் கருத்துறு மறிவே
காமர்
விண்ணினிற் குறைப டாமல் விளங்கிய மதிய மேயிம்
மண்ணினுக் கரசே நந்த மனைக்குறு செல்வ மேயெம்
புண்ணியப் பலனே யென்னப் பூங்கொடி யெடுத்து
அணைத்தார்'' 1

'வடிவுறு மேனி நோக்கி மாமதி வதன நோக்கி
உடலுறும்
வடுக்கா ணேனிங் குற்றவை யுரைப்பாய்'

1. சீறா, இலாஞ்சனை தரித்த படலம் 50

என்று கேட்ட நிலையிலும் அலிமாவின் தாயுள்ளத்தை தாய்மையின் பெருஞ்சிறப்பை எடுத்துக்காட்டுகிறார் உமறுப் புலவர்.

இந்நிகழ்ச்சிக்குப்பின் எச்சரிக்கையுடன் குழந்தையைப் பாதுகாத்த சிறப்பினை,

'சேமமாகிய பொருளினைக் காத்திடுந் திறம்போல்
வாம மாமணி முகம்மதை'

வளர்த்தனர் என்று கூறும் உமறு இம்மைச்கு மட்டும் பயன் தரும் சேமப்பொருளல்ல; முகம்மது மறுமைக்கும் பயன்படும் மாபெரும் சேமப்பொருளாதலின் அவர்களுடைய கருத்து நிறைந்த காவலைப் பாடும் திறன் பாராட்டற்குரியதே.

ஹபஷி நாட்டிலிருந்து ஹுனைன் நகரத்திற்கு வந்த பல நஸ்றானிகள் நபிகள் நாயகத்தை அடையாளம் தெரிந்து கொண்டு அலிமாவிடம் வந்து,

"உங்க டம்மனைக் குளதொரு குழந்தைநும்
முயிர்போ
லெங்க டம்மனத் துவகையால் வளர்ப்பதற்
கிசைந்தோம்
திங்கள் வாணுத லளித்தியேற் செல்வமுஞ்
செருக்கும்
பொங்கு மாநிதி தருகுவ மியாமெனப்
புகன்றார்."[1]

'உயிரை ஒப்ப வைத்து வளர்க்கும் குழந்தை' எது என்று கேட்ட அலிமாவுக்கு 'வென்றி யற்புயன் முகம்மது' என்று பெயரைக் கூறினர் நஸ்றானிகள். இச்சொல் அலிமாவின் செவியில் நுழைந்து சுட்டது; மனங் கொதித்துச் சினம் எனும் தீ மூண்டது. 'நீங்கள் சொல்ல வந்த கொடிய

1. சீறா. இலாஞ்சனை தரித்த படலம் 52

மொழிகளை இம்மட்டும் நிறுத்துங்கள். இச்சொல் என் குடும்பத்தாருடைய செவியில் விழுந்தால் நீங்கள் அனை வரும் கொல்லப்படுவீர்கள், வீணில் உங்கள் உயிர்களைப் பறிகொடுக்காமல் வீட்டை விட்டு, அகன்று போங்கள்' என்று கடுமையாகக் கூறினார் அலிமா. சூழ்ச்சி நிறைந்த நஸ்றானிகள் அலிமாவின் சினத்தின் முன் நிற்கத் திறனற்ற வராய் எழுந்து போய்விட்டார்கள்.

அலிமாவின் கடமையுணர்வும், பொறுப்புணர்வும் இந் நிகழ்ச்சியினால் தெளிவாகின்றன. பாலூட்டி வளர்க்கக் கொண்டு வந்த குழந்தையைப் பெரும் பொருளுக்கு விற்று வாணிகம் செய்யும் அந்தகைய இழிகுணம் படைத்தவ ரல்ல ஆகையால் அடுக்காய் வரும் துன்பங்களைக் கண்டு அஞ்சிய அலிமா 'தாயிடம் சேர்ப்பதே கருத்து' என ஆரி திடம் கூறினார். எனினும் மக்கமா நகர் செல்கையில் இரு கைகள் நீண்ட காட்சியைக் கண்ட அலிமா முகம்மதை இரண்டாவது முறையாக காணாமல் போக்கி விட்டாள். அவள் மனம் கலங்கி கண்ணீர் பெருக வாய் திறந்து அலறி அழத் தொடங்கிப் புலம்பினாள்.

''என்ன மாயமிங் கென்னென நெட்டுயிர்ப்
பெறிந்து
வன்ன மென்மலர் கரநெரித் துதரத்தில் வைத்துத்
துன்னு பூங்குழல் விரிதரச் செவ்விதழ் துடிப்பக்
கன்னி மாமயில் கலங்கினர் புலம்பிக் கதறினர்.''[1]

படியின் மீதினி லோடுவர் தேடுவர் பதறிக்
கடிதிற் கன்முழை முட்செறி பொதும்பினுங் கவிழ்ந்து
நெடிது நோக்குவர் செடியறக் கிளறுவர் நிகரில்
வடிவு றும்மக வேயெனக் கூவுவர் வருந்தி.'' [2]

1, 2, சீறா. இலாஞ்சனை தரித்த படலம் 54, 60

வஞ்கி மெல்லிடை வாட்டமு நடுக்கமும் வாசக்
கஞ்ச மென்முகக் கோட்டமுங் கண்ணினீர்க் கவிழ்
புங்
கொஞ்சு மென்மொழி குழறிடப் புலம்பிய குறிப்பு
மஞ்சி நின்றதும் பயந்தொடுங் கியவர லாறும்."[1]

"கரிய பூங்குழல் சென்னிறப் பூழ்தியிற் கரந்து
விரித ரக்கிடந் தொளிருமெய் பதைத்துவாய்
வெளிறி
யெரியு நெய்யிடை யிட்டபைந் தளிரென விருந்த
வரிவை தன்வயி னெறிசெலும் பேர்கள்கண்
டடைந்தார்கள்."[2]

புனிதர் முகம்மதுவை எங்கும் தேடிக் காணாத அலிமா அப்துல் முத்தலிபுவிடம் சென்று முறையிட்டாள் முத்தலிபு வின் ஆட்கள் எங்கு சென்று தேடியும் முகம்மதுவைக் கண்டு பிடிக்க இயலவில்லை. அல்லாஹுத்த அலா மறைத்த பொருளை அவன் வெளிப்படுத்தினாலன்றி மனிதர் கண்டு பிடிக்க வல்லரோ!

பின்னர் அசரீரி ஒலிகேட்டு 'கஃபத்துல்லாவின் தென் மேற்குப் புறமுள்ள ஓடைக்கரையில் வாழைமர நிழலில் இருந்த' முகம்மதுவைக் கண்டுபிடித்துக்கொண்டு வந்தனர். அலிமாவின் துன்பம் தீர்ந்தது. ஏற்றுக்கொண்ட குழந்தை யைப் பெற்றவளிடம் ஒப்படைத்த பின்னர் கணவர் ஆரிது டனும் மக்களுடனும் அலிமா ஹுனைன் நகரம் சென்று சேர்ந்தார்.

மறைபொருள் நிறைந்த நிகழ்ச்சிகளுக்கிருப்பிடமாக முகம்மதுவுக்கு அலிமாவின் இல்லம் அமைந்தது. இறை நேசக் குழந்தை முகம்மதுவை வளர்த்ததாலேயே பெரும் பேறு எய்தினர் அலிமா—யாகிய ஆரிது தம்பதியினர்.

1. சீறா. இலாஞ்சனை தரித்த படலம் 63
2. சீறா. இலாஞ்சனை தரித்த படலம் 64

## சிற்றன்னை பாத்திமா

முகம்மது நபி அவர்களுடைய சிற்றன்னை பாத்திமா—அபுத்தாலிபு மனைவி புலி அலியின் தாய். அன்னை ஆமீனா, செவிலித்தாய் அலிமா பெறாத பெருமைகளைப் பெற்றார்.

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் உதாயிலிருந்து நல மாய்த் திரும்பி வந்த நற்செய்தி கேட்டு அபுத்தாலிபு தம் மனைக்கு அழைத்து வந்தார். வாணிபத்திற்காகச் சென்று பெருஞ் செல்வத்துடனும், புகழுடனும் திரும்பி வந்த முகம் மதுவுக்கு வரவேற்பு கூறினார் பாத்திமா, ஷாம் நகரத்திற்கு புறப்பட்ட நாள்முதல் அன்றுவரை அவளது கண்ணொளி மழுங்கியிருந்ததாகவும், அன்றே அவரது நல் வருகையைக் கண்ட பின்னரே கண்கள் திறந்தன என்றும் கூறி மகிழ்ந் தார். சிறப்புச் செயல்கள் செய்த சிறார்களை அன்புடன் தழுவி கண்ணூறு கழிப்பது அன்புடைத் தாயாரின் செயல். ஷாம், நகரிலிருந்து வந்த முகம்மதுவுக்கு பாத்திமா அவர் கள் 'கண் எச்சல்' கழுவினார்கள் என்கிறார் உமறு.

"அணியிழை சுமந்த செல்வி யனைறெனும் பாத்தி
மாவந்
திணைவிழி பெற்ற னென்ன விருகையாற் றழுவிப்
பைபொன்
மணமலி பீடத் தேற்றி முகம்மதை யினிது போற்றிக்
கணநிரை யயினி நீராற் கண்ணெச்சிற்
கழுவினரால்."[1]

தந்தை வாட்டமுந் தாயெனும் வாட்டமுந்
தவிர்த்துப்
புந்தி கூர்தர வந்த தாயே'

என்று முகம்மது நபி அவர்கள் போற்றுகின்ற வாசகத்திலி ருந்து 'தந்தை இல்லை; தாய் இல்லை' என்ற குறையே இல் லாது தந்தையாகவும் தாயாகவும் வாடாமல் வளர்த்து ஆதரித்த அருமைத் தாயாக இருந்தார் பாத்திமா என விளங்குகிறது.

1. சீறா. மணம் பொருத்து படலம் 5

பாத்திமா இறுதி மூச்சு விடும்முன் ஏந்தல் நபி (ஸல்) அவர்களைப் புகழ்ந்து, சலவாத்து ஓதி, ஈமான் உறுதியால் கலிமாவும் இயம்பி, இறையடி சேர்ந்தார்கள் என்று விளக்கு கிறார் உமறுப்புலவர். பாத்திமா முகம்மது அவர்களின் சிறந்த வளர்ப்புத் தாயாக மட்டும் இல்லை, ஞானத்தாயாக வும் காட்சித் தருகிறார்கள் நபி. நாயகம் வளர்த்த தீன் இஸ் லாத்தையும் மேற்கொண்டு அது வளர, வாழ ஆசிகள் கூறி இறுதிநேரத்திலும் அறிவு நிலை தடுமாறாது 'தீன்மிக வாழ்க' என்று கூறி நற்சிந்தனை தெய்வச் சிந்தனையுடன் மறைந்த அவ்வுத்தமியின் உயர்ந்த உள்ளம் சமயத் தொண்டில் கொண்டிருந்த உறுதியை அவர்தம் இறுதிநிலை எடுத்து உரைக்கின்றது.

முகம்மது நபி (சல்) அவர்கள் பாத்திமாவுக்கு தானே இறுதிக் கடன்களைச்செய்தார். ஜனாசாவை கப்றில் வைத்த போது நபிகள் நாயகம் (சல்) அவர்கள் கப்றில் இறங்கி மையித்துக்கு அருகில் படுத்துக்கொண்டு முகத்தோடு முகம் வைத்துப் புலப்பி, 'தாயே! தங்களுக்கு அல்லாஹுத் தஆல உன்னத பதவியைத் தருவானாக' என்று மனமுவந்து கூறி தங்கள் உடலில் போட்டிருந்த குப்பாயத்தால் (சட்டை யால்) அவர்கள் சடலத்தைப் போர்த்தினார்கள், உயர வந்து பின்னார் முதலில் தங்கள்கையால்மண்ணைத்தள்ளினார்கள்.

மேலங்கியைக் கழற்றி சடலத்தின் மீது போட்ட செயல் புதுமையானது. ஆதலின் அனைவரும் நபிகள் நாய கத்திடம் அதற்குரிய காரணத்தை வினவியபோது நாயகம் தந்த விளக்கம், பாத்திமாவின் சமயத் தொண்டையும் அதன் பயனாய் அவர் பெறப்போகும் பிற ஏற்றங்களையும் எடுத்தியம்புகிறது. நபிகள் நாயகம் (சல்) கூறுகிறார், "நான் என் தாய்க்கு அருகில் படுத்தது, அவர்களை கப்று நெருக்காமல் இருப்பதற்காக; என் மேலங்கியைப் போர்த் தது அவர்கள் மேலான சுவர்க்கத்து உயர்ந்த சித்திரப்பூம் பட்டாடையை பெற்றுக் கொள்வதற்காக. நான் இவ்வாறு

செய்யக் காரணப் ஹாஷிம் வமிசத்துப் பெண்களில் முத லில் ஈமான் கொண்டு முஸ்லிமானது பாத்திமா அவர்களே ஆகும்.''

பெண்கள் சமய வளர்ச்சியிலும் ஈடுபாடு கொண்டு அதை வளர்த்தனர் என்பதற்குச் சான்றாய் நிற்கின்றார் அன்னை பாத்திமா.

அன்பாலும் அருளாலும் உயர்ந்து தாய்மை, இறைமை பண்புகளில் சிறந்த தாயார் மூவரைப் பெண்மை நலங்கள் விளக்கமுறப் பாடியுள்ளார் தமிழ்நாட்டுப் புலவர் உமறு.

கதீஜா பிராட்டியார் முகம்மது (சல்) அவர்களின் முதல் மனைவி.

காப்பியத் தலைவி கதீஜா நாயகியைச் சித்திரச் செம் பொற் பாவையாய்ச் சித்திரிக்கின்றார் உமறுப்புலவர். நாய கியின் எழிலையும் ஏற்றத்தையும் புலப்படுத்தும் புல வருடைய உவமைகளும் உருவங்களும் அவர் தம் பேரறிவுக் குப் கற்பனையாற்றலுக்கும் சான்றுகளாய்த் திகழ்ந்தன.

கதீஜா நாயகி 'குறைஷியங் குலத்துக்கு ஒரு மணி; குவைலிதுக்கு இருவிழி; மறைநிரைக் கடலில் அமுதெனப் பிறந்த அரிவையர்க்கு அணி' என்று அறிமுகப்படுத்துகிறார் உமறுப்புலவர்.

வணக்கம், அறிவு, பொறை நல்லோர் இணக்கம், வறி யோர் ஈயும் இரக்கம், நிறைந்த கற்பு ஆகிய பண்புகளைத் தன் பண்புகளாகப் பெற்றவர் கதீஜா என்கிறார் உமறு. குணக்கலை வல்லோர்கள் கூட கதீஜாவுக்கு இணையான இன் னொரு பெண்ணைத் தேர்ந்தெடுப்பது அரிது என்றும் கவிஞர் கூறுகிறார்.

தேன்கடலமுது, எண்திக்குகளில் திகழும் வரையமுது, வெண்மதியமுது, வெண்பாற்கடலமுது, சோதிமிக்க வான் கடலமுது ஆகிய உலகிலுள்ள எல்லா அமுதுகளும் ஒன்றாகக்

கூடித் திரண்டு பெண் வடிவெடுத்து வந்தது போலும் பெற்றியுடையவர் கதீஜா நாயகி என்பது உமறுவின் உள்ளக் கருத்து.

உலகத்திலுள்ள ஒளி அனைத்தும் ஒன்று கூடினாலும் அவை கதீஜாவுக்கு ஒப்பாகாது. தனித்தனி அழகு பொருந்திய மற்ற உலகப் பெண்களைக் கதிஜாவுக்கு ஒப்பு என்று 'வகுக்க நா வருத்திடாது' என்றும் வியந்து பாராட்டுகிறார் புலவர் பெருமான்.

அழகு வெள்ள அமுதாகிய கதீஜாவை இரு கண்ணாரக் ண்டு களிப்பதற்கு 'இமையா நாட்டம்' பெறவில்லையே என்று நாள்தோறும் பெண்கள் எண்ணத்துள் எழும் ஏக்கத்தைத் தேற்றினாலும் தேறாது. அது மட்டுமா? நாயகியின் உறுப்பழகினைத் தக்க உவமைகளைக் கொண்டு வானவராலும் மண்ணவராலும் உரைக்க இயலாது என்றும் அறுதியிட்டுக் கூறீ விடுகின்றார்.

உண்மைதான், வானவராலும் மண்ணவராலும் தானே 'இன்னது இன்னது' எனத் தக்க உவமைகளை உரைக்க முடியாது. இதோ! பைந்தமிழ்ப் பாவலர் உமறுப்புலவர். இருக்கின்றாரே! கற்பனைக் கவிஞர் உமறு செயற்கரிய செயலாக சொன்மலை பொழிகின்ற திறத்தினைப் பாருங்கள்!

## அ. கதீஜா நாயகி அவர்களின் அழகு

| | |
|---|---|
| பிடிநடை கதீஜா வென்னும் பெடையனம் | I 10:47 |
| கதீஜா வெனு மயிலார் | I 20:20 |
| மடமாமயில் | I 20:21 |
| கறையிலா மதிய மெனுமயில் கதீஜா | I 20:29 |
| சினப்பெடைச் செழுங்கட் கொவ்வைச் செவ்விதழ் சிறுவெண் மூரலனப்பெடை கதீஜா | I 22:30 |
| பிடியொரு மென்னடைக்கெம் | I 22:30 |
| பெருகுமிள மயில் கதீஜா | I 24:1 |

| | | |
|---|---|---|
| பரிசுத்த · மனைய குயில் | II | 7 :7 |
| கதீஜா வெனுங்குல மயில் | II | 16:14 |

## ஆ தோற்றப் பொலிவு

| | | |
|---|---|---|
| ...... பெய்மலர்க் கொலபே | I | 10:24 |
| ஒண்டொடி கதீஜா | I | 10:36 |
| கலைமதி நிகர் கதீஜா | I | 21:22 |
| ...ஒண்டெகடி கதீஜா வென்னுமரிவை | I | 22:9 |
| பெண்களுக் கரசே | I | 22:13 |
| மெல்லியல் | I | 22:23 |
| மலர்க்கொடி | I | 23:31 |
| பெண்ணனார் கதீஜா | I | 23:89 |
| பொறிநிகர் பொருவாச் செழுங்குழை யமிர்தப் பொலன்றொடி | I | 23:109 |
| புதுமதி வதனச் செழுங்கொடிக் கதீஜா | I | 23:114 |
| இருநில மணிக் கதீஜா | I | 23:117 |
| தெரிமலர் கதீஜா | I | 23:118 |
| மின்றவழ்வ தெனவொளிருங் கதீஜா | I | 24: 3 |
| வெண்டிரைக் கடலி லமுதமும் பொருவா லியனுறுமெல்லிதழ்க் கதீஜா | II | 1 :10 |
| மடந்தையர் திதலம் | II | 1 :35 |
| கோதிலாக் கதீஜா | II | 1 :55 |
| கோதில் கற்பகச் செழுங்கொடிக் கொழுங்கனிக் கதீஜா | II | 2 :34 |
| கதீஜா வெனுங் குலக்கொடியே | II | 16:13 |
| கதிர் மணிக் கதீஜா | III | 15:189 |
| மின்னென வொளிமாறாத விளங்கிழை கதீஜா | I | 10:9 |
| புனையிழை கதீஜா | I | 10:54 |
| திருந்திழை மணியிற் குருத்தெனுங் கதீஜா | I | 21:15 |
| எல்லையி லழகு வாய்ந்த வேந்திமை | III | 15:9 |
| கதீஜா அரிவையிர்க் கணியெனுங் கதீஜா | I | 20:24 |
| காரிகை கனங்குழை | I | 23:113 |

## இ. உறுப்பு நலன்

1. செங்கயல் வரிக்கட் செவ்வாய்த்
திருந்திழை கதீஜா வென்னும் மங்கை I 10:23

பத்திரக் கருங்கட் செவ்வாய்ப்
பைந்தொடி I 10:38

2. கருந்தடங் கண்ணார் I 10:46
சினவு வேல்விழி I 10:6
வரிவிழிக் கதீஜா I 16:50
சினவுவேற் கருங்கட் பாவை I 22:16
பாணலங் கடந்த கண்ணார் I 22:22
கடுத் தவழ்ந்திருண்டு சேந்த
கயல்விழி கதீஜா II 4:81

3. கருங்குழல் செவ்விதழ்க்
கனிவாய்த் திருமொழி I 20:23

4. கதீஜா வென்னுஞ் சிலைநுதல் I 10:34
வில்லின் மேற்பிறை தோற்றிய
தெனநுதல் I 10:66
சிறை பிறை நுகல் கதீஜா I 1:23;33
சிலையென வளைந்த சிறுநுதற் கதீஜா I 1:16
......செவ்விச் சிலைநுதல் கதீஜா II 4:47

5. ......நூலிற் சுருக்கு நுண்ணிடைப்
பொலன்றொடி திருந்திழை சுடர்மணி
கதீஜா I 10:51
கொம்பென வொசிந்த நுண்ணிடைக்
கதீஜா I 20:23
கொடியுடைக் கதீஜா
வென்னுங் கொம்பு I 23:58
குவிந ருங்கதிரச் செழுவணிக்
கொடியிடை கதீஜா II 1:50

## ஈ. குழல்

| | | |
|---|---|---|
| வண்டுகண் படுக்கும் கூந்தல் மடமயில் கதீஜா வென்னு வொண்டொடி | I | 10:27 |
| மொய்மலர்ச் கதீஜா | I | 10:42 |
| விரைத்தாகச் குழற் கதீஜா மெல்லிழை | I | 10:50 |
| விரைத் தார்குழற் கனிமொழி கதீஜா | I | 10:59 |
| சுரிக ருங்குழல் வெண்ணகைப் பரியமென் றோகை | I | 16:50 |
| விரைமல ருடுத்திகழ் மேக வார்குழற் கரியமை விழிக் கதீஜா | I | 21:34 |
| தேங்குழல் கதீஜா | I | 22: 8 |
| கருப்பிமிர் கரிய கூந்தற் சுடர்க்கொடி கதீஜா | I | 22:28 |
| மௌவல்கமழ் குழன் மயில் | I | 22:60 |
| மருமருபூங் குழலாஅ | I | 22:61 |
| மருமலர்ச் செழுந்தார்க் கனங் குழற் கதீஜா வெனு மயில் | I | 1 : 8 |
| அறையாற் கூந்தற் கதீஜா | III | 2:39 |

## உ. மொழிச் சிறப்பு

| | | |
|---|---|---|
| தே மொழி கதீஜா | I | 10:55 |
| தேனுங், கண்டுமொத் தனைய சொல்லாய் | I | 22:14 |
| கூறிய மொழியை வேய்க்குங் குயிலுக்குங் கொடுத்துச் செந்தேன் மீறிய மதுரைச் சொல்வாய் | I | 22:29 |
| விரைகமழ் மதுர முற்றிருந்த விக்கு மென் மொழியா ரெனுங் கதீஜா | I | 23:119 |
| நேர்விழி கனிமொழி சிறுபிறை நுதல் | III | 1:78 |

## ஊ. பண்பு நலம் பெண்மை நலம்

| | | |
|---|---|---|
| தெரிதரத் தெளிந்த சிந்தைத் தேமொழி கதீஜா | I | 10:49 |
| தன்னெறி மொழிக் கதீஜா | I | 22:42 |

அமரர்வின் னுலகும் புவனமும் விளக்கு
மணிவிளக் கெனுங்க கதீஜா | 23:105
குறைவிலா துயர்ந்து தழைத்தினி
தோங்குக குலக் கதீஜா | 23:115
வரிசைக்குங் கதிக்கு முதற்றிருத் தலமாய்
மதித்திட வருஞ்சிறா மலைபி
லுருசிக்குங் கனிவாய் மடமயில் கதீஜா ||| 1:7
வேதக் காரணர் மனைவியாகப்
பலன்பெறுங் கதீஜா | 11:168
இந்த மாநிலத் தொருநிதி யேயென
திருவிழி மணியே | 10:56
துறக்கமும் புகழுஞ் சுரிகுழற் கதீஜா
வென்னுமத் தோகை ||| 11:12
பூதலம்புகழ் தருங் கதீஜா ||| 25:6

வறுமை என்னும் வெயிலால் வாடிடும் மக்களாகிய பயிர்களுக்கு பொருளுதவி என்னும் மழையைக் கொடுக்கக் கூடிய மங்கை நல்லார் கதீஜாவின் மனையை அடைந்து மக்க மாநகர் வணிகர் பொன்னும், பொருளும் வாங்கிச்செல்வது வழக்கம். அதுபோல 'உறுப்பொருள் இன்றி இந்த பெரு நிலத்திலிருந்து வாழ்தல் பேதமை' என்பதை உணர்ந்த நபி நாயகம் (சல்) அவர்களும் அதனைப் பெரிய தந்தை அபுத்தாலிபுவிடம் தெரிவித்தார்.

வாணிபம் செய்யப் பொன்னும் பொருளும் நாடிக்க கதீஜா இல்லம் சென்ற குங்குமத் தடந்தோள் வள்ளல் முகம்மது தம் கருத்தில் 'செங்கயல் வரிக்கட் செவ்வாய்த் திருந்திழை கதீஜா என்னும் மங்கை தம் பெயருஞ் சித்திர வடிவம் குடிகொண்டாள். கருத்திலுதித்த காதலைப் பிறர் அறியாது மூடித் தம் பேரறிவுத் திறத்தால் காதல் உணர்வை மறைத்து வைத்திருந்தார்.

கதீஜா நாயகியாரும் நபிகள் நாயகத்தைக் கண்ட அள விலேயே—முதல் சந்திப்பிலேயே—அவரிடம் தூய அன்பு கொண்டார் முகம்மதுவின் அழகாகிய பெருள்வெளத்தில்

கதீஜா நாயகியின் கண்கள் என்னும் கயல்மீன்கள் ஓடிக் குதித்தன. பார்த்தகண் பார்த்தபடியே இருக்க நாணம் அவரை ஆட்கொண்டு விட்டது. தன்னுடைய ஆவலை—காதலை—வெளிப்படுத்தாமல் 'நாண் என்கிற போர்வைப் போர்த்திக் 'கற்பெனும் வேலி' அமைத்துக் கொள்கிறார்.

உலக நாயகன்—நாயகராகிய முகம்மது கதீஜா காதலை இன்ப சுவைமிக்கக் களவு—கற்பியல் காட்சிகளைப் பண்டைத் தமிழர்தம் இன்பியல் வாழ்க்கையின் சாயலிலே தமிழ் அக இலக்கியக் கொள்கையின் வழி விவரித்துச் சொல்கிறார் உமறுப்புலவர்,

முகம்மதுவைக் கண்டு மயங்கி நின்ற கதீஜாவின் நிலை கண்ட 'ஹக்கத்து' என்னும் மெய்மொழி முறைகள் தேர்ந்த பண்டிதர், கதீஜாவை நோக்கி, முகம்மதுவை அவர் மனைக்கு அனுப்புவதே நலமுடையது என்கிறார். புறப் பட்டுச் சென்ற முகம்மதுவின் பின்னே கதீஜாவின் கண்ணும் மனமும் பின்தொடர்ந்து சென்றன' என்கிறார் உமறு.

இதயங்கள் மாறிப் புகுந்த காட்சியை காவிய நெறி யுடன் கவிதையாகப் பாடுகிறார் உமறு.

"படியினிற் சசியுஞ் செங்கேழ்ப் பரிதியு
நிகரொவ் வாத
வடிவெடுத் தனைய வள்ளல் முகம்மதி னெஞ்ச
மென்னுங்
கடிகமழ் வாவி யூடு கருத்தெனும் கமல நாப்பண்
பிடிநடைக் கதீஜா வென்னும் பெடையன
முறைந்த தன்றே."[1]

உமறு பாடிய 'பாதை போந்த படலம்' இன்பச்சுவை சொட்டும் காப்பியப் பகுதியாகும். கதீஜா கனவு கண்ட படல'த்தில் காதல் வயப்பட்டுப் பிரிந்திருக்கும் தலைவியின் நிலையைச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடுகிறார் உமறு.

---

1. சீறா. பாதை போந்த படலம் 47

காதல் பிரிவு - கனவுகள் - உணவு - வெறுப்பு - உறக்க மறைவு-உற்றவர் உரையாடல் ஒழிப்பு எல்லாவற்றையும் நிழற்படம் போல் சிந்தைக்கினிய காட்சிகளாகக் காட்டும் உமறு, 'மணம்புரி படல'த்தில் செம்மல் நபி ஊர்வலம் வருவதை எழுவகை நிலைப் பெண்கள் திசைகள் தோறும் நெருங்கியிருந்து கண்ட காட்சியையும் உலகக் காட்சியாகக் காட்டத் தவறவில்லை.

''மக்கமா நகருஞ் செல்வமும் வாழ
மறைவலோ ரறநெறி வாழத்
தக்கமெய்ப் புகழுங் கிளைஞரும் வாழத்
தரணிநாற் றிசையினும் வாழ'

நபி-நாயகம் (சல்) அவர்களும் கதீஜா நாயகியும் திருமணங் கொண்டு நன் மண-மனை வாழ்க்கையில் நனி திளைத்திருந் தனர்.

பொருட்செல்வியும் அறச்செல்வியுமாகிய பொற் புடைச் செல்வி கதீஜா அன்பும் அருளும் கொண்டு, கணவன் காரியம் யாவினும் கை கொடுத்து மக்களைப்பெற்று மகிழ்ந் தினிது இருந்தார்.

புனிதர் முகம்மது தம் வழக்கப்படி ஹிராமலையில் போய்த் தனித்திருந்தார்கள். மக்களுக்குத் தலைவராகிய ஜிபுறயீல் தோன்றி ஒளிமயமான ஒப்பற்ற ஒரு சித்திரப்பூப் பட்டாடையை நபிகள் நாயகம் கைகளில் வைத்தார். அக்கணத்தில் உலகெலாம் ஒரு பேரொளி படர்ந்து ஒளி செய்தது. ஜிபுறயீல் நபிநாயகத்தை நோக்கி 'விண்டலம் பரவும் வேத நபியெனும் பட்ட நாம்பாற், கொண்டலேகு தாவின் நீந்தார்' என்று கூறி, 'மண்டலர் வாழ்ந் தெடுப்ப செவ்வி யாரணம் புகறி' யென்றார். நபிகள் நாயகம் அவர் களோ 'எழுத்திலொன்று அறியேன், ஆதி ஒப்பரும் வேத மென்ப தோதினே னல்லன்' என்று கூறினார். ஜிபுறயீல் நாயகத்தை இறுகத் தழுவி 'இப்பொழுது ஓதுங்கள்' என்றார். நபியோ வேதத்திலைக் கண்டும் கேட்டும் கற்றறிந்

திலனே என்று தயங்கினார். ஜிபுறயீல் நபிகள் திலகத்தை முன்னிலும் வலிமையாக இறுக்கி, அனைத்து உடல் உறுப்புகள் சோர்வடையும் வண்ணம் நெருக்கி, உள்ளத்தில் அச்சமுண்டாக்கத்தக்க விதமாய் அழுந்த அணைத்து 'நபியே, இனி ஓதுங்கள்' என்றார். நபிகள் நாயகமும் திருவாய் மலர்ந்து ஜிபுறயீல் கற்பித்தபடி வேதம் ஓதினார்.

ஜிபுறயீல் இறுக அணைத்த வருத்தத்தாலும் அச்சத்தாலும் நபிகள் நாயகத்திற்குக் குளிர்சுரம் கண்டது. ஹிரா மலையிலிருந்து நடு இரவில் மனைக்கு வந்து மனைவியிடம 'கதீஜா, ஒரு துப்பட்டியை எடுத்துப் போர்த்துங்கள்' என்று கூறினார்கள். கதீஜா நாயகியோ உள்ளங் கலங்கி உடல் பதறி விரைந்தெழுந்து போய் துகில் கொண்டு போர்த்தினார்கள். பின்னர் முகம்மது அவர்களிடப் 'எந்தன் ஆருயிரே! இகலடலரி யேறே! சிந்தை சிந்திமெய் திருக்கொடு மதிமுகம் தேம்ப வந்த வாறெவை யுரைக்க' வென்று வேண்டினார்.

நபிகள் நாயகமும் நடந்ததைக் கூறினார். கல்வி கேள்விகளில் சிறந்த உலக மாதாவாகிய கதீஜா நாயகி அந்நிகழ்ச்சியைக் கேட்டு இறைவனின் திருக்குறிப்பையுணர்ந்து அச்சமுற்றிருந்த முகம்மது அவர்களை ஆறுதல் கூறித்தேற்றினார். இந்நிகழ்ச்சியால் குறையேதும் நேராது என்று தேறி, 'நாயகமே, உலகத்தில் உண்டாகும் தீங்குகள் அனைத்தையும் அறத்தொலைக்கும் ஆற்றலுள்ள உங்களுக்கு மனிதர்களால் செய்யப்படும் தீங்கு எள்ளத்தனையும் உண்டாகாது' என்று கூறினார் கதீஜா நாயகி.

நபிகள் நாயகத்திற்கு அல்லாஹுத் தஆலாவின் அருள் கிட்டியதை முதன் முதலில் கதீஜா அவர்களே கண்டார்கள். கணவனுக்கேற்ற கருத்தொருமித்த மனைவியாகிய கதீஜா நபிகள் நாயகம் அறிவித்த வேத வாக்கியத்தைத் தீரத் தெளிய உணர்ந்து, நாயகத்தின் கைகளைப் பிடித்து கலிமா ஓதி, ஈமான் கொண்டு இஸ்லாமானார்கள். பெண்களில் முதலில் இஸ்லாமானது கதீஜா பிராட்டியே ஆவார்கள்.

''வல்லிய மெனுமுகம் மதுதம் மாமணம்
புல்லிய புயவரைப் படர்ந்த பொற்கொடி
முல்லையங் குழற்கதீ ஜாமின் னேமுத
லில்லறத் தொடுமிசு லாமி லாயினார்.''[1]

பெண்களில் பெருமை பெற்றவர் கதீஜா. வாணிப நுணுக்கத்தையும், செல்வத்தைப் பெருக்கும் முறைகளையும் ஈட்டிய பொருளை இறை பணி அறப்பணிகளில் செலவிடு வதிலும் வல்லவராயிருந்தார். மக்களிடத்தில் அன்பும், ஆதரவும் காட்டி அவர்களை சிறப்பாக எளியவர்களை வாழ் வித்த வள்ளலாக இருந்தார். வறுமையிலிருந்து நபிகள் நாயகத்தையே செல்வந்தராக உயர்த்தியது கதீஜா பிராட்டியார் கொடுத்த முதலும், அவர் காட்டிய அன்பும் நேர்மையும்தான் என்பது தெள்ளத் தெளிந்த உண்மை. அன்று பெண்களும் சமய வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டு உண்மை தெளிந்து உய்ந்தனர் என்பதற்குத் தலையாய சான்று அன்னை கதீஜா. கனிமொழி கதீஜா நாயகி, கணவன் கொண்ட கொள்கையில் அசையாத நம்பிக்கை கொண்ட வர்: பகைவர்களுக்கிடையே இஸ்லாத்தை நிலைநாட்ட வந்த வள்ளல் முகம்மதுவுக்கு அன்புக்கு ஆதரவும் காட்டி நம்பிக்கையும் ஊட்டி இறை பணி செய்ய உறுதுணையாய் நின்றவர்; முகம்மதுவிற்கு அரசியல் சமய இடர்கள் வந் துற்றபோது துணைநின்று ஊக்குவித்தவர்: மலைபோல் துன்பம் வந்தாலும அல்லாஹுத்த ஆலாவின் அருளால் அவை பணிபோல் மறையும் என்று எடுத்துக் கூறி இறை தூதருக்கு இன்னுரை பகன்றவர்.

இருபத்தைந்து ஆண்டு முகம்மது நபி (சல்) அவர்களு டன் இணைந்து வாழ்ந்த கதீஜா நாயகி அவர்கள் இல்வாழ்க் கைக்கு இலக்கணமாயமைந்த சிறப்பை 'சீறா' சிறப்பாகச் செப்புகின்றது.

---

1. *சீறா.* தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 5

## நபிகள நாயகம் (சல்) அவர்களின் நாயகிகள்

நபிகள் நாயகம் (சல்) மக்க மாநகரத்திலிருந்து மதின மாநகரத்திற்கு எழுந்தருளிய ஹிஜ்ரி மூன்றாம் ஆண்டில் இரண்டாம் கலீபாவும் அறிவிற் சிறந்த உத்தமருமாகிய உமறு கத்தாபு அவர்களின் மகள் அபுசாவைத் திருமணம் செய்து கொண்டார்.

அபுசா நாயகியை,

'அருந்த வத்தினி லீன்றெடுத் துவந்தபெண் ணரசு'
'கருந்த டங்கயற் கண்ணி'
'நறுமொழிக் கனி'
'வருந்து மெல்லிழைக் கொடி'
'மென் பிடி நடை மயில்'
'பொருந்து மார முது'
'குறைஷி யங்குலக் காவினி லுறைந்தகோ குலம்'
'பொறையு நீதியு மொழுக்கமும் விளைத்தபொன் நிலம்'
'உறையும் கற்பினுக் குறைவிடம்'
'ஒளிர் மணி' என்று சித்திரிக்கின்றார் உமறு.

குபிர் இருள் அறவே தொலைய தீன்பயிர் செழிப்புற்று ஓங்க உழைத்து வந்த முகம்மது நபி (சல்) அவர்களின் அறப்பண்புகளுக்கேற்ப, அருந்தவத்தினால் ஈன்றெடுத்த பெண்ணரசு பொறை நீதி, ஒழுக்கம் யாவும் ஒருங்கே அமையப்பெற்ற பொன் நிலம் என்றும், உறையும் கற்பினுக்கு உறைவிடம் என்றும் அபுசா நாயகியை விளக்கு முறையில் அவர்களுடைய பண்பு நலத்தையும் பாராட்டி மகிழ்கின்றார் புலவர்.

அதே ஆண்டில் உஸைமா என்ற பெரும் பணக்காரரின் மகள் செயினபு நாயகியை நபிகள் நாயகம் மணம் செய்து கொண்டார். செயினபு நாயகியை எழிற் செல்வியாக, பொறைச்செழும் அமுதாகப் போற்றுகின்றார் புலவர்.

ஹிஜ்ரி நான்காமாண்டில் நபிகள் நாயகம் அபூவுமையா வுடைய செல்ல மகளாகிய உம்முசல்மா அவர்களைத் திருமணம் செய்து கொண்டார்.

நபிகள் நாயகம் (சல்) போருக்கெழும் ஒவ்வொரு முறையும் தங்கள் மனைவியரில் ஒவ்வொருவரையும் உடன் அழைத்துப்போதல் வழக்கம். முறைசீக்கு நகரத்திற்குச் செல்ல யாரை அழைத்துப் போகலாமென்று மனைவியரின் பெயர்களைக் குறித்துத் திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்தார்கள்.

"...........கரை போட்டுப்
பார்ப்பவினை பொருவிலாத
காரணத்தி னின்றதவ ஆயிஷா
வுடன் போகக் கண்டதன்றே"[1]

நாயகத்தின் மனைவியருள் சிறந்தவரும், அபூபக்கர் அவர்களின் அருமை மகளாருமாகிய உலக அன்னை ஆயிஷா அவர்களின் திருப்பெயர் வந்தது. எனவே ஆயிஷா நாயகி தோழிகளும் குற்றேவலாட்களும் புடை சூழப் புறப்பட்டார்.

"பொருவறிய வழகுமயி லாயிஷா
வெனுங் கொடியும் போனா ரன்றே"[2]

முறைசீக்கு நகரத்தை வெற்றி கொண்டபின், மதின மாநகரத்திற்குத் திரும்பும்போது நீரற்ற பாலைவனமாகிய புயிதா என்னுல் இடத்திற்கு வந்தபோது அன்னை ஆயிஷா தங்கள் தங்கை 'நறுமேனி யினசுமா விடமிருந்து இரவல் வாங்கி அணிந்து வந்த மணிமாலிகை அறுந்து விழுந்து விட்டது.

1. சீறா. முறைசீக்குப் படலம் 6.
2. சீறா. முறைசீக்குப் படலம் 10, 34.

'நறுமேனியி னசுமாவிட மிரவற்கொளு
நளினச்
சிறுமெல்லடி மயிலாயிஷா களமீதினிற்
சிறந்த
குறைவின் மணி நிறைமாலிகை குறியாதவண்
வீழ்ந்த
தரைமீதினிற் நெறியாதினன் குடபாலினிற்
சார்ந்தான்.'' 1

சூரியன் மறைந்தபின் கழுத்திலிருந்த மணிவடம் காணாத செய்தியை நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். நபிகள் நாயகமும், மற்றவர்களும் மணிவடத்தைத் தேடினார்கள். நெடுநேரம் தேடியும் அகப்படாமையால் 'நாம் இன்றிரவு இங்கு தங்கி காலையில் மணிவடத்தைத் தேடி எடுத்துக்கொண்டுதான் போகவேண்டும்; எல்லோரும் தங்குங்கள்' என்று கட்டளையிட்டார் நபிகள் நாயகம்.

''வையத்தினின் வீழ்கின்றநன் மணிமாலிகை
கண்ணி
னெய்தும்மள வுந்தோன்றிய விருட்போதவ
ணிறுத்தார்
மெய்மைப்புகழ் நபிநாதரு மிகுசேனையு
மப்பாற்
பையப்பய வவ்வெல்லியும் படக்கீழ்த்திசை
விளர்த்த.''2

பின்னிரவில் விழித்திருந்த காரணத்தில் நபிகள் நாயகம் அவர்களுக்குத் தூக்க மயக்கம் வந்ததால் ஆயிஷா நாயகியின் மெல்லிய தொடையில் தலைசாய்த்துத் தூங்கினார்.

''தேய்கின்றதிவ் விரவும்வெளி தெரிகின்றது
கதிரும்
பாய்கின்றது கலனுங்கணிற் படுகின்றில பஜூறு

1, 2, சீறா. முறைசீக்குப் படலம் 34, 35

மாய்கின்றது தொழிலிவ்வுழை யெவ்வாறென
மனத்து
ளாய்கின்றவர் மனையார்துடை யனைமேற்று
யில் செய்தார்." 1

கிழக்கு வெளுத்தது. மணிவடமும் கிடைக்கவில்லை. நாயகம் அவர்கள் ஆயிஷாவிடம் வந்து "உம்மாலல்லவா நாம் இந்தப் பாலைவனத்தில் தங்க நேர்ந்தது? பொழுது விடிந்தால் பஜ்றுத் தொழ உலுவுக்குத் தண்ணீர் அகப் படாதே. எல்லோரும் பஜ்றுத் தொழாமல் தடைபட்டு இருக்கக் காரணம் நீயல்லவா? உமது அறிவு ஏன் இப்படியா யிற்று' எனக் குறை கூறினார்கள்.

"மதிமுற்றிய வுபுபக்கர்த மகள்பாலவ ணெய்தி
யுதகத்தட மிலவித்தல முறையத்தொழு கையுமே
சிதயத்தவ நயினாரொடு செறிந்தாரையுந்
தகைத்தா
யதியுத்தியு ளாயென்றறி வுணரக்குறை
சொன்னார்.2

ஆயிஷா நாயகியின் இந்த அறியாமையாகிய செயல் வேறொரு பெரிய வரத்தினைப் பெற்றுத் தந்தது. நபிகள் நாயகத்திற்கு உலு செய்ய நீரில்லாத போது மண், அதுபோன்ற இன்னும் சில பொருள் களில் ஒன்றால் தயம்மம் செய்து தொழுதல் செய்யலா மென் றும், அதனுடைய விவரம் இன்னது என்றும் நபிகள் நாய கத்திற்கு அல்லாஹுத் தஆலா வேத வாக்கியம் இறக் கினான். ஜிப்றயீல் வந்து அதை அறிவித்தவுடன் அவ்வாறே அனைவரும் தொழுது முடித்தனர்.

முன்னே மணிமாலையைத் தவறவிட்டு பஜ்று செய் வதற்குத் தடை ஏற்படுத்தியதற்காகக் கடிந்து கொண்ட ஆயிஷா நாயகியைக் கண்டு நபிகள் நாயகம் அவர்கள் 'தயம்மம் செய்து தொழக் கட்டளை பிறந்தது ஆயிஷாவின் பொருட்டே'

1, 2. சீறா. முறைசீக்குப் படலம் 36, 37

"செயிர்தீர்தர வணக்கத்தது செயலாகிய பின்ன
ரயில்வாளணி கரத்தோர்மறை யலர்வாண்முக
நோக்கித்
தயமுஞ்செய்து தொழக்காண்டது நரைமாதர்க
டிலத
மயிலாயிஷா பறச்சுந்தென நபிகூறினர்
மாதோ"[1]

என்று பாராட்டிக் கூறினார்கள். பின்னர் மணிவடம் ஒட்டகத்தின் வயிற்றின் கீழிருந்து அகப்பட்டது. அனைவரும் புறப்பட்டு சில நாட்களில் மதின மாநகரம் வந்து சேர்ந்தார்கள்.

முறைசீக்குப் போருக்கு ஆயிஷா நாயகியை அழைத்துச் சென்றதனால் வழிபாட்டிற்கு ஒரு புதிய முறை கிடைத்தது என்ற நிகழ்ச்சியை உமறுப்புலவர் முறைசீக்குப் படலத்தில் சுவைபட எடுத்துச் சொல்லும் திறம் நபிகள் நாயகத்தின் வரலாற்றை மட்டுமல்ல சமயத் தொண்டினையும், அவர் நிலைநாட்டிய சமய முறைகளையும் நம் மனத்தில் எளிதாக வேரூன்றச் செய்கிறது.

முறைசீக் நகரத்திலிருந்து சிறைப்படுத்திக் கொண்டு வந்த பெண்களில் 'தருமந்திகழ் தாபித்தென வருமன்னர்' பங்காக 'திருவுங்குண நலனும்பெறு செயலும்பொறை நிறையு, முருவந்தமு முற' வந்தவள் பனூ முஸ்தலிக் கூட்டத்தின் தலைவர் ஆரிது அவர்களின் மகள் ஜூவைரியா அம்மையார். அறம்மலினராகிய தாபித்து ஜூவைரியாவை அருட்பார்வையில் நோக்கி, 'எழில் நிரம்பியவள், கற்பு நிறைந்தவள், நேர்மையான ஒழுக்கமுடையவள், இவளை நாம் மனைவியாக ஏற்பது தகாது' எனக் கருதி, 'ஜூவைரியாவே உமக்குரிய விலையைக் கொடுத்து விட்டு விருப்பம் போல் செய்க' என விடை தநதனுப்பினார். விரைந்து நபிகள் நாயகம் முன்வந்து தோன்றிய ஜூவைரியா 'சில பொனீகுமி னையா' என்று வேண்டி நின்றாள். அவள்

1. சீறா. முறைசீக்குப் படலம் 41.

தோற்றம் நபிகள் நாயகத்தின் நெஞ்சத்தை ஈர்த்த செய்தியினை,

"வெல் லுஞ்சசி முகமும்வளை வில்லின்றர நுதலுஞ்
செல்லும்பிடி நடையுந்துவழ் சின்னஞ்சிறி திடையுஞ்
சொல்லுந்திரு மொழியும்மிணை தூள்ளுமபிணை விழியு
மல்லும்பொரு குழலுமிவை யெல்லாமுட லயர்த்த."[1]

"மோகத்துய ருடனேநினை வறியாவகை முழுது
மாகத்தினின் மீறப்புக ழாண்மைத்திற னயினார்
......................"[2]

எனக் கூறும் உமறு, முகம்மது நபி அவர்களின் விடையையும்,

"கொலைவட்கர தாபித்தெனுங் குலமேலவர்
தமக்கே
விலையாநிதி யுளதிந்துன துட்கமீட்குவன்
விளங்கும்
பலனாய்ப்படி நீயும்மினிப் பதிதோறினும்
போய்ப்போ
யலையாவகை மகிழ்வாகவில் லவளாகுதி
யென்றார்."[3]

என்று பாடுகின்றார்.

அன்னை ஜுவைரியா அவர்கள் எதிர்பாராது தனக்குக் கிடைத்த இத்திருமணப் பெருமையை ஏற்று, அதன் காரணமாக இன்னும் இருளிலேயே இருக்கும் தங்கள் குலத்தவர் தொடர்பை அறுத்துக் கொண்டார். அத்துடன் தன் தந்தையிடமிருந்த மதப்பற்றையும் வெறுத்தார்.

"மறுத்தாள்குபிர் துடைத்தாடுயர் மதித்தாளற
மதத்தைப்
பொறுத்தாளுட றழைத்தாண்மயிர் பொடித்தாள்
புளகிதத்தா

1, 2, 3, சீறா. முறைசீக்குப் படலம் 54, 55, 56.

லறுத்தாள்குலத் தினத்தாரெனு மகப்பாசமு
மியாவும்
வெறுத்தாணபி மனைப்பாரியென் றுரைந்தாரெனும்
விதத்தால்.''[1]

அண்ணல் நபி (சல்) அவர்களின் அருமை இல்லாளாக அன்னை ஜுவைரியா ஆகிவிட்ட காரணத்தால், போர்க் கைதிகளாகப் பிடிபட்டு அடிமைகளாக்கப்பட்ட 600 எண்ணிக்கையுடைய பனூ முஸ்தலிக் கூட்டத்தினருக்கு விடுதலை அளித்தார்கள்.

இதைக் கேள்விப்பட்ட அபுபக்கரின் மகளாகிய ஆயிஷா அன்னை, ஜுவைரியாவிடம்,

'இகன் மன்னவர் சிறையெண்ணில தெல்லாமினி
துரிமை
மிகவெய்திய துன்னாலென'

எனப் புகழ்ந்தார்.

அன்னை ஜுவைரியாவின் பெண்மை நலம் அவர் இனத் தவருக்கு விடுதலையையும், நபிகள் நாயகத்தின் உறவுத் துணையையும் பெற்றுத் தந்தது.

செயினபு நாச்சியார் கலியாணப் படலம் ஓர் ஓரங்க நாடகமாகவே திகழ்கிறது. செயினபுவின் அழகு, அவர்கள் நபிகள் நாயகத்தைத் திருமணம் செய்து கொண்ட முறை, அன்னை செயினபுவின் பண்புகளால் பெண்களுக்குரிய ஒழுக்க முறையை திருக்குர்ஆன் விளக்கமாகக் கூறியவை யாவும் சேர்ந்து அப்படலம் ஒரு கருத்துக் கருவூலமாகக் காட்சி யளிக்கிறது.

நபிகள் நாயகம் (சல்) ஹிஜுறத் ஐந்தாம் ஆண்டிலே மதீன மாநகரத்திலிருக்கும் சஹஸ் என்பவருடைய மகளாகிய செயினபு என்னும் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள விருப்பித் தூதனுப்பினார். ஆனால் அழகும், அன் பும் கற்பும், இறையருளும் நிரப்பிய பொற்புடைச் செல்வி யாகிய செயினபு தூதரை நோக்கி,

1. சீறா. முறைசீக்குப் படலம் 57,

'வல்லவர் தூதிர் ரல்லா மறைமொழிப் படியே
யன்றிக்
கல்லக ஞாலந் தன்னிற் கடிமணம் விரும்பே
னென்றார்'[1]

தன்னுடைய நிக்காஹ் குறித்து, அல்லாஹுத் தஆலா வேத வாக்கியம் இறங்கினாலன்றி தான் திருமணம் செய்து கொள்ள மாட்டேன் என்று செயினபு கூறி விட்டமையால், நபிகள் நாயகம் (சல்) அல்லாஹுத் தஆலாவின் உத்தரவை எதிர்நோக்கி இருந்தார். ஜிப்றயீல் அல்லாஹுத் தஆலாவிட மிருந்து வேத வாக்கியத்தைக் கொணர்ந்து நபிகளிடம் கூறினார். நபிகள்நாயகம் தாங்களே நேரில் சென்று 'தேனினு மினிய இன்சொல் செயினபு'வைக் கண்டார். ஒப்பில்லாத அழகும், உறுப்பிலக்கணமும் உடைய செயினபு நாச்சியார் அவரைக் கண்டு மனமகிழ்ந்து ஒருபுறம் நாணி நின்றார். நபிகள் நாயகம் அவர்கள் 'தென்றிகழ் மயிலை நோக்கி ஜிப்றயீல் கொண்டு வந்த நன்றிசேர் குறானாயத்தை நவின்றுமா ராயஞ் சொன்னார்.' சொன்ன அளவிலே, நபிகள் நாயகம் அவர்களின் மனைவியாக மனம் ஒன்றி அன்று முதல் கற்பிற் சிறந்த நாயகியாக மனம் பொருந்தி உலக அன்னையாகத் திகழ்ந்தார்.

தெய்வத் திருவருள் பெற்றிருந்த செயினபு நாச்சியார், மலக்குகள் சாட்சியாக இருந்து தெய்வத் திருமணம் செய்து கொண்டார் என்று காட்டும் உமறுப்புலவர் தீன் இஸ்லாத்தை நிறுவிய நபிகள் நாயகத்தின மனைவியையும் அரிய பண்புகள் அனைத்தும் நிரம்பிய குணக் குன்றாகக் காட்டுகிறார்.

திருமணத்தன்று அபூதல்காவின் மனைவி உம்முசுலைம் கொடுத்தனுப்பிய கொஞ்சம் ஈத்தம் பழத்தொடு நெய்யும். தயிரும் விட்டுப் பிசைந்து வைத்திருந்து ஒரு பாத்திரத்தைக் கொண்டு பல அசுஹாபிகளை விருந்துண்ணும்படி செய்தார் நபிகள் நாயகம். விருந்துண்ட பிறகு அசுஹாபி

1. சீறா. செயினபு நாச்சியார் கலியாணப் படலம்

கள் பலர் விடைபெற்றுச் சென்றனர். சிலர் மனை வாயிலில் நின்றிருந்தபடியால், செயினபு நாச்சியார் நாணி நின்றிருந்தார்கள். அப்போது,

"அப்படி யவரு நாணுற் றகத்துளே யிருப்ப
மேலோன்
செப்பிய வாயத் தொன்று ஜிபுரயீல் கொணர்ந்தி
றங்கி
யொப்பிலான் றூதர் முன்ன னுரைத்தவர்
விண்ணிற் சேர்ந்தார்
தப்பிலாக் குணத்தின் றோழர் தங்களைத் தயவாய்ப்
பார்த்தே"
கோதிலா தொசீவ னந்தின் றுவந்தனர் கூண்டி
ராது
போதக செயின பென்னும் பூங்கொடி மனது நாணி
யேதமுற் றிருந்த தாலே யிருநிலக் கிழமை பூண்ட
மாதர்க ளெவர்க்கு நாண மணியணிப் பூணா
மென்றார்."[1]

அப்போது நபிகள் நாயகம் (சல்) அவர்கள் 'செயினபு நாணியிருப்பதால் இனி நமது மார்க்கத்தில் பெண்களெல்லாம் அந்நிய புருஷர்களுக்கு நாணி நிற்பதாகும்' என்ற வேதவாக்கியத்தை ஓதிக் காட்டினார்.

உயிரினுமினிய நாணத்தைக் காத்து நின்ற செயினபு நாச்சியாரின் பெண்மை நலம் வேத வாக்கியமாகத் திகழ்ந்த செய்தியை உமறுப்புலவர் காவியச் சுவையும் கற்பனை நயமும் தோன்ற சொற்சித்திரம் புனைகின்றார்.

இரண்டாவது கலீபாவாகத் திகழ்ந்த உமறுக்கத்தாபுவை ஈமான் கொள்ளச் செய்தவர் அவருடைய உடன்பிறந்தாள் பாத்திமா. நபிப் பட்டம் கிடைத்த ஐந்தாம் ஆண்டுத் தொடக்கத்திலேயே நபிகள் நாயகம் தன் இறைப்பணியை நிறைவுறச் செய்யத் துணைவேண்டி இறைவனை வேண்டினார்.

---

1. சீறா. செயினபு நாச்சியார் கலியாணப் படலம் 23

'உலகினில் கருதலர்க்கு அடலரி உமறினைக் கொடு
அலது அபூஜகிலினைக் கொடு'

என்று மனமுருகி இரந்து கேட்டார். ஆனால் அபுஜகிலோ நபிகள் நாயகத்தைக் கொல்ல உமறையே தேர்ந்தெடுத் தனுப்பினான். கையிலேந்திய வாளொடு சென்ற உமறைச் சிந்திக்க வைத்தது வழியில் அவரை எதிர்த்து வந்த காளை. எனினும் அபூஜகிலும் அவன் கூட்டத்தினரும் முகம்மது செய்த மாயமே அக் காளை, அவனைக் கொன்று வருக என்றனுப்பினர்.

தொடர்ந்து கொலைக் குறிக்கோளுடன் சென்ற உமறுவை நுஜமுபது அப்துல்லா கண்டு முகம்மதை வெட்டு முன் உன் குடும்பத்தைச் சீர்திருத்தும் என்று தூண்ட, உடன்பிறந்தாள் பாத்திமா இல்லம் சென்றார் உமறு. பாத்திமாவும் அவர் கணவர் சயீதும் இஸ்லாமைத் தழுவி இருந்தனர். கப்பாப் என்பவரைத் தன் வீட்டில் வைத்து வேத வாக்கியங்களைப் பாடம் கேட்டு, மார்க்க முறை களைக் கற்று வந்தனர். வழக்கம்போல் கணவனும் மனைவி யும் பாடம் கேட்க அவ்வொலி கேட்டு சீற்றமடைந்த உமறு பாத்திமாவை கடும் சொற்களால் ஏசி, அங்கிருந்த தண்டாயுதத்தால் பாத்திமாவை நெற்றிக்கு மேலடித்துக் காயப்படுத்தினார். இரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. என்னும் ஆன்ம உறுதி மிக்க பாத்திமா உமறுவின் கையில் வேத வாக்கிய ஏட்டைத் தர மறுத்துவிட்டாள். உமறுவின் வாள்வன்மை, உடல் வீரம் ஒன்றும் பயனில்லாது போயிற்று. தூய வேத வாக்கிய ஏட்டை தொடத் தூய்மை வேண்டும். சத்திய வேத வழியை விட்டு விலகியவர் சுத்த மில்லாதவர். நீயும் போய் சுத்தம் செய்து கொண்டு வா! என்று கட்டளையிடுகிறார் பாத்திமா.

உடன்பிறந்தாள் ஆணைப்படி உடற் சுத்தம் செய்து கொள்ளப் புகுந்த வாவியின் சிறப்பையும், உமறு நீராடிய சிறப்பினையும்,

"மன்னவ னபுல்கா சீந்தன் மனத்தெளி வதனின்
மிக்கவாய்
பன்னருஞ் சிறப்பு வாய்ந்த பங்கய வாவி
நண்ணித்
தென்னுறு கதிர்வேற் சிங்கஞ் சிதநீ ராடி
னாரால்."[1]

"புனைந்தமென் றுகிலை நீத்து வேறொரு புதிய தூசும்
வனைந்தகம் புனித மாக்கி வாவியங் கரையை
நீக்கிச்
சினந்தங்கு கதிர்வேற் கண்ணா டிருமனை புகுந்து
நீவிற்
நினைந்தவை முடித்தே னியானு நிகழ்த்திய தருள்க
வென்றார்."[2]

சிற்றிடைப் பெரிய கண்ணாராகிய பாத்திமா, உமறு விடத்தில் அந்தமிலாதி சொற்ற ஆயத்தும் பொருளும் தீஞ் சொற் சிந்து பத்திரத்தை ஈந்தார்.

உமறுகத்தாபு ஏட்டினை வாங்கிப் பார்த்தார் சித்திர வரியிலொன்றைத் தெளிவுறத் தேர்ந்து வாசித்தார். மறை மொழிப் பொருளை உணர்ந்தார். 'மானுடர் மொழியீதன்று' எனத் தெளிகின்றார். அவர் இதயத்திலிருந்து 'குபிர்' என்னும் இருள் அனைத்தும் அறத்தொலைந்தது; 'தீன்' என்னும் பிரகாசம் புகுந்தது; மனம் தூய்மையடைந்தது; புறத்தே அகத்தழகு ஒளிவிட்டது. இதோ கவிஞர் உமறு காட்டும் புரவலர் உமறு!

"நிறைநிலை மனத்த ராகி நினைத்தவஞ் சகத்தைப்
போக்கிக்
குவைபடுங் குபிரைச் சூழ்ந்த குலத்தொடும்
வெறுத்து நின்றார்."[3]

"வழிபிழைத் திருளின் முட்சார் வனத்திடைக்
கிடந்துள் ளாவி
கழிபட விடைந்தெற் றோன்றுங் காலைநன் னெறி
பெற்றோர்போ

1,2,3. சீறா. உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம் 71, 73, 76.

வழிதருங் குபிரை நீக்கி யருமது தீனை நோக்கிப்
பொழிகதிர் வதனச் செவிப் புரவல ருமறு
நின்றார்."[1]

செங்குருதி சிந்தி உடன்பிறந்தான் உள்ளத்தில் ஈமான் பிறக்கச் செய்த பெருமை பாத்திமாவைச் சேர்கிறது.

துன்பத்தை வீரத்துடன் பொறுத்ததன்றித் தன் நல்லுயிரையும் ஈந்து தீன் வளர்த்த பெண்ணரசி 'அன்னமென்னடைச் சுமையா' என்பார். ஈமான் கொண்டு இஸ்லாமானவர்களில் சிலரைப் பிடித்து வருத்தி உயிர்விடும் வண்ணம் காபிர்கள் துன்புறுத்தினர்; சிலரை ஏசினர்; சிலரைப் பல புன்மொழிகளால் வெருட்டினர்; சிலரைக் கடிந்து கொண்டனர். சுமையாவின் குடும்பத்தினரையும் அவ்வாறே பிடித்துத் துன்புறுத்தினர். அம்மார் என்பவரின் தந்தை ஆசிர், தாய் சுமையா, தமக்கை ஒருத்தி ஆகிய நால்வரையும் பிடித்துப் பொது இடத்தில் வைத்து நன்கு புடைத்தனர். அவர்கள் கால்களையும், கைகளையும் சேர்த்து இறுக்கிப் பிடித்து பிணைத்து 'வெடித்திடச் சுடும்பரல் வெயிலில்' கிடத்தினர்.

எதிர்க்கும் திறனற்ற நால்வரும் துன்பம் தாங்காது மனமேங்கிக் கண்ணீர் பெருக்கினர். கணவனும் மனைவியும் மக்களுமாகிய நால்வரும் ஒருவர்படும் துன்பத்தை ஒருவர் காணப் பொறுக்காது தவித்தனர். எனினும் 'தீன் வழியை விட்டுப் பிறழ்தல் கூடாது' என்ற உறுதி அவர்கள் உள்ளங்களில் உரம் பெற்று வளர்ந்தது. துன்பம் பொறுக்கமாட்டாமல் அழுது துடித்த அவர்கள் வெயிலின் வெம்மையில் தோல் கருகி, உள்ளம் உடைந்து, உள்ளீரல் வற்றித் துன்புற்றபோதும் கொடிய காபிர்கள் விடவில்லை. பழிகூறி இகழ்ந்து முன்னே கைகால்களைப் பிடித்த பிடிப்பை இன்னும் இறுக இறுக்கி, வற்புறுத்தி கொடுந்தொழில் செய்தனர். நால்வரும் சூரிய வெம்மையினாலும், பூமியின் வெம்மையினாலும் புழுவாய்த் துடித்தனர்.

---

1. சீறா. உமறுகத்தாபு ஈமான் கொண்ட படலம் 77

நபிகள் நாயகம் அவர்கள் அம்மார் குடும்பத்தினர் படும் துன்பத்தை கேட்டு அவ்விடம் சென்று தரையில் கிடந்த நால்வரையும் கண்டு, 'நீங்கள் இப்பெருந்துன்பத் தைப் பொறுத்துக் கொண்டதால் உங்களுக்குச் சுவர்க்கப் பதவியை அல்லாஹுத்த ஆலா கொடுத்து விட்டான்.' என்று கூறிச் சென்றார்.

"மின்னிய துயரினைப் பொறுத்த மாட்சியாற்
பொன்னுலக குமக்கென வுரைத்துப் போயினார்."

முகம்மது நபி அவர்கள் இச்சொற்கள் செவிக்கும், இதயத் திற்கும், இன்பம் நல்கியதென்றாலும், அவர்கள் உடல் கொடுமையைத் தாங்க மாட்டாமல் தவித்தனர். சுமையா துன்புறும் கணவனைநோக்குவாள்; மைந்தனை எண்ணு வாள்; விண்ணையும் நோக்குவாள்; அவர்கள் படும் துன்பத் தைக் காண இயலாத அவள் 'காசறு பொன்னகர் காணச் சென்று விட்டார்' எனக் கவிஞர் உமறு காட்டுகிறார்.

துன்பத்திற்கும் ஓர் எல்லையுண்டு. எல்லை மீறினால் கொள்கை மாறாது என்றோ மடிய வேண்டிய உடலினை விட்டு உயர்பதவி நாட வேண்டிய நல்லவர் கடமை என் பதை உமறு சித்தரிக்கிறார் பாருங்கள்.

"மண்ணிடை கணவனை நோக்கி மைந்தனை
யெண்ணுற நோக்குவ ளிதயம் வாடுமப்
பெண்ணினை நோக்குவள் பெய்யுஞ் செந்தழல்
விண்ணினை நோக்குவள் வீடு நோக்குவாள்"[1]

"யாசிறு மனைவி நல் லறிவுக் கில்லிட
மாசற தீன்பயிர் வளர்க்கும் வேலியார்
பாசமற் றவரிடர் பார்த்தி லேனெனக்
காசறு பொன்னகர் காணப் போயினார்."[2]

சுமையாவைத் தொடர்ந்து கணவனும், மகளும் பொன் னுலகில் குடி புகுந்தனர். தீனுக்காகத் தியாகம் செய்த சுமையாளுக்கு உமறு வழங்கும் பேற்றினைப் பாருங்கள்!

1, 2, சீறா. தீனிலை கண்ட படலம் 130, 131.

அம்மார் அவர்களின் தாய் எவர்க்கும் தாயாக உயர்ந்து நிற்கின்றார் உமறுவின் கவிதையில்,

> "தெரிமறை முகம்மதின் தீனுக் காகவே
> யிருநிலத் திடைமுத லிறந்து தேன்சொரி
> மருமலர் சுவர்க்கமா ராயம் பெற்றவர்
> தரு அம்மா ருடையதா யெவர்க்குந்
> தாயாரே"[1]

தீனுக்காகத் தொடக்கத்தில் உயிர் விட்டவர் சுமையாவே ஆவர்.

நபிகள் நாயகம் (சல்) அவர்களின் அன்புமகள் பாத்திமாவை உமறு பாடும் திறன் மிகச் சிறப்புடையது. "பாத்திமா திருமணப் படலம்' உமறுவின் கற்பனைத் திறனுக்கும் கவிதை நயத்திற்கும் எடுத்துக்காட்டாய மைந்துளது.

பாத்திமாவை அறிமுகம் செய்து வைக்கும் கவிஞர் உமறு.

> "ஆதிநா யகன்றன் றூதர்க் கன்புறுங் கதீஜா
> வீன்ற
> பேதையர் நால்வர் தம்முட் பெற்றபே றனைத்து
> மொன்றாய்க்
> கோதறத் திரண்டு சோதிக் கொடியென வருக்கொண்
> டோங்கி
> மாதர்ச டிலத மென்ன மாநிலத் துதித்த பாவை."[2]

> "பதித்தலத் துவக்கு மாதர் பவக்கடற் றிமிர
> மோட்டுங்
> கதிர்தடத் தீப மென்னக் கட்டழ கெறிக்குஞ்
> சோதி.,"[3]

> "எண்ணருந் தவமுங் கற்பும் புகழுநின் றிறைஞ்சி
> யேததும்
> பண்ணரும் வேத வாய்மைப் படுதவ றாத வாக்கு

1. சீறா. தீனிலை கண்உ படலம் 132
2, 3. சீறா. பாத்திமா திருமணப் படலம் 3, 4

நண்ணருந் தரும மியாவுஞ் சொற்படி நடக்கு நாளுங்
கண்ணகன் புவியிற் பாவைக் கற்பெறு மரசுக் கன்றே."[1]

"வடிவமு மொழுங்கு நீதி வணக்கமு மறிவும் பூத்த
கொடிமட மயிலைச் சோதிக் குலக்கொழுந் தனைய கற்பை,"[2]

என்று பாத்திமாவின் அருமையையும் பெருமையையும், அறிவையும் கற்பையும், பண்பையும் பணியையும் பாராட்டிப் பேசுகிறார்.

பாத்திமாவை மணம் புரிய எண்ணியவர் பலர். ஆயினும் முகம்மது நபி அவர்கள் அல்லாஹுத் தஆலாவின் எண்ணப்படியே திருமணம் செய்வேனென்று உறுதியுடனிருந்தார். பாத்திமாவிடம் அளவில்லாத காதல் கொண்டிருந்த அலி அவர்களும் அல்லாஹுத்த ஆலாவிடம் தன் காதலை நிறைவு செய்ய வேண்டி உருகி விண்ணப்பித்திருந்தார். இருவருக்கும் இறையருளால் திருமணம் நடைபெற்றது.

திருமணத்திற்காக மஞ்சள் நீராட்டினார்கள் மணப்பெண் பாத்திமாவை. உமறுப்புலவர் மணப்பெண்ணின் சிறப்புக்களை.

"இறையவன் றூத ரீன்ற விருவிழி மணியைச் சோதி
மறைபடா விளக்கைச் சேணின் வாணிடத் துறையா மின்னைக்
கறைபடா மதியை நாளுங் கவின்குடி யிருந்த கொமபைப்
பொறையெனவளர்ந்த கற்பைப் பூம்புன லாட்டி னாரால்"[3]

என்று பாடி மகிழ்கின்றார்.

---

1, 2, 3. சீறா. பாத்திமா திருமணப்படலம் 7, 13, 169

பாத்திமா அவர்கள் தந்தையிடத்துத் தனி அன்பும் அவர் வளர்த்த தீன் வழியில் பெரிதும் நம்பிக்கையும், தந்தைக்கு இடையூறுகள் செய்து வந்த பகைவரிடத்து அடங்கா சினமும் கொண்டிருந்தார் எனினும் இடம், பொருள், ஏவலுக்கிணங்க தந்தைக்குற்ற சிறுமைகளைக் கண்டித்துப் பொறுத்திருந்த தகைமை நிறைந்தவர் பாத்திமா.

தொழுகைக்கு இடையூறு செய்ய எண்ணி ஒரு கொடியவன் அறுத்த ஒட்டகத்தின் இரத்தம், குடல், எலும்பு, சிதைந்த தசைகள் யாவற்றையும் கொண்டு வந்து தொழுகையில் ஈடுபட்டிருந்த நபிகள் நாயகம் (சல்) அவர்களின் பிடரியின் மேல் போட்டான். நபிகள் நாயகமோ இந்தச் சிறுமையைச் சிறிதும் மனத்துட் கொள்ளாது ஐம்புலன்களையும் அடக்கி, நெற்றியைத் தரையில் வைத்து ஸுஜூது செய்தார்கள். பிடரியிலிருந்த சுமை அசையாதிருப்பதையும் நபி ஸுஜூது செய்ததையும் பகைவர் கூடிப் பார்த்து எள்ளி நகையாடுவதைக் கண்டு, ஈர நெஞ்சுள்ள ஒருவன் ஓடி பாததிமாவுக்குத் தெரிவித்தான்.

அதைக்கேட்ட பாத்திமா உள்ளம் புழுங்கி எழுந்து கஃபாவில் வந்து தந்தையின் பிடரியில் இருந்த சுமையை எடுதது எறிந்து சுத்தம் செய்து விட்டுப்போனார். தந்தைக்குத் தொண்டு செய்வதில் தனி இன்பம் கண்ட பாத்திமா அவர் தம சொற்களை மநதிரமாய் ஏற்று நடந்தார்.

திருமண நிகழ்ச்சிக்குப் பின் தந்தையை வந்து வணங்கிய பாதத்மா புதிய அணிகலன்களையும், பழைய குப்பாயத்தையும் அணிந்திருந்ததைக் கண்டு அதற்கு என்ன காரணம் என்று நபிகள் நாயகம் பாத்திமாவை வினவினார். அதற்கு தந்தையே, நான் புதுக் குப்பாயத்தைத்தான் இரவு அணிந்திருந்தேன். ஆடையில்லாது குளிரால் நடுங்கிய எளியவரொருவர் இன்று அதிகாலையில் நம் மனை வாசலில் வந்து நின்று இரந்து கேட்டார். அவருக்கு அப்புதிய குப்பாயத்தைக் கொடுத்து விட்டு பழையதை அணிந்திருக்கின்றேன்' என்றார்.

"எளியவர்க்குப் பழைய குப்பாயத்தைக் கொடுத்திருக்கக் கூடாதா? என்று வினவிய தந்தைக்கு பாத்திமா கூறிய பதில் அவருடைய அறவுணர்வை, ஈகைக் குணத்தை எடுத்துகாட்டுவதாக அமைந்துள்ளது. இதோ பாத்திமாவின் பதிலாக உமறு கூறும் கவிதை,

"அழகிய தெவையுமல் லாவுக் காகவே
விழைவுடன் கொடுத்திட வேண்டு மென்றுநும்
பழமறை வாக்கினாற் பகர்ந்த தாலரோ
மழைதவழ் கொடையனீர் வழங்கி
னேனென்றார்."[1]

"கவுலத்தை விட்டுக் கூட்டின படலம்' சீறாவுக்கு ஒரு மணியாய் ஒளிவிடுகிறது. அறம் பொருள், இன்பம், வேத வாக்கு ஆகிய எல்லாப் பொருளும் பொருந்தியமைந்துள்ளது. காதல், கடமை உணர்வுகள் கொப்பளிக்க இல்லறப் பொறுப்புகள் இலங்கத் தீட்டப்பட்ட இப்படலம் ஒரு சிறு திரைப்படக் காட்சியாகத் திகழ்கிறது.

'சொல்லால் வந்த அல்லலலை'ச் சொல்ல வந்த கவுலத்துக்கு ஏற்ற பின்னணியைத் தீட்டுகிறார் சீறா ஆசிரியர். மற்ற சமயத் தலைவர்களைப் பெண்களை எள்ளாது, ஏசாது, ஒறுக்காது அவர்களுடைய அமைதியான, பாதுகாப்பமைந்த வாழ்வில் கருத்துக் கொண்டவர் நபிகள் நாயகம் (சல்) அவர்கள்.

திருமண வாழ்க்கையில் இனிய பண்புகள் பலவற்றுடன் இனிதே வாழ்க்கை நடத்திய நபிகள் நாயகம் பிறரையும் அவ்வாறே தீதில்லாத இன்ப வாழ்க்கை வாழ வழி வகுக்கின்றார். சினந்து கூறிய சொல்லொன்றால் இல்லற வாழ்வில் ஏற்பட்ட விரிசலைச் சரிசெய்ய எண்ணி நபிகள் நாயகத்தை நாடி வந்தபோது அவர் நீராடிக் கொண்டிருந்தார். இதோ அக்காட்சியை உமறு காட்டுகிறார்.

---

1. சீறா. பாத்திமா திருமணப்படலம் 206

"செம்மையு மறிவு மிக்க வாயிஷா வென்னுஞ்
செல்வி
மும்மையு முணர வல்ல முழுமதி யிறசூ லுல்லா
தம்மைநீ ராட்டும் போதிற் சார்ந்தனள்"[1]

கணவனுக்கு மனைவி செய்கின்ற சிறுசிறு தொண்டுகளி னால் இருவரும் பயனடைகின்றனர். கணவனுக்குச் சிறு வேலைகளிலுள்ள தொல்லைகள் நீங்குகின்றன. மனைவிக்குத் தன்னலமற்ற தொண்டுகளினால் மனப்பக்குவம் வளர்கிறது. கணவன்-மனைவி மனவொற்றுமையை வளர்ப்பதே இத்தகைய தொண்டுகள்தான்.

அவுஃ என்பவருக்கு வாழ்க்கைப்பட்ட கவுலத்து தன்னுடைய முன் கதையைக் கூறுகிறாள்.

"இளமையு மெழிலுஞ் செல்வத் தியற்கையுங்
கிளையு மிக்க
வளமையு முற்று மேனாண் மகிழ்ந்தினி திருந்தோ
மன்பா
யுளமகிழ் தனையர் தோன்றி யுரியவா விபமு
மாறி
யளவிடற் கரிய வாழ்வு மழிந்திட மெலிந்த
பின்னர்."[2]

"சீற்றமும் பகையும் பொல்லாச் செய்கையு மன்றி
வேறு
மாற்றமொன் றுரையா தில்லின் வருந்தொறும்
புலிபோற் சீறிக்
கோற்றொடி யாரை நோக்கிக் கொழுநர்க ளொருகா
லத்துஞ்
சாற்றரு முறை கொண் டென்னைத் தாயென
வுரைத்தார்."[3]

சினந்து 'தாயெ'ன்று கூறியதால் இருவரும் தனித்தனியே பிரிந்து விட்டனர். பட்டினி பொறாத என்று அழைத்தாலும் அன்புடன் அவர் திரும்பிப் பார்ப்பதுமில்லை. உற்ற உதவி

1, 2, 3. சீறா, கவுலத்தை விட்டுக் கூட்டின படலம் 4, 6, 7.

யின்றித் திரியும் எங்கள் துன்பம் துடைத்து, மக்கள் மனத் துயர் மாற்றி, அவர்கள் முகவாட்டந் தீர்த்து நாங்கள் எப்போதும் போல வாழ வழி வகுக்க வேண்டுமென்று வேண்டி நின்றாள்.

'பண்டு போல் வாழத் தந்திர முளவோ' என்ற கவுலத்துக்கு 'எம்மாற் கூட்டுதலரிய' தென்றார் நபிகள் நாதர். அச்சொற்கள் கவுலத்தின் அகமறியினுள் புகுந்து வருத்த. மக்கள்தமைப் பார்த்து வாய் திறந்து அழுது நொந்தாள் அல்லாஹுத்த ஆலாவை எண்ணி துஆ இரந்து இரங்கி அழுதாள்.

நபிகள் நாயகம் நீராடிக் கொண்டுதான் இருந்தார். கவுலத்தும் அழுது புலம்பி துவா இரந்து கொண்டுதான் இருந்தாள். அந்த வேளையில்,

"ஒப்பிலா னருளி னாலே யும்பரி னிருந்து நீதி
செப்பிய வாயத் தொன்று திகழுற விறங்கிற்
றன்றே."

என்று உமறு பாடுகின்றார்.

உடனே கவுலத்திடம் அவுசை அழைத்து வரச்செய்து நபிகள் நாயகம் வேத வாக்கினை விளக்கிச் சொன்னார். ஒரு கணவன் கோபத்தில் மனைவியைத் தாயென்று கூறினால் (1) அவன் ஓர் அடிமையை விலைக்கு வாங்கிட உரிமையாக விட்டுவிட வேண்டும். அதற்குத் தக்க பொருளில்லாவிடில் (2) அறுபது நாட்கள் இடைவிடா நோன்பு நோற்க வேண்டும். அதற்கும் உடல் வலிமை இல்லையெனில் (3) இரவலர் அறுபது பேரை அழைத்து தலைக்கொருபடி தவசம் தானியங் கொடுக்க வேண்டும். இம்மூன்றிலொரு செயல் செய்தால் தாயென்ற சொல் தவிர்ந்து போகும். பின் அவளோடு சேர்ந்து வாழலாம்' என்பது அல்லாஹுத் தஆலாவின் மறைமொழி.

அதைக்கேட்ட கவுலத்து 'ஆளடிமை கொண்டு உரிமை யாகி விட நிதி சிறிதுமில்லை; சூழுடன் விரஞ் செய்யக் கணவனோ துன்புறு கிழவன்; எந்த நாளினும் இரப்போர் கையில் தவசமே நல்க வேண்டுமாயின் வகை வேறு இல்லை' என்று குறையிரந்து கூறினாள். நாட்டு மக்களை உய்விக்க வந்த நபிகள் நாயகம் ''நாமோர் பறைநிறை நின்ற வீத்தம் பழமுனக் கீதுய்'' என்றார்.

'ஆசிலா கற்பின் மிக்க அரிவை' கவுலத்து நபிகள் நாயகம் ஈந்த ஈத்தம் பழத்திணைப் பெற்றுச் சென்று கழுவாய் செய்து 'நேச நாயகனுடன்' செழுமனையிடத்துச் சேர்ந்து வாழ்ந் திருந்தாள்.

மக்கள் தம்மையறியாமல் ஆத்திரத்தில் கூறும் சொற் களால் இல்வாழ்க்கையே அழிந்து போகாமல் நல்வாழ்வு அளிக்க இறையருளால் வகை செய்தார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள்.

வாழும் வகையினை வாழ்ந்து காட்டிய நபிகள் நாயகத் தின் இந்த அருட்செய்கை மக்களுக்கு அறிவுணர்வை—அன் புணர்வைத் தூண்டுவதாயமைந்துள்ளது.

உமறுவின் கற்பனைத் திறனும், கருத்துத் தெளிவும் உணர்ந்ததைப் பிறருக்கு உணர்த்தும் உரனும், பெண்மை நலம் பாராட்டும் பெற்றியும் கற்பாருக்கு இன்பம் பயப் பன. பெண்களுக்கு இயல்பாயிருக்க வேண்டிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு ஆகிய பண்புகளை நலமுற அமைத்து, புனித நாயகனை உருவாக்கி உலக மக்களை உய் விக்கச் செய்த திருப்பணியில் தாய்க்குல மகளிரையும் பங்கு பெறச் செய்து, பெண்களுக்கு உமறு தரும் உயர்வு இலக்கிய நயம் நிறைந்தது.

✲

# சீறாவில் இயற்கை கடந்த செயல்கள்

தக்கலை எம். எஸ். பஷீர், M.A., B.Sc., B.Lib.

வையத்தின்கண் வாழையடி வாழையாக தோன்றிய இறைத் தூதர்கள் (நபிமார்கள்) அனைவரும் இயற்கை கடந்த செயல்களை—அற்புதங்களை ஆற்றியவர்களாகவே இலங்குகிறார்கள்[1]. ஆண்டவன் அருளால் ஆற்றிய இவ் அற்புதங்களை 'நபித்துவத்தின் சான்று', 'அடையாளம்' 'விளக்கம்', 'காரணம்' என்பர். இதனை 'தெய்விக நிகழ்ச்சிகள்' என்றும் உரைப்பர். தாம் இறைத்தூதர் என்பதனை நிறுவுவதற்கும் இத்தகு காரணங்கள் அத்தாட்சி பகருகின்றன. அற்புதங்களை அரபு மொழியில் முஃஜிஸாத்து, ஆயாத்து, கராமத்து, முஜய்யிதாத்[2] என அழைப்பர். திருக்குர்ஆனில் 'ஆயாத்து' = அத்தாட்சிகள் என்றே கூறப்படுகிறது. ஐம்புலன்களுக்குத் தெரியும் அற்புதங்களை அரபியில் 'கர்குல் ஆதாத்து' என்பர். 'இயல்புக்கு மாறானது' என்பது இதன் பொருள். தமிழில் அதிமானுட நிகழ்ச்சிகள், இயற்கை இறந்த நிகழ்ச்சிகள். எல்லை மீறிய நிகழ்ச்சிகள், இயற்கை கடந்த ஆற்றல்கள், இயற்கை கடந்த செயல்கள், மனித எல்லைக்கு அப்பாற்பட்ட கூறுகள், மீமானிட நிகழ்ச்சிகள், இறையியற் செயல்கள் என்றெல்லாம் கூறுவர். மீமானிட நிகழ்ச்சிகள் என்பது மிகப்

---

1. (அ) ஹிஸ்புல்பஹர் ... நபிமார்கள் ஆற்றிய சில அற்புதங்கள். பக் 30 முதல் 31 வரை.
   (ஆ) சாந்தி மார்க்கம் ... மூஸா நபியின் 8 அத்தாட்சிகள் பக் 288-289 (மௌலவி முஹம்மது பஸீல்)
   (இ) "அஸா'வில் (மூஸா) நபியின்) எழுபது முஃகிஸாக்கள் இருந்தன" இப்னு அப்பாஸ் (றலி)
   (உ) திருக்குர்ஆன் 3-36; 27-37; 18-17; 2-66
2. இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் (இரண்டாம் பாகம்) அப்துற் றஹீம் MRM

பொருத்தமாம். ஆங்கிலத்தில் இதனை இலக்கிய ஆய்வாளர்கள் 'Supernatural elements' என்பர் இவ் இயற்கை கடந்த ஆற்றல்கள் (Miracles) (முஃஜிஸாத்து) பெருமானாரின் வாழ்விலும் நடைபெற்றன என வரலாற்றுச் சான்றுகள் தெரிவிக்கின்றன.[1] தெளிவுபடுத்துகின்றன. பல்வேறு சூழல்களில் அவ்வவ்வாறு ஆற்றிய பெருமானாரின் அற்புதங்கள் நபித்துவத்தின் சான்றுகளாகச் சமைந்துள்ளன. அவைகள் இஸ்லாத்தின்கண்—பெருமானாரின் தூதின் பால் மக்களை ஈர்த்தன. இறைவன் தனது மெய்த்தூதர்களின் மூலம் இறையாற்றலை விளங்க வைக்கும் விளக்கமாகவும் அவைகள் விளங்குகின்றன. அற்புதச் செயல்களை நபிபெருமானார் காட்ட என்றுமே நாட்டம் கொண்டதில்லை. ஆனால் மக்களின் வேண்டுதல், கட்டாய நிர்ப்பந்த சந்தர்ப்பங்களினால் தான்—பெருமானார் இறையாற்றலால் அவற்றினை இனிது காட்டினார் என்பதனை முதற்கண் கொள்ளுதல் வேண்டும். திருக்குர்ஆன் எல்லா அற்புதங்களிலும் மாபெரும் தலையாய அற்புதமாக மிளிருகிறது[3a]. பெருமானார் வாழ்வில் நடைபெற்ற இயற்கை கடந்த செயல்களை (இயற்கைக்கும்

---

1. (அ) கலைமறை முகம்மது எனுங்காரணம் ... காரணங்கள் பக் 79 முதல் 100.

(ஆ) "முஹம்மத் நபி" ... பெருமானாரின் அற்புதங்கள் பக். 388 முதல் (சையத் இப்ராஹீம்) 415 வரை 44 அற்புதங்கள்

(இ) ஸஹீஹில் புகாரீ, மிஷ்காத்துல் மஸாபீஹ் திர்மத ஸீரத்து இப்னு ஹிஷாம் ஸீரத்கல் ஹலபிய்யி, சில வுஃது கிரந்தங்கள்

(ஈ) ஹிஸ்புல் பஹர் ... உயிரில்லாத எட்டு வஸ்துகள் நயகத்தோடு பேசியது பக்: 34 முதல் 37 வரை

(உ) அல்திக்றுல் மைமூன் விருநுல் மக்ஸீன் (அஷிக் இலாஹி) 2000 முஃகிஸாத்துக்கள் என்கிறார். 100 முஃஜிஸாத்துக்களை தந்துள்ளார்.

(ஊ) "தீன்ஹஸார் முஃகிஸாத்" (300 அற்புதங்கள்)

(எ) ஸீயர் எனும் ஸீரதுலன்னபி (உருது) பல அற்புதங்கள்

3a. இமாம் பூஸ்ரி (ரஹ்) "புர்தா ஷரீப்"

(ஏ) இமாம் கஸ்ஸாலி (ரஹ்) இஹ்யாவு உலூமித்தீன் "அக்லாகுன்னபி" பகுதியில் பல அற்புதங்கள்

(ஒ) அண்ணலாரின் அற்புதங்கள் முதற்பாகம், இரண்டாம் பாகம்

(ஓ) முன்னைய நபிமார் விளைத்த அற்புதங்கள்...மதியை அழைப்பித்த படலத்தில் காட்டப்படுகிறது.

இயற்மை சட்ட திட்டங்களுக்குப் புறம்பாகவும் மாற்ற மாகவும் நடைபெறும் நிகழ்ச்சிகள்) புலவர்கள் தங்கள் தங்கள் உலக (மொழி) இலக்கியங்களில் பயன்படுத்தி, மன்னிய நபியின் மாண்புகழ் பாடியிசைத்துள்ளனர் இத் தகையதோர் பின்புலத்தில் சீறாக் காப்பியத்தினுள் நுழைந்து உமறுப்புலவர் பாடிய இயற்கை கடந்த ஆற்றல் களைக் காண்போம்.

சீறாப்புராணம் ஒரு மென்மலர் பூங்காப்பியம் முதல் இஸ்லாமியத் தமிழ்க் காப்பியம்—தலைமைக் காப்பியம்—காப்பிய இலக்கண இலக்கியமாக இலங்கும் பெருங்காப்பியம்— முன்னோடிக் காப்பியம்—பின்வழி வந்த இஸ்லாமியத் தமிழ்க் காப்பியங்களுக்கு வழிகாட்டும் முன்மாதிரிக் காப்பியம்—'முன் மாதிரிகளுக்கு' முதன்மை வழிகாட்டியவரின் வாழ்வு கூறும் இலக்கண இலக்கிய காப்பியம்—மன்பதை மாண்புற வந்த மக்கநகர் நாயகர் வாழ்வு பகரும் மக்கள் காப்பியம்—வள்ளல் நபியின் வரலாற்றுக் காப்பியம். சீறா இங்ஙனமாக ஒரு முழுமைக் காப்பியமாக இலக்கிய வானில் இனிது விளங்குகிறது.

பெருங்காப்பிய (Epic) அங்கங்களுள் இயற்கை கடந்த செயல் (Supernatural elements) ஒன்றாகக் கருதுமள வுக்கு இடப் பெற்று வருவதைக் காணலாம். எல்லை மீறிய நிகழ்ச்சிகள் எந்நாட்டு இலக்கியத்திலும் உண்டு. எக் காலத்து இலக்கியங்களிலும் காணலாம். பொது வாக இது இலக்கியங்களில் (அ) ஒரு அணியாக (ஆ) கருத்துச் சுவைபடுவதற்காக, (இ) கதையினில், பெறும் ஒரு உகதியாக இயம்பப்படுதல் காணலாம், (ஈ) எல்லை மீறிய நிகழ்ச்சிகள் யாதேனும் ஒரு நற்பயன் கருதியே புலவரால் புகுத்தப்படுகின்றன, "காப்பியங்களில் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் வருவது இயற்கை. சீறாக் காப்பியத் திலோ அவை ஏராளம், பெருமானார் அச் செயல்களை இறையுதவியால் எளிதில் செய்து காட்டினார் என்கிறார்

உமறு.''[1] ''உண்மையில் கோமான் நபியவர்களின் வாழ்வில் நிகழ்ந்ததாக உலமாக்களால் கருதப்படாத எத்தகைய அதிசயச் செயல்களுக்கும் தம் மாபெரும் காப்பியத்தில் உமறுப்புலவர் இடந்தரவே இல்லையென உறுதியாகக் கொள்ளலாம்.''[2] ''இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களில் மெய் வரலாறுகளை மட்டுமே கொண்ட புராணங்களே உண்டு''[3] என்பது உண்மை.

பெருமானார் காட்டிய இயற்கை கடந்த நிகழ்ச்சிகளை நபி பட்டத்திற்கு முன்—பின் என இருவகைப் படுத்துவர் முன்—''விலாயத்'' என்றும், பின்—'முஃஜிஸாத்து' என்றும் கூறுவர். இருவகையும் இறை அற்புத ஆற்றல்களே. எனவே, இவற்றை இக்கட்டுரையின் கண் ஒரே தலைப்பினுள் காண்போம்.

உமறுப்புலவர் அதிமானுட நிகழ்ச்சிகளைத்தேடி அலையவில்லை. கற்பனை செய்யவுமில்லை. கற்பனை கலக்காத இறைத் தூதருக்கு ஏற்பட்ட, வாழ்வின் உண்மை நிகழ்ச்சிகளே—காப்பியப் பாங்கினில்—மரபினில் இயற்கை கடந்த செயல்களாகவும் பாத்திரப் படைப்புகளாகவும் அமைந்து விடுகின்றன. அவற்றினுள் பலவற்றினைச் சீறாப்புராணப் படலங்களில்—தனிப் படலங்களாகவும் சிலவற்றினை பிற படலங்களினூடேயும் பாடி நிறைவு செய்து செய்து பெருமைப்படுத்தியுள்ளார், காப்பிய மரபு போற்றியுள்ளார்.

## சீறாவில் இயற்கை கடந்த செயல்கள்—பாத்திரங்கள் —செய்திகள்

சீறாவில் வானவர்கள், வானவர்கோன் ஜிபுராயீல் (அலை) பிற முக்கிய வானவரான மீக்காயில் (அலை), ஜின்கள், மலை

1. ''ஜாகிர் உசேயின் கல்லூரி'' உமறுப்புலவர் கருத்தரங்கு மலர்... சீறாவின் காப்பிய நலன்கள்'', கட்டுரை ஹைதர் அலி.
2. ''இலக்கியப் பேழை''. 'நபி பிறந்தனரே' கட்டுரை KPS ஹமீது
3. ''இஸ்லாமியத் தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள். 1968. 'சீறாப் புராணம்' கட்டுரை எஸ். ஏ. செய்யிது ஹஸன் மௌலானா பக். 135.

களுக்கு அதிபதியான மலக்கு, இபுலீசு போன்ற மீமானுட பாத்திரங்களும், வஹீவரல் (Revelation) = திருமறை வசனங்கள் வெளிப்பாடு போன்ற செய்திகளும் இடம் பெறுகின்றன

**படலங்களில் இயற்கை கடந்த செயல்கள்—ஒரு அட்டவணை:**

**(அ) விலாதத்துக் காண்டம்**

(i) அலிமா முலையூட்டுப் படலம்
(ii) சுரத்திற் புனலழைத்தபடலம்
(iii) பாந்தள் வதைப் படலம்
(iv) நதி கடந்த படலம்
(v) புலி வசனித்த படலம்
(iv) பாந்தள் வசனித்த படலம்
(vii) இசுறா காண் படலம்
(viii) கல்வரை நதி மறித்த படலம்

**(ஆ) நுபுவ்வத்துக் காண்டம்**

(i) உடும்பு பேசிய படலம்
(ii) மதியை அழைப்பித்த படலம்
(iii) தசைக் கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம்
(iv) ஹபீபு ராஜா வரிசை வரவிடுத்த படலம்
(v) மானுக்குப் பிணை நின்ற படலம்
(vi) ஈத்தங்குலை வரவழைத்த படலம்
(vii) புத்து பேசிய படலம்
(viii) பருப்பத ராஜனைக் கண்ணுற்ற படலம்
(i ) ஜின்கள் ஈமான் கொண்ட படலம்
(x) காம்மாப் படலம்
(xi) விருந்தூட்டுப் படலம்

**(இ) ஹிஜுறத்துக் காண்டம்**

(i) யாத்திரைப் படலம்
(ii) விட மீட்ட படலம்

(iii) சுறாக்கத்துத் தொடர்ந்த படலம்
(iv) உம்மி மகுபதுப் படலம்
(v) ஓநாய் பேசிய படலம்
(vi) பதுறுப் படலம்
(vii) அபூத்தல்கா விருந்துப் படலம்
(viii) உகுதுப் படலம்
(ix) சாபிர் கடன் தீர்த்த படலம்
(x) ஒட்டகை பேசிய படலம்
(xi) மழையழைப்பித்த படலம்
(xii) அந்தகன் படலம்

இப்படலங்களின் சுருக்கக் கருத்தின் மூலம் இயற்கை கடந்த செயல்களையும், பிற படலத்தினூடேயும் இடைமிடைந்து வரும் அதி நிகழ்வுகளையும் காண்போம்.

நபியவதாரப் படலத்தில்

சிக்கந்தர் துல்சுறுனைன் எனும் மாமன்னரின் அரசாட்சி காலத்திலிருந்து கணக்கிடப்படும் எண்ணூற்று எண்பத்தியோராம் ஆண்டு மக்கபுரி சோதனைக்குட்பட்டது. ரோமானியப் பேரரசின் ஏகாதிபத்தியம் கஃபத்துல்லாவைக் கைப்பற்றுவதற்காக ஒரு பெரிய யானைப்படையொடு முன் வந்தது. அந்த ரோமானியப் படைகள் ஆண்டவனுடைய அருளால் துரத்தப்படுகின்றன. இறை ஆணைப்படி ஆயிரமாயிரம் சிறு குருவிகள் சிறு சிறு கற்களை யானைகளின மீது போட்டு, அந்த யானைப்படையை அழித்து விட்டனர் இவ்வெற்றியாண்டினை யானையாண்டுஎன்பர். இதற்கு முந்திய ஆண்டிலே பெருமானார் (சல்) கருவுற்றார்கள் எனும் இச்செய்தியினை உமறு நபியவதாரப் படலத்தில் பாடியுள்ளார்.[1] இவ் உண்மை நிகழ்ச்சியினை "யானைப்படை அழிவு" என (105) அல்பீல் திருக்குர்ஆன் பகருகிறது.[2] நபிபெரு

1. [அ] வீசு தெண்திரை.........வருடம் [சீறா]
[ஆ] கரைத்தமின்...........வருடம் ,,
2. அன்வாறுல் குர்ஆன்: 1971 அம்மஜீல் உவின் தமிழ் தப்ஸீர். அப்துர் ரஹமான் E. M. பக் 86.

மானார் பிறப்பதற்கு முன்னறிவிப்பான அற்புதம் என்று கூறப்படும் இவ்வியற்கை கடந்த நிகழ்ச்சியினையும் உமறுப் புலவர் காட்டியுள்ளார்.

## அலிமா முலையூட்டுப் படலம்

விலங்கினங்களும் பறவைக் கூட்டங்களும் வானோரும் உம்பர் மகளிரும் முகம்மது நபிச் சேயினைப் பாலூட்டி வளர்க்கத் தம்மிடம் தரும்படி இறைவனை இரந்து கேட்டதாகக் கூறப்படுகிறது.

அலிமா என்னும் மடந்தை அன்றி நபி பெருமானுக்கு வேறெவரும் பாலூட்டல் தகாது என்பதே இறைவன் அளித்த பதிலாகவும் (முதல் 5 வரை) உமறுப்புலவரால் தரப்படும் இயற்கை மீறிய செய்தியாகும்.

ஆரிது-அலிமா தப்பதிகள் இல்லத்தில் ஆடுமாடு, ஒட்டகங்கள், பஞ்ச நெருக்கடியினால் அரைக் கிழடும், சொறியும், மலடும், நடக்க இயலாததும், வரடும் வங்குமா யிருந்தன. ஆமினா திருமகவான முகம்மது (சல்) குழந்தை தம் இல்லத்திற்கு வந்த பின், மகவு முகம்மதுவின் திருக் கரங்களை தமது கரங்களினால் எடுத்துச் சிறப்பாகத் தடவ, அதனால் அவ் ஆடுமாடு ஒட்டகங்களின் குற்றம் குறைகள் நீங்கி அழகு பெற்று விளங்கின, பாலைச் சுரந்து பொழிந்தன. வளமும், செல்வமும் நிறைந்தன என்கிறார் உமறுப் புலவர். இதனை இமாம் பர்சன்ஞ்சி மௌலூதும் பகரு கிறது.

குனைன் மக்களுக்கு துன்பங்கள் துயரங்கள் வந்துற்ற பொழுதும் தாமரைப் பூ போன்ற முகம்மதுவின் பாதம் பணிந்து முத்தியிட்டதால் அவை அகன்றன (18,79) என் கிறார்,

முகம்மதைக் காணில் வறுமை, நோய், கவலை, சிறுமை, தீவினை, பகை, பாவம் முதலானவை நீங்கும் (73). புத்தி செல்வம், தேக பூரிப்பு முதலானவை உண்டாகும் என்று பாடுகிறார்.

நபி பெருமானாரின் அடையாளங்களில் சிலவற்றினை 80, 81 பாடல்களில் தருகிறார். அவைகளாவன: முகம்மது (சல்) வின் சரீரத்தில் தூசி ஒட்டாது. நீரால் கழுவாதிருந்தாலும் மேனி கஸ்தூரி மணம் கமழும், சலமலாதிகளின் நாற்றமுந் தோற்றமும் தோன்றுவதில்லை. சரீர நிழல் தோன்றாது.பாதம் தரையில் தெரியாது. எறும்பு ஈ உடலைத் தீண்டாது. இவையெல்லாம் இயற்கை மீறியவைகளன்றோ!

**சுரதித்தி புனலழைத்த படலம்**

ஷாம் நாடு செல்லும் வழியில் வறண்ட பாலை நிலத்தின்-கண் நீர் பெறாது வாடி வதங்கிய தமது குழாத்திற்கு முகம்மது (சல்) நீருற்றைத் தோற்றுவித்த அற்புதம் இப் படலத்தில் இயற்கை கடந்த செயலாகக் கூறப்படுகிறது.

**பாந்தள் வதைப் படலம்**

ஷாம் நாடு செல்லும் பாதையில் பெரிய மலைப்பாம்பு ஒன்று குறுக்கிட்டு துன்பம் விளைவித்தது. வணிகர்கள், பிரயாணிகள் எல்லோரும் மருண்டு வந்தனர். துரும்பொரு கை முழ முண்டெழில் முகம்மது எடுத்து வீசிட,

"அடிபட்டட வித்திர ளத்தனையும்
பொடிபட்ட துருண்டு புரண்டுவயின்
மடிபட்டொரு கற்குவை வாயினிடைக்
கடிபட்டது பட்டது கட்செவியே."[1]

என மலைப் பாம்பினை மாய்த்தார் என்று அற்புதம் இப் படலத்தில் பேசப்படுகிறது.

**நதி கடந்த படலம்**

ஷாம் நாடு போகும்போது இடையே ஒரு நதி குறுக்கிட்டது. அஞ்ஞான்று அமரர் ஜிப்ரயீல் முகம்மதுவின் கனவில் தோன்றி, நாளை விடிந்ததும் இவ்வெள்ளத்தின்

1. *சீறா.* பாந்தள் வதைப் படலம் 22

நடுவில் ஒரு மான் தோன்றி வழிகாட்டும். அதன் வழி தாங்கள் கூட்டத்தினருடன் சேர்ந்து செல்லுங்கள் என்றுரைத்தார். அவ்வாறே நதி கடந்த—இயற்கை கடந்த செயல் இப்படலத்தில் பகரப்படுகிறது.

**புலி வசனித்த படலம்**

ஷாம் நாடு பயணப் பாதையில் புலி ஒன்று குறுக்கிட்டு, அவ்வழிச் செல்வோர்களையும், கால்நடைகளையும் கொன்று நின்று கொண்டிருப்பதாகக் கூறக்கேட்ட முகம்மது (சல்) அவர்கள், அப்புலியை ஒழிப்பதற்காகச் சென்றார்கள். பூமான் முகம்மதுவின் பொன் ஒளிர் முகம் கண்ட புலி பணிந்து சலாம் கூறியது. பெருமானார் தனக்குப் பணிந்த வேங்கையினை வேறு கானகத்திற்குச் செல்லுமாறு கட்டளையிட்டார்.

"வந்து தெண்டனிட் டெழுந்துவாய் புதைத்துற
வணங்கிப்
புந்தி கூர்வரப் போற்றிய வள்ளுகிர்ப் புலியை
மந்த ராசல முகம்மது நனிமன மகிழ்ந்து
சந்த மென்மணிக் கரத்தினாற் சிரமுகந் தடவி."
இன்று தொட்டிவ ணெறியினி லுயிர் செகுத் திடுவ
தன்று வேறொரு காட்டினிற் புகுக."[1]

எனலும், பணிந்து வேறு காட்டிற்கு விரைந்த அற்புதம் இப்படலத்தில் பேசப்படுகிறது.

"அவர்கள் சிற்றின்பஞ் சார்ந்த வாழ்க்கையினின்றும் தூய்மையாக்கப்பட்டவர்கள். கோபத்தினால் உணர்ச்சி வசப்பட மாட்டார்கள்! ஆண்டவனின் ஏவலைத் தலை மேற்கொள்பவர்கள். அல்லாஹ்வைப் புகழ்வதே அவர்களது உணவு; ஆண்டவனின் புனிதத் தன்மையைப் பிரகடனப் படுத்துவதே அவர்களது பானம்; அவனை நினைத்துக் கொண்டிருப்பதே அவர்களின் பேச்சு; அல்லாஹுவைத்

1. சீறா. புலி வசனித்த படலம் 12

தொழுவதே அவர்கள் அனுபவிக்கும் இன்பம்; வேறுபட்ட உருவத்தில் வேறுபட்ட ஆற்றலுடன் அவர்கள் படைக்கப் பட்டுள்ளனர் என்று அறிந்து கொள்ளுங்கள்'' என 'அராபிய இரவுகள்' எனும் கதைத் தொகுப்பை பதிப் பித்த லேன் என்டவர் தன் முன்னுரையில் கூறியுள்ளார்.

**பாந்தள் வசனித்த படலம்**

பெருமானாரின் ஷாம் நாடு பயணத்தின்போது வழியில் ஒரு பெரிய மலைப்பாம்பு குறுக்கிட்டது. அப்பாம்பினைத் தொலைப்பதற்கு முகம்மது (சல்) சென்றபோது அது வாய் திறந்து சலாம் கூறி, இறைவனின் இருதி நபியவர்களைக் கண்ணாரக் கண்டு களிப்பதற்கு காத்திருந்ததாகப் பேசியது. பின்பு புனிதர் முகம்மது (சல்) அப் பாம்பினை நோக்கி இவ்விடம் விட்டு நீங்கி மலைப்பகுதிகளிலோ கானகத்திலோ வாழுமாறு பணித்தார்கள் பெரிய பாம்பும் அங்ஙனமே கலிமா மொழிந்து அடவி நோக்கிச் சென்ற விபரம் சொல்லப்படுகிறது.

**இசுறா காண் படலம்**

இசுறா மனையின் கண் அமைந்த பாழுங்கிணறும், கரிந்த கட்டை (பேரீந்தின் குற்றி)யும் பெருமானாரின் நுழைவினால் ஏற்பட்ட ஒளி கண்டு, பாழுங்கிணறு குமிழிவிட்டு பெருநீர் சுரந்து நதியென வழியவும், பேருந்தின் கரியகுற்றி குருத்து விட்டு ஓங்கி வளர்ந்து பாளை விரித்து பூச் சிந்திக் காய்த்து மென்கனி தந்தது என (33 முதல் 35 வரை) காட்டுகிறார் உமறுப்புலவர்.

**கள்வரை நதி மறித்த படலம்**

புனிதர் முகம்மது (சல்) அவர்தம் வியாபாரக் குழாமும் பண்டித மணி இசுறாவின் சோலையை விட்டு ஷாம் நாடு செல்லும் வழியில் ஒரு மலையடிவாரத்தை அடைந்தார்கள். அங்கு திருடர்கள் தொல்லை உண்டு என்பது கேட்டு, புனிதர் முகம்மது தம் வியாபாரக் குழுவினை பயமறச்செய்து வழி

நடத்திச் சென்றார்கள். புனிதர் முகம்மது (சல்) கண்ட நற் கனவின் படியே ஒரு பெரிய ஆறானது அவர்களைச் சூழ வந்த கள்வர்களை வழிமறித்து அனுகவிடாமல் செய்த அற்புத நிகழ்வு இப்படலத்தின் கண் காணப்படுகிறது.

### கரம் பொருத்து படலம்

ஷாம் நகரத்தில் சிலர் புனிதர் முகம்மதுவின் (சல்) குழாத்தினர் கொண்டு வந்து விற்பனையாகாத பொருட் களை விலை பேசி பெற்றுக் கொண்டனர். உரிய தொகை பெறுவதற்காக நாயகத்தை தங்கள் இடத்திற்கு அழைத்துச் சென்றனர். வஞ்சகர்கள் நயமாக வரவேற்று வாழ்த்தி அமரச்செய்தனர். அந்தக் கட்டடத்தின் மேல்மாடியில் புனிதர் முகம்மதுவின் தலைக்கு நேராக விழும்படி முன்கூட்டி ஏற்பாடு ஆகியிருந்த கல்லைத் தள்ளுமாறு ஒருவனுக்கு சாடை காட்டினார். ஆனால் அவன் அவ்வாறு தள்ளவும் அக் கல் கீழே விழாமல் அவன் கரத்தினை கௌவிப் பற்றிப் பிடித்து நெறித்து; இறுக்கியது. அவனைத்தேடிச் சென் றோரும் முயன்றும் பயனில்லாது. "சொல்லொ ணார்பிது பதைத்திட வுடறுடி துடிப்பக் கவ்வி னுட்புக வற்றண லவன்மணிக் கரங்கள்"[1] என அவன் இரு மணிக்கட்டும் நீங்க கரம் அறுபட்டது. விவரம் அறிந்ததும், பெரு மானாரிடம் அவர்கள் அனைவரும் இறைஞ்சிப்பிழை பொறுத் தருள வேண்டினர். அக்காபிர்களை மன்னித்து,

"கரிய கல்லினிற் பதிந்திடுங் கரத்தினின்
கரத்தைத்
தெரிய வைத்திடென் றோதிய மொழியினைத்
தேறிச்
சொரித ருங்குரு திகளொடுந் துடுப்பெனுங்
கரங்க
ளரிதி னீட்டியே தொட்டிட வொட்டின
வன்றே."[2]

1, 2, சீறா கரம் பொருத்து படலம் 48, 63

என இருகரமும் இழந்தவனின் சரத்தினைப் பொருத்தச் செய்தார்கள் எனும் இயற்கை கடந்த செயல் இப்படலத்தின்கண் ஓதப்படுகிறது.

**ஊசாவைக் கண்ட படலத்தில் ஒரு அற்புத நிகழ்ச்சி**

கரமிழந்த வஞ்சகனுக்குக் கருணை பொழிந்தபின், வரும் வழியில், தனது அன்பர்களுடன் ஒரு கொல்லன் உலை கூடத்தினருகே அமர்ந்தார்கள். அந்தக் கொல்லன் "நெருப்பு குத்திடுந் தெரித்திடுஞ் சுடுஞ்சிடு நெறியீர், இருப்பிடம் தவிர்ந்து எழும்" என எச்சரித்தான். நண்பர்கள் நீங்கினர்: நாயகம் மட்டும் அவ்விடம் விட்டு ஒதுங்காது அவன் எச்சரிக்கைக்கு நெருப்பின் தன்மை பற்றி நல் விளக்கம் நவின்றார்கள். அறவுரை கேட்ட அற்பன் கொல்லன் கொதிப்படைந்து அலையை மேலும் எரியூட்டி தீப்பொறிகளைச் சிதறவிட்டான். தீப்பொறிகள் செம்மல் நபி மேல் தெரித்த போதிலும் அவைகள் சுடவில்லை எனும் அற்புதம் இப்படலத்தினூடே உமறுவினால் உரைக்கப்படுகிறது.

**உடும்பு பேசிய படலம்**

மக்க மாநகர் அண்மைப் பகுதியிலுள்ள கானகத்தில் பெருமானாரைச்சூழ பெருமை மிகு தோழர்கள் அமர்ந்திருந்தனர். அன்று, அறபி வேடன் ஒருவன் வேட்டையாடிய உடும்பொன்றினை சுமந்து மீண்டுவரும் வழியில் குழாத்தினைக் கண்டான். வேடன் அண்ணல் முகம்மதுவினை யாரென அறியும் அவாவில் பெருமைமிகு தோழர்களிடம் வினவினான். அதற்கு தோழர்கள் 'இவர்தான் ஆதி இறை அல்லாஹுவின் தூதர் முகம்மது முஸ்தபா ரசூல்' என ஓதினர். இதன் பின் வேடனும் பெருமானாரும் அளவளாவினர். பெருமானார் தமது தூதை எடுத்துக் கூறினார். வேடன் அதற்குத் தகு சான்று கேட்டான். மிகவும் தனது வேட்டைப பொருளான உடும்பு பெருமானாரோடு வாய் திறந்து பேசினால் நான் தங்களை நபியென நம்புவேன்

எனப பதிலுரைத்தான். வேடனின் வேண்டுகோளின்படி இகபர இரட்சகர் முகம்மது,

> "இனிதினும் பெயர்ச்கலி மாவை யென்னொடும்
> வனமுறை யஃறினை வாழ்த்துகின்றது
> நனிடக ழுண்மை நன் னபியு நீரலாற்
> பினையிவ ணிலையென வுடும்பு பேசிற்றே."[1]

உடும்பு முகம்மதுவை 'நபி' என்றும், இஸ்லாம் மார்க்கமே சிறந்த மார்க்கம் என்றும் பேசியது. இவ்வாறு உடும்பு வாய் திறந்து உரையாடியதைக் கண்ட வேடன் இஸ்லாத்தினை தழுவினான். உடும்பினை விடுதலை செய்தான் எனும் இயற்கை கடந்த செயல் காட்டுவது இப்படலம்.

**மதியை அழைப்பித்த படலம்**

திமிஷ்க் அரசர் ஹபீபு பெருமானாரிடம் அற்புதம் நிகழ்த்த வேண்டி நின்றார். அதன்படி அமாவாசை இருளில் அழகிய முழு நிலவை வரவழைத்து அதை இருகூறாகப் பிளவுபடச் செய்து அதன் வாயாலே பேசவும் வைத்தார்கள் இதனை விவரிப்பது இப்படலம்,

**தசைக் கட்டியைப் பெண்ணுருவைமைத்த படலம்**

மதியை அழைத்த மறுநாள் வள்ளல் நபி அவர்களிடம் அரசர், கட்டி உருவாய், மாமிச கோளமாய், எலும்பின்றி நரம்பின்றி எழில்குன்றி நெளியும் புழுவுக்குச் சமமாக உள்ள தமது மகளைப் பெண்ணுருவாக்கித் தருமாறு வேண்டிக் கொண்டதற்கு ஏற்ப, நபிகள் நாயகம் அத்தசைக் கட்டியை அழகு மிக்க ஆரணங்காக ஆக்கித் தந்தார்கள். இது பற்றி பகர்வது இப்படலம். இப்படலம் காப்பியச் சுவைமிக்கது என்பது இவண் குறிப்பிடத்தக்கது.

1. சீறா. உடும்பு பேசிய படலம் 34

**ஹபீபு ராஜா வரிசை வரவிடுத்த படலத்தினூடே ஒரு அற்புதம்.**

ஹபீபு அரசர் தன் அருமை மகள்-'தசைக்கட்டி' எழில் மங்கையாக தன்முன் வரக்கண்டு எல்லையில்லா மகிழ்ச்சி யடைந்தார். அவண் கடிதில் கலிமா மொழிந்து அரசரும் தம் பரிவாரங்களும் இஸ்லாத்தைத் தழுவினார்கள். திமிஷ்கு சென்றபின் மன்னர் நன்றியறிதலாக ஏராளமான பொருட் களை ஒரு ஒட்டகத்தின் மீது ஏற்றி பெருமானாருக்கு அனுப்பி வைத்தார். இச் செய்தி அறிந்த தீமை புனை அபூஜஹல் அப் பொருள்களெல்லாம் தனக்கு வந்ததாக அறிவித்தான். அண்ணல் முகம்மதுவுக்கு அனுப்பப்பட்டதல்ல என வாதிட் டான். அந்த ஒட்டகமே வாய்திறந்து,

"வரிசை நாயகன் றாமெனு முகம்மது நபியே
யரசர் கேசரி ஹபீபெனுந் திமிஷ்க் கரச
ரிரசி தம்பணி மணிதம ணியமிவை யனைத்தும்
பரிச னத்தொடு நுமக்கனுப் பினரெனப் பகர்ந்த."[1]

என பெருமானாருக்கே ஹபீபு அரசன் கொடுத்தனுப்பிய பொருட்கள் எனச் சான்று பகர்ந்ததை இப்படலம் பேசு கிறது.

**மானுக்குப் பிணை நின்ற படலம்**

பெருமானார் வேடன் வலையில் அகப்பட்டமானொன்று வேண்டிக் கொண்டதனால், அதனைத் தன் குட்டிகளுக்குப் பாலூட்ட அனுப்பி—வாய்மெ காதலுக்காக அந்த மானுக்குத் துணிந்து உயிரை நல்க வரும் உயிர் அற்புதம் விரித்துரைப்பது இப்படலம்.

**ஈத்தங்குலையை வரவழைத்த படலம்**

காட்டரபி ஒருவன் பெருமானார் சமுகத்தில் அற்புதம் காண வேண்டி விழைந்தான். எதிர்நின்ற ஈந்த மரத்தின்

1. *சீறா.* ஹபீபு ராஜா வரிசை வரவிடுத்த படலம் 37

ஈத்தங்குலை மட்டும் தன்முன்னே வரவழைக்கக் கேட்டனன். அவ்வண்ணமே நிகழ, மீண்டும் அந்த மரத்தில் அக்குலை பொருந்தக் கோரினான். அதன்படியே பொருந்தச் செய்தார்கள். காட்டரபி ஈமான் கொண்டான்.

## புத்து பேசிய படலம்

குசைனு என்பவன் பெருமானாரைக் காணவந்து, தான் வணங்கி வரும் சிலை வாய் திறந்து பேசி தங்களை ஏற்றுக் கொண்டால் தான் ஈமான் கொள்கிறேன் என்றான். அதன்படியே அச்சிலையினை வரவழைத்து பெருமானார் போர் செய்தார்கள். குசைனும் இஸ்லாமானான், இந்த அற்புதம் பற்றிப் பாடுவது புத்து பேசிய படலம்.

## பருப்பத ராஜனைக் கண்ணுற்ற படலம்

தாயிப் நகரில் இப்னு அப்துயாலில் எனும் குறைஷி யினை பெருமானார் சந்தித்து நபித்துவ விபரம்கூறிய ஞான்று அவன் பாசாங்கு செய்தான், இரண்டொரு நாளில் நேரில் வந்து வழிபட்டு நடப்பேன் எனக் கூறி மக்க மாநகரம் திருப்பி அனுப்பி வைத்தான் மக்க மாநகர் நோக்கி, பெருமானார் வருங்கால். இப்னு அப்துயாலில் சிலரை ஏவி கற்களால் எறியக் கட்டளையிட்டான். அவர்களும் அங்ஙனமே செய்தார். கல்லெறியினால் நாயகத் திருமேனியின் மூழங்காலிலிருந்து குருதி வழிந்தோடியது. முகம்மது ஆண்டவன் நாட்டம் இதுபோலும் எனத் தேறுதல் அடைந்தார். அச்சமயம் வானிலிருந்து அமரர் கோன் ஜிபுரயீல் தோற்றமாகி சலாம் கூறி உங்களுக்குத் தொல்லை தந்தவர்களை ஒழிப்பதற்கு பர்வதங்களுக்கு (மலை) அதிபதியான மலக்கை உங்களின் ஏவலின்படி செயல்படுமாறு உத்திரவிட்டுள்ளான். அவர் உங்களிடம் சிறிது நேரத்தில் வருவார். பகைவர்தம் குறும்புகளை அடக்கி ஒடுக்குவார் என்று கூறிச்சென்றார் அதுபோன்றே பருப்பதராஜா பெருமானார் முன்வந்து சலாம் கூறி, 'தங்களது உத்தரவு வழி செயல்படுமாறு இறைவன் அனுப்பியுள்ளான். தாங்கள் இடும் ஆணை யாது?' என

வினவி நின்றார். பெருமானார், இப்னு அப்துயாலின் குபிர்க் கொலைத் தொழில் மனத்தினை விடுத்திட்டு, இக்கணத்தில் வழிபடார் எனில் இவரும் இவர்தம் கூட்டமும் பின்னர் நல் வழியில் ஒழுகுவர்; மறையும் 'தீன்' வழியும் பரப்புவர் என்றார். இது கேட்ட அந்த அமரர் அந்த இடத்தினை விட்டு நீங்கினார் என்பதைத் தரும் படலம் இது.

### ஜின்கள் ஈமான் கொண்ட படலம்

கர்னுதாலிப் எனுமிடத்தை விட்டு நகுலா எனுமிடத்தில் நாயகம், அந்திப் பொழுதில் வந்தடைந்தார்கள். அன்று இரவில் ஜின்கள் கூட்டம் கூட்டமாக வந்து பெருமானார் அவர்களை கண்டன. பெருமானார் வேரோடு மரம் எழுந்து வந்து பேசிய பின் தன்னிருப்பிடம் செல்ல வைத்ததைக் (31, 32) கண்டு ஜின்கள்[1] ஈமான் கொண்டு இஸ்லாத்தை தழுவிய அற்புதம் கூறுவது இப்படலம்.

### காம்மாப் படலம்

காம்மா என்பவன் எத்தனையோ ஆண்டு காலத்திற்கு முன், எவராலோ கால் கட்டப்பட்ட நிலைக்கு ஆளாகிவிட்டவன். அவன் பெருமானார் அவர்கள் திருமுன் வந்து முறையிட, அண்ணல் முகம்மது (சல்) அவர்கள் ஹஸரத் அலி (றலி) அவர்களைக் கொண்டு காம்மாவினுடைய கால் கால்களைத் தறித்து விட்ட அற்புதம் இப்படலத்தில் கூறப்படுகிறது.

---

1. ஜின் என்பது என்ன? யாது? என்பது பற்றி கருத்து வேறுபாடுகள் உண்டு. எனினும், ஜின்... என்பதன் மூலம் 'ஜன்ன' என்பதாகும். 'எஜின்னு' என்பதன் பொருள் மறைக்கப்பட்டிருத்தல் அல்லது மறைத்தல் என்பதாம் சாதாரணமாக ஜின்கள் கண்களுக்குத் தென்படுவதில்லை என்ற கருத்தும் உண்டு. ஜின்களில் நல்லவைகளும், கெட்டவைகளும் இருக்கின்றன. 'ஸீரா அன்னாஸ், நெருப்பின் கொழுந்தினால் அவன் ஜின்களைப் படைத்தான்' ...திருமறை. 'இந்தக் குர்ஆனைக் கேட்கும் பொருட்டு ஜின்களில் சிலரை நாம் (நபியே!) உம்மிடம் வரும்படிச் செய்தோம், பின் தங்கள் இனத்தவரிடம் அவர்கள் சென்று அச்சமூட்டி எச்சரிக்கை செய்தனர்' ...திருமறை.

### விருந்தூட்டு படலம்

பெருமானார் அவர்கள் இல்லத்தில் நடைபெற்ற ஒரு விருந்தின் பொழுது, குறைந்த உணவினைக் கொண்டு எண்ணிறந்தோர்களுக்குப் பெருமானார் அன்னம் பரிமாறிய அற்புத நிகழ்ச்சி இதில் உரைக்கப்படுகிறது.

### யாத்திரைப் படலம்

இறைவன் திருப்பொருத்தத்திற்கு இசைய, பெருமானார் நபிப்பட்டம் பெற்ற, பதினான்காம் ஆண்டு ரபியுல் அவ்வல் திங்கள் ஐந்தாம் தேதி திங்கட்கிழமை இரவில் மக்க மாநகர் விட்டு மதீன மாநகர் செல்லத் திட்டமிட்டுள்ள விபரம் குறைஷிகளுக்கு எப்படியோ தெரியலாயிற்று. பொல்லாக் குறைஷிகள் எல்லோரும் திரண்டு நபியவர்கள் தங்கியிருக்கும் இல்லத்தைச் சுற்றி வளைத்துக் கண்காணித்து வரலாயினர். அமரருக்கரசர் மொழிப்படி, திருமனைப் புறத்தினின்று ஒரு பிடி மண் எடுத்து யாசீன் ஓதி நாற்றிசையும் வீசி பயணமானார் (78, 96, 97) எனும் அற்புதம் ஓதப்பட்டது.

புனிதர் முகம்மது (சல்) வும் அபூபக்கரும் தௌர் குகையில் உறைந்திருக்க, குகை வாயில் சிலந்தி பூச்சியும், புறாவினமும் கூடுகட்டி முட்டையிட்டு இருப்பதைக் கண்டு தேடி வந்த விரோதிகள் திசைதோறும் புகுந்து தேடி, பொதும்பர் வாயிலை நெருங்கியபோது சிலம்பி நூலும் நீள்சிறைப் புறாவின் கூடுங் கண்டு முகம்மதுவினை காண்கிலோம் என விலகினர். (101 முதல் 114) இயற்கைச் செயல்களும் இயற்கை கடந்த செயல்களாக அமைந்துள்ளது இறையின் செயலன்றோ!

### விடமீட்ட படலம்

திரு மக்க மாநகர் விட்டு (ஹிஜ்ரத்தின் பொழுது) பகைவர் தம் கண்ணினின்றும் நீங்கி; நபி பெருமானாரும் அபூபக்கரும் தௌர் மலைக் குகையில் வந்துறைந்தனர்.

இரண்டு மூன்று நாட்களாக நபிகள் நாயகம் தூக்கமின்மை யால், அபூபக்கர் மடிமிசை செழுந்துயில் புரிந்தார்கள் அவ் வமயம், மலைமுழையதனின் கண்ணமைந்த குறுவளையினிற் "கொடுங்கண் வெவ்வாய்த் தெறுநுனைப்புரைப்பற் புண் ணாச் சிறுபொறிப் படத்த செஞ்சூட்டெறுழ் வலிக் கரிய பாந்தள்" தோன்றி அபூபக்கர் சித்திக் (றலி) அவர் களின் காலைக் கடித்தது. பன்னருங் கொடியவிடம் உடல் முழுவதும் பரவியது கடிவழி உதிரஞ் சிந்தக் காலசைத் திடாமற் தூதர் செய்யும் நித்திரைக்கு இடரில்லாமல் இருந் தார். மயக்கந் தோன்றத் தன்னிலை தளராது அசையாது இருந்தார். இந்நிலையில் துயின்றெழுந்த கருணைக் கடல் நாயகம் விபரம் அறிந்து, தங்கள் வாயமுதத்தை எடுத்து கடிவாயினிற் தேய்த்தார். அமிர்த நீர் உடலெல்லாம் பரந்து வெவ்விட அணுவறக் கடிந்து, நலம் பெற்றார். எனி னும் இயற்கை கடந்த செயலை இப்படலத்தில் உமறு விரிக் கின்றார். (புகாரீ ஹதீஸூம் இதனை மொழியும்).

### சுறாக்கத்துத் தொடர்ந்த படலம்

நபி பெருமானாரும் அபூபக்கரும் தௌர் குகை நீங்கிப் புன் பிரயாணத்தைத தொடர்ந்தனர். அபூஜஹலின் ஆட் களால் அனுப்பப் பெற்ற ஒற்றர்களில் ஒருவனான சுறாக்கத் என்பவன் இவர்களின் பாதை கண்டு நெருங்கலானான். அப்போது, அவனது குதிரையின் குளம்புகளைப் பூமியானது கவ்விக் கொண்ட அற்புதமும் அவனையும் பிடித்துக் கொண்ட அற்புதமும் இப்படலத்தில் விவரிக்கப்படுகிறது.

### உம்மி மகுதுப் படலம்

சுறாக்கத்துத் தொடர்ந்த பின், அண்ணலாரும் அபூ பக்கர் சித்தீக்கும் (றலி) செல்லும் வழியில் ஆயர்குல உம்மி எனும் மூப்புடைய மூதாட்டியினை சந்தித்தனர். அவளது இல்லம் பஞ்சமும் வறுமையும் மிடிமையும் மிகுந்து காணப் பட்டது. கொடுப்பதற்கு யாதொன்றும் இல்லாதிருந்தாள். அப்போது அங்கு வயதுமுதிர்ந்த ஆடொன்று இருந்தது.

இரக்கமுற்ற ஏந்தல் நபி அதனின் முதுகில் தடவினார்கள். ஆடு இளமையுடன் திகழ்ந்தது. பாலெழுந்து பீறிட்டு பூமியிலோடிற்று எனும் அற்புதம் பகரப்படுகிறது. இதனை இமாம் பர்சன்ஞ்சியும் கூறுகின்றார்.

**ஓநாய் பேசிய படலம்**

இப்படலத்தில், மக்க மாநகரை அண்மித்த கானகத்தில் ஓநாயொன்று—மானை விரட்டிச் செல்ல—அந்த மான் ஹரம் ஷரீபுக்குள் சென்று விட்டது. அங்கு நின்றிருந்த குறைஷிக் கொடுமனத் தலைவர்களாகிய அபூஜஹல், அபூஸுப்யான் ஆகியோர்களிடம் அறநெறி போதித்த அற்புதம் பற்றிப் புலவரேறு உமறு பாடுகிறார்.

**பதுறுப் படலம்**

நபிகள் நாயகம் மாற்றார் படைத் தலைவர்களும் மன்னர்களும் போரில் இறக்கும் இடம் இது இதுவெனத் தோழர்களுக்குச் சுட்டிக் காட்டிப் படையை அணிவகுத்தார்கள் (..7). பெருமானாரின் 'முன்னறிவித்தல்' எனும் அற்புதத்தோடு, பகைவர்களை நிச்சயம் வெல்ல முடியும் எனும் நம்பிக்கையை — வீர உணர்வினை — வீரர்களுக்கு உணர்த்துவதாகவும் அமையும். அண்ணல் முகம்மது (சல்) முன் கூறியவாறு யார் யார் எங்கெங்கென 228 பேர் (ஒலிது, உக்குவா, உத்துபந், சையத், உமையா, உமாறா) இறந்தொழிந்தனர் என்பது காட்டப்படுகிற அற்புதத்தைக் காணலாம்.

இப்போரில் போர்க்களத்திலிருந்து ஆயுதங்கள் எல்லாம் முறிந்து திரும்பிய உகாசா (றலி) அவர்களுக்கு பூமியில் கிடந்த கோலொன்றினை அண்ணல் எடுத்துக் கொடுக்க கரம் பெற்ற கோல் மின்னும் வாளாகியது (157) எனும் அற்புத நிகழ்வு கூறப்படுகிறது.

'போரின் இறுதியில் நாயகமவர்கள் திருக்கையால் மண் வாரி ஓதி வீச எதிரிகளின் பலம் கெட அழிந்தார்கள்.

(205, 206) இதனைத் திருக்குர்ஆன் சூரா அன்பல் [8:17] வாயிலாக "மண்வாரி வீசியது நானே" என இறைவன் அறிவிக்கின்றான்.

'ஷாமிலிருந்தும் மக்காவிலிருந்தும் வந்த இருபெரும் படைகளுள் ஒன்றினை உமக்குச் சரணடையச் செய்தேன்' என இறைத் தூதருக்கு அல்லாஹ்வின் மொழி வந்திறங்கி யதை உமறுப்புலவர் (72) குறிப்பிட்டுள்ளார்.

அபூத்தலகா விருந்துப் படலம்

அபூத்தல்கா எனும் அஸ்ஹாபி பெருமானாருக்குக் கொடுத்த மூன்று ரொட்டியினை, பன்னரும் துண்டப்படுத்தி நெய் தோய்த்துப் பதின்மர்தமைப் பண்பு கூர அழைத்து இன்னமுது செய்க என புசிக்கச் செய்தார்கள், அன்னவர் கள் கையார, வாயார, வயிறார உண்டனர். பதின்மர் எடுத்து அருந்தியும் பாத்திரத்தினளவு குறைந்தில பின் இன்னும் பத்தும்பர் வந்திருந்து உண்டனர். மேன்மேலும் உணவு வளர்ந்தது. எண்பது பேருக்கு அளிக்கப்பட்டது, 'மீறிக் கரை ததும்பக் கிடந்த செழும் பாத்திரத்தை' நாயகம் அபூத்தல்காவிடம் அவரது மனைக்கு எடுத்துச் செல்க (8, 9, 10) என்றார்கள் எனும் அற்புதம் அறிவிக்கப் பட்டது.

கந்தக்குப் படலம்

கந்தக்குப் படலத்தில் அகழி தோண்டும் பொழுது மாமலைப் பாறையொன்று தோன்ற, அதனைப் பிளக்க பிளக்க தகர்ந்தில (49, முதல் 52). பெருமானார் கருங்கற் பாறையிடத்திற்கு வந்தார்கள். தம் செழுங்கரத்தில் உள்ள கூந்தாலத்தால் ஓங்கி அடிக்க பேரொலி திசைதொறுந் தழைப்ப சிதறுந் துண்டங்களாயின (55, 56) எனும் அற்பு தப் பகரப்படுகிறது.

இப்படலத்தில் ஏழ்மை மிகு சாபிர் (றலி) நபிகள் நாயகத்திற்கும் தோழர்களுக்கும் ஒப்பற்ற விருந்தொன்று

கொடுக்க விழைந்தார். பெருமானாரிடத்துச் சொன்னார் அவர்களும் 'வெண்ணிணத் தசையொடு நுவணியுஞ் சமையாதாங்கு' வைத்திரு என்றார். பின்பு பல்லோரோடு பெருமானார் சென்றார்கள். சென்று கோதுமை மாவினையும் இறைச்சினையும் கொணரச்செய்து தொட்டு, பின் சமைக்கச் சொன்னார்கள். ரொட்டிச் சுடச் சுட அதிகமாயின. இறைச்சியும் அதிகமாயின. உண்பவர்களுக்கு கொடுக்க கொடுக்க உயர்ந்தன. எடுக்க எடுக்க பாத்திரம் நிரப்பமாகிக் கொண்டிருந்தன எனும் அற்புதம் அறியத் தருகிறார். விருந்து விமரிசையாக நடைப்பெற்றது பின் நாயகம் சாபீ ரிடம் விருந்து கொடுத்த ஆட்டின் கொம்பு, தோல், குளம்பு முதலியவற்றினை எல்லாம் கொணரச் செய்து, இறையருளால் நீயிவண் எழுந்திட என்றுரைத்தர்ர்.

> "துண்ட மாகிய தொன்றெனை பொருந்தியூன்
> றோய்ந்து
> பண்டு போலெழு முயிரும்வந் துடலினிற் பரப்பக்
> கண்டி யாவரு மகிழ்வுறக் காலினை மடக்கிக்
> கொண்டே ழுந்து முன் குதித்தது."[1]

அந்த ஆடு எனும் அற்புதமும் தரப்படுகிறது. (இச் செய்தி 5: முதல் 77 வரையுள்ள பாடல்களில் காணலாம்).

**உகுதுப் படலம்**

உகுதுப் போரில் கத்தாதா (றலி) அவர்கள் தனது வலது கண்ணை இழக்க நேரிட்டது. பெருமானாரிடம்சென்று இறைஞ்சி முறையிட்டார். அப்பொழுது பெருமானார் அல்லாஹு அருள் வேண்டி தமது திருக்கரங்களால் தொட்டுத் தடவி ஒளி பெறச் செய்தார்கள் (165 முதல் 175 வரை) எனும் அற்புதம் காணலாம்.

இப்போரில் அப்துல்லா எனும் வாட் போர் வல்லார் தனது வாளை இழந்து நிற்குங் காலை, பெருமானார் பேரீத்

1. சீறா. கந்தக்குப் படலம் 74

தம் பாளை ஈக்கினை அப்துல்லா கை கொடுக்க அது கூர்மை தாங்கிய வாளென விளக்கிற்று எனும் அற்புதச் செய்தியும் (189 முதல் 191 வரை) தரப்படுகிறது.

**சாபிர் கண்ட தீர்த்த படலம்**

சாபிர் எனும் அஸ்ஹாபியின் தந்தை எஹூதி காபிர் ஒருவனுக்கு அறுபது கோட்டை பேரீத்தம்பழம் கடனாகப் பெற்றதைக் கொடுக்க வேண்டும், அவர் இறந்தபின், எஹூதி சாபிரிடம் வட்டியும் முதலுமாக நூற்றைம்பது கலம் கொடுக்க வேண்டும் எனக் கேட்டான். சாபிர் பெருமானாரிடம் சென்று விபரம் கூறி, ஈத்தந் தோப்புகளில் வருகிற பலன் குறைவே ஆகும். நாலாண்டுகள் ஆயினும் கொடுத்தல் என்பது இயலா. ஆவன அருள் புரிய வேண்டி நின்றான். பெருமானார் எஹூதியினை அழைத்து சாபிரோடு 'பொற்வரி வண்டு கிண்ட வெறித் துணர்த் தாது துன்றும் வேரியஞ் சோலை புக்கார்'.

"அடல்புரி சாபிர் தம்மை யருகினிற் கூவி யீந்தீன்
றுடைவையின் கனிக டாருத் தொறும்பரித் தீட்டு
மென்னப்
படிபுகழ் ஹபீபு சொன்ன சொற்படி படர்ந்து
செந்தேன்
குடிபுகுங் கனிக ளியாவு மரந்தொறுங் குவித்து
வைத்தார்."[1]

அக்கணம் எஹூதியினை அழைத்து நூற்றைம்பதின் கலப் பழமும் குறையாது கொடுத்தார் எனும் அற்புதம் கூறப்படுகிறது.

**ஒட்டகை பேசிய படலம்**

ஒரு ஒட்டகை திடீரென மதம் பிடித்து ஈத்தந் தோட்டங்களை அழித்து வந்தது. தோட்டங்களுக்கு உரிமையாளர்கள் நாயகத்தினிடம் வந்து முறையிட்டனர். புனிதர்

1. சீறா. சாபிர் சடன் தீர்த்த படலம் 7

முசம்மது (சல்) அவர்கள் ஒட்டகத்தினருகே சென்றார்கள். அவ் ஒட்டகம் வாய் திறந்து பேசிய அற்புதம் இப்படலத்தில் கூறப்படுகிறது.

## மழையழைப்பித்த படலம்

ஹிஜ்றி ஆறாவது ஆண்டு வெள்ளிக்கிழமை அஸ்ஹாபிமார்களோடு சூழ இருந்த கீர்த்தி சேர் வள்ளல் நபி அவர்களிடம் கூர்ந்த சீர் அஸ்ஹாபிமாரில் சுலைக் என்பவர் மழையின்றி வாடும் "மாரி நீர் வறந்துசோலை மரம் இலை உதிர்ந்த மிச்சு பாரினில் எழுந்த பைங்கூழ் பசையறச் கருகிக் கானல்" ஆகிய நிலையினையும், "மருத நன் நிலமும் பாலை வனமென உலர்ந்து" நின்ற நிலையினையும் இன்னோரன்ன வறண்ட நிலையினையும் கொடுமையினையும் கூறுவதாக (3 முதல் 8 பாடல்களில் உமறு விவரிக்கின்றார். திரு நபி இரங்கிப் பாரினில் மழையின்றி வாடும் வருத்தங்கள் நீங்க வேண்டி மனத்தினில் கிருபை மீறிப் புருக்கான் வேதப் பொருளினை எவரும் உள்ளத்திருத்தி அரும் ஒளியை உன்னி நிறை செழுஞ்சுடரை இரந்து, இருகை ஏந்தி மழை பொழிந்திடக் கிருபை செய்தார் ஆதியின் அருளினான "அலையொடு தழுவிச் சூல் முதிர்ந்தெழுந்த அழுகுற விளங்கியது மாரி" என்றும் மேலும் பெருமழை பெய்ததனை (14 முதல் 18) பாடல்களில் காட்டுகிறார். இருபது தினங்களாக பெய்த பெருமழையால் துன்புற்றதனால் மழையை நிறுத்துமாறு மீண்டும் பெருமானாரிடம் துஆச் செய்ய வேண்டி நின்றனர். நன்மைகள் எவர்க்கும் நடத்திட வந்த நபி துஆச் செய்திட பெருமழையும் நின்றது. இவண் பெருமானார் மழையழைப்பித்த—நிறுத்திய நிகழ்ச்சி இயற்கை கடந்த செயலாகத் தரப்பட்டுள்ளது. (புகாரீ ஹதீஸ்)

## அந்தகன் படலம்

இருவிழிப் பார்வை அற்ற ஒருவனுக்கு பெருமானார் அவனை இறையிடம் தொழுது இறைஞ்சி வேண்டுமொறு பணிந்து அவனுக்கு விழிபெற்றுத் தந்த அற்புதம் கூறப்படுகிறது.

கடுநோய்வாய்ப்பட்ட ஒருவன், (நோய் விவரணை 12, 13, 14, 15) பெருமானாருக்கு தூது அனுப்பினான். அண்ணல் நபி அற்ப மண் அள்ளி உமிழ்ந்து இதனைக் கொண்டு போய் கொடு என அனுப்பினார்கள் (17) அது அவனுக்கு உயிர் தரும் மருந்தாக உதவிய அற்புதம் பகரப்படுகிறது

இங்ஙனமாக சீறாவில் பெருமானாரின் அற்புதங்கள் பல பேசப்படுகின்றன. "கொடிய மிருகங்களும் மரங்களும் நபி பெருமானாருக்கு வணங்கியது, அழைப்புக்கு இசைந்தது' ஸலாம் சொன்னது சாட்சியும் பகர்ந்தது" என சுப்ஹான மௌலூது பகரும் பாமொழியும் படித்தறிதற்குரியது. இங்ஙனமாக மனிதர்களும் ஜின்களும் மட்டுமின்றி அஃறிணைப் பொருட்களும் பெருமானாரின் மூலம் கலிமாவின் உயர்வினை உணர்ந்து நேர்வழி பெற்றுத் திகழ்வதை உமறு பலவிடத்தும் காட்டுகின்றார்.

**சீறாவின் ஜிபுறயீல் (அலை)** [1]

**வானவர்** [2]

'மலக்' எனும் அறபுச் சொல்லுக்கு 'மலாயிக்கத்துமார்—வானவர் அல்லது தேவதூதர் எனப் பொருள் பகரலாம். வானவர்கள் ஒளியினின்றும் படைக்கப்பட்டவர்கள். ஆண் பெண் அற்றவர்கள். இறைவனின் கட்டளைக்குக் கட்டுப்பட்டவர்கள். வானவர்களுண்டு என நம்புவது ஈமானின் உறுப்புக்களுள் ஒன்றாம் [3]

1. "காந்தியினொளி இலங்குகத்தவன் ஜிபுரீயில்" 16

—திருநெறிநீதம் 459

2. "ஒளிவினால் படைக்கப்பட்டவர்கள் மலாயிக்கத்துமார்கள் என்று நம்பப்படுகின்றனர், அவர்களுக்கு உயிருண்டு; பேச்சு வன்மை உண்டு; பகுத்தறிவுண்டு; இன வேறுபட்டால் அவர்கள் ஜின் (பூதங்) களையும் சைத்தான்களையும் விட வேறுபாடுடையவர்"

3. ஆமன்து பில்லாஹி வமலா இகத்திஹி

மலக்குகளின் பெயர்களை "ஜவாஹிறுல்ஹம்ஸா" எனும் நூல் தொகுத்துரைக்கின்றது,[1]

| | |
|---|---|
| சைத்தான் | II, III, IV, V, VII, VIII, XIV, XVI, XXII, XXV, XXXIV, XLIII |

மலக்குகளைப் பல்வேறு பிரிவுகளாகப் பிரிப்பர். அவர்களுள் நால்வர் தலைசிறந்தவர்கள். அவர்களைக் 'கறூபியூன்' என அறபுமொழியில் வழங்குவர். ஆங்கிலத்தில் Arch Angel என்று அழைக்கப்படுவர் வானவர் கோன் ஜிபுரயீல் (அலை) இஸ்றாபீல், மீகாயீல், இஸ்ஜயீல் மிக முக்கியமானவர்களாகும். இவர்களெல்லாம் இயற்கைக்கு அப்பாற்பட்ட—மீறிய பாத்திரங்களாவர். மீமானுட பாத்திரங்களாவர்.

செந்தமிழ்ச் சீறாவில் வானவர்கள் (மலக்குகள்) வானவர்கோன் ஜிபுரயீல் (அலை) முக்கிய வானவர்கள் சிலர் இயற்கை மீறிய பாத்திரங்களாக வருகின்றனர். ஜிபுரயீல் (அலை) நபிபெருமானாரோடு பல தடவை தொடர்பு கொண்டதனைச் சீறா செப்புகின்றது. உண்மையும் அதுவன்றோ!

பதுறுப் போரில் பெருமானாருக்கு உதவிபுரிய ஐயாயிரம் மலக்குகள் பஞ்சகல்யாணி குதிரையில் அமர்ந்து பொன்னிறக் கரையுடைய தலைப்பாகை அணிந்து படைக்கருவிகளையும் தாங்கி விண்ணிலே வந்து தோன்றினார்கள் என பதுறுப் படலத்தில் (22) உமறு கூறுகிறார்.

ஜிபுரயீல் (அலை), மீகாயீல் (அலை) இவர்களிருவரின் உருமாறி வந்த வருகையின் வல்ல தன்மையினை வல்லாங்கு 'இலாஞ்சனை தரித்த படல'த்தில் காட்டுகிறார் உமறு.

1. இஸ்றபீல், இப்றாஈல், கல்காஈல், தர்தாஈல், துர்பாஈல், றப்தமாஈல், ஷர்க்காஈல், தங்காஈல், றூயாஈல், ஷிலாஈல், ஹம்வாக்கீல் இத்றாஈல், அம்வாக்கீல் அம்றாஈல் அஸ்றாஈல் மீகாயில் மஹ்காஈல் ஹர்த்தாஈல் அதாஈல் நூறாஈல் நூஈல்..............
ஜவாஹிறுல் ஹம்ஸா

வரலாற்று நாயகர் வள்ளல் நபியின் வாழ்க்கையில் ஏற்பட்ட மிக முக்கிய நிகழ்ச்சியாம் அது.

## இலாஞ்சினை (முத்திரை) பதித்தல்

குனைன்பதி கானகத்தில் அலிமா இளமைநிறை முகம்மது வினை இளஞ்சிறார்களான தோழர்களுடன் ஆடுமேய்க்க அனுப்பிவைப்பது நாளும் வழக்கம் அன்றொருநாள் உகா மரத்தின் நிழலின் கீழ், பட்டுடை உடுத்தி, சாந்தமிகு தோள்களையுடைய, கட்டழகினராய், ஒளிவீசு சந்திர முகத்தையுடையவராய் சரீரத்தின்கண் ஆடை உடுத்தவராய் வலிமை மிகு இரு வாலிபர்கள் விட்டொளிர் மின்னல் போல, விரைந்து வந்து சேர்ந்தனர்.

கண்டதும்...

முகம்மது தோழச் சிறார்கள் அனைவரும் பயந்து நடுங்கி நின்றனர்.

திடுக்கிட்டுப் பதறிச் சிதறியோடினர். முகம்மதுவை அவர்களிருவரும் மரத்தின் நிழலின்கண் படுக்கும்படி செய்து, இதயக் கமலக்காயாகிய முகையைப் பிளந்து, கறை, கசடு, தீமைகளைக் களைந்து, நீரால் கழுவி ஈமான் நல்லறிவால் நிரப்பினர். பின் பிடரியின் கீழ் இரண்டு தோள்களின் நடுவினில் புறாமுட்டை அளவு முத்திரை எனும் அவ் இலாஞ்சினையினை இட்டனர். பின் பெருமானாரைப் பார்த்து இரு வானவர்களும் நீவீர் சொர்க்கப் பலன்—பதம் பெறுவீர்! கோடானுகோடி மனிதர்களுக்கு நிறையாவீர்! ஆதிநாள் முதல் முடிவுநாள் வரை உமக்கு யாரும் ஒப்பாகார்! உமது ஷபா அத்தால் மன்பதை குலம் ஈடேற்றம் பெறும்! ஹபீபுல்லா! என ஏத்தி, புகழ்ந்து, மகிழ்ந்து, வாழ்த்தி வானேறினர். இந் நிகழ்ச்சி இயற்கை மீறிய ஆட்சியன்றோ! இவ் அறுவை நிகழ்வுக்குப் பின்பும் முகம்மது (சல்) பொன் மேனி புண்படாது, தழும்பேறாது, எச்சுவடுமின்றி காணப்பட்டது என்பதும் கருதத்தக்கது. ஜிபுரயீல், மீக்காயீல்

உமறுவின் வர்ணனைத் திறந்தால் வடிவெடுத்த போதிலும் பெருமானார் வாழ்வில் நடைபெற்ற தெய்வீக நிகழ்ச்சியாம் அது.

**ஒளி உருவம்—ஜிபுயீல்** [1]

அமரர்கோன் ஜிபுரயீல் அவர்கள் ஹிராமலையில் ஆகாயத்திலிருந்து எர்திரங்கியதனை, நபிப்பட்டம் பெற்ற படலத்தின் கண்,

"நித்தில நிரைத்த விருசிறை யொழுங்கு
நீணிலாக் கதிர்கள்விட் டொழுக
வித்துரு மத்தாள் சிறந்தணி திகழ்
வில்லுமிழ் கரங்கிடந் திலங்கப்
பத்திவிட் டெறிக்குஞ் செம்மணி யிருகட்
பார்வையிற் கருணைவீற் றிருக்கச்
சித்திர வடிவைச் சுருக்கிமா னுடர்போல்
ஜிபுரயீ லவ்விடத் தடைந்தார்."[2]

என ஜிபுரயீல் உருவத்தினை முத்துக்கள் நிறைக்கப்பெற்ற இரு சிறகுகளின் ஒழுங்குகளும், நீண்ட ஒலியானது சுடர் களை வீசும் பவளம் போன்ற இருபாதங்களும் சிறப்புற்று அழகு பிரகாசிக்கவும், ஒளியை உமிழ்கின்ற இருகைகளும் ஒளிரவும், வரிசையை விட்டு பிரபையை வீசாநிற்கும் சிவந்த இரத்தினங்கள் போன்ற இருகண்களின் பார்வை களிலும் அருள் வீற்றிருக்கும் தனது அழகிய உருவத்தினை 'சித்திர வடிவினை' சுருக்கி மனித வடிவில் அமரர் கோன் ஜிபுரயீல் (அலை) அவன் வந்திறங்கினார்கள் எனப் பாடு கிறார் உமறுப் புலவர்.

**ஜிபுறயீல் வழி வஹி—திருமறை வெளிப்பாடு**

மக்க மாநகர் அண்மையிலுள்ள ஹிரா மலைக்குச் சென்று முஸ்தபா ரசூல் (சல்) அவர்கள் பசித்திருந்து, தனித்

1. "காந்தியினொலி இலங்குகத்தவன் ஜிபுறயீல்"...திருநெறி நீதம் 459
2. சீறா நபிப்பட்டம் பெற்ற படலம் 12

திருந்து, விழித்திருந்து இறைச்சிந்தனையினை வளர்த்து வரும் நன்னாளில்—நாற்பதாவது அகவையில்—இரவினில் வானவர் கோன் ஜிபுரயீல் (அலை) முன் வந்து விண்டலம் பரவும் 'வேதநபி' எனும் பட்டம் பெற்றீர்! மறை வசனங்களை ஓதுங்கள்' என்று கூறினார். முகம்மது (சல்) 'யான் எழுத்தறிவு ஒன்றுமறியேன்' என்று கலங்கி நிற்க, ஜிபுரயீல் முகம்மது (சல்) அவர்களை இருகரத்தாலும் கட்டணைத்துப் பிறகு 'ஓதுங்கள்' என்று கூறினார்கள். அப்பொழுதும் அண்ணல் நபி ''மறை முதல் வசன நாவின் வழக்கினன் அல்லன்'' என்றார். மும்முறை ஏந்தல் நபி அவர்களை இறுகத் தழுவி நெருக்கி வருத்திப் பின்னும் 'ஓதுங்கள்' என்று சொல்லவும் முகம்மது 'உரையும்' என்க, ஜிபுரயீல் ''இக்றஃ'' என்று தொடங்கும் சூராவின் முதல் நான்கு ஆயத்துக்களை 'மாலம் யஃலம்' வரை உரைத்தார்கள். நபியவர்களின் திருவாயால் ஓதிய வசனங் கேட்டு உள்ளம் களிப்படைந்த ஜிபுரயீல் அவர்கள் விண்ணுலகத்தின்கண் மறைந்தார்கள்.

மற்றொரு நாள் இதுபோன்று ஜிபுரயீல் (அலை) ஸீரத்துல் முஸ்லிம் அத்தியாயத்தினை அளித்துள்ளதனையும் உமறுப் புலவர் பாடுகிறார்.

### தொழுகை வந்த வரலாற்றுப் படலம்

தொழுகை வந்த வரலாற்றுப் படலத்தில் ஜிபுரயீல் வானத்திலிருந்து இறங்கிப் பெருமானாரை ஹிராமலையின் அண்மையில் அழைத்துச் சென்று, பூமியைப் பிளந்து தண்ணீர் எடுத்ததனை,

''சிலம்பி லுறைந்த முகம்மதுவைத்
திருந்து மமரர் கோமரன்கொண்
டுலம்பற் றுறுஞ்சின் னெறியினிழிந்
துடனின் றரிதேரர் மருங்கனணந்து
நிலம்பிட் டுதிர மண்சிதற
நிலவா மணித்தாள் கொடுகீண்டப்

பிலம்பட் டுறைந்த நறுஞ்சலிலம்
பிறந்து குமிழி யெழுந்தனவே[1]

என்கிறார் உமறுப் புலவர்.

ஜிபுரயீல் ஒலூ வகை, தொகை, தொழுகை முறைமைகளைக் காட்டி விண்ணேறி சுவர்க்கப்பதி சென்றதனை,

"பெருகிப் பரந்த புனற்கரையிற்
பெரியோன் தூதை யருகிருத்தி
மருவு மலரு மெனவுலூவின்
வகையுந் தொகையும் வரவிருத்திக்
குரிகி னபியைப் பின்னிறுத்திக்
குறித்த நிலைரண் டிறக்க அத்துப்
பரிவிற் றொழுவித் திருந்துவிண்ணிற்
படர்ந்து சுவனத் தவத்துறைந்தார்."

எனப் பாடுகிறார்.

முறைசீக்குப் படலத்தில் பயகாம்பருக்கு ஒலுச் செய்வதற்கு 'தயமம்' செய்து தொழ மேலவன் விதித்துள்ள மொழியினை (39) மஞ்சார் வெளி வழியே கொடு வந்த ஜிபுரயீலினைக் காட்டுகிறார் உமறுப்புலவர்.

இங்ஙனமாக புலவரேறு உமறுப்புலவர் தமது காப்பியத்தில் ஜிபுரயீல் (அலை) அவர்களை—இயற்கை கடந்த பாத்திரத்தினை சிறப்புற படைத்துக் காட்டியுள்ளார்.

**உமறு உருவகிக்கும் இபுலீசு**

யார்? எது? இபுலீசு!

இபுலீசு, ஷைத்தான், சாத்தான் (Satan) யாவும் ஒரே பொருள் விளக்குவன. 'ஷாத்தான்' எனும் அரபு மொழி சொல்லிற்கு 'ஷதன்' எனும் வேர்ச் சொல் அடிப்படையில்

---

1,2. சீறா, தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 37, 39

'தூரமாகி விட்டவன்'—'விலகி விட்டவன் எனப் பொருள் பகர்வர். அதாவது இறை வழியிலிருந்து—அறத்திலிருந்து தூரமாகி விட்டவன் என்பதாம், மனித குலப் பண்பை விட்டு விலகி மறப்பண்புமிக்க கலகக்காரன் என்பது ஆகும். 'ஷய்த்து' என வேர் கொண்டு கோபத்தால் எரிக்கப்பட்ட வன் என்று பொருள் கொள்வாரும் உளர். திருமறையில் ''இபுலீசு'' என்றும்; ''சைத்தான் பகரப்படுகிறது''.[1] எந்த நற்செயல்களைத் தொடங்கு முன்பும், குர் ஆனை ஓத ஆரம் பிக்கும் முன்பும், 'சபிக்கப்பட்ட ஷைத்தானிடத்திலிருந்தும் பாதுகாப்பைத் தேடிக் கொள்ள வேண்டும், (16;80) எனும் இறை கட்டளைக்கு இருவகையாகப் பொருள் கொள்வார். (i) கண்ணுக்கு மறைவானவன் (ii) கட்புலனாகும் தீமை மிகு வெறுக்கத்தக்க மனிதன். ஷைத்தான் இறைக் கட்டளைக்கு எதிர்மாறான குணம் படைத்தவன். அமரர் (மலக்) இனத்தைச் சேராதவன், தருக்கும் செருக்கும் மிக்கவன். மறப்பண்புகளை உருவகப்படுத்தும்—உருவாக்கம் பெற்றவன் ஷைத்தான் எனலாம். நன்மையான செயல் களைச் செய்யும்படித் தூண்டுவது அமரர்களின் தத்துவம். அதனைத் தடுத்து மனத்தைத் திருப்புவது சைத்தானின் தத்துவம். ''ஆதிக்கு உவந்தோன் இபுலீசானவனுக்குப் பகைவன், இபுலீசுக்கே உவந்தோன் இறைவனுக்கே பகை வன்' என்கிறது இபுலீசுநாமா. இபுலீசு (சைத்தான்) பற்றி பல்வேறு கருத்துக்கள் பரிமாறப்பட்டபோதிலும் அவனுக்கு எனத் தனி உருவமில்லை என்பது தெளிவு. தீக் குணங்கள் எல்லாம் அவன் உருவமே எனில் வேறில்லை. ''சைத்தானி யத்'' எனும் குணக்கேடுகளே சைத்தான் என உருவகப் படுத்தப்பட்டது எனின் மிகப் பொருத்தமாம். இதனை உறுதிப்படுத்துவது போன்று திருமறையின் (அத் 5;91) ''ஷைத்தான் நுழைவதெல்லாம் மயக்கப் பொருள்களையும்

1. சைத்தான் என 52 இடங்களிலும், இபுலீஸ் என 9 இடங்களிலும் திருக் குர்ஆனில் வந்துள்ளன என்றும் கூறுவர்.

சூதாட்டங்களையும் கொண்டு உங்களுக்கு இடையே பகைமையும் வெறுப்பையும் உண்டாக்கி அல்லாஹ்வின் நினைவை விட்டு, தொழுகையை விட்டும் உங்களைத் தடுத்து நிறுத்துவதேயாகும். எனவே, நீங்கள் (அவனை விட்டு) விலகிக் கொள்வீர்களாக! எனும் அறிவுரை சான்று பகரும். அன்றோ! 'சைத்தான் என்பது கீழான மனத்தின் குணம் அல்லது தத்துவம்தான்' என இப்னு அரபி (றலி) கருத்துத் தெரிவிக்கிறார்கள்.

முஸ்லிம்களுக்கு தொல்லைகள் பல தந்த 'அபீறாபிகு' என்பவன் கைபர் சோலையில் வாழ்ந்து வந்தான். அவனை உமறு, 'சதி மனத்து இபுலீசு என்போன் அதபு அறிவென்பதில்லா அகத்து அபீறாபிகு' என அவனை இபுலீசுக்கு மகனாகக் கூறுகிறார். எனவே நன்மைக்கு எதிரிடையான தீமையோனை இபுலீசு எனக் கூறுவதே பொருந்தும். வழக்கம், மரபு என்பது மேலும் தெளிவாகும். சீறாவின் "வினையம் உற்பவித்த புந்தி அபூஜகல்", "தீமைபுனை அபூஜகல்", "இகல் மனத்தபூஜகலும் இபுலீசே" என்பது பொருந்திய முடிவாம். இத்தகையதோர் பின்புலத்தில் உமறு உருவகிக்கும் இபுலீசை—சாத்தனை சைத்தானை) காண்போம்;

### உமறுப் புலவரின் உருவகம்

பெருங்கவிஞன் மில்டனின் உலகப் பெருங்காப்பியமான சொர்க்க இழப்பின் (The Paradise Last) சாத்தானைப் (satan) பற்றிய திறனாய்வுகள் தான் எத்தனை! எத்தனை!!ஒப்பற்ற உமறுப்புலவர் இபுலீசை 'ஜின்கள் ஈமான் கொண்ட படல'த்தில் உருவகித்துக் காட்டுகிறார். பெருங்கவிஞன் மில்டனின் வர்ணனைகளோடு—உருவகத்தோடு ஒப்பாய்விற்குரியது. ஓமர், வெர்ஜில் போன்ற பெரும் புலவர்களும் கடவுள், தெய்வீகத்தன்மைகள் போன்றவைகளைத் தமது இலக்கியங்களில் பங்குபெறச் செய்தனர். சொர்க்க இழப்பில் கடவுள் சாத்தான் பிற தேவதூதர்கள், வெறுப்பூட்டும் 'Ioathsome Sin' போன்ற இயற்கை கடந்த பாத்திரங்

களை காட்டியுள்ளமை இவண் குறிப்பிடத்தக்கது. பீரப்பா வும் இபுலீசை உருவகப்படுத்தி வர்ணித்துள்ளார்.

"குணக்கினால் நரியொழுங்குங்
கொடு வீசமாவு தந்தம்
தனத்திடு தலையிற் கொம்பு
தானது நடுவே யொன்று
யனைத்திடு மதக்கரியின்
பாங்கென வாலுங்காலுங்
கனத்த கோல் கையிலேந்திக்
சுசடனும் பிறந்தானப்போ"[1]

புலவர் நாயகமும் இபுலீசு உருவத்தினைப் பாடியுள்ளார்.

"நிரையுமேனியுங் கூனியுந்தே யெயிற்
றுறையுங் கோலினிலூன்றது நின்றலு
நரையுந் தாடியு நாடியுமாடியும்
புரையும் புல்லிபு லீசவன் புக்கினான்" [2]

'இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங் களில் இபுலீஸ் என்பவன் பாட்டுடைத்தலைவனின் எதிரியாக வருணிக்கப்பட்டுள்ளான்."[3]

இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் இபுலீசு பற்றிய தனி யிலக்கியம் படைத்தனர். செய்யிராக்கரின் 'இபுலீசு நாமா' குறிப்பிடத்தக்கது.

உமறுப்புலவர் இபுலீசைக் கூறும் அடைமொழித் தொடர்களைக் காண்போம்.

'மாயவஞ்சகன் (யாத்திரைப் படலம். 5-6); "வஞ்சநெஞ்சி புலீசு" (உகுதுப் படலம். 109); "சனவஞ்சக மாயவன் கொடியவனிதமிலூனமுற்ற கண்ணினன் றொடர்ந்தெவரை

1. திருநெறிநீதம்-407
2. திருமணிமாலை 7:11 செயற்கையங் காண்டம், மந்திரப்படலம்.
3. திருக்குர்ஆனும் முஸ்லிம் மக்களின் தமிழ்ப்பேச்சு வழக்கும் இலக்கிய வழக்கும் பக். 26 அல்ஹாஜ் கலாநிதி ம மு. உவைஸ் M;A;Ph.D.

யுமுனைப்போன்'' (உகுது. 225); 'சதி மனத்திபுலீசு' (அபீறாகு. வதை 3); ''சிறியன் வஞ்சகச் செய்கைய ணியா வர்க்குந் தீயோ னிறைவனேவலைத் தவிர்த்திடுங் குசட்டி புலீசு'' (யாத். 36) என்பன சில.

உமறுப்புலவர் இலட்சிய இபுலீசை இன்தமிழில் ''பொய் எனும் படைபலத்தின் தலைவன்; சிறுமை, தாழ்மை, இவற் றில் பெருமையுடையவன்; கொலைத் தொழிலின் தந்தை; கோளுக்கு உயிர்த் துணைவன்; களவுக்கு அன்பன்; நிந்தனைக்குப் பொருந்திய தம்பி; மதுவுக்கு மகவினும் இனியன்; நீட்சியுற்ற இஞ்ஞாலத்து மாயங்களனைத்தினா லும் ஒரு வடிவத்தினை எடுத்து நின்றவன்; என்றுமிருக்கும் இறை அல்லாஹ்வின் ஏவற்றொழிலிருந்து மாறுபட்டு சுவர்க் கப்பதியினை இழந்து சத்தியத்தை விதிக்காநிற்கும் மறை களுக்கும் நாணமுற்று இந்தப் பூவுலகத்தின்கண் வாழும் யாவருக்கும் கொடிய தன்மையுடைய 'இபுலீசு' என்று கூறும் பெயரையுடையவன் என்பதனை.

''அலைகடற் றிரைக்கு நாப்ப ணாளியா சனத்தில்வைகி
உலகெலாங் கொடுங்கோ லோச்சி யொருகுடை
நிழலிற் றாமங்கிப்
பலகலை மருவலார்க்குப் படிறெனும் படைந டாத்துந்
தலைமையன் சிறுமை கீழ்மை தனைப்பெரு மையம
தாய்க் கொண்டோன்.''[1]

''கொலையினுக் குரிய தந்தை கோளுயிர்த் துணைவன்
மாறா
நிலைகெடுங் கரவுக் கன்ப னிந்தனைக் குற்ற தம்பி
யிலைபிழி மதுவுக் கீன்ற சேயினு மினிய னீண்ட
உலகினின் மாயமெல்லா மோருரு வெடுத்து
நின்றோன்.''[2]

1, 2. சீறா, ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 4. 5.

"எண்ணிறந் தனைய கால மிருந் திறை யேவன்
மாறி
விண்ணில மிழந்து மெய்ம்மை விதிமறை தனக்கு
நாணி
மண்ணிலத் திருந்து வாழு மானிட ரெவர்க்கும்
வெய்ய
தண்ணிய னிபுலீசு சென்னுந் தனிப்பெரு நாமத்
தானே."[1]

என வர்ணிக்கும் அழகுதான் என்னே!

உமறுப்புலவர் காட்டும்—உருவகிக்கும் இபுலீசின் குணக்கேடுகளிலிருந்து நீங்குவோமாக. சைத்தானின் (இபுலீசு) தீக்குணங்களினின்றும் வெகுதூரம் விலகி—நீங்கி நல்லடியார்களாகச் சமைவோமாக!

புலவரேறு உமறு காம்மாப் படலத்தில் இபுலீசினை, வடித்தெடுத்து அவன் பெயரினை,

"வானுல கடங்கத் தன்வசப் படுத்தி
மறுவறும் பெயர்க்கிடர் விளைத்துப்
பானிற வளைவெண் டிரைக்கடற் பரப்பிற்
பகையற வொருதனிக் கோலாற்
றானெனச் செலுத்தி யரசுவீற் றிருந்தோன்
றணப்பிலாப் பெரும்படை யுடையோ
னீனமுற் றொழியா மாயைகள் விலைக்கு
மியலபு லீசெனும் பெயரோன்." 2

[வானங் கவிந்த பூலோகம் எவ்விடங்களுமொரு சொல்லில் அடங்கத் தன் வசப்படுத்திக் குற்றமற்ற நெறி நீதியோர்களுக்கு இடர்விளைவித்து, வெண்ணிறச் சங்கினங்களூர்ந்து திரிகின்ற கடல் வளைந்த உலகத்திற் பகையின்றி யொப்பற்ற தனிச் செங்கோல் தன்னையன்றி வேறில்லை

1. சீறா. ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 6
2. சீறா. காம்மாப் படலம் 6

என்று அரசாட்சி செலுத்தி வீற்றிருந்தோன். குறை வில்லாத பெரும் படைகளை உடையோன். இழிவு ஈனங்கள் முழுமையுந் தன்னை விட்டும் ஒழிந்து போகாது மாயைகள் விளைவிக்கும் இயல்புயை இபுலீசு எனும் பெயரையுடையோன்,) என்கிறார்.

யாத்திரைப் படலத்தில்

நபிகள் நாயகம் குறித்து பலவாறாக உண்மைக்கு மாறாக தவறாக எடுத்துக் கூறி, மக்க மாநகர் மக்களை எச்சரிக்கை கூறுவதாக யாத்திரைப் படலத்தில் அறிமுகப் படுத்தப்படுகிறான்.

பின் உக்குபா, உத்துபா, உமைய்யா, ஒலிது, சைப, அபூஜஹல் இவர்களின் நண்பர்கள் போன்றவர்கள்—அறத்தின் எதிரிகள் —இஸ்லாத்தின் எதிரிகள் யாவரும் ஒழுங்கு திரண்டு மந்திராலோசனை சபைக்குச் செல்ல வேண்டுமெனக் கூறி, இபுலீசும் பொறுமையுள்ளவன் போன்றும், வணக்கம், அறிவு, புகழில் மிக்கவன் போன்றும், அறபி குலத்தினன், தோற்றத்தில்—வயதில் முதிர்ந்தவன் போன்றும், பிரியாத உறவினுக்கு, உற்ற துணை போன்றும் அவையினுட் புகுந்தான். 'நரைத்த பெரிய வயதினையுடையவன் போல அங்கு செல்ல, கண்டவர் அனைவரும் பெரியார் மதிப்புமிக்கார் இவரென 'வாருங்கள்! அமருங்கள்!' என உரைத்தனர். மனமகிழ்ந்தனன். அறிவாளிகளிடம் நோக்கிச் சென்று இருந்தான்'' (37, 38) மந்திராலோசனையில் ஒவ்வொருவரும் நபி பெருமானாரை ஒழிப்பதற்குத் திட்டங்கள் ஒவ்வொன்று கூற, இபுலீசு அவ் ஒவ்வொரு வழிக்கும் அவற்றிலிருந்து பெருமானார் மீள்வர் என விளக்குவதாகக் காட்டப்படுகிறது திருமணத்திற்கு புறப்படும் செய்தியினை அபூஜஹலுக்கு தூது சொன்னவனும் இபுலீசே எனக் கூறப்படுகிறது.

இபுலீசு பெற்ற இழிநிலையினை யாத்திரைப் படலத்தின் இறுதியிலே காணலாம். பெருமானார் வீசிய மண் இபுலீ

சின் வாய், முகத்திலும் எங்கும் நிரம்பக் கண்டான். கண் விழித்த இபுலீசு அவனைத் துடைத்து பின், தூங்கிக் கிடந்த அனைவரையும் எழுப்பினான். அவர்கள் அனைவருக்கும் இக்கதியே; இபுலீசு அவர்களிடம் நானொருத்தன் தவிர மற்றவர்களின் வாய்களில் மண் என பொய் கூறி நின்ற செய்தியினையும் காட்டுகிறார்.

**இபுலீசுநிலை—அவன் சுற்றம்—உமறுப் புலவரின்**

**உருவகச் சித்திரம்**

அன்னை ஆமினா கருவுற்றார்கள். இக்கருவினைச்சத்திய மாகவும்-சன்மார்க்கமாகவும் உமறுப் புலவர் காண்கின்றார். சத்தியம்—அறம்—சன்மார்க்கம் தோன்றப் போகின்றன என அசத்தியமும் மறமும் துன்மார்க்கமும் துயருறுகின்றன என சித்தரிக்கிறார் கவியேறு.

அசத்தியத்தின் — மறத்தின் — துன்மார்க்கத்தின் மொத்த உருவமாக—அதர்மத்தினை இபுலீசாகக் கண்டு—அவன் படும் துன்பத்தினை சொற் சித்திரத்தால் வரைகிறார்.

இபுலீசு நடுங்கி வாயில் உமிழ்நீர் உலர்ந்திட, நாவு உலர்ந்து, உடல் நடுங்கி, ஐம்பொறிகளும் மயக்குறுகிறான். நெஞ்சு முழுமையும் உடைந்து, நெருப்புப் புடத்தில் உருகும் ஈயம் போல நினைப்புருகி அடிக்கடி பெருமூச்சு விட்டு, சுழன்று, புலம்பிக் கரைகிறான், ஏங்குகிறான், மலங்குகிறான், கலங்குகிறான், கதறிச் சப்தமிடுகிறான். கன்னத்திற் கையை வைத்திருந்து எழுந்திருக்கிறான். மறுபடியும் பூமியின் மேல் விழுந்து எனக்கினிச் சிங்காதனம் இவ்விடத்தில் இல்லை என்று அறிவு மறந்து இரண்டு கண்களிலும் தாரை தாரையாக நீரொழுகக் கிடக்கிறான். இவ்விதமாக அறிவழிந்து நிலைபேறு கெட்டுக் கிடக்கும் இபுலீசிடத்தில் அவன் மக்கள்—சந்ததிகள் அனைவரும் வந்து சேர்ந்தனர். தம் மக்களிடம் இபுலீசு அறம் தோன்றியது பற்றி உணர்ந்தான். அறிந்து அறிவு தடு

மாறி, மனம் நொந்து அவரவர் திசை நாடிப் போயினர். இபுலீசும் மனம் வருந்தித் திகைத்து இருந்து எழுந்து பின் வாங்கித் தன் திசை நாடிப் போயினன்.

உமறுப்புலவர் காட்டும் இபுலீசின் சந்ததிகள் யாவர்? மறவழியில் செயல்படக் காரண காரியமாயிருக்கும் மண், பெண், பொன் ஆகிய மூவாசைகளையும், பஞ்சமா பாதகங்களையும் (கொலை பொய், களவுகள் குரு நிந்தை) சைத்தானின்—இபுலீசின் சந்ததிகளாகக் காட்டுகிறார். பொருத்முற பொருத்திக் காட்டும் திறன்தான் என்னே! உமறுப் புலவர் இங்ஙனமாக இபுலீசு என்பவனின் நிலையும் அவன் சுற்றத்தினையும் விளக்கி—உருவகித்து கவிச் சித்திரமாக்குகிறார். இபுலீசுக்கு இவண் சந்ததிகளை காட்டும் திறனும் ஓர்ந்துணரத்தக்கது.

முடிவுரை

பெருங் கவிஞரேறு உமறுப்புலவர் பெருங்காப்பிய மரபுகளுள் ஒன்றான இயற்கை கடந்த செயல்களைக் காட்ட நிகழ்ச்சிகளைத் தேடி அலையவில்லை. வரலாற்றுக் காப்பிய நாயகரின் மீமானிடமான (Superhuman) வாழ்வியலைக் காட்டி சீறாக் காப்பிய மஹாலை வண்ணப்படுத்தி அழகொளியூட்டியுள்ளார், இச் செயல்களின் வழி சீறாக் காப்பிய—வரலாற்று நாயகரின் முகம்மதுவின் மாண்பு சுடரொளி பரப்பும் நபித்துவத்தின் மகிமை துலங்கும். நபித்துவச் சான்றாகவும் அவைகள் அமையும் அவைகளை இறையுதவியால் எளிதில் செய்து காட்டினார் என்பதும் பெறப்படும். இங்ஙனமாக வரலாற்றுச் செய்திகள் காப்பியப் பாங்களில்—மரபினில் இயற்கை கடந்த செயல்களாகவும் பாத்திரங்களாகவும் அமைந்து ஒளி விடுகின்றன. ❋

## பயன்பட்ட நூல்கள்

### மேற்கோள்—துணைநூல்கள், கட்டுரைகள் விபரம்


1. இஸ்லாமியக் கலைக்களஞ்சியம், M R. M. அப்துற் றஹீம் (இரண்டாம் பாகம்) 1977
2. கலைமறை முகம்மது எனுங்காரணம் 1961 ஆர். பி. எம். கனி, B. A; B.L.
3. முஹம்மத் நபி 1973. சையத் இப்ராஹீம் M. A; L. T.
4. ஜாகிர் உசேயின் கல்லூரி சீறா மலர் 19
5. இலக்கியப்பேழை 1960 கே. பி. எஸ். அமீது B. Sc; B. L. M. Lit.
6. சீறாப்புராணம் 1974, நாச்சி குளத்தார் பதிப்பு; திரீயெம்.
7. அன்வாறுல் குர்ஆன்—மௌலவி. ஹாபிஸ் E. M. A. R.
8. திருக்குர் ஆனும் முஸ்லிம் மக்களின் தமிழ்ப் பேச்சு வழக்குப் இலக்கிய வழக்கும் 1973 அல்ஹாஜ் கலாநிதி எம். எம். உவைஸ் M. A., Ph. D.
9. திருமணிமாலை செய்கு அப்துல் காதிர் நெய்னார் லெப்பை ஆலிம்
10. திருநெறி நீதம்—பீர் முஹம்மது அப்பா
11. இஸ்லாமிய தமிழ் இலக்கியச் சொற்பொழிவுகள் 1968
12. The Holy Quran, Maulavi Muhammed Ali 1917
13. ஹிஸ்புல் பஹ்ர் 19 8
14. சாந்தி மார்க்கம். மௌலவி முஹம்மது பளீல்
15. சுப்ஹான மௌலூது
16. அல் திக்றுல் மைமூன் சுரூருல் மக்ளீன்—ஆஷிக் இலாஹி
17. ஸீரத்துன்னபி (உருது)
18. தீன் ஸவ் முஃஜிஸாத் (உருது)
19. முஃகிஸாத்-துன்-நபி அண்ணலாரின் அற்புதங்கள் I&I பாகம்: மௌலவி S. A. செய்யது இப்றாகீம் (பாக்கவி)
20. இமாம் பர்சன்ஞ்சி மௌலூது

# சீறாவில் அறபு, பாரசீகச் சொற்கள்

அல்ஹாஜ் எம். எம். உவைஸ், M.A; Ph D.

ஒன்றை மற்றதிலிருந்து பிரித்துக் காட்டுவது முன்னையதில் உள்ளதும் பின்னையதில் இல்லாததுமான சிறப்பியல்பேயாம். இவ்வாறு ஒன்றை ஒன்றிலிருந்து பிரித்துக் காட்டும் சிறப்பியல்புகள் இலக்கியத்திலும் உள்ளன. சிறப்பாகக் காப்பியங்களை எடுத்துக் கொண்டால் இத்தகைய சிறப்பியல்புகள் பலவற்றைக் காணலாம். பல்வேறு சமய அடிப்படையில் தோன்றிய காப்பியங்கள் அவ்வச் சமயங்களுக்கே உரிய சிறப்பியல்புகளைக் கொண்டு விளங்குவது கண்கூடு. அதேபோன்று பொருளடக்கத்தைப் பொறுத்த வரையிலும் காப்பியத்துக்குக் காப்பியம் வேறுபடுகின்றது. சொல்லாட்சியைக் கொண்டு ஒரு காப்பியத்தின் சிறப்பியல்பினைக் கணிக்கலாம். கவிஞன் தான் எடுத்துக் கொண்ட பொருளை விளக்குவதற்கு பல்வேறு மொழிகளிலிருந்து சொற்களைப் பெற்று தனது இலக்கியப் படைப்புகளில் பயன்படுத்தத் தயங்குவதில்லை. சில சமயங்களில் இத்தகைய சொற்கள் ஒரே இனத்தைச் சார்ந்த பல்வேறு மொழிகளிலிருந்து பெறப்படுகின்றன. வேறு சில சமயங்களில் இன அடிப்படையில் தொடர்பு அற்ற வேற்று மொழிச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இத்தகைய ஒரு சிறப்பியல்பினைத் தான் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்கள் அவற்றினிடத்தைக் கொண்டு திகழ்கின்றன. தமிழ் இலக்கியத்தில் தோன்றிய ஏனைய காப்பியங்களுடன் ஒப்ப நோக்கும் பொழுது இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களில் இத்தகைய சிறப்பியல்பு அமைந்திருப்பதைக் காணலாம்.

பல்வேறு சமயங்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் அவ்வச் சமயங்களின் மொழிகளிலிருந்து பெறப்பட்ட தனித்துவம் வாய்ந்த சொற்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். பௌத்த மத அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில், இலக்கியங்களில் அம்மதத்தின் புனித மொழியான பாலி மொழிச் சொற்கள் முக்கியமான ஓர் இடத்தை வகிக் கின்றன. அதே போன்று சமண சமய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் பாகதச் சொற்களும் வைணவ நெறியினைப் போதிக்கும் இலக்கிய நூல்களில் வட மொழிச் சொற்களும் கிறித்தவ மார்க்கத்தினைப் போதிப் பதற்காகத் தோன்றிய காப்பியங்களில் லத்தீன் மொழி யிலிருந்து தோன்றிய சொற்களும் பெருவழக்கைப் பெற் றிருக்கின்றன. இஸ்லாமிய வழியை எடுத்துக் கூறும் இலக் கிய நூல்கள், சிறப்பாகத் தமிழில் தோன்றிய காப்பியங் கள் அவற்றின் சிறப்பியல்பாகப் பெரும்பான்மையான அறபுச் சொற்களையும் ஓரளவு பாரசீகச் சொற்களையும் கொண்டு விளங்குகின்றன. இஸ்லாமியக் கொள்கைகளைப் போதிக்கும் இலக்கியங்களில் அறபுச் சொற்களினதும் பாரசீகச் சொற்களினதும் ஆட்சி அவற்றின் இன்றியமை யாத அம்சமாகி விடுகின்றன. அத்தகைய இலக்கியங்களி லிருந்து அறபுப் பாரசீகச் சொற்களைப் பிரிக்க முடியாத நிலை ஏற்படுகின்றது. இஸ்லாமியக் கருத்துக்களைத் தமிழில் விளக்குவதற்கு அவை அவசியமாகின்றன. எனவே இஸ் லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங் களில்ல எண்ணற்ற அறபுச் சொற்களும் குறிப்பிடத்தக்க அவை பாரசீகச் சொற்களும் ஆளப்பட்டுள்ளன.

அறபு மொழி அதன் செல்வாக்கினைப் பிரயோகித்த தனால் தாக்கத்திற்குட்பட்ட மொழி தமிழ் மொழி மாத்திர மன்று. உலகில் எந்தெந்தப் பகுதிகளுக்கு இஸ்லாம் பரவி யதோ அந்த அந்த பகுதிகளிலெல்லாம் இஸ்லாமிய மொழி யான அறபு மொழியின் தாக்கம் ஏற்பட்டிருப்பதைக் காண

லாம், ஸ்பானிய, போர்த்துக்கீசிய மொழிகளிலே பெருந் தொகையான அறபு மொழிச் சொற்கள் கலந்துள்ளமை குறிப்பிடத் தக்க தொன்றாகும். இஸ்லாத்தின் தாக்கத்தை ஸ்பானிய மொழி பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றது என்று கூறி விடலாம். அறபு மொழியிலே சிறப்பாகக் காணப்படும் அல் என்னும் சார்புடைய பல அறபுச் சொற்கள் ஸ்பானிய மொழியிலே பயன்படுத்தப்படுகின்றன. அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தப்படும் பொருட்களைக் குறிப்பிடுவதற்கும் ஸ்பானிய மொழியில் அறபுச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. 'இன்ஷா அல்லாஹ்' என்னும் அறபுச் சொற்றொடரைக் கூட அதே கருத்தில் அவர்கள் உபயோகிக்கின்றனர். திருக்குர் ஆனிலிருந்து பெறப்பட்ட ஒரு நிகழ்ச்சியை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட 'பொயமாடி யீசுப்' (Poemade Yucuf) என்ற கவிதை நூல் ஸ்பானிய மொழியில் எழுதப்பட்டிருப்பினும் அது ஃபிரெஞ்சு யாப்பமைதிக்கிணங்க அறபு எழுத்துக்களால் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம்.

பிறமொழியான ஸ்பானிய மொழியில் ஏற்பட்ட அறபுமொழியின் தாக்கம் ஸ்பானிய மொழியின் அமைப்பையும் தன்மையையும் மாற்றியிருக்கின்றது. ஒரு நாட்டு மக்களின் சமயமும் கலாசாரமும் பழக்க வழக்கங்களும் அவர்கள் பேசும் மொழியின் தன்மையை மாற்றும் தரத்தன எனக் கூறின் அது மிகையாகாது. ஸ்பானிய மொழியில் இத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். முஸ்லிம்களையும் அவர்கள் பேசும் மொழியையும் பொறுத்தவரையில் இக்கூற்று வலியுகின்றது இஸ்லாம் பரவிய எல்லாப் பகுதிகளிலும் இஸ்லாத்தின் மொழியான செல்வாக்கைக் காணக் கூடியதாக இருக்கின்றது. முஸ்லிம்கள் எங்கு வாழ்ந்த போதிலும் அறபுச் சொற்களில் பரிச்சயம் அவர்களுக்கு அத்தியாவசியமாகின்றது. இதன் பயனாக ஒரு முஸ்லிம் தன் நாட்டு மொழியுடன் அறபுச் சொற்களில் பயிற்சியும் உள்ளவனாக இருக்க வேண்டிய

நிர்ப்பந்தம் அவனுக்கு ஏற்படுகின்றது. இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மொழிச் சொற்களை அறிந்த ஒருவன் தனது கருத்துக்களை உரையாடல் மூலமோ எழுத்து மூலமோ வெளிபிடுவதற்கு இரண்டு மொழிகளிலுமிருந்து சொற்களை உபயோகிப்பதற்கு தயங்குவதில்லை. அவ்வாறு சர்வ சாதாரணமாகவே உபயோகின்றான்.

உலக முஸ்லிம்கள் இஸ்லாத்தையும் அதன் மொழியான அறபையும் முன்னோர் சொத்தாகப் பெற்றுள்ளனர். ஒரு முஸ்லிம் எங்கு வாழ்ந்தாலும் இஸ்லாமியப் பதங்களையும் சொற்றொடர்களையும் அறிந்தவனாக இருத்தல் வேண்டும். தனது அன்றாட வாழ்க்கையில் இஸ்லாமிய மத அனுட்டானங்களைக் கடைப்பிடிப்பதற்கு அவை அவசியமாகின்றன. அவற்றைத் தமிழ் போன்ற ஒரு மொழியில் பெயர்த்தல் கடினமாகின்றது. அவற்றை அவ்வுச்சரிப்புடன் தமிழ் எழுத்துக்களில் எழுதினால் கூட அவை அவற்றிற்கே உரிய உச்சரிப்பைத் தரத் தவறி விடுகின்றன. இதனாலேயே இஸ்லாத்தின் செல்வாக்கின் கீழ் வந்த மக்கள் அவரவர் மொழிகளில் ஏராளமான அரபுச் சொற்களைப் புகுத்துவது பொருத்தமானதே எனக் கண்டனர், புகுத்தியும் விட்டனர். இவ்வாறு புகுத்தப்பட்டதன் விளைவினை இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்கள் பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றன.

கலப்பற்ற மொழி இல்லை என்றே கூறலாம். பல்வேறு மொழிச் சொற்களைக் கொண்ட மொழியாக ஆங்கில மொழி வருணிக்கப்படுகின்றது. உலக பொதுத் தன்மையைப் பெற்ற மொழியாகக் கருதப்படுகின்றது. உலகத்தில் உள்ள ஒவ்வொரு நாடும் அவற்றின் சொல் மயமான உற்பத்திகளை ஆங்கில மொழி என்னும் அறிவுச் சந்தைக்கு வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்தாகும். ஆனால் இதற்கு நேர்மாறாக அறபு மொழி என்னும் அறிவுச் சந்தையிலிருந்து சொல் மயமான உற்பத்திகளை முஸ்லிம்கள் வாழும் ஒவ்வொரு நாடும் பெற்றிருக்கின்றது என்றும் மொழியின்

செல்வாக்கைப் பற்றிக் குறிப்பிடலாம். திசைச் சொற்கள் இல்லாத மொழி இல்லை என்றே கூறலாம். தமிழ்ப் பேச்சு வழக்கிலும் "எழுத்து வழக்கிலும் இடம் பெற்றுள்ள அறபு, பாரசீகச் சொற்களைப் போன்று தமிழ்ச் சொற்கள் அறபு, பாரசீக மொழிகளில் இடம் பெறவில்லை என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது." இச்சந்தர்ப்பத்தில் ஜெர்மானியைச் சேர்ந்த மகா பிரெட்றிக் கூற்றை நினைவு படுத்துதல் பொருத்தமுடையதாகும். ஜெர்மன், பிரெஞ்சு மொழிகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் மகா ஃபிரெட்றிக், 'நாம் உள்ளூர் மொழி (ஜெர்மன் மொழி)ச் சொற்றொடர்களை எமது வெளிநாட்டு மொழி (ஃபிரெஞ்சு மொழியைப் பேசும் பொழுது பயன்படுத்துவதில்லை. எனினும் ஜெர்மன் (உள்ளூர்) மொழியை பேசும்பொழுது ஃபிரெஞ்சு (வெளி நாட்டு) மொழிச் சொற்களைத் தாராளமாக உபயோகிக்கிறோம்' என்று நிலைமையைத் தத்ரூபமாக விளக்கி உள்ளார். ஒரு நாட்டு மக்கள் பிறமொழி ஒன்றினைப் பயில்வதனால் அந்நாட்டு மொழி கலப்பு மொழியாக மாறாது. அந்நாட்டு மொழி பிற மொழியின் செல்வாக்கிற்கு ஆளாவதினாலேயே கலப்பு மொழியாக மாறுகிறது என்பது திசைச் சொற்கள் பற்றிய பொதுக் கொள்கையின் அடிப்படைத் தத்துவமாகும். அறபு மொழியையும் தமிழ்மொழியையும் பொறுத்தவரையில் இக்கூற்று மிகவும் பொருத்தமான தொன்றாகும். பல சந்தர்ப்பங்களில் அவசியம் காரணமாகவே திசைச் சொற்கள் கடனாகப் பெறப்படுகின்றன. சொற்றொடர்பு சார்ந்தனவாக ஒரு மொழி மற்ற மொழியில் அதன் செல்வாக்கைப் பயன்படுத்துகிறது என்னும் கூற்றையும் நாம் ஏற்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் இடம் பெற்றுள்ள அறபுப் பாரசீகச் சொற்கள் திசைச் சொற்களாகவே அங்கு திகழ்கின்றன என்ற கூற்று இதன் பயனாக வலியுறுகின்றது. எனவே சீறாப்புராணத்தில்

திசைச் சொற்களாக இடம் பெற்றுள்ள அறபுச் சொற் களையும் பாரசீகச் சொற்களையும் ஆராய முற்படுவோம். முதலில் அறபுச் சொற்களை எடுத்துக் கொள்வோம் இத் தகைய அறபுச் சொற்களை இஸ்லாமிய நெறியுடன் நெருங் கிய தொடர்புடைய அறபுச் சொற்களும் சொற்றொடர் களும் என்றும், முஸ்லிம்களுடைய சமூக வாழ்க்கையோடு சம்பந்தப்பட்ட பழக்க வழக்கங்களுக்கு அவசியமான அறபுச் சொற்களும் சொற்றொடர்களும் என்றும், இரு வகையாகப் பிரிக்கலாம்.

'பிஸ்மில்லாஹிர் றஹ்மானிர் றஹீம்' என்னும் அறபுச் சொற்றொடரை முதலில் எடுத்துக் கொள்வோம். இச் சொற்றொடர் 'பிசுமில்' என்றும் 'பிஸ்மில்லாஹ்' என்றும் சுருக்கி ஆளப்படுகிறது. 'பிஸ்மில்' என்றால் 'பெயரால்' என்பதாகும். 'பிஸ்மில் ாஹ்' என்றால் அல்லாஹ்வின் பெயரால் என்பதாகும். அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் என்பதே 'பிஸ்மில்லாஹிர் றஹமானிர் றஹீம்' என்பதன் கருத்தாகும். இச்சொற்றொடரை உச்சரித்தே ஒவ்வொரு முஸ்லிமும் தமது கருமங்களை அவை எவ்வளவு சிறியவையாயிருந்த போதிலும் ஆரம்பம் செய்தல் வேண்டும். இவ்வறபுச் சொறறொடர் திருக்குர் ஆனிலே உள்ள சூறா தவ்பாவைத் தவிர்த்த ஏனைய சூறாக்கள் ஒவ்வொன்றினதும் ஆரம்பமாக அமைந்துள்ளது. 'பிசுமில்' என்னும் சொல் சீறாப்புராணத் தில் பல இடங்களில் உபயோகப் படுத்தப்பட்டுள்ளது. நபி கள் நாயகம் (சல்) அவர்கள் அல்லாஹ்வை நினைவு படுத்தி பிஸ்மிலைத் திருத்தமாக ஓதினார்கள் என்பதனையே,

"ஆதிதனை யுளத்திருத்தி பிசுமிலெனு முறைதிருத்தி.",
இவ்வாறு உமறுப்புலவர் குறிப்பிடுகிறார். பிஸ்மில்லா ஹிர்றஹ்மானிர் றஹீம் என்பதனைச் சுட்டவே 'பிசுமில்' எனும் பதம் உபயோகிக்கப்பட்டுள்ளது என்று கொள்ளல்

1. உத்துபா வந்த படலம் 18

வேண்டும். பிஸ்மில ஓதப்பட்டமை 'தெரிதர பிசுமி லோதி' (மதீனைத்தவர் ஈமான்கொண்ட படலம் 30) என்றும் 'மெய்யொளி முகம்மது பிசுமி லோதினர்' (புவாத்துப் படலம் 16) என்றும் குறிப்பிடப்படுகிறது. தங்கள் முன்னிலையில் கொண்டு வைக்கப்பட்ட கனிகளை அண்ணல் நபி (சல்) அவர்கள் பிஸ்மில் ஓதியே உண்டார்கள் என்பது '.........பழத்தினைத் தீண்ட யிலை, மனையநல் பிசுமிலோதி யமுதென நுகர்தல் செய்தார்' (அத்தாசு ஈமான் கொண்ட படலம் 4) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. போர் செய்யப் புறப்படுவதற்கு முன்னர் பிசுமில் ஓதப்பட்டமை

"...வேதம், பண்ணிய பிசுமி லோதிப் பண்புட
னெழுந்து வள்ளல்" 1

என வருணிக்கப்பட்டுள்ளது. பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர் ரஹீம் என்னும் திருமறை வாக்கிலும் வேலில் பொறிக்கப் பட்டிருந்தது என உமறுப்புலவர் 'வீர வேலெனுங் கதிர் பிசுமி லேந்தி' (மதியை அழைப்பித்த படலம் 56) என்று குறிப்பிடுகிறார். இந்தச் சொற்றொடர் அங்க ஈனர்களின் குறைகளை நீக்க வல்லது என்பது.

"...............................மனத்தில்வே
றெண்ண மின்றி பிசுமி லுரைத்தெடுத்
துண்ண நல்லுரு வெய்தின னுண்மையோன்."

என நோய் தீர்க்கும் நிவாரணி என்பது தொனிக்கப் பாடப்பட்டுள்ளது. அண்ணல் நபி (சல்) அவர்கள் உம்றாச் செய்யச் சென்றபொழுது குறைஷிக் காபிர்களுக் கும் இடையில் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அந்த உடன் பாட்டின் நிபந்தனைகளை எழுத முற்படும் பொழுது இந்தச் சொற்றொரைக் கொண்டு ஆரம்பிக்கப்படல் வேண்டும் என்று பெருமானார் (சல்) கூறினார்கள். இதைக் கேட்ட

1. ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 22
2. அந்தகன் படலம் 19

குறைஷிகளின் பிரதிநிதியான சுகையில் என்பவன் அந்தச் சொற்றொடரில் உள்ள பிஸ்மில்லாஹ் என்பதனை அறிவோம். ஆனால் அர்றஹ்மானிர்றஹீம் என்பதினைக் கேட்டதில்லை என்று கூறினான், கூறினதோடு அச்சொற்றொடரை உடன்படிக்கையில் எழுதவும் வேண்டாம் என்றும் கூறினான். இக்கருத்துக்களைக் கூற முற்பட்ட உமறுப்புலவர் அத்திருமறைச் சொற்றொடரை இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

"இன்புறும் பிசுமில் லாகிற் றகுமா னிற்ற
கீமென்
றன்புறு முதலிற் கோட்டென் றகுமது வந்து
கூற
முன்புறு சுகைலென் போனு மொழிகுவன்
பிசுமில் லாவின்
றன்பெயர் நடக்கும் வண்ண மறிகுவந்
தரணி மீதில்" [1]

"அற்றகுமா னிற்றகீ மென்ன வறைகின்ற
வார்த்தை யாங்க
டிறனுறக் கேட்ட தில்லை யம்மொழி தீட்ட
வேண்டா" [2]

சீறாப்புராணத்தில் இடம் பெற்றுள்ள மற்றொரு அறபுச் சொல்லை எடுத்துக் கொள்வோம், அந்தச் சொல் 'ஈமான்' என்பதாகும். ஈமான் என்றால் நம்பிக்கை அல்லது விசுவாசம் கொள்ளுதல் என்று பொருள்படும். அது ஈமான் முபஸ்ஸல் என்றும் இருவகைப்படும். அல் குர்ஆன், அல் ஹதீஸ் ஆகியவற்றின் போதனைகளை விசுவாசம் கொள்ளுதல் எனக் கூறுதல் ஈமான் முஜ்மல் எனப்படும். அல்லாஹுத்தஆலா மீதும், மலக்குகள் மீதும், வேதங்கள் மீதும், நபிமார்கள் மீதும். இறுதித் தீர்ப்பு

1. உமுறாவுக்குப் போன படலம் 79
2. உருறாவுக்குப் போன படலம் 80

நாளின் மீதும், நன்மை தீமைகளின் முன்னளப்பு மீதும் விசுவாசங் கொள்வதாகப் பிரகடனப்படுத்துதல் ஈமான் முபஸ்ஸல் எனப்படும். இனி ஈமான் என்னும் அறபுச் சொல் அல்குர்ஆனிலே (2:108 முதலிய) பல இடங்களில் ஆளப்பட்டுள்ளதைக் காணலாம். ஜிபுறயீல் (அலை) அவர்களும் மீக்காயீல் (அலை) அவர்களும் நபிகள் பெருமானார் (சல்) அவர்களிடம் வந்து அன்பாய் அவர்களின் மார்பைக் கீறி இதயத்திலிருந்த குற்றம் களைந்து கசடை அகற்றி, ஏனைய தீமைகளையும் நீக்கி நன்றாகக் கழுவி நற்கருத்தினையும் நல்லீமானையும் நல்லறிவு முதலிய நல்லவைகள் அனைத்தையும் அதனுள் நிறையச் செய்தார்கள். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

"நேயமுற் றுரத்தைக் கீண்டு நிறையொளி பொங்
குங் கஞ்சக்
காய்முகை கிழித்துள் ளுற்ற கறுப்பொடு கசடு
மான
மாயவன் கூற்றை மாற்றி வழுவறக் கழுவி
மாறா
தாயுநன் னினைவீ மானல் லறிவுட னிரப்பல்
செய்தார்"[1]

மற்றொரு பாடலில் 'ஈமான்' என்னும் அறபுச் சொல்லை உபயோகிக்க முற்பட்ட உமறுப்புலவர் அச்சொல்லின் தாத்பரியத்தையே அங்கு விளக்கியுள்ளார். யாவற்றிற்கும் நாயகனான அல்லாஹ் ஒருவனே, அண்ணல் நபி முகம்மது (சல்) அவர்கள் அவனுடைய திருத்தூதராவார்கள், இக்கருத்துக்களே கலிமாவில் பொதிந்துள்ளன. ஓதப்படும் இக்கலிமாவை நிர்ணயப்படுத்திய பொருத்தமே ஈமான்; அதற்கிணங்க நடப்பதே அமல். இவற்றை நன்கு பின்பற்றிய தன் திருத்தமே இஸ்லாத்தில் சேர்தல். இத்தகைய பல

1. சீறா. இலாஞ்சனை தரித்த படலம் 28

கருத்துக்களை விளக்கி ஈமான் என்னும் அறபுச் சொல் ஆளப் பட்டுள்ளதை இப்பாடலில் காணலாம்.

"ஒருத்தனா யகனவற் குரிய தூதெனு
மருத்தமே யுரைகலி மாவந் நிண்ணயப்
பொருத்தமீ மானடை புனைத லாமமல்
திருத்தமே விவையிசு லாமிற் சேர்தலே"[1].

இப்பாடலில் ஈமான் என்ற சொல்லோடு கலிமா, அமல், இஸ்லாம் என்னும் அறபுச் சொற்களும் உபயோகப் பட்டுள்ளன அவற்றை ஒவ்வொன்றாகப் பின்னர் பார்ப் போம். அண்ணல் நபி (சல்) அவர்கள் 'இப் பூவுலகத்திலே நாங்கள் போதிக்கும் நன்னெறியில் ஈமான் (விசுவாசம்) கொள்ளாதவர்களை அதாபு என்று வருணிக்கப்படும் 'கொடிய நோய் பிடிக்கும்' என்று இஸ்லாமிய போதனை கள் ஆரம்பமான காலத்தில் மொழிந்தார்கள். இதனையே உமறுப்புலவர்,

"தரைத்தலத் தீமான் கொள்ளுநற் கிசையாத்
தரப்படைத் தவரனை வரையுங்
கரைத்திட நணிய தாபெனுங் கொடிய
கடும்பிணி பிடித்திடு மென்றார்"[2].

என வருணிக்கிறார். உமறுகத்தாப் ஈமான் கொண்ட பட லத்தில் உமறுகத்தாப் (றலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டமைப் பற்றிப் பல இடங்களில் ஈமான் என்னும் அறபுச் சொல்லை 'மென்னபிக் கிமான் கொண்டோர்' (66) எனவும், 'அரிய மறைதேர்ந் தீமான் கொண்டு' (90) என வும், 'கூறுங் கலிமா வுரைத்தீமான் கொள்ளும் படிக்கிங் கடைந்தனென்' (91) எனவும், 'மனங்களிப்புக் கொண்ட ரீமான் கொண்டாரே' (98) உபயோகிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். 'வினவி யீமான் கொண்டவர்கள்' (உத்துபா)

1. சீறா. தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 2
2. சீறா. தீனிலை கண்ட படலம் 115

படலம் 3) 'புதிய மொழி யுரைத்தீமன் கொள்வித்தீர்' (உத்துபா வந்த படலம் 4) 'இவர் தமக் கீமான் கொண் டது' (மதியை அழைப்பித்த படலம் 175) 'எத்தலமும் 'ஈமானினை யுளத்தினி லிருத்தி' (மதியை அழைப்பித்த படலம் 179), 'எத்தலமும் புகழ்ந்தேத்த வீமான் கொண்டு (புத்து பேசிய படலம் 12), எனப் பல இடங்களில் ஈமான் என்னும் அறபுச் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஒரு சந்தர்ப்பத்தில் மதங் கொண்ட யானைக்கு அழகிய ஈமான் 'செவ்வி பீ மானெனு மதகரி' (மதியை அழைப்பித்த படலம் 56) என உருவகிக்கப்பட்டுள்ளது. மானுக்குப் பிணை நின்ற படலத்திலும் ஈமான் என்னும் அறபுச் சொல் அடிக்கடி பயன்படுத்தப்பட்டுள்ளமை நோக்கற்பாலது. வண்டுகள் மலர்களிலுள்ள தேனை அருநதிப் பாடுகின்றன. அந்தப் பாட்டில் வேடன் ஈமான் கொள்ள விரும்பியுள் ளான் என்ற கருத்துத் தொனிப்பதாக உமறுப்புலவர்,

> ''ஏட்டலர் நறவ மாந்தி யிருஞ்சுரும் பிசைக்குந்
> தோற்றம்
> .........................வருந்து மானை
> மீட்டனர் வேட னீமான் விரும்பினன்... (51).''

எனப் பாடியுள்ளார். மான் கன்றின் கூற்றாக 'பாதபங் கயத்தைக் கண்டு பரிவுட னீமா ன் கொண்டு 6 ) எனவும் பாடப்பட்டுள்ளது. அண்ணல் நபி (சல்) அவர்கள் கலிமாச் சொல்லி கொடுக்க அந்த வேடனும் ஈமான் கொண்டான் என்பதை 'முகம்மது கலிமா' சொல்ல லிதயமுற் றோதி வேட னினிதினி னீமான் கொண்டு புதியனை வணங்கி..(63) என வருணித்துள்ளார் ஆசிரியர். மற்றொரு செய்யுளில் உமறுப்புலவர் மான் என்னும் சொல்லையும் ஈமான் என்னும் அறபுச் சொல்லையும் ஓசை நயம் ததும்ப அமைத்துப் பாடு வதோடு, இல்லாத மானைக் கொண்டு வரப்போய் ஈ இடைய மானான ஈமானைக் கொண்டு தனது வீட்டுக்குச் சென்றான் என்பதை,

"மானைக்கொண் டுவரப் போயீ மானைக்கொண்
டகத்திற் புக்கான்." (71)

என்று சிலேடை அமைத்துப் பாடியிருப்பது போல் தோன்றப் பாடியிருப்பது நயக்கத்தக்கது. பின்வரும் பாடல்களிலும் ஈமான் என்னும் அறபுச் சொல் ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம். ஜின்கள் ஈமான் கொண்ட படலம்; 11, 14, 21, 27, 33, 39, 41 மதீனத்தார் ஈமான் கொண்ட படலம்; 6, 34, 36, 38, 51; யாத்திரைப் படலம்; 47; சுறாச்சுத்துப் படலம்; 24; கபுகாபுப் படலம்; 29, 49; விருந்திட்டு ஈமான் கொள்வித்த படலம்; 7, 14; உகுபான் படலம்; 22, 23, 24, 25; சம்மான் பாரிசுப் படலம்; 24, 30, 32; ஒநாய் பேசிய படலம்; 17; பாத்திமா திருமணப் படலம்: 190; பதுறுப் படலம்; 253; அமுறாப் படலம்: 3; உயை வந்த படலம்: 38, 39, 98, 183; பனீ குறைலா வதைப் படலம்; 26, 33 லுமாம் ஈமான் கொண்ட படலம்: 6, 8; உமுறாவுக்குப் போன படலம்; 57, 62.

மற்றொரு முக்கியமான இஸ்லாமிய அறபுப் பதம் புர்கான். நல்லவற்றறைத் தீயவற்றிலிருந்து வேறாக்கிக் காட்டுவது ஹலாலா—(ஆகுமான) வற்றை ஹறாமான (விலக்கப் பட்டவற்றிலிருந்து) வேறாக்கிக் காட்டுவது என்பது இதன் பொருளாகும். சரியானவற்றை பிழையானவற்றிலிருந்து அறியும் வாய்ப்பை அளிக்கும் அடிப்படையாக அது அமைகிறது. அல்குர்ஆன், புர்கான் என அழைக்கப்படுகிறது. குர்ஆன் என்னும் அறபுச் சொல் 'கறா' என்னும் அடியிலிருந்து பிறந்துள்ளது. இதுவே 'இக்றஉ' என்ற உருவில் ஓதுதல் என்னும் பொருளில் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு முதன் முதலில் அருளப்பட்ட திருமறை வாக்கியத்தின் ஆரம்பமாக அமைந்துள்ளது. புர்கான் என்னும் அறபுப் பதமும் சீறாப் புராணத்திலே பல இடங்களில் ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்.

நஸ்றா என்னும் பெயரை உடைய பண்டிதன் அண்ணல் நபி (சல்) அவர்களை இளம்பருவத்திலே கண்டதும் பழைய வேதங்களின் உட்பொருளினை அறிந்தவனாதலினால் பெருமானார் அவர்களுக்கு அல்லாஹ் புர்கான் என்னும் வேதத்தை இறக்குவான் என்று முன் கூட்டியே அறிவித்தான். இதனையே உமறுப்புலவர்,

"வியனுறு புறுக்கா னென்னும் வேதமொன்
றிறங்கும்" 1

எனக் குறிப்பிட்டுள்ளார். ஒரு சந்தர்ப்பத்தில் நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் புறுக்கான் வேதம் அறிவின் ஊற்று என்றும், அவ்வூற்றிலிருந்து பொருள் சுரந்து கொண்டிருக்கிறது என்றும், அது நன்மை பொருந்திய வேதம் என்றும் கருத்துப்படக் கூறியமையை,

"ஊறிய பொருட்புறுக் கானென் றோதிய
தேறுநன் மறை............"2

என உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் அமைத்துப் பாடியுள்ளார். அமுதம் ஊறும் ஊற்றாக புறுக்கான் வேதம் விளங்குகிறது என்பதனை,

"...............................அமுத மூறும்
வேதமெனும் புறுக்கான்......"3

என்றும் அல்லாஹ்வின் மிகத் தூய்மையான வார்த்தைகளைக் கொண்டது புறுக்கான் என்னும் வேதம் என்பதனை,

"........................ஆதிதன் தூயமொழி புறுக்கான்
வேத........."4

1. சீறா. பாதை போந்த படலம் 3
2. சீறா. உடும்பு பேசிய படலம் 15
3. சீறா. உத்துபா வந்த படலம் 18
4. சீறா. ஹபீபு மக்கத்துக்கு வந்த படலம் 31

என்றும் புறுக்கான் ஒரு புது வேதம் என்பதனை,

''புதுமறை யெனும்புறுக் கானில்''.[1]

என்றும் புறுக்கான் வேதம் நாள் தோறும் மோட்சப் பலனை அளித்துக் கொண்டிருக்கும் என்பதனை

''..............நாளுங்
கதிதருமென் புறுக்கான்......''[2]

என்றும் மனத்தெளிவை ஏற்படுத்தும் வேதம் புறுக்கான் என்பதனை

''............தெளிதரும் புறுக்கான்
மறைமொழி......''[3]

என்றும் புறுக்கான் வேதம் முறைமையானது மட்டுமல்லாமல் நல்ல வழியிலே மக்களை இட்டுச் செல்லக்கூடியது என்பதனை,

''நெறியொடும் புறுக்கா னன்னோர்.........''[4]

என்றும் புறுக்கான் வேதம் பொருந்துதற்கு அருமையான ஒப்பற்ற வேதம் என்பதனை,

''பொருத்துரும் புறுக்கான் வேதம்''[5]

என்றும் வருணித்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

சீறாப்புராணத்திற்கு குர்ஆன் என்னும் அரபுச் சொல் அடை அடுத்த சொல்லாகவும் அடை இல்லாமலும் பயன் படுத்தப்பட்டுள்ளன. 'குறானையும் விரித்துக் காட்டி' (மதீனத் தார் ஈமான் கொண்ட படலம் 9) என அடை இல்லாமலும் நீன் முதன் முறைமைத்தாய, விரிதருங் குறானை யோதி'

1. சீறா. மதியை அழைப்பித்த படலம் 186
2. சீறா. புத்து பேசிய படலம் 2
3. சீறா. சல்மான் பாரிசுப் படலம் 6
4. சீறா. பதுறுப் படலம் 1
5. சீறா. மழையழைப்பித்தப் படலம் 9

(மதீனத்தார் ஈமான் கொண்ட படலம் 30) அருங்கு றானை (மதீனத்தார் ஈமான் கொண்ட படலம் 37) 'பொருவிலாக் குறான்' (விருந்திட்டு ஈமான் கொள்வித்த படலம் 14) 'பொருந்திரை குறானை யத்தின்' (செயினபு நாச்சியார் கலியாணப் படலம் 8) 'தேறிய குறானா யத்தின்' (செயினபு நாச்சியார் கலியாணப் படலம் 9) 'நன்றி சேர் குறான்' செயனபு நாச்சியார் கலியாணப் படலம் 16) என அடை அடுத்து வந்திருப்பதைக் காணலாம்,

'ஓதுவீராக' எனப் பொருள்படும் 'இக்றஉ' என்னும் சொல்லைக் கொண்டு ஆரம்பிக்கும் திருமறை வாக்கியங்கள் (ஆயத்துகள்) ஐந்தே முதன் முதலில் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அருளப்பட்டன. 'இக்றஉ' என்பதில் தொடங்கி 'மாலம் யஃலம்' என முடிவடைகின்றன. அந்த ஐந்து வாக்கியங்களும், இது பற்றி உமறுப்புலவர் குறிப்பிடு கிறார். 'இக்றஉ' என்னும் சூறத் (அத்தியாயம்) திலிருந்து நான்கு ஆயத்துக் (வாக்கியங்)கள் 'மாலம் யஃலம்' வரை முதன் முதலில் நபிகள் பெருமானாருக்கு அருளப்பட்டன எனக் குறிப்பிடுகிறார்.

"இக்றஉ வெனுஞ்சூ றத்தி லிருந்தநா லாயத் தின்ப
மெய்க்குற மாலயம் யஃலெ வெனுமட்டும் விளம்பு
வீரென்று " [1]

என சீறாப்புராணத்தின் அச்சுப் பிரதிகளில் காணப்படு கின்றது. 'இக்றஉ' என ஆரம்பிக்கும் சூறத்தில் 'மாலம் யஃலம்' வரை உள்ள ஆயத்துக் (வாக்கியங்)களின் எண்ணிக்கை ஐந்து என்றே திருக்குர்ஆனிலே குறிப்பிடு கின்றது. எனவே உமறுப்புலவரின் பாடல்,

"இக்றவு வெனுஞ்சூ றத்தி லிருந்தநா லாயத் தின்ப
மெய்க்குற மாலம் யஃலெ வெனுமட்டும் விளம்பு
வீரென்று[2]".

1. சீறா. நபிப்பட்டம் பெற்ற படலம் 27
2. சீறா. ,, ,, 27

என அமைந்திருந்தால் இத்தகைய முக்கியமான ஒரு வேறு பாடு சீறாப்புராணத்தில் தோன்றி இருக்காது என்பதே எனது நம்பிக்கை. ஒரு வேளை முதலாவது பதிப்பில் ஏற்ப பட்ட பிழையாக இது இருக்கலாம் அதன் பின்னர் பதிப் பித்தவர்கள் இந்தப் பிழையைத் திருத்தத் தயங்கி இருக் கலாம். அல்லது கருத்து வேறுபாடு காரணமாக இந்தத் தவறு ஏற்பட்டிருக்கலாம். இப்பாடலில் இருந்து நா லாயத், என்னும் சொற்றொடரில் உள்ளதைவிட 'இருந்தைந்தாயத்' என்று அச்சொற்றொடர் இப்பாடலில் அமையப் பெற்றிருந் தால் சீர் அமைப்பு நன்றாயிருந்திருக்கும். யாப்பமைதியும் பெற்றிருக்கும். '......சூறத்தில் முஸம்மிலெனுஞ் சுருதி வசன மிறங்கினவே' (தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 36) என்பது பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

முஸ்லீம்களின் அன்றாட வாழ்க்கையில் பேச்சு வழக் கிலும் கூடப் பொதுவாக வழங்கப்படும் மற்றொரு அறபுச் சொல் கலிமா. 'கலிமா' என்னும் சொல்லின் நேரடிக் கருத்து 'சொல்' என்பதாகும். சொல் என்னும் பொருளிலே அல்குர் ஆனினும் கலிமா என்னும் பதம் உபயோகிக்கப் பட்டுள்ளது. (3:39; 3:64; 4:71; 6:34; 6:115.) இஸ்லாமிய பரிபாஷையில் கலிமா இஸ்லாமிய மூலமந்திரத்தைக் குறிப் பிடுகின்றது. 'அல்லாஹுத்தஆலா அன்றி வேறு நாயகன் இல்லை! முகம்மது (சல்) அவர்கள் அவனின் திருத்தூதரா வார்கள்' என்னும் கருத்தைக் கொண்ட 'லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர்ற சூலுல்லாஹ்' என்னும் அறபு வாக்கியத்தைக் குறிப்பிடவே கலிமா என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. இந்த சொற்றொடரை 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்றும் 'முஹம்மதுர்ற சூலுல் லாஹ்' என்றும் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். முன்னையது அல்குர்ஆனில் உள்ள சூறத் முஹம்மத் (47:19) என்ப திலும் பின்னையது சூறதுல் பத்ஹ (47:19) என்பதிலும் இடம் பெற்றிருக்கின்றன. இனி, இந்தக் கலிமா என்னும்

சொல் சீறாப்புராணத்தில் இடம்பெற்றிருக்கும் விதத்தினைப் பார்ப்போம்.

கலிமா என்னும் அறபுச் சொல்லை முஸ்லிம் மக்கள் தமது பேச்சு வழக்கில் அடைமொழியாக உபயோகிப்பர். சுட்டு விரலைக் குறிப்பிடச் 'கலிமா விரல்' என்னும் சொற்றொடரைப் பயன்படுத்துவர். இச்சொற்றொடர் வலதுகைச் சுட்டு விரலையே சுட்டும். உமறுப்புலவரும் தமது சீறாப் புராணத்தில் சுட்டுவிரலைக் குறிப்பிட 'கலிமா விரல்' என்னும் சொற்றொடரை,

> விறல்புரி யாதம் வலதுகைக் கலிமா
> விரனகத் திடத்தில் வைத்தனனே''.[1]

என்றும்,

> ''......அணிக் கலிமா விரலினை யுயர்த்தி
> யுதித்தனர் முகம்மது நபியே..''[2]

எனப் பயன்படுத்தி உள்ளார்.

சீறாப்புராணத்தில் 'கலிமா' என்னுஞ் சொல் மூல மந்திரம் என்னும் பொருளில் பல இடங்களில் உபயோகப் படுத்தப்பட்டுள்ளது. சில சமயங்களில் அடைமொழி பெற்றும் வரும்; பெறாமலும் வரும். கலிமாவின் சிறப்பினைப் பல்வேறு வகைகளில் எடுத்துக்காட்டும் உமறுப்புலவரின் நயத்துக்கு பாடல்கள் சிலவற்றை ஈண்டு எடுத்துக்கொள் வோம். அங்கே விசுவாசமான சோலை இருக்கின்றது. அந்தச் சோலையிலே ஒன்றோடொன்று பின்னப்பட்ட கிளைகள் உள்ள மரங்கள் இருக்கின்றன. அந்தக் கிளைகளிலே குயிலி னம் அவற்றின் பேடுகளோடு இருக்கின்றன. அங்கிருந்து அவற்றின் வாய் திறந்து இனிமையாகப் பாடுகின்றன. அந்த இனிய வாயினால் கலிமாவானது ஓதுங்கள் என்று கூறிக்

1. சீறா, தலைமுறைப் படலம் 22
2. சீறா, நபியவதாரப் படலம் 37

கொண்டிருக்கின்றன. இல்லை, அவ்வாறு கூறுவதுபோலக் கூவுகின்றன. அது எத்தகைய கலிமா தெரியுமா? அந்தக் கலிமா அழகிய கரும்பின் இனிய சுவையை ஒத்திருக்கின்றது. இக்கருத்துக்கள் அமைந்துள்ள பாடல் இதுதான்.

''பின்னிய தடத்தரு சினையிற் பேடொடு
மன்னிய குயிலினம் வாய்விட் டார்ப்பது
கன்னலஞ் சுவைக்கலி மாவை நந்நபிக்
கின்னணி மியம்புமென் றிசைத்தல் போலுமே.''[1]

'துய்ய நற்கலிமா' (தலைமுறைப் படலம் 7) என்றும்......... சுடர் கடுங்கும் வலியுறு கலிமா...... (தலைமுறைப் படலம் 8) 'சுவைபெறுங் கலிமா' (இசுறாகாண் படலம் 41) என்றும் 'இன்பம் வருகனி கலிமா' (மணம் பொருத்து படலம் 25) என்றும் 'பூவினன் கலிமா' (மணம்புரி படலம் 93) என்றும் 'ஆதிமுறைமறைக் கலிமா' (நபிப்பட்டம் பெற்ற படலம்) என்றும் 'வெற்றிகொண் டுறங்கலி மா' (தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 12) என்றும் வாழ்வுக் கீதொரு' துணையென நற்கலிமாவைச் சொல்லி') தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 22) என்றும் 'கரும்பெனு நபிகலி மா' (தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 23) என்றும் 'மாசிலாத், திருநபி பெயர்க்கலி மா' (தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 24) என்றும் 'இறைவன் றூதர் செவ்வி யியனபிக் கலிமா' (தீனிலை கண்ட படலம் 163) என்றும் 'சொன்னயக் கலிமா' (உமறுகத்தாப் ஈமான் கொண்ட படலம் 59) என்றும் 'தேனைசோர் மருமலி கூறுங்கலிமா' (உமறுகத்தாப் ஈமான் கொண்ட படலம் 90) படலைத் திண்டோள் முகம்மதின் கலிமா வோதி' (உமறு கத்தாப் ஈமான் கொண்ட படலம் 64) என்றும் 'முதிருங் கலிமா' (உமறு கத்தாப் ஈமான் கொண்ட படலம் 82) என்றும் 'நன்கலி மா' (உடும்பு பேசிய படலம் 34) என்றும் 'இனிதினும் பெயர்க் கலி மா'

1. சீறா. புனல் விளையாட்டுப் படலம் 20

(உடும்பு பேசிய படலம் 34) என்றும் 'அருங்கலி மா' (உடும்பு பேசிய படலம் 36) என்றும் 'புதியகபிகலி மா' (உடும்பு பேசிய படலம் 37) என்றும் 'பாலை லெனுங்கலி மா' (மதியை அழைப்பித்த படலம் 57) என்றும் 'ஓரு கலிமா' (மதியை அழைப்பித்த படலம் 97) என்றும் 'அவர் கலிமா' (மதியை அழைப்பித்த படலம் 10) என்றும் ;விதி யவன் றூதர் பேரினிற் கலிமா' (மதியை அழைப்பித்த படலம் 170) என்றும் திருந்திநற் கலிமா வோதி (மதியை அழைம்பித்த படலம் 171) என்றும், 'வெம்மையினமுதக் கனியெனுங் கலிமா' (தசைக்கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலம் 3) என்றும் அணிபுய முகம்மதின் கலிமா (தசைக்கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலம் 15) என்றும் 'வரிசையி னறிக்கலிமா' (ஹபீபு ராஜா வரவிடுத்த படலம் 4) என்றும் உரிமையி னோடுங்கலி மா' (ஹபீபு ராஜா வரிசை வரவிடுத்த படலம் 5) என்றும் 'துதி செயுங் கலிமா (ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம் 26) என்றும் 'மன்னிய கலிமா' (மானுக்குப் பிணை நின்ற படலம் 38) என்றும் பொருந்திய கலிமா வோதி' (மானுக்குப் பிணைநின்ற படலம் 49) என்றும் 'விருப்புறுங் கலிமாத் தன்னை' (மானுக்குப் பிணைநின்ற படலம் 66) என்றும் 'ஆதியிற் சொலுங்கலி மா' ஈத்துங்குலை வரவழைத்த படலம் 17) என்றும் 'புகழ் கலிமா' ஒப்பெழுதித் தீர்ந்த படலம் 18) என்றும் 'செவ்வியி, லுறுகலி மா' (ஒப்பெழுதி திர்ந்த படலம் 26) என்றும் 'இருங்கலி மா' (ஒப்பெழுதித் தீர்ந்த படலம் 39) என்றும் 'மதிக்கலி மாக்கதிர் பொழிய (பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 1) என்றும் 'படர்ந்த நன்கலிமா' (பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 1) என்றும் 'படர்ந்த நன்கலி மா' (பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 4) என்றும் 'ஓது நன்கலி மா' (பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 6) என்றும் 'செழுங்கலி மா' (பருப்பதராசனைக் கண்ணுற்ற படலம் 10) என்றும் 'அருந்து மாரமு தக்கலி மா' (பருப்பதராசனைக்

கண்ணுற்ற படலம் 29) என்றும், 'கவினுறுங் கலிமா' (அத்தா ஈமான் கொண்ட படலம் 10) என்றும், 'மந்திரக் கலிமா' (அத்தா ஈமான் கொண்ட படலம் 12) என்றும் 'சென்னயக் கலிமா வோதி' (ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 14) என்றும் 'பலனுறுங் கலிமா தன்னை' (ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 30) என்றும் 'கோதருங் கலிமா வோதி (ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 33) என்றும் அமுத மெனுங் கலிமா (காம்மாப் படலம் 29) என்றும் 'விதி முறைக் கலிமா வோதி' (மதீனத்தார் ஈமான் கொண்ட படலம் 25) என்றும் 'ஒன்றிய திருக்கலிமாவை யோதியே (மதீனத்தார் ஈமான் கொண்ட படலம் 62) 'செழுங் கலி மா' (யாத்திரைப் படலம் 33) என்றும் 'இருங்கலி மா மொழி' (உம்மி மகுபதுப் படலம் 18) என்றும் கட்டுரை கலிமா' (கபுகாபுப் படலம் 5) என்றும் 'கலிமா வென்னு மூத்தாரம் பிறக்கத் தீட்டு மெழுத்தினை' (கபுகாபுப் படலம் 26) என்றும் 'பண்கெழுங் கலிமா வென்னு பத்தி வேரியத்த தூன்றி, (கபுகாபுப் படலம் 29) என்றும் 'நன்னிலைக் கலிமா தன்னை' கபுகாபுப் படலம் 39) என்றும் 'ஆரணக் கலிமா' (கபுகாபுப் படலம் 56) என்றும் 'இதமுறுங் கலிமா எடுத் தினி தோதி' (விருந்திட்டு ஈமான் கொள்வித்த படலம் 14) என்றும் 'இதமித்த நபி கலிமா' (வத்தான் படைப் படலம் 42) என்றும் 'மறை மொழிக் கலிமா' (பாத்திமா திருமணப் படலம் 131) என்றும் 'செழுங் கலி மா' (அசீறாப் படலம் 36) என்றும் 'காரணக் குரிசின் முகம்மது நபிதங் கட்டுரை மறைக்கலி மாவை' (பதுறுப் படலம் 25) என்றும் 'முண் ணிறை கலிமா வோதியீ மான் கொண்டு' (பதுறுப் படலம் 253) என்றும் 'நன்னயக் கலிமா' (குதிரிப் படலம் 3) என் றும் 'மருந்தெ னுங்கலி மாவுரை விதைந்து' (அசனார் பிறந்த படலம் 1) என்று, 'அருங்கலி மா' (அசனார் பிறந்த படலம் 7) என்றும் ஆர ணக்கலி மா' (உசைனார் பிறந்த படலம் 1) என்றும் 'ஆரணக் கலிமா' (தாத்துற்றஹூாக்குப் படலம் 2) என்றும் 'வரன்முறைத்திற நடவிய மறையுறைக் கலிமா

(தாத்துற்றஹூாக்குப் படலம் 100) என்றும் 'கன்னல் பொன்மொழித் திருக்கலிமா' (தாத்துற்றஹூாக்குப் படலம் 103) என்றும் 'நேரய மாங்கலி மா' (பனீகுறைலா வதைப் படலம் 47) என்றும் 'நற்கலிமா' (பனீகுறைலா வதைப் படலம் 49) என்றும் 'வேதத் திஸ்பமிகுங் கலிமாவை' (ஹுமாம் ஈமான் கொண்ட படலம் 9) என்றும் 'கரும்பெனு மறைக்கலி மாவை' (சல்மா பொருத படலம்) என்றும் அடை அடுத்துச் சீறாப்புராணத்திலே பல இடங்களில் 'கலிமா' என்னும் அறபுப் பதம் உபயோகிக்கப்பட்டுள்ளமையை அறியலாம்.

கலிமா என்னும் அறபுச் சொல் அடைமொழிகள் எதுவுமின்றித் தனிமையாகப் பல பாடல்களில் இடம் பெற்றிருப்பதையும் காணலாம். அவ்வாறு இடம் பெற்ற, படலங்களும் பாடல்களும் பின் வருமாறு:

நபியவதாரப் படலம் 99; உமறுகத்தாப் ஈமான் கொண்ட படலம் 92; மானுக்குப்பிணை நின்ற படலம் 68; ஒப்பெழுதித் தீர்த்த படலம் 29; புத்துபேசிய படலம் 1, 2, 3, 4, 11, 12; ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 6, 33, 36, 56, 62; மதீனத்தார் வாய்மை கொடுத்த படலம் 24; விட மீட்ட படலம் 43; கபுகாபுப் படலம் 46, 68; விருந்திட்டு ஈமான் கொள்வித்த படலம் 7; பாத்திமா திருமணப் படலம் 28; அசீறாப் படலம் 33, பதுறுப் படலம் 165, 234, 251, உகுதுப் படலம் 241; ஹூமா ஈமான் கொண்ட படலம் 6, 8; சல்மா பொருத படலம் 6, உறணிக் கூட்டத்தார் படலம் 1.

இஸ்லாமிய மந்திரமான கலிமா என்னும் பதத்தை உமறுப்புலவர் விரிவாக விளக்கியுள்ள சந்தர்ப்பங்களை எடுத்துக்கொள்வோம். பொதுவாகக் கலிமாவைக் கட்டுரை என வழங்குவார். கட்டுரை என்றால் உறுதிச் சொல் என்றும், பொருள் பொதிந்த சொல் என்றும் பொருள்படும். மணிமேகலை: சிறைவிடு காதை: 5; சிலப்

பதிகாரம்: பதிகம்: 54) எனவே பொருள் பொதிந்த சொல்லாக விளங்கும் கலிமா கரும்பிலும் இனிமை யானது கரும்போ கண்—மரக்கண் உடைய கரும்பு. இக் கருத்துக்களையே உமறுப் புலவர் ஒரு செய்யுளின் ஒரு அடி யில் குறிப்பிடுகிறார்

''கண்ணுடைக் கரும்பின் சுவையினு மினிய
கட்டுரை நெறிக்கலி மாவை''.[1]

அலைகளை உடையது சமுத்திரம். அந்தச் சமுத்திரத்திலே இருந்து அமுதம் பெறப்பட்டதாகக் கூறுவர். அந்த அமுதம் பேரமுதமாக விளங்குகிறது அத்தகைய பேரமுதத்தையும் விட இனிமையானது ஒன்று இஸ்லாத்தில் உண்டு. பேர முதம் அதற்கு நிகராகாது. அது தான் இஸ்லாமிய மூல மந்திரமான கலிமா. இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ் வாறு அமைந்துள்ளது.

"உடைதிரை யமுத மொவ்வா தோதிய கலிமா' (தனிலை கண்ட படலம் 161). இனிமையான வாக்குடைய வர்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். அத்தகைய இனிமை யான வாக்கினால் சொல்லுதற்கரியது புறுக்கான் வேதம். புறுக்கானோ மதுரமான சொற்களைக் கொண்டது இவற் றை எடுத்துப் பிரித்து விளக்கினார்கள். இவ் விளக்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்த மக்கத்துக்கு வந்திருந்த அன்றைய மதீனா வாசிகள் உள்ளமும் உடலும் பூரிப்படைந்தனர். இவற்றினால் கவரப்பட்டமையால் அவர்கள் சுவையைப் பொறுத்த வரையில் அமுதத்துக்கும் மிக்க இனிமையான கலிமா என்னும் மூல மந்திரத்தை மொழிந்து இஸ்லாத்தில் சேர்ந்தனர். இதனையே சீறாப்புராணம் இவ்வாறு விவரிக் கிறது.

...............முகம்மதின் மதுர வாக்கின்
விள்ளரு மறையின் றீஞ்சொல் விடுத்தெடுத்
துரைப்பத் தேறி

1. சீறா. தனிலை கண்ட படலம் 109

யுள்ளமு முடலும் பூரித் துநசிக்கு மமுதின்
மிக்காய்த்
தெள்ளிய கலிமா வோதித் தினிலைச் குரிய
ராஜரார்'',[1]

உமறு கத்தாப் (றலி) அவர்கள் இஸ்லாத்தைத் தழுவிய துடன் மக்கமாநகரிலே இருந்த முஸ்லிம்களின் எண்ணிக்கை நாற்பதாகியது. அவர்களுள் ஆண்கள் முப்பத்து மூன்று பேர். பெண்களின் எண்ணிக்கை ஆறு. உமறு கத்தாப் (றலி) அவர்களையும் சேர்த்து மொத்தம் 40 பேர். இவர் களே முதலில் கலிமாவைப் பெற்றவர்களாவர். கடலில் இருந்து பெறப்பட்டது அமுதம். சாயா நிற்கும் அலைகளி னால் முத்துக்களை வீசி ஒலிக்கும் சமுத்திரம். இச் சமுத்திரம் காபிர்களுக்கு உருவகிக்கப்பட்டுள்ளது. இக் காபிர்கள் மத்தியிலிருந்து முஸ்லிம்கள் தோன்றினர். காபிர்கள் என்னும் சமுத்திரத்திலிருந்து எடுக்கப்பட்ட அமுதத்தை ஒத்திருந்தது கலிமா என்னும் இஸ்லாமிய மூல மந்திரம்; இந்த அமுதம் என்னும் மூலமந்திரத்தை முஸ்லிம்கள் உண்டனர். இக் கருத்துக்களையே உமறுப்புலவர் இவ்வாறு வருணிக்கிறார்.

''சரியுந் திரைமுத் தெறிந்திரைக்குஞ்
சலதிக் குபிரினி டைபினடு
விரியு மமுத மெனுங்கலிமா
மேலோ ரொருமுப் பஃதுடன்முன்
றரியீ மகடு வறுவரும
றரச ரொருவ ரவனியிற்
றெரியு மிலக்க மிந்நான்கு
பதின்ம ருடனுஞ் சிறந்திருந்தார்''.

உமறுப்புலவர் மற்றொரு செய்யுளில் பிறிதொரு உரு வகக்கை அமைத்துள்ளார். குற்றம் அற்றது தீனுல் இஸ்

1. சீறா தீனிலை கண்ட படலம் 162
2. சீறா. உமறு கத்தாபு ஈமான் கொண்ட படலம் 95

லாம் என்னும் மார்க்கம் இந்த மார்க்கம். இந்த மார்க்க நிலைமைக்கு உரித்தான அழகிய பயிர்தான் கலிமா. இதனையே கவிஞர்,

> "செயிரறுந் தீனிலைக் குரிய செவ்விய
> பயிரென வருங்கலி மா.........." 1

என இவ்வாறு பாடியுள்ளார். வேறொரு செய்யுளில் கலிமாவை சூரியனுக்கும் காபிர்களை (முஸ்லிம் அல்லாதோரை) இருளுக்கும் உவமித்து சூரியன் இருளை அகற்றுவதுபோல கலிமா முஸ்லிம் அல்லாத தன்மையை நீக்கி விடுகிறது என புலவர் இவ்வாறு கூறுகிறார். நபிகள் கோமான் இவ்வாறு செய்ததாக வருணிக்கிறார்.

> "இரவியென்னுங் கலிமாவிற் குபிர்த்தமிர
> மடர்ந்தெறியும்........." 2

திமிஸ்கு நாட்டைச் சேர்ந்த ஹபீபு ராஜா மக்கமாநகருக்கு வந்துவிட்டுத் தம் நாட்டுக்குத் திரும்பிச் சென்றார். அங்கு செல்லும் பொழுது அவரது பரிவாரங்களின் சத்தம் ஓர் அலாதியானதாக இருந்தது. யானைக் கூட்டங்களின் சத்தம் ஒஜ பக்கம். சோலையில் வளரா நிற்கும் குதிரைக் கூட்டங்களின் சத்தம் மற்றொரு பக்கம். இனிய கீதத்தை கொண்ட முரசுகளின் நாதம் பிறிதொரு பக்கம். அத்தோடு தீனுல் இஸ்லாம் மார்க்கத்தின் மூல மந்திரமான கலிமாவை இனிமையுடன் ஓதிய ஓசை இன்னொரு பக்கம். இந்தச் சத்தங்கள் அனைத்தும் கடலில் ஓசையை ஒத்திருந்தது எனக் கவிஞர் இவ்வாறு வருணிக்கிறார்.

> "கரித்திர ளொலித்தகம் பலையுங் காவளர்
> பரித்திர ளொலித்தகம் பலையும் பண்முர

1. *சீறா.* உடும்பு பேசிய படலப் 2
2. *சீறா.* உத்துபா வந்த படலம் 19

சிரைத்தலுந் தீன்கலி மாவை பின்புற
வுரைத்திடுந் தொனிக்கட லுடைத்துக் காட்டு
மால்.''[1]

பாத்திமா நாயகி (றலி) அவர்களினதும் அலி (றலி) அவர்களினதும் திருமணத்திற்காக நகரம் விழாக்கோலம் பூண்டது என உமறுப்புலவர் வருணனையில் கலிமாவும் இடம் பெறுகிறது பொன் நிறத்தை உடையகொடிகள் அங்கு இருந்தனவாம். அந்தக் கொடிகள் நூலினால், கட்டப்பட்டு இருந்தனவாம். சித்திர வேலைபாட்டுடன் திகழ்ந்தனவாம் அந்தக் கொடிகள். அங்கே அகமது நபி (சல்) அவர்களின் திருக்கலிமா பொறிக்கப்பட்டிருந்தனவாம். இத்தகைய கற்பனை நயம் மிக்கதாய் வருணிப்பதற்கும் உமறுப்புலவர் இஸ்லாத்தின் மூல மந்திரமான கலிமாவைப் பயன்படுத்தியுள்ளமை நயத்தக்கது.

''கழிக ளிற்பொதிந் தகுமது நபிதிருக் கலிமா
வெழுது சித்திரப் பொற்கொடி யணிநிரைத்
திருவார்''[2]

இவ்வாறு இஸ்லாமிய மூல மந்திரமான கலிமா என்னும் அறபுச்சொல் சீறாப்புராணத்தில் பல இடங்களில் ஆளப் பட்டுள்ளது.

முஸ்லிம்களின் பேச்சு வழக்கில் இடம் பெறும் இரண்டு அறபுச் சொற்கள் தீன், குப்ர் என்பனவாகும். இஸ்லாமிய சமயத்தை அறபு மொழியில் தீன் என்று வழங்குவர். இஸ்லாம் அல்லாத தன்மையே அறபு மொழியில் குப்ர் என வழங்கப்படுகிறது. குப்ர் என்னும் இச் சொல்லிலிருந்தே பெறப்பட்ட காபிர் என்னும் சொல் முஸ்லிம் அல்லாதோரைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது அல்குர்ஆனிலே இஸ்லாமிய சமயத்தைக் குறிப்பிட தீன் என்னும்

1. சீறா. ஹபீபுராஜா வரிசைவிடுத்த படலம் 13
2. சீறா. பாத்திமா திருமணப் படலம் 82

சொல்லும் (2:132, 256, 3:24, 73, 4:1, 2?) இஸ்லாம் அல்லாத தன்மையை உணர்த்த குப்ர் என்னும் சொல்லும் (2:56, 93. 109, 3:80, 4:46, 5:44) பயன்படுத்தப்பட்டுள்ளன. சீறாப்புராணத்திலே தீன் என்னும் அறபுச் சொல்லைப் போன்று அதிகக் கூடுதலான சந்தர்ப்பங்களில் பயன்படுத்தப்பட்ட வேறு அறபுச் சொல் இல்லை என்றே கூறி விடலாம். இதனை விடச் சற்றுக் குறைவான எண்ணிக்கையாகவே குப்ர் என்னும் அறபுச் சொல் சீறாப்புராணத்தில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது.

கடவுள் வாழ்த்தில் மாத்திரம் ஐந்து தடவைகள் (5.7, 12, 16, 17) தீன் என்னும் அறபுச்சொல் ஆளப்பட்டுள்ளது. தீன் என்பதனைப் பயிராகவும் குப்ர் என்பதனைக் களையாகவும் உருவகித்தல் முஸ்லிம் கவிஞரின் தமிழ் இலக்கிய மரபாகத் திகழ்வதை இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் சிறப்பாக அமைந்திருப்பதைக் காணலாம். சீறாப்புராணத்தில் அத்தகைய உருவகங்கள் இடம் பெற்றுள்ள விதத்தினைப் பார்ப்போம். குபிர் என்னும் களையை அகற்றி கலிமா என்னும் விதையை விதைத்து தீன் என்னும் பயிரை வளர்த்த விதம்,

"அறிந்துவெங் குபிரை யோது மாதிறூற் கலிமா
வித்தி
விரிந்ததீன் பயிரை யேற்றும் ......"[1]

என வருணிக்கப்பட்டுள்ளது, இன்னொரு சந்தர்ப்பத்தில் இதே பாணியில் இந்தக் கவிஞர் இவ்வாறு பாடியுள்ளார்.

"பாரினிற் பரந்த குபிர்க்குல மறுத்துப்
படர்தரு தீன்பயிர் விளக்க"[2]

இன்னும் பல சந்தர்ப்பங்களில் குபிரை இருளுக்கும் இந்த இருளை அகற்றும் ஒளியாக இஸ்லாத்தையும் இவ்வாறு உருவகித்துள்ளார் கவிஞர் உமறு.

1. சீறா பாத்திமா திருமணப் படலம் 29
2. சீறா அலிமா முலையூட்டுப் படலம் 89

"திமிர வெங்குபிர் கடிந்துதீ னிலைநெறி நிறுத்தி"[1]

"அழிதருங் குபிரை நீக்கி யகுமது தீனை நோக்கி"[2]

"அல்லார் குபிரைக் கடிந்தகற்றி
நறுந்தீ னடுக்கந் தனைத்தவிர்த்தார்"[3]

சுருதி மொழித்தீன் பயிர்தழைப்பச்
சுற்றுங் குபிர்வெங் களைநீய்க்கும்"[4]

"கொதிப்படர் குபிரெனுங் குறுக லார்திர
ளதிர்ப்படர் தீன்படைக் கலத்தி னாக்கம்போ
லெதிர்ப்படுந் தன்பெனு மிருளை யுண்மகிழ்
மதிப்பெனுங் கதிரினான் மாமயத்தல் வேண்டுமால்"[5]

"மன்னுமிசுலா மாகிக் குபிரகற்றித் தீனிலைமை
வளர்ப்ப னென்றான்."[6]

"பணிபரித் துவந்த பாரிற் குபிரிருட் படல
நீக்கித்
திண்சுடர் நிலாத்தீ னோங்க ."[7]

"...குபிரினை யகற்றி நன்னெறி தீனினைப்
பிடித்து..."[8]

......வெங்குபிர் துடைத்துவண்புக ழடைந்த
தீனவர்."[9]

தீன் குபிர் என்னும் அறபுச் சொற்கள் ஒருங்கே ஆளப் பட்டுள்ள பாடல்கள் வருமாறு: தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 44, தீனிலை கண்ட படலம் 163, உத்துபா வந்த படலம் 2, உசைனார் பிறந்த படலம் 14, 16, ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம்

---

1,2,3,4. சீறா. உமறு கத்தாபு ஈமான் கொண்ட படலம் 1, 77, 92, 93
5. சீறா. மதியை அழைப்பித்த படலம் 42
6. ,, புத்து பேசிய படலம் 42
7. ,, மதீனத்தார் ஈமான் கொண்ட படலம் 1
8. ,, உகுமான் படலம் 24
9. ,, தாத்துற்றஹாக்குப் படலம் 39

3, 35, ஒப்பெழுதித் தீர்த்த படலம் 6, பருப்பதராஜனைக் கண்ணுற்ற படலம் 33, காம்மாப் படலம் 20, மதீனத்தார் ஈமான் கொண்ட படலம் 33, யாத்திரைப் படலம் 16, 17, 62, 01, உம்மி மகுபதுப் படலம் 24, மதீனம் புக்க படலம் 21, பதுறுப் படலம் 202, 238, உகுதுப் படலம் 40, அமுறாப் படலம் 12, தாத்துற்றஹாக்குப் படலம் 10. உயை வந்த படலம் 93, உமுறாவுக்குப் போன படலம் 72, தீன் என்னும் சொல் மாத்திரம் உபயோகிக்கப்பட்ட பாடல்கள் வருமாறு: நபியவதாரப் படலம் 92, அலிமா முலையூட்டுப் படலம் 86, பாதை போந்த படலம் 21, புலி வசனித்த படலம் 11 இசுறாகாண் படலம் 40, ஊசாவைக் கண்ட படலம் 26, மணம் பொருத்த படலம் 25, மணம்புரி படலம் 83, நபிப் பட்டம் பெற்ற படலம் 1, 13, 29, தொழுகை வந்த படலம் 6, 18, தீனிலை கண்ட படலம் 28 19, 20, 42, 95, 109, 125, 148, 150, 162, உமறு கத்தாபு ஈமான் கொண்ட படலம் 4, 21, 59, 71, 80, 86, உடும்பு பேசிய படலம் 1, 2, 7, ஹபீபு மக்கத்துக்கு வந்த படலம் 3, 72, மதியை அழைப்பித்த படலம் 10, 37, 52, 57, 59, 78, 112, 165, 180, 188, ஹபீபுராஜா வரிசை விடுத்த படலம் 613, 16, 22, 40, ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம் 1, 4, 12, மானுக்குப் பிணை நின்ற படலம் 1, 19, 30, 40, 67, 68, 70, ஒப்பெழுதித் தீர்ந்த படலம் 7, 14, 25, 28, புத்து பேசிய படலம் 3, 12, பிராட்டியார் பொன்னுலகு புக்க படலம் 1, 15, பருப்பதராஜனைக் கண்ணுற்ற படலம் 4, 3, ஜின்கள் ஈமான் கொண்ட படலம் 15, 21, 21, 27, 37, 38, 41, 42, மதீனத்தார் வாய்மை கொடுத்த படலம் 4, 13, 14, 22, 33, 35, 44, 53, யாத்திரைப் படலம் 9, 16, 29, 30, 33, 41, 47, 52, 101, விட மீட்ட படலம் 31, சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் 24, 25, 27, உம்மி மகுபதுப் படலம் 21, 23, மதீனம் புக்க படலம் 13, 39, 41, 58, 56, கபு காபுப் படலம் 1, 21, 30, விருந்திட்டு ஈமான் கொள்

வித்த படலம் 15, உகுபான் படலம் 22, சல்மான் பாரிசுப் படலம் 25, 35, 59, வத்தான் படைப் படலம் 5, 7, பாத்திமா திருமணப் படலம் 1, 4, 69, 120, 182, 186, சீபுல் பதுறுப் படலம் 3, பத்னுன்னகுலாப் படலம் 1, 7, 10, 12, 15, பதுறுப் படலம் 4, 5, 83, 1, 2, 178, 206, 213, 215, 223, 229, 283, 237, 243, 256, சவீக்குப் படலம் 1, 3, 13, குதரிப் படலம் 7, 12 அபீறாபிகு வதைப் படலம் 3, 38, அசனார் பிறந்த படலம் 1, அபூதல்கா விருந்துபடலம் 4, 6, 11, உகுதுப் படலம் 1, 5, 12, 40, 61, 62, 63, 72, 78, 81, 91, 100, 102, 124, 167, 195, 206, 216, 224, 225, 226, 228, 229, 230, 234, 245, 247, 248, 264, 266, 267, அமுறாப் படலம் 1, 3, கருபு வதைப் படலம் 3, 14, 20, 24, 32, 34, 35, 36, 41, 46, 52, 67, பதுறு சுகுறாப் படலம் 2, 4, 1', 15, 18 21, 22, 26, 43, 79, 85, 90, 94, 107, சாபிர் கடன் தீர்த்த படலம் 9, முறைசீக்குப் படலம் 1, 4, 5, 15, 18, 25, 26, 38, 44, 51, 59, கந்தக்குப் படலம் 2, 13, 15, 27, 33, 37, 42, 45, 52, 53, 72, 79, உமை வந்த படலம் 23, 33, 40, 45, 61, 76, 78, 82, 102, 110, 112, 120, 127, 1[illegible], 163, 183, பனீ குறைலா வதைப் படலம் 2, 5, 10, 18, ஹுமாம் ஈமான் கொண்ட படலம் 8, செயினபு நாச்சியார் கலியாணப் படலம் 25, ஒட்டகை பேசிய படலம் 1, 17, மழை அழைப்பித்த படலம் 21, அந்தகன் படலம் 1, கவுலத்தை விட்டுக் கூடின படலம் 1, 2, உம்றாவுக்குப் போன படலம் 30, 36, 44, 62, 111, 112, சல்மா பொருத படலம் 2, 3, 5.

குப்ர் என்னும் அறபுச் சொல் இஸ்லாம் அல்லாத தன்மையை உணர்த்த உபயோகிக்கப்பட்டுள்ளது. குப்ர் என்னும் அறபுச் சொல் தனியே இடம் பெற்றுள்ள பாடல்கள் வருமாறு;

நபியவதாரப் படலம் 91, 108, புனல் விளையாட்டுப் படலம் 22, கரம் பொருதது படலம் 33, நபிப் பட்டம் பெற்ற படலம் 39, உமறு கத்தாப் ஈமான் கொண்ட

படலம் 76, 95, உடும்பு பேசிய படலம் 35 உத்துபா வந்த படலம் 2, 4, 19, மதியை அழைப்பித்த படலம் 166, 187, 188, தசைக் கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலம் 15, 31, ஹபீபு ராஜா வரிசை வரவிடுத்த படலம் 7, ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம் 34, ஒப்பெழுதித் தீர்ந்த படலம் 30, 34, பருப்பதராஜனைக் கண்ணுற்ற படலம் 33, அத்தாசு ஈமான் கொண்ட படலம் யாத்திரைப் படலம் 34, உகுபான் படலம் 23, வத்தான் படைப் படலம் 9, பாத்திமா திருமணப் படலம் 40, 116, 143, சீபுல் பகுறுப் படலம் 11, பதுறுப் படலம் 25, உது குப் படலம் 52, 96, 258, 262, அமுறாப் படலம் 14, கருபு வதைப் படலம் 6, 43, உசைனார் பிறந்த படலம் 5, தாத் துற்றஹாக்குப் படலம் 88. முறைசீக்குப் படலம் 27, 28 57, கந்தக்குப் படலம் 82, 83. உயை வந்த படலம் 13, 19, 22, 43, 56, 89, 93. உமுறாவுக்குப் போன படலம் 29, 107 உறனிக் கூட்டத்தார் படலம் 7.

குப்ர் என்னும் வினைச் சொல்லின் பெயர்ச் சொல்லான காபிர் என்பது முஸ்லிம் அல்லாதோரைக் குறிப்பிட உபயோகிக்கப்படுகிறது. இந்தச் சொல்லும் பல இடங்களில் சீறாப்புராணத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம். இத்தகைய பாடல்கள் வருமாறு: புனல் விளையாட்டு படலம் 30, புகைறா கண்ட படலம் 30, கரம் பொருத்து படலம் 1, 9, 36, 40 மணம்புரி படலம் 35, தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 44, தீனிலை கண்ட படலம் 4, 9, 16, 48, 74, 76, 88, 91, 97, 120, 139, 163, மதியை அழைப்பித்த படலம் 82, 122, ஈமான் கொண்டவர்கள் ஹபஷீ ராச்சியத்துக்குப் போந்த படலம் 2, 3, 35, 36, பருப்பதராஜனைக் கண்ணுற்ற படலம் 1, யாத்திரைப் படலம் 8, 12, 21, 36, 50, 61, 63, 65, 67, 68, 71, 73, 15, 78, 83, 107, 119, 111, 1 2, மதீனம் புக்க படலம் 1, 4, உடுபான் படலம் 6, பத்னுன்னகுலாப் படலம் 8, பதுறுப் படலம் 55, 98, 115, 204, 205, 238, 234, சவீக்குப்

படலம் 2, 4, 5, அபீறாகப் வதைப் படலம் 1, 5, உருதுப படலம் 29, 33, 37, 44, 54, 57, 17, 111, 119, 157, 1891, 94. கந்து வதைப் படலம் 25, காத்துற்றுஹாக்குப் படலம் 29, 86, சாபிர் கடன் தீர்ந்த படலம் 8 முறைசீக்குப் படலம் 12, கந்தக்குப் படலம் 1, 22, 39, 49, உயைவந்த படலம் 21, 24, 27, 33, 62, 80, 88, 98, 101, 139, 140, பனீகுறைலா வதைப் படலம் 38, 17, 49, ஒட்டகை பேசிய படலம் 8, உம்றுறாவுக்குப் போன படலம் 41, 42, 45, 61, 65, 70, 73, 74, 75, 76, சல்மா பொருத படலம் 90.

இஸ்லாத்தைப் பொறுத்த வரையில் 'உம்மத் என்பது மற்றொரு முக்கியமான அறபுச் சொல்லாகும். மக்கள் தொகுதி, இனம் என்னும் பொருளைக் கொண்டது இச் சொல் திருக்குர் ஆனிலே பல இடங்களில் இச்சொல் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். (143, 212, 3:104; 110, 113; 4:41; 5:51; 69; 6:108; 7:38) அல்லாஹுவின் தெய்தீகக் கட்டளையின் அடிப்படையில் மதீன மா நகரை அடைந்த பின்னர் அண்ணல் நபி (சல்) அவர்கள் தங்களை பின்பற்றிய மக்களை ஓர் உம்மத்தாக மக்கள் தொகுதியாக தத்தமக்கே உரிய சட்டதிட்டங்களையும் பிரமாணங்களையும் கொண்ட சுதந்திரமான மக்கள் கூட்டமாக அமைக்க வழி வகுத்தார்கள். இதன் பயனாக இன்றும் முஸ்லிம்கள் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் உமமத்து முகம்மது —முகம்மது நபி (சல்) அவர்களைப் பின்பற்றுபவர்கள் என வழங்கப்படுகிறார்கள்.

சீறாப்புராணத்தில் 'உம்மத், என்னும் இந்த அறபுச் சொல் அதே கருத்தில் ஆளப்பட்டுள்ளதைக் காணலாம். அண்ணல் நபி (சல்) அவர்களைக் கண்ணுற்ற இசுறா என்னும் பண்டிதர், அவர்களின் எதிர் காலத்தைப்பற்றி தீர்க்க தரிசனமாகக் கூறினார். உலகத்திலே முகம்மது என்னும் பெயரை உடைய ஒருவர் தோன்றுவார், அவர்களுக்குப் பின்னர் ஒருநபியும் இருக்கமாட்டார். அவர்களைப்பின்பற்றும்

அலர்களது உம்மத்து ஆனவர்கள் தம் பாவங்கள் அற்றுப் போகும். அவர்களுக்கு மோட்சகதி உண்டாகும். வான வர்களான மலாயிகத்துமார்களும் அவர்களது கலிமா என்னும் மூலமந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருப்பார் கள். இவ்வாறு கூறினார் அந்தப் பண்டிதர், இவற்றையே உமறுப்புலவர் இவ்வாறு விவரித்துள்ளார்.

''பவியினின் முகம்ம தென்னப் பொருந்திய
பெயருண் டாகு
மவரலா னபியின் னில்லை யவரும்மத் தானோர்க்
கெல்லாம்
பவமறுங் கதிபுண்டாகும் படைப்புணும் வானோ
ரெல்லாஞ்
சுவைபெறுங் கலிமாச் சொல்வ ரென்னவே
சொல்லி னாரால்.[1]

சல்மான் பாரிசு (றலி) அவர்கள் அடிமையா இருந்த சமயம் விடுதலை பெற விரும்பின் ஒரு நிபந்தனை நிறைவேற்றப் படல் வேண்டும் என்று அவருக்குக் கூறப்பட்டது. இந்த நிபந்தனையைக் கொண்டு அவர் நபிகள் நாயகம் (சல்) அவர் களிடம் சென்றார்கள். உபதேசம் பண்ணும்படி கோரினார் கள். யாராவது அண்ணல் நபி (சல்) அவர்களைத் தேடிச் சென்று கண்டால் அல்லது இறந்துவிட்டால் உண்மை யிலேயே அந்த எண்ணத்துக்காக அத்தகையோர் இந்த உம்மத்தைச் சேர்ந்தவராகி விடுகிறார். அதன் பயனாக இஸ்லாத்திலே சேர்ந்து தீன்மார்க்கத்திலே சலாமத், அமைதியைப் பெறுவார். இவ்வாறு அண்ணல் நபி (சல் அவர்கள் கூறியமை பற்றி உமறுப் புலவர் இவ்வாறு பாடு கிறார்.

''இருநி லத்திடைப் பிறந்துநன் னபியென
விவணின்
வருவ ரென்றெனைத் தேடிய வுண்மைவல் லவர்க

1. சீறா. இசுறா காண் படலம் 41

ளரிதிற் காண்கினு மிரக்கினு மும்மத்தி னவராய்ப்
பெருகுந் தீனில்ச லாமத்துப் பெறுவர்க
ளென்றே.''[1]

அறபு மொழியிலே கட்டாயமானவை 'பர்ளு' என்றும் வழங்கப்படுகின்றன. அல்லாஹ்வினால் ஏவப்பட்டு நிறுவப் பட்டுள்ள மார்க்கச் சட்டதிட்டங்களுள் கட்டாயம் கடைப் பிடிக்கப்படவேண்டியவை பர்ளு என்றும் விருப்பத்துக் கிணங்கப் பின்பற்றப்பட வேண்டியவை சுன்னத் என்றும் அழைக்கப்படுகின்றன. வழக்காறு, பாதை, வாழ்க்கை முறை என்பனவும் சுன்னத் என்னும் அறபுச் சொல்லின் கருத்துக்களாகும். பெரும்பாலும் பர்ளு, சுன்னத் என்னும் இரண்டு அறபுப் பதங்களாலும் இஸ்லாத்தில் விதிக்கப் பட்டுள்ள சட்டங்களும் பிரமாணங்களும் உள்ளடக்கப்படு கின்றன. நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் கொள்கை களினாலும் அவர்கள் பின்பற்றிய வாழ்க்கை முறையினால் நிறுவப்பட்டுள்ள விதிகளும் பிரமாணங்களும் சிறப்பாக சுன்னத் என அழைக்கப்படுகின்றன. 'விருத்த சேதனத் தை'க் குறிப்பிடவும் சுன்னத் என்னும் அறபுப் பதம் உப யோகப்படுகின்றது. இங்கே வழக்காறே சுட்டப்படுகின்றது. சேதனம் என்னும் பொருளில் உமறுப்புலவர் '......... மருவு சுன் னத்துஞ் செய்யலாய்......பிறந்தனர் முகம்மது நபியே, (நபியவதாரப் படலம் 88) என்னும் சொல்லை உபயோகித் திருப்பது நோக்கற்பாலது. ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டில் நோன்பு நோற்றல் முஸ்லிம்களுக்கு விதியாக்கப்பட்டது. றமளான் மாதம் நோன்பு நோற்றல் பறுளாக்கப் பட்டுள்ளது. இதனையே உமறுப்புலவர்

''பெறுகதி றமளா னென்னப் பெருகிய நோன்பு
தன்னை
யுறுதிகொண் டெவர்க்குஞ் செல்வி யுறுபறு
லாக்கி னேனென்.''[2]

1: சீறா. சல்மான் பாரிசுப் படலம் 35
2. சீறா. பதுறுப் படலம் 1

எனக் குறிப்பிட்டுள்ளார். அல்லாஹுத்தஆலா முஸ்லிம் களுக்குப் பறுளென விதித்துள்ள தொழுகையைக் குறிப் பிடும் பொழுது உமறுப்புலவர்,

"பழுதி லாதமெய் முதல்வன் பறுளெனப் பணியுந்
தொழுகை..................." 1

என விவரித்துள்ளார். அல்லாஹுத்தஆலாவை பறுளின் விதிமுறைகளுக்கிணங்க தொழுதமையை 'வேதமுள் ளுறைந்த நாயனை பறுளின் விதிமுறைத் தொழுகையை முடித்து' (ககுபு வதைப்படலம் 58) எனக் கவிஞர் விவரித் துள்ளார். றம்ளான் மாத இறுதியில் நோன்பு நோற்று முடியும் சந்தர்ப்பத்தில் மற்றொரு இறைமறை வசனம் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு இறங்கியது. இதற் கிணங்க முஸ்லிம்களுக்கு பித்றா வழங்கல் விதியாக்கப் பட்டது, பர்ளக்ாகப்பட்டது.

"முதலவன் விதித்த விறமளா னோன்பு
முடிவினி லியாவரு மறிய
அதிசயம் பிறப்பப் பித்றுறாப் பறுளென்
றாயத்தும் நபிக்கிறங் கியதான்".2

என பித்றா குறிப்பிடப்படுகிறது. இதுவே முஸ்லிம்கள் மத்தியில் ஸதக்கத்துல் பித்ர் என வழங்கப்படுகிறது. றம்ளான் மாதம் முஸ்லிம்கள் நோன்பு நோற்று முடிந்த தும் வழங்கும் தான தருமத்தையே இச்சொற்றொடர் குறிப் பிடுகின்றது. இஸ்லாத்தில் ஆகுமானதாக்கப்பட்ட நெடுந் தூரப் பயணத்தின்போது தொழுகைகளைச் சுருக்கித் தொழு தல் இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு சுருக்கித் தொழுவது அறபில் 'கஸ்ர்' என வழங்கப்படுகிறது. இத் தொழுகை பறுளாக்கப்பட்ட வரலாறும் சீறாப்புராணத்

1, 2, சீறா. பதுறுப் படலம் 11, 256

தில் குறிப்பிடப்படுகிறது. ஹிஜ்றி நான்காம் ஆண்டு முஸ்லிம்களுக்கு கஸ்றுத் தொழுகை விதியாக்கப்பட்டது என இறைமறை வசனம் இறங்கியது. இதனையே சீறாப்புராணம் இவ்வாறு வருணிக்கின்றது.

"வந்த தெண்ணிய கிஜுறத்து நான்கெனும்
வருடஞ்
சிந்தை கூர்தரக் கசறெனுந் தொழுகையைச்
செய்த
லெந்த நாடடினு மேகுவோர் மேல்பறு ளென்ன
வந்த மில்லவ னாரண மிறங்கின வன்றே".[1]

தாத்துற்றஹ்ஹாக்கு என்னும் பதியில் வாழும் கத்துகான் என்னும் கூட்டத்தாருடன் மோதிய சந்தர்ப்பத்தில் பறுளான தொழுகையை நிறைவேற்றியமை, மன்னியபறுளென்றேத்தும் வணக்கமு முடிந்ததன்றோ', (தாத்துற்றஹாக்குப் படலம் 15) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் மக்க மாநகரிலிருந்து மதினமா நகருக்குச் சென்று நான்கு ஆண்டுகள் நிறைவுற்றன. ஐந்தாவது ஆண்டு ஆரம்பமானது. அப்பொழுது முஸ்லிம்கள் மீது ஹஜ் கடமை விதியாக்கப்பட்டது. மக்க மாநகருக்கு மேற்கொள்ளும் புனிதப் பயணமான ஹஜ் முஸ்லிம்களுக்குக் கடமை ஆக்கப்பட்டது. இதனையே உமறுப் புலவர்,

"விலக்கரிய வருடமொரு நான்கு நிறைந்
தைந்தாண்டு மேவும் போதி
லெக்கணுறாச் சுடரொளியா மல்லாவின்
பணிவிடையா வவனி மீதிற்
றுலக்கமுற வந்த ஹஜ்ஜுபறுளாளை
தின்றுமுதற் றொழுவீ ரென்றே".[2]

1. சீறா. உசைனார் பிறந்த படலம் 1
2. சீறா ஷுமாம் ஈமான் கொண்ட படலம் 5

என்று வருணிக்கிறார். ஐவேளைத் தொழுகையைப் பற்றியும் நோன்பைப்பற்றியும் ஹஜ்ஜைப்பற்றியும் குறிப்பிடுகையில் அவற்றை இவ்வாறு அமைத்துள்ளார்.

"......காலமைந்துந் தொழுகை வென்றுந்
தூதார யுமையிருக்க வனுப்பினதும்
காதலுடன் ஸக்காத்து நோன்பு ஹஜ்ஜூம்
பறுளெனவே சுழறு மைந்தும்". [1]

ஹஜ் என்னும் அறபுச் சொல்லின் நேரடிக் கருத்து 'புறப்படுதல்'; ஒரு திசையை நோக்கிச் செல்லுதல் என்பனவாகும். இஸ்லாமிய பரிபாஷையில் ஹஜ் என்னும் சொல் புனித பயணத்தைக் குறிப்பிடுகின்றது. இஸ்லாமிய ஆண்டிலே வரும் பன்னிரண்டாம் மாதமான துல் ஹஜ் மாதத்திலே மக்க மாநகருக்கு முஸ்லிம்கள் மேற்கொள்ளும் புனித பயணத்தையே இச்சொல் குறிப்பிடுகின்றது. இஸ்லாமிய கோட்பாடுகளும் ஐந்தாவதான ஹஜ் எல்லா வசதிகளும் உள்ள முஸ்லிம்களால் வாழ்க்கையில் ஒரு முறையாவது நிறைவேற்றப்பட வேண்டிய ஒன்றாகும். ஹஜ்ஜூம் உமறாவும் பற்றி திருக்குர் ஆனிலே (2: 165 197) குறிப்பிடப் படுகிறது. துல் ஹஜ் மாதம் முதற்பத்து நாட்களிலே ஹஜ் நிறைவேற்றப்படல் வேண்டும். ஆனால் உமறாவோ ஓர் ஆண்டில் எப்போதாவது நிறைவேற்றக் கூடியதொன்றாகும்.

சீறாப்புராணத்திலே பல இடங்களிய் ஹஜ் பற்றிக் குறிப்பிடப்படுகின்றது. அபூ லஹப் உட்படக் குறைஷிக் காபிர்கள் அண்ணல் நபி (சல்) அவர்களை இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் எதிர்க்க முற்பட்டனர். ஹஜ் தினத்தன்று அண்ணலாரைத் தீர்த்துவிடவேண்டும் என்று ஆலோசித்தனர், இதனையே உமறுப்புலவர்

1. சீறா. ஓமறம் ஈமான் கொண்ட படலம் 5

"................நா
மிகைத்த ஹஜ்ஜின் முகம்மதின் வீரத்தைத்
தகைத்தல் வேண்டுவ துண்டெனச் சாற்றுவார்".[1]

என்றும்

"இத்த லத்தினி லிவ்வ ந டத்தினின்
மொய்த்த ஹஜ்ஜின் முகம்மது வஞ்சினைப்
பித்த னென்று பெரும்பெயர் நாட்டுதல்
யுத்தி யென்றித மித்தனர் பொய்மையோர்".[2]

இவ்வாறு வருணித்துள்ளார். அலைகளால் சூழப்பெற்றது இந்த உலகம். இதன் நடுமையமாக அமைந்திருப்பது மக்க மாநகரம். உலகின் அணிகலனாகவும் திலகமாகவும் உயிர் நாடியாகவும் அமைந்துள்ளது மக்கா. இத்தகைய மக்கா விலே ஹஜ்ஜினை நிறைவேற்ற மதீன மாநகரிலிருந்து பயணி கள் வந்திருந்தனர். இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு பாடுகிறார்.

"பாய்திரை பரவை சூழ்ந்த படிக்கணி திலதமாவி
யாயமக் காவின் ஹஜ்ஜி லணிபெற வைம்பத் தாறு
தேயுமா னிடருங் கண்ட திரளொடு மதீன மெனுந்
தூயமா நகரந் தோறும் வந்தனர் துலக்க வன்றே".[3]

நபிகள் பெருமானார் முகம்மது (சல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அருளப்பெற்று பதின்மூன்று ஆண்டுகள் கழிந்த பின்னர் எல்லோரும் ஹஜ்ஜினை நிறைவேற்ற ஒன்று கூடினர் என்பது,

"உயர்புகழ் முகம்மதுக் கும்பர் கோனபிப்
பெயரளித் தாண்டுபன் மூன்று பேர்பெற
நயமுற நடக்குமந் நாளில் ஹஜ்ஜினுக்
கியல்பெற யாவரு மீண்டினாரரோ"[4]

1, 2. சீறா. தீனிலைக் கண்ட படலம் 74, 78
3, 4. சீறா. மதீனத்தார் மான் கொண்டபடலம் 1, 3.

என்றும் பழைய முறைப்படி எல்லோரும் ஹஜ்ஜினை நிறை வேற்றினர் என்பது.

போந்துகஃ பாவினிற் புகுந்து தொன்முறை
யேய்ந்த ஹஜ் ஜெனு நெறி முடித்திட் டாரே'[1]

என்றும், அனைவரும் ஹஜ்ஜினை முறைப்படி நிறைவேற்றி விட்டு அவரவர் பதிகள் நோக்கிச் சென்றனர் என்பது.

"முறைமை யாகிய ஹஜ் ஜினைக் குறைவற
முடித்துப்
புறநிலத்த வரு மவரவர் பதியினிற் போனார்".[2]

என்றும் விவரிக்கப்பட்டுள்ளது.

உம்றாவுக்குப் போன படலத்தில் ஹஜ் பற்றியும் உம்றா பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. 'மக்கத்தி, லோது ஹஜ்ஜுமு றாச்செய்ய வுன்னியே' (2) என்று அவர்களின் எண்ணத்தையும் 'நன்றி சேர்ஹஜ்ஜ செய்திடா திடர்சில நடத்தி' (40) என்று அவர்களுக்கு ஏற்பட்ட தடையையும் 'அரிய ஹஜ்ஜுமு றாச்செய வந்தன மடுத்தே' (41) என்று அவர்களின் உண்மையான குறிக்கோளையும் '......உவந்த ஹஜ்ஜமுறாச் செய்ய' (84) என்று அடுத்த ஆண்டு அனுமதி வழங்கப்படும் என்னும் உறுதியையும்,

"காயத்தி னானம் லீசும் ஹபீபுஹஜ் செய்ய
நீயத்து நினைத்த தன்மை தடையற நீங்க வேண்டித்
தேயத்தோர் புகழ வொட்டை யறுத்துநற்
குறுபான் செய்தே" (88).

என்று தங்களது கடமையை நிறைவேற்ற முடியாமல் போனாலும் தங்களின் நிய்யத்தை, எண்ணத்தை நிறை வேற்றக் குர்பான் கொடுத்தமையையும் உமறுப் புலவர்

1. சீறா. மதீனத்தார் வாய்மை கொடுத்த படலம் 3
2. சீறா. யாத்திரைப் படலம் 16

சிறப்பாக அமைத்துப் பாடியுள்ளார். உம்றா என்னும் அறபுச் சொல் தனிமையாக 71 ஆம் 72 ஆம் செய்யுட்களில் இடம் பெற்றுள்ளது.

இஸ்லாத்தில் விதிக்கப்பட்டுள்ள கட்டாய கொடை அரபியில் 'ஸக்காத்' என வழங்கப்படுகிறது. அதன் மூலக் கருத்து தூய்மைப்படுத்துதல் என்பதாகும். தொழுகையை உறுதியாக்கப் பின்பற்றுங்கள், ஸக்காத் பழக்கத்தைப் வழமையாக்கிக் கொள்ளுங்கள் என்று கூறுகிறது அல் குர் ஆன் (2:43. 110.) இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் ஒன்றான ஸக்காத் முஸ்லிம்களால் பின்பற்ற வேண்டிய தொன்றாகும். திருக்குர் ஆனிலே பெரும்பாலும் தொழுகையும், ஸக்காத்தும் இரட்டைக் கடமைகளாகவே குறிப்பிடப் படுகின்றன. அடுத்தடுத்துச் சீறாப் புராணத்திலும் இம் முறையே பின்பற்றப்படுகிறது.

"......காலமைந்துந் தொழுக வென்றுங்
காதலுடன் ஸக்காத்து..."[1]

தான தருமங்களைக் குறிக்க 'ஸதக்கா' என்னும் அறபுச் சொல் பயன்படுத்தப்படுகின்றது. இச்சொல் இதே கருத்தில் திருக்குர் ஆனிலே (2:254, 271) உபயோகிக்கப்பட்டுள்ளது அச்சொல்லின் நேரடிக் கருத்து 'நன்னெறியில் இருத்தல் என்பதாகும். வேதத்திலே குறிப்பிடப்பட்டுள்ள முறைமைக்கு இணங்க ஐந்து நேரமும் தொழுங்கள்: நல்லவிழுமிய எண்ணத்தோடு ஸதக்கா வழங்குமின் என பாத்திமா நாயகி (றலி) அவர்களின் திருமண விழாவினையொட்டி முறையன் பேரொலி முரசொடு ஒட்டகத்திலிருந்து கடிமுரசறைந்தான் என்பதை,

1. சீறா. ஓமாம் ஈமான் கொண்ட படலம் 5

"சுருதி தேர்தவ றின்றியஞ் சொகுத்தினுந் தொழுமின்
வரிசை நன்னினை வொடும்சதக் காவழங்
கிடுமின்."[1]

என்றும் இமாம் ஹுசைன் (றலி) அவர்கள் பிறந்து ஏழாம் நாள் அவர்களின் தலைமயிரை நீக்கி அதன் நிறைக்குச் சமமாகப் பொன்னை ஸதக்காவாகக் கொடுத்தார்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்பதை,

"தெரித ரத்தின மேழினிற் செம்புவி புரக்கு
கரசர்நாயகர் வகள்மனை யடுத்தரும்
புதல்வன்
கரிய மென்சிர மயிரினைக் களைவித்தவ்
வெடையி
னிரசி தஞ்சதக் காவென வெடுத்தினி
தளித்தார்'.[2]

என்றும் கணக்கற்ற திரவியத்தை சதக்காவாகக் கொடுக்கப் பட்டமையை,

"அலகிலா நிதியந் தனைச்சதக் காவென்
றவரவர்க் களித்தனன் பறித்து."[3]

என்றும் பிறிதொரு சந்தர்ப்பத்தில் சதக்கா கொடுக்கப் பட்டுள்ளமையை,

"ஆலய மறந்த தீனுடை ஹபீபுக்
கன்பொடு முவப்பொடுஞ் சதக்காச்
சாலவு மருளி ... ... ... ... ... ..."[4]

என்றும் வருணிக்கப்பட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

வேளை, நேரம் என்பதனைக் குறிக்க அறபியில் 'வக்த்' என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. இதே கருத்துக் ...ளில் 'ஸா அத்' என்னும் சொல்லும் பயன்படுத்தப்படுகிறது.

1. சீறா. பாத்திமா திருமணப் படலம் 72
2. சீறா. அசனார் பிறந்த படலம் 16
3. 4 சீறா. கருபு வதைப் படலம் 46 52

நேரத்தைக் குறிக்க வக்த் என்னும் சொல் திருக்குர் ஆனிலே (7:187, 15:38) இடம் பெற்றுள்ளது. இச்சொல் சீறாப்புராணத்திலே,

"இற்றைநாட்டொடுத்தைந் தொகுத்தினும்..."[1]

"அஞ்சொகுத்தினும்"[2]

"இந்த, ஒகுத்தினில்"[3]

ஒகுத் எனச் சற்றுத் திரிந்து ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்.

ஸலாத் என்று வழங்கப்படும் தொழுகையை நிறைவேற்ற உளத்தூய்மையும் சரீரசுத்தியும் இன்றியமையாதனவாகும். திருக்குர் ஆனிலும் இது வலியுறுத்தப்படுகின்றது. (5:7, 4:43). தண்ணீர் பெறமுடியாத சந்தர்ப்பங்களில் தூய்மைப்படுத்திக் கொள்ளும் முறைமையும் குறிப்பிடப்படுகின்றது. முன்னது 'வுலு' பின்னது 'தயமும்' என்றும் அறபியில் வழங்கப்படுகிறது. தொகையையும் அதற்கு இன்றியமையாத சரீர சுத்தியையும் நிறைவேற்றும் விதத்தினை விண்ணவர் கோமான் ஜிபுறீல் (அலை) அவர்கள் அண்ணல் நபி (சல்) அவர்களுக்குப் போதித்த நிகழ்ச்சி சீறாப்புராணத்தில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

"பெருகிப் பரந்த புனற்கரையிற் பெரியோன்
றூதை யருகிருத்தி
மருவு மலரு மெனவுலுவின் வகைபுந் தொகையும்
வரவருத்திக்
குரிசி னபியைப் பின்னிறுத்திக் குறித்த
நிலைரண்டிறக்க அத்துப்
பிரிவுற் றொழுவித் திருந்துவிண்ணிற் படர்ந்து
சுவனத் தலத் துறைந்தார்."[4]

1. சீறா. உகுபான் படலம் 10
2. ,, பாத்திமா திருமணப் படலம் 72
3. ,, அபூதல்ஹா விருந்து படலம் 5
4. ,, தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 38

அண்ணல் நபி (சல்) அவர்கள் தாங்கள் கற்றவற்றைத் தங்கள் வாழ்க்கைத் துணைவியார் கதீஜா (றலி) அம்மையார் அவர்களுக்குப் போதித்தார்கள். உலுச் செய்யும் முறைமையையும் தொழுகையை நிறைவேற்றும் விதத்தினையும் நபிகள் பெருமானார் விளக்கியவாறே கதீஜா (றலி) அவர்களும் செய்தார்கள். இந்த விவரம் சீறாப்புராணத்தில் இவ்வாறு அமைந்துள்ளது.

''நரையார் கூந்தற் கதீஜாவை நண்ணி யுலுவும்
வணக்கமுமுன்
முறையா யுரைப்ப வுரைத்தபடி முடித்தார்
கனகக் கொடித்தாயே'' 1

வேதத்திலே கூறப்பட்டுள்ளது என்பதனை விளக்க,

'ஆரணத் துலு' 2

என்றும் அல்லாஹ்வைத் தொழுவதற்காக அவனை நினைத்து சரீர சுத்தி செய்தமையை குறிப்பிட,

''...........பொருவி லானை
நினைத்துலுச் செய்து...........'' 3

என்றும் அந்தகன் ஒருவனுக்கு உலுச் செய்யும்படி பெருமானார் (சல்) அவர்கள் கட்டளை இட்டமை,

''........................................நீ
யொல்லை யிற்சென் றுலுச்செய்து...''. 4

என்றும் இந்தக் கட்டளையைப் பெற்ற அந்த அந்தகன் அவ்வாறே உலுச் செய்தமை,

''..................................அந்தகன்
சிந்தையார மகிழ்ந்துலுச் செய்து...''. 5

1. சீறா தொழுகை வந்த வரலாற்றுப் படலம் 39
2. ,, தீனிலைக் கண்ட படலம் 4
3. ,, தீனிலை கண்ட படலம் 9
4. ,, அந்தகன் படலம் 3
5. ,, அந்தகன் படலம் 5

"செய்யுங் காரிய மீதன்றி யேசெலும்
வைய மீதில் வழக்கொன்று மில்லெனத்
துய்ய சஃது சொலநபி யில்வுரைக்
கைய மில்லையல் லாவரு வீதென்றார்." 1

"............ .......... ............ .........
நீதில்லா முறைப்பொருளாய்த் திகழொளியாப்
நிறைந்த அல்லாச் செகத்தினை மேற்றன்
றாதரா யுமையிருக்க வனுப்பினதும்..........." 2

"வல்லவர் தூதீ ரல்லா மறைமொழிப் படியே
யன்றிக்
கல்லக ஞாலந்தன்னிற் கடிமணம் விரும்பே
னென்றார்." 3

"தேறிய குறானா யத்தின் செய்தியே தென்னி லல்லா
மீறிய அறுஷி லேதான் மிகுமொலி யாக
நின்று........" 4

"அருமறைப் பொருளா மல்லா வருளிய படியே
வந்து
திருமணம் புரிதற் குள்ள சிறப்பெலா மகிழ்ந்து
செய்ய." 5

"அரியவன் றூத ரான அகுமதின் வடிவை நீண்ட
விருவிழி யார நோக்கி யிதயத்தின் மகிழ்ச்சி கூர்ந்து
திருமலர் வதனங் கோட்டிச் செவ்விய நிறை
போர்த்தல்லா." 6

"லொருவனை யெண்ணிக் கற்பி னெல்கியாங்
கொருங்கு நின்றார்." 7

1. சீறா. பனீ குறைலா வதைப் படலம் 35
2. சீறா. லுமாம் ஈமான் கெபண்ட படலம் 5
3. சீறா. செயினபு நாச்சியார் கலியாணம் படலம் 6
4, 5, 6. சீறா. செயினபு நாச்சியார் கலியாணப் படலம் 9, 10, 15
7. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 81

"சொல்லிய விறையா மல்லா தூதரா முகம்ம
தென்றும்."[1]

இனி, சீறாப்புராணத்தில் சிறப்பாக அமைந்துள்ள பாரசீக மொழியிலிருந்து பெறப்பட்ட சொற்களை எடுத்துக் கொள்வோம். தமிழ்ப் பேசும் முஸ்லிம் அல்லாஹ்வை அச்சொல்லைப் பயன்படுத்தாத சந்தர்ப்பங்களில் ஆண்டவன் இறைவன், நாயகன் முதலிய பல சொற்களை உபயோகிப் பர். அவ்வாறே பாரசீக் மொழியில் கடவுளை 'குதா' என்று குறிப்பிடப்படுகிறது. எல்லாம் வல்ல இறைவன் என்னும் பொருளில் பாரசீக மொழியில் 'குதை' என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. பரம்பொருள், சுயம்புவானவன் என்னும் பொருள்களும் தருவதாக இந்த குதா என்னும் பாரசீகச் சொல் அமைந்துள்ளது. உருது மொழியிலும் இந்தச் சொல் இதே கருத்தில் உபயோகிக்கப்படுகிறது. அறபு மொழியில் அல்லாஹ் பாரசீக, உருது மொழிகளில் குதாவாகும் உமறுப்புலவரும் அல்லாஹ்வைக் குறிக்க குதா என்னும் இந்த உபயோகத்தையே தமது சீறாப் புராணத்தில் மேற்கொள்கிறார். சாதாரணமாக நாம் தும் மும் பொழுது பக்கத்திலிருப்பவர்கள் அதற்குப் பதில் சொல்லுவது போல் அல்ஹம்துலில்லா என்று கூறுதல் வேண்டும். முதன் முதலில் ஆதம் (அலை) அவர்களைப் படைத்து உயிர் ஊட்டப்பட்ட பொழுது அவர்கள் தும்மி னார்கள் குதாவாகிய அல்லாஹ் பதில் சொன்னதாக அமைத்து உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

"துண்டத்தி னாவி தோன்றத் தும்மலுந் தோன்றிப்
பின்பு
விண்டுரை பகரு நாவின் மேவியல் ஹம்தை யோதிக்

1. சீறா. தலைமுறைப் படலம் 9

கொண்டபின் பிரத்தி சொன்ன குதாதிரு வசன
நோக்கி
யண்ட நா யகனைப் போற்றி யாதமென் றுரைப்ப
தானார்.''[1]

ஜிபுரீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைப்படி முகம்மது நபி (சல்) அவர்களுக்கு நபிப் பட்டம் அருளப் பட்டமையை அண்ணல் நபி (சல்) அவர்களுக்கும் அறிவித் ததை உமறுப்புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

''மண்டலம் புரக்குஞ் செங்கோல் முகம்மதின்
வதன நோக்கி
விண்டலம் பரவும் வேத நபியென்னும் பட்ட
நும்பாற்
கொண்டலே குதாவின் றீந்தா னெனுமொழி
கூறி''[2]

இங்கே குதா என்னும் அல்லாஹ்வைக் குறிக்க உபயோகிக் கப்பட்டிருப்பதைக் காணலாம். மற்றொரு சந்தர்ப்பத்தில் அல்லாஹ்வின் தனித்தன்மைகள் வருணிக்கப்பட்டுள்ளன. நபிகள் நாயகம் (சல்) அவர்கள் அடிக்கடி அல்லாஹ்வைப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள் என்பதனை வருணிக்க வந்த உமறுப்புலவர் அங்கும் குதா என்னும் பாரசீகச் சொல்லைப் பயன்படுத்துகிறார்.

''ஆதிநா யகனே யழிவிலா தவனே
யளவருந் திடற்கரும் பொருளே
சோதியே யெவையி னுவமையில் லவனே
தொடரின்ப துன்பமற் றவனே
நீதியே குபிரர் தெளிதரு ம்படியா
னினைத்தவை முடித்திடென் றுருகித்

1. சீறா தலைமுறைப் படலம் 10
2. சீறா, நபிப்பட்டம் பெற்ற படலம் 21

கோதர மனமும் வாக்குமொன் றாகிக்
குதாதனை யடிக்கடி புகழ்ந்தார்.'' [1]

குதா என்னும் பாரசீக சொல்,

''குதாதனை வருளினால்..........'' [2]

என்றும்,

''குதாதனை வணங்கி யேந்தி'' [3]

என்றும்,

''.........வேறு படைக்கலங் காண்கி லார்கைக்
கொண்டன ரீத்தம் பாளை யீர்க்கினை குதா தன்
றூதர்''. [4]

என்றும் வந்துள்ளமையைக் காணலாம்.

பாரசீக மொழியிலிருந்து தமிழுக்கு வந்துள்ள ஒரு சொல் தமிழில் 'பருமான்' எனப் பயன்படுகிறது. இச் சொல் கட்டளை என்னும் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களிலே பருமான் என்னும் சொல் தெய்வீகக் கட்டளையைக் குறிப்பிடவே ஆளப்பட்டுள்ளது. ஆங்கில மொழியிலுள்ள (FIRMAN) பெர்மன் என்னும் சொல் பாரசீக மொழியிலிருந்தே பெறப்பட்டுள்ளது. சீறாப் புராணத்தில் உள்ள பருமான் என்னும் பாரசீகச் சொல் லும் அல்லாஹ் தஆலாவிடமிருந்து ஜிப்றயீல் (அலை) அவர் கள் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு கொண்டு வந்த கட்டளைகளையே குறிப்பிடுகின்றது. நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கு நபிப்பட்டம் வழங்கப்பட்டமையையே உமறுப்புலவர் இவ்வாறு வருணிக்க ஆரம்பிக்கிறார்.

1. சீறா, மதியை அழைப்பித்த படலம் 157
2. சீறா. மதியை அழைப்பித்த படலம் 157
3. சீறா. மதீனத்தார் ஈமான் கொண்ட 13
4. சீறா. உகுதுப் படலம் 190

"சோதியா யெவைக்கு முள்ளுறைப்
பொருளாய்த்
தோற்றமு மாற்றமுந் தோன்றா
வாதிதன் பருமான் கொண்டினி தோங்கி
யமரிழிந் தமரக் கரசன்
மேதினி புகுந்து முகம்மது தமக்கு
விளங்கிய நபியெனும் பட்டங்
கோதறக் கொடுப்பத் தீன்பயிர் விளைத்த
கூறெலாம் விரித்தெடுத் துரைப்பாம்"[1]

நபிகள் பெருமான் (சல்) அவர்களுக்கு முதன் முதலில் திருக்குர் ஆன் அருளப்பட்டதிலிருந்து இஸ்லாம் இரகசியமாகவே போதிக்கப்பட்டு வந்தது. பகிங்கரமாக அனைவருக்கும் இஸ்லாத்தைப் போதிக்குமாறு இட்ட அல்லாஹ்வின் கட்டளையை அமரர் கோமான் ஜிபுரயீல் (அலை) அவர்கள் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அறிவித்தமையை உமறுப் புலவர் இவ்வாறு வருணிக்கிறார்:

"சீதவெண் கவிகை நீழ றிருந்திய குரிசி லானோர்
தூதென நபியின் பட்டந் துலங்கிய நான்கா
மாண்டில்
வேதம்நல் வணக்க மியார்க்கும் விரித்துற
விளக்குமென்ன
வாதிதன் பருமான் மேற்கொண் டமரர்கோனுரைத்
துப் போனார்."[2]

மற்றொரு சந்தப்பத்திலும் இவ்வாறே அமைந்துள்ளது. ஜிபுரயீல் (அலை) அவர்கள் இறைவனின் 'கட்டளையைக் கொண்டு ஒரு நொடிப் பொழுதில் வந்தார்கள். வந்ததும் முகம்மது நபி (சல்) அவர்கள் அளவிலா

1. சீறா. நபிப்பட்டம் பெற்ற படலம் 1
2. சீறா. தீனிலை கண்ட படலம் 1

மகிழ்ச்சி அடைந்தார்கள். இஸ்லாமிய போதனைகளை ஏற்காதவர்களான இருளை அகற்றத் தோன்றிய சூரியனாக இருந்த அதே சமயம் அந்த சூரியன் தோன்ற மலர்ந்த தாமரையை ஒத்த முகத்தை உடையவர்களாக அண்ணல் நபி (சல்) அவர்கள் மகிழ்ச்சி அடைந்து விளங்கினார்கள். இச்கருத்துக்களே இங்கு வருணிக்கப்பட்டுள்ளன.

'அமரர்கோ னினைய மாற்ற மாதிதன் பருமான்
மேற்கொண்
டிமைநொடிப் பெழுதிற் றோன்றியியம்பியதிணங்கர
ரான
திமிரவெம் பகைக்குத் தோன்றுந் தினகர னாகப்
பூத்த
கமலவொண் வதனச் செவ்வி முகம்மது களிப்புக்
கொண்டார்''1

இம்மூன்று செய்யுட்களிலும் அல்லாஹ்வின் கட்டளை என்பதனை உறுதிப்படுத்தும் முகமாக 'ஆதிதன் பருமான்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

அறபு மொழியில் உள்ள நபி, றசூல் என்னும் பதங்களுக்குப் பதிலாகப் பாரசீக மொழியிலே 'பயகாம்பா' சொல் பயன்படுத்தப்பட்டு வருகிறது இச்சொல்லும் முஸ்லிம்களின் தமிழ்ப் பேச்சு வழக்கிலும் இலக்கிய வழக்கிலும் ஒரு தனி இடத்தை வகிக்கிறது. சீறாப்புராணத்திலும் பயகாம்பர் என்னும் இந்த பாரசீகச் சொல் ஆளப்பட்டுள்ளது. இந்த பயகாம்பர் என்னும் சொல்லின் ஆட்சி முக்கியமாக ஹிஜுறத்துக் காண்டத்திலேதான் பயன்படுத்தப்பட்டுள்ளதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது எப்பொழுதும் இனிமையான தன்மையையும் ஓதுபவர்களிடையே ஏற்படுத்தும் திருக்குர்ஆன் என்னும் திருமறையாகும். இந்த திருமறையின் பயகாம்பர் என அண்ணல் நபி (சல்) அவர்கள் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளார்கள்.

1. சீறா. ஹபீபு மக்கத்துக்கு வந்த படலம் 76

"பண்டரு மறைப்பய காம்பர் மாமுகங்
கண்டனர் பதத்தினிற்கரங்க டேய்த்தினர்"[1]

உகுதுப் போரின்போது குதாதா (றலி) அவர்களுக்கு அறிவுரை பகர்ந்தார்கள் பயகாம்பர் முகம்மது (சல்) அவர் கள் என்பது இவ்வாறு அமைந்துள்ளது.

"வெற்றி யுணர்ந்தீர் சற்று மறந்தீர் மிகைபாவக்
குற்ற முணர்ந்தீர் தீனிலை முற்றுங் குடிகொண்டீர்
துற்றிய காயம் பீஸபீல் நீருந் துயரெய்தப்
பற்றுதல் வேண்டா மென்றனர் வேதப் பய
காம்பர்."[2]

சுகுறா என்னும் இடத்தை முற்றுகைவிட்டு அங்குள்ளவர் களை தோற்கடித்து வெற்றிவாகை சூடினார்கள். அண்ணல் நபி (சல்) அவர்கள் அந்தக் கோட்டையிலிருந்த பொருள் கள் அத்துணையையும் சிறிதும் மிச்சமின்றி தோழர்களுக்குப் பகிர்ந்து கொடுத்து விட்டார்கள். எல்லோர்பாலும் அன்பு மிக்குடையவராகிய பயகாம்பர் என்று அண்ணல் நபி (சல்) அவர்கள் இவ்வாறு விதந்தோதப்பட்டுள்ளார்கள்

"இஞ்சியினி ருந்தபொரு ளெட்டுணையு மின்றி
நெஞ்சின்மகிழ் வுற்றுமிடி யார்க்குதவி நேச
மிஞ்சுபய காம்பர்மற வேந்தர்படை சூழ
வஞ்சமற வேமதின மாநகரின் வந்தார்".[3]

பயகாம்பர் என்று வழங்கப்பட்ட நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் நித்திரையிலிருந்து விழித்தார்கள் என்பது நயம் பட வருணிக்கப்பட்டுள்ளது. அவர்களுடைய கண்களிலே துயில் படர்ந்திருந்தது. விழிகளோ தாமரை மலரை ஒத்திருந் தன. அம்மட்டன்று. அந்தக் கண்கள் எல்லையற்ற

1. சீறா. மதீனம் புக்க படலம் 28
2. சீறா. உகுதுப் படலம் 167
3. சீறா. சுகுறாப் படலம் 16

அருளுக்கு ஓர் ஒப்பற்ற இருப்பிடமாகத் திகழ்ந்தன. அத் தகைய பிரகாசம் பொருந்தியவர்கள் பயகாம்பர் முகம்மது (சல்) அவர்கள். இச்கருத்துக்களையே உமறுப்புலவர் ஒரு செய்யுளின் இறுதி அடிகள் இரண்டிலும் இவ்வாறு கூறு கிறார்.

"முடிவின்றிய வருட்கோர்மனை யெனுமுண்டக
விழியிற்
படருந்துயி லொழிந்தேயொளிர் பயகாம்பரும்
விழித்தார்." 1

அண்ணல் நபி (சல்) அவர்களிடத்து வந்தமை 'பயகாம் படத்தினிலணுகி' (உயை வந்த படலம் 25) என்றும் புனிதத் தன்மை வாய்ந்தவர்கள் அண்ணல் நபி (சல்) அவர் கள் என்பது 'தூய ராம்பய காம்பர்' (அந்தகன் படலம் 12) என்றும் சத்தியமே உருவாகக் காட்சியளித்தவர்கள் எம்பெரு மானார் (சல்) அவர்கள் என்பது 'உண்மை சேர் பயகாம்பர், (உமுறாவுக்குப் போன படலம் 30) என்றும் ஒரு போதும் கோபம் கொள்ளாதவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் என்பது 'கதமி லாப்பய காம்பர்' (உமுறாவுக்குப் போன படலம் 38) என்றும் விவரிக்கப்பட்டுள்ளது.

முஸ்லிம் பெருவழக்கிலே உள்ள மற்றொரு திசைச் சொல் 'யார்' என்பது. முஸ்லிம்கள் 'யார்' என்னும் இச் சொல்லை ஒரு சிறப்பான கருத்தில் உபயோகிக்கின்றனர். இது பாரசீக மொழியில் உள்ள ஒரு சொல்லாகும். முஸ்லிம் களின் பேச்சு மொழிகளான உருது மொழி முதலியவற்றில் இச்சொல் சர்வசாதாரணமாக பயன்படுத்தப்படுகிறது. முஸ்லிம்கள் இச்சொல்லை சிறப்பாக நான்கு கலிபாக்களைக் குறிக்கப் பயன்படுத்துவர். அபூபக்கர் (றலி) அவர்களையும் உமறு (றலி) அவர்களையும் உதுமான் (றலி) அவர்களையும் அலி (றலி) அவர்களையும் குறிப்பிடவே இச்சொல் பயன் படுத்தப்படுகிறது. நபிகள் பெருமானார் (சல்) அவர்களுக்

1. சீறா. முறைசீக்குப் படலம் 38

குப் பின்னர் இஸ்லாத்தையும், இஸ்லாமிய பேரரசையும் வழி நடத்திய குலபா உறாஷதீன் என்னும் முதல் நான்கு கலீபாக்களையும் குறிப்பதாக இந்த யார் என்னும் பாரசீகச் சொல் பயன்படுத்தப்படுகிறது. இவர்களின் பதவிக்காக நபிகள் நாயகம் (சல்) அவர்களின் தீர்க்க தரிசனத்துக்கு இணங்க நாற்பது ஆண்டுகளே நீடித்திருந்தது. பொதுவாக இந்த யார் என்னும் பாரசீகச் சொல் சீறாப்புராணத்திலே பயன்படுத்தப்படும் பொழுது நான்கு கலீபாக்களான யார்களைக் குறிப்பிடுவதற்கு முன்னர் அண்ணல் நபி (சல்) அவர்கள் குறிப்பிடுவதுண்டு. நபிகள் நாயகம் நான்கு கலீபாக்களும் என்னும் பொருளில்,

"இறைவன் றூதரு மியார்க ணால்வரும்"[1]

என்றும்,

வள்ளனந் நபியு நாலி யார்களு மற்ற ளோரும்"[2]

என்றும்,

மறைநபி முகம்மது மற்ற யார்களும் (சவீக்குப் படலம் 48) என்றும் உமறுப்புலவர் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். நன்மாராயத்தைப் பெற்றவர்கள் நான்கு கலீபாக்களும் என்ற கருத்தில், 'வரத்தினியார்கள்' (முறைசீக்குப் படலம் 7) என்றும் சத்தியமானவற்றையே பேசுவதைத் தம் குறிக்கோளாகக் கொண்டவர்கள், அழகு மிக்கவர்கள் இந்த கலீபாக்கள் என்றும் கருத்துத் தொனிக்க,

"..................எழின்
மிக்க வாய்மை விளங்குமி யார்களும்."[3]

என்றும் சீறாப்புராணத்தில் வருணிக்கப்பட்டுள்ளது. அண்ணல் நபி (சல்) அவர்களைச் சூழ்வர நான்கு கலிபாக்

1. சீறா. சீபுல்பகுறுப் படலம் 1
2. சீறா. பதுறுப் படலம் 2
3. சீறா. பனீகுறைலா வதைப் படலம் 38

களும் ஏனைய அசுகாபிமார்களுமாகிய தோழர்களும் இருந்தார்கள் என்பது.

''அன்னவரம் மொழியுரைக்க நபியிறசூல்
மனத்தறிவா லாய்ந்து பார்த்தே
யுன்னியரு ளுடனெழுந்தி யார்களசு
ஹாபிகளு மொருங்கு சூழ...''[1]

என்றும் உம்றாச் செய்வதற்காக நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மக்க மாநகரத்துக்குச் செல்லக் கருதி ஓர் அசுஹாபித் தோழரையும் அழைத்து வலிமைமிக்குடைய நான்கு கலீபாக்களையும் நெருங்கிய கோபத்தையுடைய போர் வீரர்களான அசுகாபிமார்களையும் உடனே அழைத்து வரும்படி கட்டளை இட்டமை,

''அருளு மேவல்செய் வோரசு ஹாபியை
வருதி சென்று வலிமிகு மியார்களைச்
செருகு வெஞ்சினச் சேனையை கூயிவண்
டருக வென்றுமு கம்மது சாற்றினார்.''[2]

என்றும் குலாபாஉறாஷதீன் என்னும் நான்கு கலீபாக்களும் அழகு மிக்கவர்கள் என்பது,

''ஏர்கு லாவிய யார்களும்''[3]

என்றும் வீரமானது விளங்கும் கூரிய வாளாயுதத்தை யுடைய நான்கு கலீபாக்கள் என்பது,

''..............வீர
மிலங்கிய வடிவாட் செங்கை யார்கள் .........''[4]

என்றும் வருணிக்கப்பட்டுள்ளது.

1. சீறா. பனீ குறைலா வதைப் படலம் 55
2. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 3
3. சீறா. உமுறாவுக்குப் போன படலம் 5
4. சீறா உமுறாவுக்குப் போன படலம் 64

"ஆர்" என்பது தமிழ் இலக்கண மரபுக்கிணங்க மரியாதைப் பன்மை விகுதியாக உபயோகிக்கப்படுகிறது. அடியார் என்பதனை இதற்கு உதாரணமாகக் காட்டலாம். தகப்பனார் என்பது மற்றொரு உதாரணமாகும் அண்ணல் நபி (சல்) அவர்களின் மருகரும் நான்காவது கலிபாவு மாகிய அலி இப்னு அபீதாலிப் (றலி) அவர்கள் பொதுவாக அலியார் என அழைக்கப்படுகிறார். இங்கே அலி என்னும் சொல்லுடன் மரியாதைப் பன்மை விகுதியாகிய ஆர் புணர்ந்துள்ளது என்று கூறுவதை விட கலிபாக்களைக் குறிப் படும் யார் என்னும் பாரசீகச் சொல் சேர்ந்தே அலியார் என வந்துள்ளது எனக் கூறுவது சாலப் பொருத்தமுடைய தெனலாம். நான்கு கலிபாக்களையும் பொதுப்படையாகக் குறித்த யார் என்னும் பாரசீகச் சொல் அலி (றலி) அவர் களைச் சுட்டச் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். உமறுப்புலவரும் அலியார் என்பதை

"ஆமென மகிழ்ச்சி யாகி யகுமது மலியார்
தம்மை
தாமரு ளுடனே கூவி யெழுதெனச் சாற்று
கின்றார்,"

என்று அமைத்துப் பாடியுள்ளார்.

பாரசீக மொழியில் "ஆப்" என்றால் நீர் என்பது பொருள். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங் களிலே ஆப் என்னும் பாரசீகச் சொல் சிறப்பான ஒரு வகை நீரைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளது. மக்க மாநகரிலே கஃபாவுக்கு அணிந்தாயுள்ள ஸம்ஸம் என்னும் புனிதக் கிணற்றின் நீரைக் குறிப்பிடவே ஆப் என்னும் பாரசீகச் சொல் பயன்படுத்தப்படுகிறது. அந்நீர் 'ஆபுஸம் ஸம்' என்றே வழங்கப்படுகிறது. அண்ணல் நபி (சல்) அவர் களின் திருமணத்துக்குச் சற்று முன்னர் ஆபுஸம்ஸம், என்

1. சீறா. உழுறாவுக்குப் போன படலம் 78

னும் ஸம்ஸத்து 'நீரினால் நீராட்டப்பட்டார்கள் என்று வருணிக்கப்பட்டுள்ளது. சிற்ப வல்லுநரால் இயற்றப்பட்ட ஒரு பலகையிலே அண்ணல் நபி (சல்) அவர்கள் அமர்த்தப் பட்டார்களாம். வேதத்தில் வல்லவர்கள் மங்கல வாக்கியங் கள் முழங்கினார்களாம். ஸம்ஸம் கிணற்று நீரைப் பொன்னி னாலான குடத்தில் எடுத்தார்களாம். எடுத்து அண்ணல் நபி (சல்) அவர்களின் தலையில் வார்த்தார்களாம். நீராட்டினார் களாம். பொற்குடத்திலிருந்து தலையில் நீர் வார்க்கப்பட்ட காட்சி சந்திரன் தனது கிரணங்களைப் பொன்னி மாமலை யின் மீது சொரிவதைப் போன்று இருந்ததாம். உமறுப்புல வரின் கற்பனைமிக்க அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள் ளது.

"அற்புதமாய் விண்ணவரும் புகலரின் ஆபுஸம்சத்
தரிய நீரைப்
பொற்குடத்தி லெடுத்தமுதக் கதிர்கிரண மலை
மிசையே பொழிவ போல
சிற்பரியற் றியபலகை நடுவிருத்தி முகம்மதுதஞ்
சிரசின் மீதே
சொற்பழுத்த மறைமுதியோர் மங்கலவாக் கியங்
கறங்கச் சொரிந்தா ரன்றே"[1]

புனித கிணறான ஸம்ஸத்திலிருந்து நீர் தெளிக்கப்பட்டது என்பதைக் குறிப்பிட வந்த உமறுப் புலவர்,

"அருங்கதிர்க் கலசத் தாபுஸம் ஸத்தி னரியநீர்
கரங்கொடு தெளித்தே."[2]

என்று வருணித்துள்ளார். அப்பாஸ் (றலி) அவர்கள் மூதா தையர்களே ஸம்ஸத்தின் நீரை விநியோகிக்கும் பொறுப்பைப் பெற்றவர்களாக இருந்தார்கள். பதுறுப் போர் முடிவுற்ற தும் அண்ணல் நபி (சல்) அவர்களும் அப்பாஸ் (றலி) அவர்களையே அப்பொறுப்பைத் தொடர்ந்து ஏற்று வரும்படியாக நியமித்து அனுப்பினார்கள். இதனை ஏற்ற

1. சீறா. மணம்புரி படலம் 23
2. சீறா. தசைக் கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம் 7

அப்பாஸ் (றலி) அவர்கள் எல்லோரிடமும் கூறிவிட்டு காவலுடைய மக்க மாநகரத்துக்குச் சென்றார்கள் என்பதனையே உமறுப்புலவர் இவ்வாறு வருணிக்கிறார்.

''வரத்திதிற் சிறந்த கருபத்துல் லாவி
னாபுசம் சத்தினீர் வழங்கும்
துரத்தி னுக்குரிய ராதலாற் பிரியாத்
தொன்முறை வருதலா னபிக்கும்
புரத்தினுற் யவர்க்குந் தனித்தனி யுரைத்துப்
புதியவன் றனைப்புகழ்ந் தேத்திக்
கரத்தடக் களிறப் பாசெனு முரவோர்
கடிகொடம் பதியிடை புக்கார்.''[1]

நாள்தோறும் முஸ்லிம்களாகிய எமது காதுகளிலே ஒலித்துக் கொண்டிருப்பது அதான் என்னும் ஓசை. முஸ்லிம்களைத் தொழுகைக்கு அழைக்கவே அதான் தினசரி ஒலிக்கப்படுகிறது. அதனைப் பண்ணோடு ஒலிப்பவரை முஅத்தின் என்பர். ஆனால் முஸ்லிம்களின் சிறப்பாக தமிழ் பேசும் முஸ்லிம்களின் பெருவழக்கிலே அதான் என்னும் அறபுச் சொல் இடம்பெறுவதில்லை. மாறாக அதற்குச் சமமான பாரசீகச் சொல்லான பாங்கு என்பதனையே பெரிதும் உபயோகிப்பர். அதான் ஒலி எழுப்பவரை முஅத்தின் என்று கூறும் அதே வேளையில் அதான் என்பதனை அறபியில் குறிப்பிடாது பாங்கு என பாரசீகத்தில் வழங்குகிறோம். இஸ்லாமிய அடிப்படையில் இலக்கியம் யாத்த கவிஞா களும் இதற்கு விதி விலக்காக அமையவில்லை. அவர்களும் தத்தம் இலக்கியப் படைப்புகளிலே பாங்கு என்னும் பாரசீகச் சொல்லால் அதானை அழைப்பதையே பெரிதும் விரும்பினார்கள் போலும். ஒரு நாளுக்கு ஐந்து முறை முஸ்லிம்களைத் தொழுகைக்கு அழைக்க பாங்கு ஒலி எழுப்பும் முறை புகுத்தப்பட்டது என்பதை உமறுப்புலவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

1. *சீறா.* பதுறுப் படலம் 255

"இற்றைநாட் டொடுத்தைந் தொகுத்தினும்
வாங்கென்
றியற்றிய திருமொழி சிதையா
தூற்றுவ ரெவருங் கொணர்மின் னெனவு
முடையவன் றிருநபி யுரைத்தார்."[1]

பாங்கு என்னும் பாரசீகச் சொல் முஸ்லிம்கள் பெருவழக்கிலே மாற்றமடைந்து வாங்கு என்று பயன்படுவதைக் காணலாம். பாத்திமா (றலி அவர்களின்) புதல்வன் அஸன் (றலி) அவர்கள் பிறந்ததைத் தொடர்ந்து அண்ணல் நபி (சல்) அவர்கள் குழந்தையைக் கையில் எடுத்து வலது பக்கக் காதில் பாங்கினையும் இடது பக்கக் காதில் அதானின் சுருக்கமான இக்காமத்தினையும் ஓதினார்கள் என்பதனை உமறுப் புலவர்:

"தீங்க கற்றிய மகள்மகன் வலத்திருச் செவியின்
வாங்கு ரைத்திடக் காதனிக் காமத்தும் வழங்கி"[2]

என அமைத்துப் பாடியுள்ளார். உகுதுப்போர் முடிவடைந்த பின்னர் அண்ணல் நபி (சல்) அவர்கள் ஒரு தீனவரை அழைத்து பாங்கு கூறும்படி சொன்னார்கள். அப்படியே பாங்கு ஒலிக்கப்பட்டது. இச் செய்தியே இவ்வாறு பாடப் பட்டுள்ளது.

"ஈறி லாதவன் றிருநபி யின்ன மிருந்த
வாறு கண்டொரு தீனவர் தமைவர வழைத்துத்
தேறி யிக்கள நடுநின்று வாங்கினைத் திருந்தக்
கூறு மென்றன ரென்றலும் வாங்கினைக் குறித்தார்."[3]

"உற்ற வாங்கிதங் கேட்டலு மொருதலை யெடுத்துச்
சுற்று நோக்கின கண்டமு சாவெனத் துணிந்து

1. சீறா. உகுபான் படலம் 10
2. சீறா. அசனார் பிறந்த படலம் 14
3. சீறா. உகுதுப் படலம் 266

கொற்ற மேற்கொண்ட தீனரு முகம்மதுங் குறித்து
வெற்றி யாம்படி யெடுத்திடக் கிளர் மண்ணில்
விரைவின்.'' 1

ஒரு நாள் அசறுத் தொழுகைக்குரிய நேரம் வந்தது. அசறு தொழுவதற்காக அங்குள்ளவர்களை இரண்டு பிரிவாகப் பிரித்தார்கள். எல்லோருக்கும் கேட்கக் கூடியதாக பாங்கு சொல்லும்படி கூறினார்கள். இதனையே உமறுப்புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார். இதனை பாங்கு என்றே குறிப்பிடுகிறார். யாப்பமைதி கருதியே இங்கு பாங்கு என்று அச்சொல் உபயோகிக்கப்பட்டிருக்கலாம். இதுதான் அந்தச் செய்யுள்.

''ஆரணப் பொருளை யோர்ந்த அளவினில் அசறு
தோன்றப்
பூரணத் தொழுகை கொண்ட புணர்ப்பொடு
பாங்கெல் லோர்க்கு
நேருற விளங்க வள்ள னின்றறீ னவர்க டம்மைத்
தாரணி யிடத்தி ரண்டு பாகமாய்த் தனிபி
ரித்தார்.'' 2

சீறாப்புராணம் போன்ற இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் இஸ்லாம் மணங் கமழுவதற்குப் பாட்டுடைத் தலைவர்கள் முஸ்லிம் தலைவர்களாக இருப்பதுவோ இஸ்லாத்துடன் நெருங்கிய தொடர்புடைய விஷயங்கள் வருணிககப்படுவதுவோ மாத்திரம் காரணமன்று. இஸ்லாமிய மொழியான அறபுச் சொற்களும் இஸ்லாத்தின் ஆரம்ப காலத்திலிருந்தே அறபு மொழியுடன் தொடர் பூண்டு வளர்ந்தோங்கிய பாரசீக மொழிச் சொற்களும் சீறாப்புராணம் போன்ற இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களுக்குப் புது மெருகு கூட்டுவதோடு

1. சீறா. உகுதுப் படலம் 267
2. சீறா. தாத்துற்றஹாக்குப் படலம் 22

அவை இஸ்லாமிய நறுமணங் கமழுவனவாகத் திகழச் செய்ய ஏதுவாக அமைந்துள்ளன எனக் கூறின் அது மிகை யாகாது. அரபு மொழியிலிருந்து பெறப்பட்ட திசைச் சொற்கள் போதிய அளவு இருந்த போதிலும் அறபு மொழிக்கும் பாரசீக மொழிக்கும் பண்டு தொட்டு இருந்து வந்த தொடர்பு காரணமாகவே அதே கருத்து டைய அறபுச் சொற்களை உபயோக்கும் அதே சமயத் தில் பாரசீக மொழியிலிருந்தும் பெறப்பட்ட திசைச் சொற்களை அவற்றிற்குப் பிரதியீடாக உபயோகிக்க உமறுப் புலவர் போன்ற காப்பிய ஆசிரியர்கள் அறபு மொழியையும் பாரசீக மொழியையும் ஓரளவு அறிந்திருந்தனர் என்னும் முடிவுக்கு வரக்கூடியதாக இருக்கிறது. இஸ்லாம் எங் கெங்கு பரவியதோ அங்கங்கு எல்லாம் பேசப்படும் மொழிகளிலே அறபு, பாரசீக மொழிச் சொற்கள் திசைச் சொற்களாக இடம் பெற்றிருப்பது அந்தந்த மொழி களுக்கெல்லாம் பொதுப்படையாக அமைந்துள்ள சிறப் பியல்பு என்று தயங்காமல் கூறலாம்.

அறபு நாட்டிலும் அயல் நாடுகளிலும் உள்ள இடப் பெயர்களும்சீறாப்புராணப் பாட்டுடைத்தலைவரின் பெயரும் அவர்களுடைய உற்றார், உறவினர், தோழர், பகைவர் முதலியோரின் பெயர்களும் அங்கு வாழ்ந்த கோத்திரங் களினதும் இனத்தவர்களினதும் பெயர்களும் கணிசமான அளவு சீறாப்புராணத்தில் இடம் பெற்றுள்ளன. இவற்றை யெல்லாம் விரிவஞ்சி விடுத்தனம். அறபு மொழியிலே வழங் கப்படும் இஸ்லாமிய மாதங்கள் பல சீறாப்புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றை மாத்திரம் இங்கு வகைப்படுத்தி உள்ளேன்.

முஹறம் — இது இஸ்லாமிய ஆண்டின் முதலாவது மாதம். புனிதமானது என்பதையும் இச் சொல் குறிக்கின்றது. அச்சொல்லின் நேரடிக் கருத்துத் தடுக்கப்பட்டவை என்ப

தாகும். மாதம் என்ற பொருளிலே இச் சொல் இடம் பெற்றுள்ளது. 'ரெடமே ழினிற்றின முஹர்ர மாத்ஸதயில்' (ஏட்டேழு தித் தீர்ந்த படலம் 1).

றபீஉல் அவ்வல் — இஸ்லாமிய ஆண்டிலே மூன்றாவது மாதம். இளவேனிற் பருவத்தின் மாதம் என்பது இந்த அறபுச் சொற்றொடரின் பொருளாகும், 'அம்மதி' மாசத்தொகையினில் றபீவுல்லவலிற், பன்னிரண்டாந் தேதி (நபியவதாரப் படலம் 89), 'வையக மநிக்கு முகம் மதின் வயது நாற்பதில் றபீயுலவ் வலினிற் (நபிப்பட்டம் பெற்ற படலம் 1) 'வரிசை நேர் றபீவு லவ்வல் மாதமீ ரைந்து நாளில் (நபிப் பட்டம் பெற்ற படலம் 16) வருமுறை பதினான்காண்டின் மாதத்தொகையினில் றபீவுலவ் வலினில் (யாத்திரைப் படலம் 65), 'றபீயு லவ்வலின்' (மதீனம் புக்கப் படலம் 26).

றஜப் — இது இஸ்லாமிய ஆண்டின் ஏழாவது மாதம். கண்ணியம் மிக்க மாதம் என்பது இதன் பொருள். இஸ்லாத்துக்குமுன்னர் கண்ணியம் மிக்கதாகக் கருதப்பட்டது என்று கூறுவர். 'திங்களா மிறஜபு முதற்றே வெள்ளியிரா' (நபியவதாரப் படலம் 16) வருட மைந்தென வரவரு மிறஜபு மாதம் (ஈமான் கொண்டவர்கள் ஹபஷா ராச்சியத்துக்குப் போந்த படலம் 7), 'இவ் மிறஜபு மாதத்தையில்' (உகுபான் படலம் 9).

ஷபான் — இஸ்லாமிய ஆண்டின் எட்டாம் மாதம். விட்டுப்பிரியும் மாதம் என்பது இச்சொல் லின் பொருள், அறபிகள் நீர் தேடிப் பிரியும்

மாதம் என்று கூறுவர். 'திகழ்சகு பானென் விளங்குந் திங்களில்' (கருபத்துல்லாவை நோக்கித் தொழுத படலம் 3), பின்னு மவ் வருட்டஞ் சகு பானெனப் பேச, மன்ன திங்களில்' (உசைனார் பிறந்த படலம் 3).

றமளான் — இஸ்லாமிய ஆண்டின் ஒன்பதாவது மாதம். முஸ்லிம்கள் நோன்பு நோற்கும் இச்சொல் லின் பொருள் சுட்டெரிப்பது என்பதாகும். 'பெருகதி றமளானென்னப் பெருகிய நோன்பு தன்னை (பதுறுப் படலம் 256). இறம ளான்பதி னைந்தினில் வெள்ளியிரவில் (அசனார் பிறந்த படலம் 11).

ஷவ்வால் — இஸ்லாமிய ஆண்டின் பத்தாவது மாதம். இதன் பொருள் வலை உயர்த்துதல் என்பர். பேதமற்ற ஷவ் வாலெண வுரைத்திடும் பெரிய, மாதம்... (உகுதுப் படலம் 77).

துல்கஃதா — இஸ்லாமிய ஆண்டின் 11-வது மாதம். இதன் பொருள் போர் நிறுத்தம் என்பதா கும். பண்டைய அறபு மக்கள் போர் தவிர்த்த மாதம் ஆகையால் அப்பெயர் பெற்றதென்பர், சாற்று துல்சயிதாவெனு, மேற்ற மாதமா மேல்வையில்' (பதுறு சுகுறாப் படலம் 1).

# சீறாப்புராணமும் சின்னச்சீறாவும்

நாஞ்சில் நன்மொழியோன், M A.,

புலவரேறு உமறு இயற்கை யெய்தியதால் திடுமென ஹிஜ்ரத்துக் காண்டம் உரனிக் கூட்டத்தார் படலத்தோடு சீறாப்புராணம் நின்றதா?

சுவடிகள் அல்லது ஏட்டுப்பிரதிகள் ஏதும் கிடைக்கப் பெறவில்லையா?

முற்றமுழுதும் இல்லாது சீறாப்புராணம் கீழக்கரையில் வள்ளல் அபுல்காசிம் இல்லத்தின் முன் அரங்கேறியதா?

புலவர் உமறுவின் மகனார் வாவணப் புலவரோ, அவர் மகனார் களஞ்சியப் புலவரோ சீறாப்புராணத்தினை ஏன் முற்றுப் பெறச் செய்யவில்லை?

இந்த வினாக்கள் ஆய்வாளர்களிடையே இன்றும் விடை காண இயலாமல் நின்று நிலவுகின்றன.

"சீறா குறையாக நிற்றலால்தான் சின்னச்சீறா தோன்றலாயிற்று. 'பனீ அகமது மரைக்காயர்' என்ற சீரியர் சீறாவில் விடப்பட்ட பகுதிகளான பெருமானாரது அரசு நிலை தொடங்கி வபாத்து முதலாம் பகுதிகளை 39 படலங்களில் 1829 திருவிருத்தங்களில் பாடினார். இப் பெருந்தகையின் முயற்சியினால் சீறாப்புராணம் முற்றுப்பெற்ற காவியமாயிற்று. இதனையும் இணைத்துப் பார்க்கையில், சீறா, நாற்பயனும் அடங்கிய திறம்பெறும் பெருங்காப்பியமாகத் திகழ்கிறது. ஆதலால் காப்பிய இலக்கணப்படியும், தமிழ் இலக்கிய மறபின்வாறும் கற்றோர் அனைவரும் இம்முடிவை ஏற்பர் என்பதில் ஐயமில்லை."[1]

1. இலங்கை அ. ஸ. அப்துஸ்ஸமது: 'சீறாப்புராணம் நாற்பயனும் பயக்கும் பெருங்காப்பியமே'...கட்டுரை, [மணிவிளக்கு-ஜூன் 1972]

உமறுவின் முற்றுப்பெறா சீறாப் புராணக் காப்பியத்தின் இணைப்பு நிறைவுக் காப்பியம் பனீ அகமது மரைக்காயரின் சின்னச்சீறா. சீறாப்புராணம் அறம், பொருள், இன்பம், வீடு, எனும் நாற்பயனும் பகரும் முழுமைக் காப்பியமாக நிறைவு பெறுவது சின்னச்சீறாவும் இணைந்தே என்பது கருதத்தக்கது. எனவே, இஃது இணைக்காப்பியம்; பிணைத்து நிற்கின்ற பிணைப்புக் காப்பியம்.

சிந்தையள்ளும் சீறாவினை உமறுப்புலவர், ''காண்டமோர் மூன்றெனக் கணித்தனர் மூன்றாம் காண்டச் சரிதம் கடைவறா முற்றாக் குறையை அறிந்து, அக்குறை தவிர்த்திடவே ......பண்புறு குலத்தில் .........தேங்கமழ்ச் சோலைத் திருநகர்க் காயலம்பதியில்......வண்பனீ அகமது மரைக்காயர் என்னும் ஒண்பெயர் உடைய உயர்மொழிப் புலவர்''[1] [ஹிஜ்ரி 1145இல் (கி பி. 1782] சின்னச்சீறாவினை அரங்கேற்றினார்.[2]

சீறாப்புராணத்தினை முடித்தற் பொருட்டு முதன் முதலில் புலவர் பனீ அகமதுவின் கருத்திற்பட்டு, விரைந்து எழுந்தது சின்னச்சீறா எனலாம். மேலும், (அ) புதுகுஷ்ஷாமின் முதற்காண்டம் [புலவர் நாயகம்] (ஆ) சீறா இரண்டாப் வால்யூம் [மொஹ்னா முஹப்மது காதி] என் எழுந்தன என்பதும் ஒருவகை ஆய்வுப் பொருளே, எனவே சின்னச் சீறாவுடன் மேற்சொன்ன இரண்டும் ஒப்பாய்வுக்குரிய தாகும்.

உமறுப்புலவர் சீறாச்செல்வத்தினை 5027 பாக்களில் 12 படலங்களாகப் பாடியுள்ளார். புலவர் பனீ, ஹிஜ்ரத்துக் காண்டத்தின் தொடராக 39 படலங்களை 1329 பாக்களில் பாடி முடித்துள்ளார். இருவரும் விருத்தப் பாக்களாகவே பாடி உள்ளனர் உமறுப்புலவர் விட்ட குறையினை பனீ

1. சின்னச்சீறா முதற்பதிப்பின் பாயிரம்; 69 முதல் 89 வரிகள்
2. சின்னச்சீறா பாடல் எண் ஏழு.

தொட்டுத் துவக்கி நிறைவு செய்கிறார். இதில் ஒப்பு உறழ்வுக்கு அதிக இடமில்லை என்றே கொள்ளல் வேண்டும். ஏனெனில் சின்னச்சீறா தனிக் காப்பியமல்ல. காப்பியத்தை நிறைவுபடுத்த—முற்றுப்பெறச் செய்ய வந்த ஓர் ஒட்டுத் துணைக் காப்பியம்.

சீறாப்புராணம் நின்ற பகுதிக்குப் பின்னர்தான் பெருமானாரின் முழுமைபெற்ற வாழ்வுப் பகுதி.-சோதனைகளுக்கிடையிலும்-சாதனை பல புரிந்து-மக்களுக்குப் போதனை புகட்டிய புகழார் புனித வாழ்வுப் பகுதி அமைந்துள்ளது. எனவே அப்பகுதிகள் காவியத்தில் இடம் பெறுகையில் பல ஆயிரக்கணக்கான பாடல்களாக விரிவு பெற வகையுண்டு. ஆனால் புலவர் பனீயோ, நபி அவர்களின் வாழ்வை விரைந்து பாடி முடித்திடவேண்டும் எனும் வேணவா-உணர்ச்சி உந்தலின் வெளிப்படை, அப்படலங்களின் போக்கு ஒருவாறு காட்டும். அதுமட்டுமின்றி, சின்னச்சீறாவில் விடுபட்ட சில செய்திகளைக் கொண்டு 'சீறா இரண்டாம் வால்யூம்' பிறிதொரு சான்றாகும். அந்த விரைவிலும் 1829 பாக்களில் நிறைவு செய்த போதிலும், காப்பிய இணைப்புக்கு எல்லா வகையிலும் பொருத்தமுறப் பாடும் பெருமை சேர்த்துள்ளார்.

உமறுப்புலவரை அடியொற்றியே சின்னச் சீறாவை அணிபெறப் பாடியுள்ளார். பனீ, சீறாக்காப்பியத்தின் மூழ்கித் திளைத்த இவர், பெருமானாரின் வரலாற்றுச் செய்திகளை உமறுவைப் போன்றே சிறப்புறப்பெய்துள்ளார், போர்ப் படலங்களைக்கூட அவ்வாறே பாடும். வல்லண்மையைக் காணலாம். எனினும் உமறுவின் போர்ப்படலமும் பனீ யின் போர்ப்படலமும் ஒப்பு உறழ்வுக்கான தனிப் பொருளாக அமையும். உமறுவின் சாயலும், தாக்கங்களும் சின்னச்சீறாவில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. இதனுள் காணப் பெறும் கற்பனைகள், வருணனைகள், அலங்கார

வளைவுகள், இயற்கை எழில், யாவும் தமிழகச் சூழலிலேயே பிரப்படுகின்றன.

புலவர் பனீ, சின்னச்சீறாவினை "தீன் நபி இறசூல் சீறாச் சரிதையில் சிறிது சொல்வோம்" என ஆரம்பிக்கின்றார். இறுதியில் "தூய செந்தமிழ்"—"கோவை" என்று புலவர் கூறும் திறன் ஓர்ந்துணரத்தக்கது. ஆம்! உமறுவின் சீறாக் கோவையாக ஹிஜ்ரத்துக் காண்டத்தின் தொடராக உறனிக் கூட்டத்தார் படலத்தின் கோர்வையாக சின்னச்சீறா பாடியளிக்கப் பெற்றதன்றோ! ஹிஜ்ரத்துக் காண்டத்தின் தொடர் இணைப்பாகப் பாடிய சின்னச் சீறாவினை இறசூல் காதை" [7, 12]; "நபி இறசூல் காதை" [13] "இறசூல் புகழ்" [14] என பனீ அகமது மரைக்காயர் பகர்கிறார்.

சின்னச்சீறாவை முதன் முதலில் பதிப்பித்தவர் இலங்கை யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த 'உதுமான் லெப்பை என்பவரின் புதல்வர் பக்கீர் முகியித்தீன் என்பவர். இவரே நூற்பதிப்பு துறையின் முன்னோடியாவர்.[1] இஸ்லாமிய இலக்கிய ஏட்டுப் பிரதிகளைத் தேடி, அவற்றைப பரிசோதித்து, முதன் முதலில் வெளியிட்டவர், நூற்பதிப்புத் துறையில், சி. வை. தாமோதரம் பிள்ளை, ஆறுமுக நாவலர், டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் போன்றோருக்கு முற்பட்டவருமாவார்.

உமறுப்புலவர்-தம் கொடை நாயகரான வள்ளல் அபுல் காசிம் மரைக்காயருக்கு நன்றி பாராட்டும் தன்மையினை நாட்டுப் படலம் [41] நீனிலைக் கண்ட படலம் [110]

1. (1) கலாநிதி அல்ஹாஜ் ம மு. உவைஸ்"முஸ்லிம் தமிழ்க் காப்பியங்கள்".
   (2) இலங்கை S. M. கமாலுதீன் 'இலங்கை முஸ்லிம்களின் இலக்கிய மரபு'

போன்றே ஆங்காங்கே 22 பாடல்களில் காணலாம். இதனை போலவே, பனீ அகமதுவும் தம் கொடை நாயகரான வள்ளல் லப்பை நயினாரை 451, 891, 1346, 1036, 1719 போன்ற இடங்களில் போற்றுவதைக் காணலாம்.

சீறாவின் கடவுள் வாழ்த்து, முதன்மையான பாடலான "திருவினும் திருவாய்" போன்றே புகழ்மிகு கருத்துச் செறிவுடைய பனீயின் காப்புப் பாடல் "உண்மையாய்" எனத் தொடங்கும் பாடல் குறிப்பிடத்தக்கது.

உமறுப்புலவர் கடவுள் வாழ்த்தில், "செந்தமிழ்ப் புலவர்கள் முன் தாம் கவிபாடுவது புயல்காற்றுக்கெதிராக, ஓர் சிற்றெறும்பு மூச்சு விடுவது போலவும், இடியோசைக் கெதிரே, கையால் நொடியோசை செய்வது போலவும் [19, 20] உள்ளது என்று அவையடச்கம் பாடுகிறார். பனீ, தன் அவையடக்கத்தினை வச்சிரமலை முன் மண்திடர் பேரன்றும் பாம்பின் இரத்தின மணி முன் குன்றிமணி [8] போன்றும் என்று பாடுவதுடன் "தன்னை 'பேதை' அறிவினன்" என்றும் அடக்கமாகக் குறிப்பிடுகின்றார்.

உமறு, பதுறுப் படலத்தில் பல்வேறு வகை முழக்கக் கருவிகளை ஒரே பாடலில்,

'முரசு துந்துமி திண்டிமம் முருடு மல்லரி
பெரிய காகள தவுரி பூரிகை தவில்பேரி'

என்று பாடுகிறார். பனீயும் பல்வேறு கருவிகளை—சிலவற்றை புதிதாகச் சேர்த்தும் ஒரே பாடலில்,

"பேரி முரசு தடாரிபம்மை
பீலி முழவு முருடு தக்கை
தூரி அந்த ணம்த தணி
துந்துமி தீண்டி மம் பதலை
தாரை நவுரி காகளம்வெண்
சங்கமம் இரலை சிகண்டி சின்னம்

வாரி இடங்கள் செவிபடு
மழையின் உருமேறு எனமுழங்க'' [313]

எனப் பாடுகிறார், ஈண்டு, குஞ்சுமூசுப்புலவர், சைபிதத்துப் படைப்போரில் இவ்வாறு பலவகைக் கருவிகளைப் பாடுவது ஒப்பு நோக்கத்தக்கது. [1]

நபிகள் நாயகத்தை, புலவர் பனீ, ''தீன்பயிர் விளைத்துப் புன் குபிர் களைந்து, விரித்தசீர் இறசூலுல்லா'' [16] என்கிறார். இவ்வணிமணித் தொடரை உமறுவின் 'நபியவதாரப் படலத்'திலிருந்து பெற்றிருக்க வேண்டும் என்று கூறத் தோன்றுகிறது. சீறா 'குபிரின் குல மறுத்து நெறி விளக்க' [19] 'தீனெனும் பயிர்க்கோர் செழுமழை' [92] போன்ற தொடர்களைக் குறிப்பிட்டுக் கூறலாம் இவ்வாறே உமறுவின். 'துறந்தவர் இதய ஆசனத்து' என்னும் அருமைத் தொடர், புலவர் பனீயின, [34] ஆம் பாடலில் அப்படியே இடம் பெறுகின்றது.

சீறாப்புராணத்தில் 'அந்தகண் படல'த்தில் கடுநோய் வாய்ப்பட்ட ஒருவன், பெருமானாருக்குத் தூது அனுப்ப, நாயகம் அற்ப மண்ணை அள்ளி, உமிழ்ந்து கொடுத்து அனுப்ப, 'உயிர் தரும் மருந்'தென அது உதவிய நிகழ்ச்சியினையும், 'விடமீட்ட படலத்தில் அபூபக்கர் (றலி) அவர்களுக்கு பாந்தளின்விடம் அகற்றும் பொருட்டு கடிவாயில் பெருமானார் தம் உமிழ்நீர் இட்ட நிகழ்வும், 'நதி கடந்த படலம்', 'பாந்தள் வசனித்த படலம்'; 'புலி வசனித்த படலம்', 'மானுககுப் பிணைநின்ற படலம்', 'இவற்றை உள்வாங்கி மன துட்டிகொண்டு, சின்னச்சீறாவில், ஆங்காங்கே அருந்தொடர்களாக, 'மருந்து என உமிழ்நீரால்

1. ''முரலி துந்துமி திமிலை பம்பைகள் முருடு திண்டியம் மத்தளம்
குரைசெய் பூரிகை நவுரி காகளம் கொம்புமோ கர வீணைகன்
பெருவனப் பறை சின்னமுத்துடி பேரிகின்னரமும் தவில்
அரவ மிஞ் சிய கடல் அமைந்திட ஆர்த்தடர்ந்தன் சேனையே''

நோய் மாற்றினார்' (153) 'நதியின் மான்பிறகு எழுந்த அகமது (1248) 'கானில் பாம்பொடும் உரைத்த வள்ளல் (1455) 'வனத்தில் புலியும் மானினமும், வந்து பணியும் நபி' (1716) எனபனவாக ஒளிர்கின்றன.

சீறாப்புராணத்தில் உமறுப்புலவர் கடிதம் என்பதற்கு பத்திரம், பாசுரம், ஓலை என்ற சொற்களைக் கையாண்டுள்ளார். புலவர் பனீயோ காகிதம், பத்திரம், திருமுகம், ஓலை நிருபம், கத் (இந்தி) பாசுர நிருபம், முடங்கல், பாசுரம் விண்ணப்பம் என்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

சின்னச்சீறா, ஒன்பது கொற்றவர்கட்கு பெருமானார் அரசு நிலையில் தீட்டும் பத்திரங்களை [பாடல் 17] ஒவ்வொரு படலங்களிலும் விடுக்குமாறு ஆரம்பிக்கின்றது. இறக்கிமாத் தகிய்யத்து, அபுறேசு, நஜாசாராஜா முகவ்விக்கீசி ராஜா, புறுகாவூர் ஆரிதுராஜா, அவுதாராஜ, உம்மான் கலந்தா. முந்திறி ராஜா, ஏமன் ராஜா ஆகிய ஒன்பது மன்னவர்க்கும் பெருமானார் எழுதிய மடலும், அவற்றின் விவரங்களும் இப்படலங்களில் கூறப்படுகின்றது, அவ்வொன்பது மன்னர்களின் பெயர்களைக் கொண்டே படலங்களின் தலைப்பு இலங்குகிறது. பின்னர் அவற்றினை விரித்து இத்தகைய நிருபம தீட்டி ஒன்பது மன்னர்க்கு' [-31] என முடிக்கும் திறன் அறிந்துணரத் தக்கது.

## சின்னச்சீறா பகரும் செய்திகளுள் சில

உமறுவின் சீறாவில் பெருமானாரின் அற்புதங்கள் அழகுறப் பேசப்படுவது போன்றே சின்னச்சீறாவிலும், பெருமானார் அற்புதங்கள் ஆங்காங்கே பேசப்படுகின்றன. அவற்றுள் சில......

(அ) குபலின் புத்துகானைப் பேச வைத்த அற்புதம் [224, 225, 226]

(ஆ) வேங்கை அலியின் இருகண்வலி நோவு அகல. பெருமானார் அமுத வாயின் நீர் தெறிப்ப உமிழ்ந்தார்.

அக்கணத்தே நோவு அகன்று, வாழ்நாள் முழுவதும் கண் நோவு இன்றி இருந்தது, [305]

(இ)சுல்லாம் என்னும் எகூதியின் மனைவி செயினம்பு என்னும் மடவாள் மறிஅறுத்து அதில் விடந்தடவி நெய்யில் முறுகப் பொரித்து பாத்திரத்தில் வைத்து மூடிக் கரத்து ஏந்தி, பெருமானார் முன் படைக்க, அதனைக் கருணை நபி உண்ணத் தொடங்குகையில்,

"நல்லா பம்சேர் துறக்கமனை
நாப்பண் சுடரே புவிக்கரசே
கல்லாம் என்ப வன்மணந்த
தொகை செயினம்பு அவள் உம்மைக்
கொல்லாம் என்னும் உள்ளக்குறிப்பில்
கொண்டு கரிய விடம் அதனை
பல்லா கிரியின் உடன்சேர்த்துப்
படைத்தாள் என்றன் பால்..." [351]

என அது உரைத்தது. இருந்தும், 'சிறியார் செய்த தீவினை யைப் பொறுப்பார் பெரியோர்' [355] என்பதுபோல பெரு மானார் அவளை மன்னித்தார்.

## திருமணச் செய்திகள்

பெருங்காப்பிய இலக்கணம் கூறும் 'தண்டியலங்காரம்' நன் மணம்புரிதல் என்ற கூறுபாட்டைக் குறிப்பிடும். அவ் வழியில் உமறுப்புலவர் மணம்புரி படலம், (நாயகம்-கதீஜா நாயகி) பாத்திமா திருமணப்படலம், (நாயகத்திருமகள்-அலியார்) செயினபு நாச்சியார் கலியாணப் படலம் (நாய கம்-செயினபு நாச்சியார்) என்ற மூன்றினை அமைத்துள் ளார்.

மணம்புரி படலத்திற்கும் செயினபு நாச்சியார் படலத் திற்கும் இடையில் நாயகம் செய்து கொண்ட ஐந்து மணம் புரி நிகழ்ச்சிகள் வருகின்றன. அதனை உமறு, பொருந்து மாரமுதை யபுஷாவெனும் பூவையை மணந்த செய்தி

அசனார் பிறந்த படலம் பாடல் 3, 4-லும் ''எழில் செயினை பைப் பொறைச் செழுமழுதை' இல்லக்கிழத்தியாக்கிய செய்தி அதே படலம் பாடல் 8-லும். ''பேறினால் வரும் பேதையர் உம்முசல்மாவைப்'' பெருந்துணையாக்கிய செய்தி உசைனார் பிறந்த படலத்திலும், 'திருவும் குணநலனும் பெறு செயலும் உருவந்த பொறை நிறையு சுவைறா (சுவை ரியா)'' என்ற மானைச் சில பாடங்களில் வருணித்து இறுதி யில் மனைவியாக்கினாரே' என்று முறைசீக்குப் படலத்திலும் பாடிக்கொண்டே வந்தும் ''செம்மையும் அறிவுமிக்க ஆயிஷா என்னும் செல்வி'' மணந்த செய்தியை தனியே குறிப்பிடாது, காட்டிச் செல்கின்றார்.

சின்னச்சீறாவில் பெருமானாரின் திருமணச் செய்திகளை (i) மன்னர் முகௌகிஸ் அனுப்பிய மாரியகாப்தி'யை மணந்த செய்தியை படலம் ஐந்திலும், (ii) போர்க்கைதி 'ஸபிய்யா' என்னும் யூதப் பெண்ணை மகர் ஆய்முடித்த செய்தியினை கைபர் படலத்திலும் [365-371] பாடுகின்றார். இதே நிகழ்ச்சியில் பிறிதொரு நுட்பமான செய்தியும் பாடல் 371 முதல் 375 வரை தருகிறார். 'நங்கை ஸபிய்யா வின் கமலக்கண்ணின் ஒருபால் பசந்த தழும்பு இருக்கக் கண்டு, இஃது என்னவென நாயகம் கேட்க 'கினானாபின் ஹகீக் என்பவருக்குத் தன் தாய்தந்தையார் இன்பத் துணைவி யாக்கிய அன்று இரவு தான். 'வானில் எழுந்த வெண்மதி என்மடி மீது இருந்து விளையாடக் கண்டதை,

''நிரைத்த நிலாவெண் மணித்தசும்பில்
நீர்கான் றொழுகும் உவாமதியம்
தரித்த சுருங்கை தனில் உரிஞ்சி
தவழும் மாட மதீனாவில்
கரைத்த மதமா முனைர்முடி
கவிழ்த்த பதத்தார் நபிமகுமூது
இரைத்த வரிவண்டு உறங்கும் மலர்
மாலை இடுவர் அவளுக்கு...... (37.)

என மறை மூன்று உணர்ந்து தேர்ந்த எகூதிப் பாதிரி விளக்கம் தந்தார். 'சொற்ற கனாவின் பலன் கேட்டுத் துணைக கண் சேப்பக் கற்ற மறைதேர் முகம்மது மேல் காமுற்ற தனால் இக்கனவு இன்று உற்றது. அதுதான் இத்தழும்பு' என்றாள் உடனே கினானை வெறுத்து இற்றை நாள் வரைக் கம் உமைநாடி இருந்தேன்' என விளக்கினாள். வண்மையும் நலனும், கற்பும் வாய்மையும் திரண்டு ஒன்றாகப் பெண்மையும் குறித்த மைமூன் எனும் மயிலை மணந்த செய்தி பாடல் 522, 523 இரண்டிலும் வருகிறது.

## சில செய்திகளின் சுருக்கம்

(i) அலியினைக் கூறும் பொழுதெல்லாம் 'அலிபுலி' என்றே பல இடங்களில் குறிப்பிடுவதைக் காணலாம்.

(ii) அமரர்கோன் ஜிபுறயீலை 'வானவர்க்கு அரசசெனு மணிநல் இழை திகழ் புயத்து ஜிபுறயீல்' (1621) என்றும் 'மரகதம் வைரம் அவிரு மணிப் பொன்சிறை ஜிபுறயீல்' (1738) என்றும் கூறுவதுடன், உமறுப்புலவர் காட்டும் ஜிபுறயீலுடன் ஒப்பு நோக்கி ஆயத்தக்கது.

(iii) 'இசுறாயீல் யார்? என்ற வினாவின் விடையை விரிக்கின்ற விதம் காண்போம் 'ஊண் அமர் எடலின் ஆவி உணும் மலக்கு'' (1696) காட்டுகிறது.

(iv) 'எவருக்கும் மவுத்து (மரணம்) தட்டும் சூக்ஷும் இல்லை' (1639) எனும் உலகியல் இயற்கை நியதி உரைக்கின்றது.

(v) தொழும் முறையினை, 'கருதியின் முறை வழாமல் தொழுதனர்' (1612) என்று காட்டுகின்றது.

(vi) அபூபக்கர் சித்தீக் ஹஜ்ஜிற்கும் போந்த படலத்தில் ஹஜ் கடமைகளாற்றுவதை, புண்ணிய தலத்தில் பண்ணும் நற்கருமங்களை—சபா மர்வா மலை (1535) ஹரம் (1537) தவாபு அறபா மலை(1538) கற்கள் எறிதல் (1547)

ஆடு அறுத்துப் புல் ஈதல் (1547) கஃபத்துல்லாவை ஏழு முறை சுற்றிப் பணிதல் (1548) என ஒவ்வொன்றாகக் குறிப்பிடுகிறது.

(viii) நபியுல்லா 366 புத்து—விக்கிரகங்களைஉடைத்து எறிந்ததனை (1050) கூறுகிறது.

(viii) 'பறா அத்' என்னும் சூறத் இறங்கியதை (1379, 1330) தருகிறது.

(ix) 'கற்பூர தீபம் ஏற்றல்' [1278] குப்பங்கள் எடுத்தல் [1279] குரவைகள் [1284] ஆகியவற்றையும் காட்டுகிறது.

(x) பெருமானார் வபாத்தான பொழுது, 'கதுமத்து' மகன்கள் சுதன் அசதுவும், அலி, சயிது, உசாமத்து, ஐவரும் உலகம் தாங்கிய தடம்புய இறசூல் மிக்கநன் மெய்யில் அரும்புனல் பெய்து குளிப்பாட்டிய செய்தியை [1807] கூறி, அபுபக்கர் சித்தீக் [ரலி] இமாமாக நின்று மையத்துத் தொழுகை நிகழ்த்திய செய்தியையும் [1818] கூறுகிறது.

(xi) 'வள்ளம்' எனும் சொல் [447, 453] நாழி மரக் கால், வட்டில்) அளவுக் குறிப்பாக கோவை மாவட்டத் தில் இன்றும் வழக்கத்தில் உள்ளது. தீயினைக் கூறும் பொழு தெல்லாம் 'வடவைத் தீ' [751, 752] எனக் கூறும். மலையாளத்தில் பயன்படுத்தப்படும் உத்திரம்' [பதில்] எனும் சொல் கையாளப்படுகிறது (451). 'இம்மி' (577-591) 'தட்டுமுட்டு' (893) எனும் சொற்களும் உயிர் கொண்டு உலவுகின்றன.

(xii) போர்க் கருவியான வேல் அருந்தமிழ்ச் சொற் களால் ஒப்பினை செய்யப்பெறுகின்றது. அள்ளிலை வடிவேல் (55, 1202, 1250) விடுசுடர்க் குடுமி வெள்வேல், (743) நெய்தோய் நாமவேல், (730) ஒளிகதிர் இலைவேல், (503)

இலைமலி கதிர்வேல் 505 நாமவடிவேல் 457, ஒள் இலை வேள் 447, அரத்தம் உண்டு ஒளிரும் செவ்வேல் 198 என்பன அவற்றுள் சில.

(xiii) காக்கைக்கு கண் ஒன்று என்னும் சங்க இலக்கிய மரபு 'ஒரு கண் காகம்' (751) என்ற தொடரால் தொடரப் படுகிறது. 'காக்கைக் கண்மணி ஒன்றா விடுத்தார்' என்னும் இராஜநாயகத் தொடர் ஈண்டு உணரற்பாலது.

## வர்ணனைக் குறிப்பு

சின்னச்சீறாவில் சுரம், சூரியன், வாவி, தென்றல், மதீனா வள வர்ணனை, ஷாம், மிஸ்ர், உம்மான், ஏமன், இயற்கை, குதிரை, விழாக்கோலம், சுனைக்கா, ஆடு, மின்பர், தென்றல் போன்றவை, பொற்றமிழ்ச் சொற்களால் புது மெருகு பெறுகின்றன.

## உருவகம்

சின்னச்சீறாவில் சிறந்து விளங்கும் உருவகங்களுக்கு ஒரு பாடல் சான்று காண்போம்.

மாறுகுபிர்க கடல்திடறி உபநிடத உரம்போட்டு
மறை ஏர் பூட்டி
நீறுஇசுலாம் விதை விதைத்து கலிமா நீர்ப் பெய
ஈமான் வேர்கள் ஊன்றித்
தேறுநன்மைக் குறுத்துவிட்டு சுரகெனும்பொன்
கதிர்ஈன்ற செழும்தீன் பைங்கூழ்
ஆறுபடு மாபாகம் விளைத்தபுகழ் நபி அவனி
ஆளும் நாளில் (441)

என்ற பாடலில், குபிர்-கடல்; உபநிடதம்-உரம்; மறை-ஏர்; இஸ்லாம்-விதை; கலிமா-நீர்; ஈமான்-வேர்கள்; நன்மை-

குருத்து; சறகு-பொன்கதிர்; தீன்-பைங்கூழ் உருவகங்களாக ஒளிர்கின்றன. வேறோர் இடத்தில், வேதம்-வித்து; ஈமான்-வேர்; இஸ்லாம்-பைங்கூழ்; (163) எனவும் உருவகங்கள் காணப்பெறுகின்றன.

கலிமாவைப் பற்றிக் கூறவந்த இடங்களில், புலவர் பனீ பகரும் பாச்சொற்கள் (சோறு) பாகாய்ப் பாய்ந்து இதயத்தை இனிக்க வைக்கின்றன. (உமறுப்புலவரின் இத்திறனை 'சீறாப்புராணம். அறபுச்சொற்களும் பாரசீகச்சொற்களும்'-டாக்டர் எம்எம் உவைஸ் அவர்கள் கட்டுரையில் காண்க. இனி சின்னச்சீறா பகருவதைப் பார்ப்போம்:

'நற்கலிமா' (1583), 'சுந்தரக் கலிமா' (1581), 'தூய ஆரணக் கலிமா' (1568) 'பழுத்து அமுதொழுகிய தீனில் திருந்து மெய்க் கலிமா' (338) 'உத்தமக் கலிமா (613) 'தேன் இருத்திய சொற் கலிமா' (1158) நற்றவக் கலிமா (1151) 'மவுலு நற்கலிமா' (1161) 'தெள்ளிதாகிய சொற் கலிமா, (1121) மறையின் தீஞ்சொல் மேய் நல்கலிமா' (1070) 'அருங்கலிமா' (1235) மறைமொழிக் கலிமா, (555) 'மறை நெறிக் கலிமா என்னும் தேறல், (1428) என்பனவாம்.

இஸ்லாமிய இலக்கியங்களின் தனிச்சிறப்பான, அரபுச் சொற்கள் விரவிய தமிழ்ப் பாக்கள் சின்னச்சீறாவிலும் சிறந்து நிற்கின்றன. முஸ்லிம் தமிழ்க் காப்பியங்களின் வரும் அரபுச் சொற்களின் விளக்கங்களை தமிழ்க் காப்பியங்களில் வரும் அரபுச் சொற்களின் விளக்கங்களை கலாநிதி உவைஸ் அவர்கள் தொகுத்துள்ள தொண்டு இவண் குறிப்பிடத்தக்கது.

இதுகாறும் சின்னச்சீறா—உமறுப்புலவரின் சீறா புராணத்தை முற்றுப்பெறச் லசய்கின்ற இணைப்புக் காப்பியமாக—ஒட்டுத்துணைக் காப்பியமாக அமைந்துள்ள திறம் கண்டோம், புலவர் பனீ அகமது மரைக்காயர் தரும் செய்திகளும் சின்னச்சீறாவின் ஒட்பமும் திட்பமும் ஒருவாறு கண்டோம். ஆய்வாளர்கள் மேலும் ஆய்ந்து ஆய்ந்து சீறா—சின்னச்சீறா இவற்றின் புகழ் விரித்துரைக்கின் நாடும் ஏடும் சீறா தந்த உமறு நற்பயன் பெறுமென நவிலவும் வேண்டுமோ?

✿

# சீறாப் பதிப்புகளும் உறைகளும்

இரா. முத்துக்குமாரசாமி எம். ஏ; பி. லிப்.

இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் தலைசிறந்து விளங்குவது செழுந் தமிழ்க் காப்பியம் சீறாப்புராணம். நபிகள் பெருமானின் வரலாற்றை நல்ல இனிய தமிழில் பாவடியில் நமக்கு வடித்துத் தந்தவர் உமறுப்புலவர். அவர் தம் அரிய படைப்பான சீறாப்புராணத்தின் பதிப்புக்களும், உரைகளும் ஆய வெழுந்ததே இக்கட்டுரை.

ஆசு, மதுர, சித்திர, வித்தாரக் கவிஞரான உமறுப் புலவர் எட்டயபுரத்து எட்டப்ப நாயக்கரின் அத்தாணி மன்றக் கவிஞராகத் திகழ்ந்தவர். சேது நாட்டின் அமைச்சராய்த் திகழ்ந்த சீதக்காதி வள்ளலால் கண்டுபிடிக்கப் பெற்றுக் குடத்து விளக்காக இருந்த நிலையிலிருந்து குன்றத்து விளக்காய் உயர்ந்தவர்.

## உமறுவின் காலம்

சீறாப்பதிப்புகளைப் பார்ப்பதற்கு முன் சீறா தோன்றிய காலத்தைச் சரியாகக் கணிப்பின் அதன் வரலாறு செம்மையாக அமையும் என்ற நோக்குடன் உமறுப்புலவரின் காலத்தைக் காணலாம், உமறுப்புலவரின் வாழ்க்கையில் குறுக்கிட்டு அவரைத் தடுத்தாட்கொண்டு சீறாப்புராணத்தை எழுதத் தூண்டியவர் வள்ளல் சீதக்காதி ஆவார், சீறாப் புராணச் செய்திகளை, வள்ளல் நபி பெருமான் அவர்கள் வரலாற்றை உமறுப்புலவர் அறிந்து கொள்ள அவரை ஆற்றுப்படுத்தியவர் சீதக்காதியாரின் ஆசானான சதக்கத்துல்லா அப்பா ஆவார்கள், இவ்விருவரது காலத்தையும் அறிந்து கொண்டால் உமறுப்புலவரின் காலத்தைக் கணிப்பது எளிது.

சதக்கத்துல்லா அப்பா அவர்கள் மறைவுற்றது ஹிஜ்ரி 115 (கி. பி 1700) என்று அறிகிறோம்.[1] அடுத்து வள்ளல் சீதக்காதியின் காலம் கி.பி. 1720 என்று சான்றுகளுடன் டாக்டர் நயினார் அவர்கள் நிறுவியுள்ளார்.[2] இந்திய வரலாற்றிலேயே அதற்கு முன் காணாத கடும்புயலின் விளைவாக இராமநாதபுர மக்கள் 1710இல் கடும் பஞ்சத்தால் வாடினர். அச்சமயம் வள்ளல் சீதக்காதி தம் பொருளனைத்தையும் மக்களுக்கு வாரி வாரி வழங்கியுள்ளார். எனவே, அவர் அதற்குப் பின்னரே மறைந்திருக்க வேண்டும்.

உமறுப்புலவர் சதுக்கத்துல்லா மறைவின் போதோ அல்லது சீதக்காதியாரின் மறைவின் போதோ சீறாப்புராணத்தைப் பாடி முடிக்கவில்லை என்று அறிகிறோம். உமறுப் புலவர் சீதக்காதியின் பெயரைச் சீறாவில் யாண்டும் குறிப்பிடவில்லையாயினும் சதக்கத்துல்லா அவர்களின் பெயரைக் கடவுள் வாழ்த்துப் பகுதியிலேயே,

''இம்மையும் மறுமையும் பேறிலங்கிய சதக்கத்
துல்லா
செம்மலரடி யிரண்டுஞ் சிந்தையி லிருத்தினனே''
(சீறா. கடவுள் வாழ்த்துப் பா. 17)

என்று குறிப்பிடுகிறார், சதக்கத்துல்லா மறைவுற்ற காரணத்தினால் தான் அவர் திருவடிகளைச் ''சிந்தையிலிருத்தினனே'' என்று உமறு பாடியுள்ளார். எனவே இவ்விருவரின் மறைவுக்குப் பின்னரே சீறாப் பாடப் பெற்றிருக்கும்.

உமறுப்புலவரவர்களின் காலம் குறித்து வரும் கீழ்க்காணும் பாடலை மேமற்கூறிய பக்கச் சான்றுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் அவர்தம் காலம் தெளிவாகும்.

1. சீறா, சதக்கத்துல்லா சரித்திரச் சுருக்கம்,
2. எஸ்.எம். எச். நயினார். சீதக்காதி வள்ளல், பக், 9.

"ஓராயிரம் ஹிஜ்ரி யைம்பத்திரண்டு ஷஅபான்
ஒப்பற்ற தேதி ஒன்பதில்
பாராரும் புகழுற்ற நாகலா புரமதில்
பரிமளச் குறைஷிக் குலத்தில்
பேராளன் மாப்பிள்ளை முகம்மது நெயினார்
பிள்ளை யீன்ற கவிஞன்
சீராளன் உமறு அறுபத்து மூன்றெட்டில்
சேர்ந்தான் சுவர்க்க நலமே"[1]

இப்பாடலில் உமறுவின் தோற்றம் ஹிஜ்றி 1052 (கி. பி. 1632) என்றும் அவர்தம் மறைவு "அறுபத்து மூன்றெட்டில்" என்றும் உள்ளது. இத்தொடரை 'அறுபத்து மூன்று வயதில் எட்டயபுரத்தில்" என்று பொருள் கொள் கிறார் திரு எம். ஆர். எம் அப்துற்றஹீம் அவர்கள். இதனை யே "முஸ்லிம் முரசு" சிறப்பாசிரியர் பன்மொழிப்புலவர் திரு. எம். சையிது முகம்மது (ஹஸன்) அவர்கள் 'அறுபத்து மூன்றெட்டில்" என்று பிரித்து அறுபதுடன் மூன்றெட் டான இருபத்து நான்கைக் கூட்டி 84 வயதில் மறைந்த தாகக் கூறுவர்.[2] மேற்கூறிய சான்றுகளுடன் ஒப்பிட்டு நோக்குப்போது, இக்கூற்று சரியெனவே தோன்றுகின்றது. இவ்வனைத்தையும் நோக்கும்போது, உமறு சீறாவை முடித்த பின் கி. பி. 1716 இல் மறைந்தார் என்று கொள்ளலாம்.

## சீறாவின் ஆசிரியர் ஒருவரா? இருவரா?

இதன் தொடர்பாக இன்னொரு கருத்தையும் ஆய்தல் வேண்டும். சீறா முழுவதையும் உமறு பாடியிருக்க மாட் டார் என்பது அது. பனீ அகமது மரைக்காயர் இயற்றிய 'சின்னச் சீறா'ப் (1910) பதிப்பில் முன்னுரையில் 'சீறா உறனிக் கூட்டத்தார் படலம்வரை சில காரணச் சரித் திரங்களை மாத்திரம் மகாவித்துவான் உமறுப்புலவரவர்

1. அப்துற் றஹீம்-முஸ்லிம் தமிழ்ப்புலவர்கள் அனுபந்தம் 4
2. தனி உரையாடல்.

களும் அவர்கள் குமாரரும் பாடியிருக்கிறார்கள்" என்று குறிக்கப் பெற்றுள்ளது. காசிம் புலவரின் 'திருப்புகழ்' பழைய பதிப்பின் பாயிரத்தில் ஒரு பகுதி வருமாறு:

"உமறுப் புலவரென்றுறு மதியுடையோர்
செய்தவத் துதித்த செல்வ னெனவரும்
வையகம் புகழும் வாவணப் புலவர்,,

இதிலிருந்து உமறுப்புலவரின் மகனான வாவணப் புலவரும் வையகம் புகழப் பெரும் புலவராகத் திகழ்ந்தாரெனத் தெரிகிறது.

சீறாவை அண்மையில் பதிப்பித்த திருவரசன் அவர்களும் 'சீறாவின்' கடைசிப்பகுதியில் பா நடையில் சற்று மாறுதலும் வேறுபாடும் உள்ளது என்று கருத்து தெரிவிக்கிறார்கள், எனவே வாவணப் புலவரும் சேர்ந்து 'சீறா'வை பாடியிருப்பாரா என்பதை புலவர்கள் மேலும் ஆய்தல் வேண்டும்.

## முதல் பதிப்பு

இனி சீறாப்பதிப்புகளையும் உரைகளையும் பார்க்கலாம். சீறாப்புராணம் முதன்முதலின் 1849 இல் சேகனாப் புலவரால் வெளியிடப் பெற்றது, அண்மையில் 1974 இல் வெளிவந்தது கவிஞர் நாச்சிக் குளத்தாரின் பதிப்பாகும் இந்த 135 ஆண்டுகளுள் சீறா பல பதிப்புகளைக் கண்டுள்ளது. அத்துடன் சீறா உரைகளும், உரைநடைகளும் பல தோன்றியுள்ளன. சீறாப்புராணத்தைத் தழுவிக் கீர்த்தனம் நாடகம், வண்ணம், விளக்கு, வெண்பா போன்ற பல நூல்களும் தோன்றியுள்ளன.

முதன் முதலாக அச்சேறியமுஸ்லிம் தமிழ்க் காப்பியம் சீறாப்புராணமேயாகும், தமிழ் நூல்கள் தமிழ் நாட்டில் கி. பி. 16 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அச்சிடத் தொடங்கப் பெற்றன. எனினும் தமிழ் இலக்கியம் முதன் முதலாக அச்சேறியது 1812 ஆம் ஆண்டில் தான்.

திருநெல்வேலியைச் சார்ந்த அம்பலவாணக் கவிராயர் முதன் முதலாகத் திருக்குறளையும், நாலடியாரையும் அச்சிட்டார். இந்தியர்கள் அச்சகம் வைத்து நடத்தலாம் என்று 1825-க்குப் பின் அரசு ஒப்புதல் தந்த பிறகே தமிழ் அச்சகங்கள் தோன்றாயின. எனவே, தமிழ் இலக்கியங் கள் 18 5-க்குப் பின்னரே நிரம்ப அச்சாயின.

சீறாப்புராணத்தை முதன் முதலில அச்சிட்ட பெருமை "புலவர் நாயகம்" என்று போற்றப் பெறும், ஷைகு அப்துல் காதிர் நெய்னார் லப்பை ஆலிம் அவர்களையே சாரும். சேகனாப் புலவர் என்று சுருக்கமாக அழைக்கப்பெறும் இவர் சிறந்த பதிப்பாசிரியர் மட்டுமல்லாது, படைப்பாசிரியருமா வார். மாபெருங் காவியமான 'புதுகுஷ்ஷாம்' என்பதை யும் "காரணப் புராணம்" முதலான பல நூல்களையும் படைத்த பெருங்கவிஞர் இவர். குணங்குடி மஸ்தானுக்கு இவர் வித்தையிற்றோழன்.

உமறுப்புலவர் இயற்றிய ஒப்பற்ற சீறா ஒரு நூற்றாண்டு காலத்திற்கு மேல் அச்சில் வராது பலராலும் கையால் எழுதப் பெற்று படிக்கப்பட்டு வந்தது. காவியச் சுவை காரணமாகப் படிகள் நிரம்ப ஆனமை போல கர லிகிதப் பிழைகளும் மலியலாயின. இதனையறிந்து காயல்பட்டினத் தைச் சேர்ந்த உவைசு நயினார் லெப்பை என்பவர் சேகனாப் புலவரை அணுகிச் சீறாவை எவ்வாறேனும் அச்சேற்ற வேண்டுமென்று வேண்டுக்கோள் விடுத்தார். அவரும் அதற் கிணங்கப் பற்பல ஊர்களிலிருந்து சீறாப்புராணக் கை யெழுத்துப் படிகளை வரவழைத்துப் பதிப்பித்தார்.

அவர் சீறாவை அச்சிற் பதித்த வரலாறு என்பது தனி யாக நூலில் முன்னுரைபோல் கொடுக்கப்பட்டுள்ளது. ஒரு நூலை முதன் முதலில் பதிப்பிக்கும்போது எவ்வளவு இடை யூறுகள் இருக்கும் என்பதற்கும், ஒரு நூலைப் புதிதாகப் பதிப்பிக்கும்போது என்னென்ன முறைகளைக் கையாள வேண்டுமென்பதற்கும் கீழ்வரும் வரிகளே சான்றாகும்.

அச்சிற் பதித்த வரலாறு

"பசங்களிற் பிறழ்ந்ததைப் பகுத்தும் பகாதும்
அதனமைதியே அமைத்துஞ் சிலசில
பாலுந் திணையும் இடனும் பயில்வினாக்
காலமும் வறீஇயவை மயங்காது காத்துந்
தொகா நிலைத் தொகைநிலைத் தொடர்களுட்
சிதைந்தவை
மிகா நிலையாக்கி விளங்காவுரைப் படுத்தியும்
வேற்றுமைப் பொருள்கள் வேறுபா டவைகளைத்
தோற்றிய முறைபோல் தொகுத்தும் விரித்தும்
முற்று மெச்சமும் முடியாதனவற்றை
முற்ற முடித்தும் மொழிபெயர்த் தாக்கியும்
பொருட் டொடர் நோக்கி மொழித் தொடர்
பொருத்தியும்
மருட்டுத் துறைகளின் மயக்க மொதுக்கியும்
புறமு மகமும் புணராத துறையொரு
புறமு மகமும் புகுதப் புகுத்தியும்
எதுகை மோனை இயைபாற் றிரிந்தவை
எதுகை மோனையைத் திரித்தியல் பாக்கியும்
இசைகெடா தெழுத்தின் இயல்பு நிரைத்தும்
அசை கெடா தமைத்தும் அணிபெறப் பொருந்தியும்
உவமை முதலா உள்ள அணிகளில்
நவநிலை பிறழா தவணிலைப் படுத்தியும்
இன்னமுஞ் சிதைந்தன எவற்றையு மாய்ந்தாய்ந்
துன்னிய விதிபோல் ஒழுங்குறத் திருத்திப்
பலபல பாடத்தாற் பரிசோதித்தும்
பலனுற வச்சிற் பதிப்பிக்கச் செய்தனன்
செய்கு அப்துல் காதிரென்று நாவலனே." [1]

1. இப்பாடல் முதல் பதிப்பில் மட்டுமின்றி 1857, 1884 போன்ற பல பதிப்புகளில் முழுவதுமாக அப்படியே சேர்க்கப்பட்டுள்ளது.

## முதற் பதிப்பின் வரலாறு:

"சீறாப்புராணமோ பல்வேறு கையேட்டுப் பிரதிகளாக இருந்து ஒரே பிழை மயமாகவும், குழப்ப மயமாகவும் விளங்கியது. அதனைச் சீர் செய்து செப்பனிடுவது சேகனாப் புலவருக்கே சிரமமாக இருந்தது. ஒரு நாள் திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர் என்னும் புலவர், சேகனாப் புலவரைப் பார்க்க வந்தார். அவர் தமிழ் நூல்களைச் சிறந்து முறையில் பதிப்பித்த பதிப்புலக இரட்டையரில் ஒருவர். மற்றொருவர் விசாகப் பெருமாளையராவர். இத்தகைய பதிப்பாசிரியரிடம் இந்தச் சீறாவைத் திருத்திச் செப்பனிடுவதற்குள் மூன்று சீறாவைப் பாடிவிடலாம் போலிருக்கிறது என்று கூறினாராம் சேகனாப் புலவர். அவ்விதமானால் அவர் எத்துணைச் சிரமத்தை மேற்கொண்டு சீறாப்புராணத்தைத் திருத்திச் செப்பனிட்டிருப்பார் என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம். அவ்வாறு திருத்தும் போதுகூட அனாவசியமாக எதையும் திருத்திவிடாது உமறுப் புலவருக்குச் சங்கைச் செய்தே அதனைத்திருத்தினார். ஒருமை பன்மை மயக்கத்தைக் கூடத் திருத்துவதற்குச் சேகனாப் புலவரின் உள்ளம் நடுங்கியது. அவர் அவ்வாறு பெருஞ் சிரமத்துடன் சீறாவைத் திருத்தி முடித்தபின் அதன் சுத்த பிரதியொன்று அவருக்குக் கிடைத்துள்ளது. அப்போது அதனையும் தாம் திருத்தி எழுதிய பிரதியையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது நாலைந்து செய்யுட்கள் தாம் அதற்கும் தமமுடையதற்கும் இடம் வேறுபட்டு இருந்தனவாம்.[1]

## கடவுள் வாழ்த்து

சேகனாப் புலவர் "சீறாவைப் பதிப்பித்ததோடு நில்லாது "திருவாய் உருவாய்" எனத் தொடங்கும் சீறாப்

1. முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள், பக். 117—118

புராணக் கடவுள் வாழ்த்துப் பாடலையும் பாடியுள்ளதாகத் தெரிகிறது. வேறு சில படிகளில் இப்பாடல் காணப் பெறாத காரணத்தால் இதனை இப்புராணத்தை முதன் முதல் அச் சேற்றிய சேகனாப் புலவரே பாடியிருக்கலாம் என்று கருது வாருளர்.[1]

சீறாவைப் பதிப்பிடுவதற்குச் சேகனாப் புலவர் காயலி லிருந்து சென்னை நகருக்கு வந்து சேர்ந்தார். அவரும் உவைசு நயினார்லெப்பையும் இணைந்து சென்னைபுரசவாக்க வித்தியா விலாச அச்சுக்கூடத்தில் சீறாவை கி.பி. 1842இல் முதல் பதிப்பைக் கொண்டு வந்தனர். இப்பதிப்பில் முகப்புப் பக்கம் அமைந்துள்ளதைப் போன்றே நூலின் கடைசிப் பக்கத்தையும் முகப்புப் பக்கத்தைப் போலவே பூ வேலைப் பாடுகளுடன் அச்சிட்டுள்ளனர். அதிலும் நூல் பெயர், ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பித்த அச்சகம், ஆண்டு முதலியவற்றைக் கொடுத்துள்ளார்கள். அத்துடன் அப் பதிப்பை அச்சுக் கோத்தவர் பற்றிய குறிப்பும் "பா. கோவிந்து நாயக்கரால் அச்சடிக்கப்பட்டது" என்று கொடுக்கப் பெற்றுள்ளது. தமிழ் நூல்கள் வேறு எவற்றி லும் இல்லாத வகையில் சீறாப் பதிப்புகள் அனைத்திலுமே 19ஆம் நூற்றாண்டில் அச்சிட்ட பதிப்புகளில் நூலுக்கு முன் னும் பின்னும் இரு தலைப்புப் பக்கங்களுள்ளன.

## இரண்டாம் பதிப்பு

1842இல் முதல் பதிப்பைக் கொண்டு வந்த சேகனாப் புலவர் சென்னை இராயபுரத்தில் 1843இல் மறைந்தார் ஆனால் அதற்கு முன் சீறாவின் இரண்டாம் பதிப்பைக் கொண்டு வந்துள்ளார். ஏறத்தாழ ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டுக்குள் இரண்டாவது பதிப்பு வெளிவந்துள்ளது. முதல் பதிப்பைச் செம்மைபபடுத்தியபின் அவருக்குச் செம்மையான கையெழுத்துப பிரதி ஒன்று கிடைத்துள்ளது.

1. முஸ்லிம் தமிழ்ப்புலவர்கள், பக். 88

அதனைப் பயன்படுத்திக் கொண்டு மறுபதிப்பை உடனே கொண்டு வந்திருக்க வேண்டும். இது இயலுமா என்ற வினா எழுந்தது.

ஆனால் ''சின்னச் சீறா''வென வழங்கும் சீறாவின் தொடர் காப்பியம் முதல் பதிப்பு 1855 சனவரியிலும் இரண்டாம் பதிப்பு 1856 ஆகஸ்டிலும் வெளிவந்துள்ளன. இதை நோக்கும்போது சேகனாப் புலவரும் ஓராண்டிற்குள் தம் மறைவுக்கு முன் இரண்டாம் பதிப்பை வெளியிட்டிருத்தல் வேண்டும்.

ஏனெனில் இரண்டாம் பதிப்பில் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகின்றார். ''முற்பதிப்பி லச்சு மாறாட்டமாய்க் கிடந்த சில வெற்றுக்களை இப்பதிப்பிற் றிருத்தப்பட்டன வென்று முகப்பிலும் எழுதியிருக்கின்றனம்'' என்று குறிப்பிடுகின்றார்.

## போலிச் சீறா

சேகனாப் புலவர் சீறாவை அச்சிட்டு நூல் ஒன்றுக்கு ஒரு வராகன் விலை வைத்து விற்றார். அச்சமயம் திருச்சியிலிருந்த சாந்துக்கார சம்சுத்தீன் என்பவர் புலவரை அணுகி ஒரு வராகன் கொடுத்து நூலொன்று வாங்கிச் சென்று அதனைத் தாமே ஒரு பதிப்பு அச்சிட்டுக் குறைந்த விலைக்கு விற்றிருக்கிறார். இதனையறிந்த சேகனாப் புலவர் அவரை அழைத்து இவ்வாறு செய்தல் முறையா? என்று கேட்டிருக்கிறார். தாம் வழக்குத் தொடரப் போவதாக அச்சுறுத்தியிருக்கிறார். ஆனால், அதற்கு அச் சம்சுத்தீன் அஞ்சவில்லை. ''வழக்கு வேண்டுமானால் தொடரலாம்'' என்று கூறிவிட்டார். அதைக் கேட்ட சேகனாப் புலவர் மனிதர்கள் முன் வழக்கை விரிப்பதைவிட இறைவனிடமே முறையிடப் போவதாகக் கூறுகிறார். ஆனால் ஒரு சில நாட்களில் சம்சுத்தீன் வேறு ஒரு கொலை வழக்கில் சிக்கித் தூக்கிலிடப்பட்டார் என்பது செய்தியாகும்.

சேகனாப் புலவர் சாந்துக்கார சம்சுத்தீனை அச்சுறுத்தி னாரே தவிர அவருடைய பதிப்புதான் இன்றுள்ள எல்லாச் சீறாப் பதிப்புகளுக்கும் முன்னோடி என்பதில் ஐயமில்லை. எல் லாச் சீறாப் பதிப்புகளிலும் செய்கப்துல் காதிர் நயினார் பரி சோதித்து அவர்களாலும் உவைசு நயினார் லெப்பை அவர் களாலும் முன் செய்வித்த பதிப்புக்கிணங்கத் தாங்கள் அச் சிடுவதாகக் குறிப்பிட்டுள்ளனர்.

## 1852 பதிப்பு

இதனையடுத்து பார்வைக்குக் கிடைத்தது யாழ்ப் பாணம், பரிகாரி பகீர் முகியித்தீன் அவர்களால் பார்வை யிடப்பட்டு குர்முடிபூண்டி குள்ளப்ப செட்டியார் குமாரர் நாகப்ப செட்டியாரவர்கள் முயற்சியால் சைதாப்பேட்டை வீரபத்திர செட்டியாரவர்களது லக்ஷ்மி விலாச அச்சுக் கூடத்தில் 1852இல் பதிப்பிக்கப்பெற்ற பதிப்பாகும்.

## 1857 பதிப்பு

தஞ்சை நகரத்தைச் சார்ந்த நத்தர்சாகிபு அவர்கள் குமாரர் உசேன் சாகிபு அவர்கள் சீறாவை இருமுறை பதிப் பித்திருப்பாரென்று தெரிகிறது. இரண்டாம் பதிப்பு சிந்தாதிரிப் பேட்டை சி. கேசவ முதலியாரவர்களது பிர பாகர அச்சுக்கூடத்தில் 1857இல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

## 1884 பதிப்பு

அடுத்து 1884இல் நாகூரைச் சார்ந்த முத்தமிழ்க் கவி முகம்மது உசேன் புலவர் அவர்கள் சீறாவைப் பார்வை யிட்டுத் திருவெற்றியூர் பரசுராம முதலியாரின் பரப்பிரம முத்திராசாலையில் பதிப்பித்துள்ளார். அவர் தாம் அதனைக் குலசேகரப்பட்டணம் சர்க்கரை சாகிபுத் தம்பியவர்கள் குமாரராகிய அல்லாபிச்சைப்புலவர் அவர்கள் பரிசோதித்த படி அச்சிட்டுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். அல்லாப் பிச்சைப் புலவரின் பதிப்பு எப்போது வெளிவந்தது என்பது தெரியவில்லை.

இவை தவிர இக்காலத்தில் வேறு சில பதிப்புகளும் வந்துள்ளதாகத் தெரிகிறது. பார்வைக்குக் கிடைத்த வேறு மூன்று பிரதிகளில் முகப்புப் பக்கங்களில்லை.

## 1900 பதிப்பு

முதன்முதல் சீர்பிரித்துச் செம்மையான முறையில் பதிப்பித்த பெருமை காயல்பட்டிணத்தைச் சேர்ந்த கண்ணகுமது மகுதூ முகம்மதுப்புலவரவர்களையே சாரும். இவர் சென்னை முகம்மதிய புத்தகப் பரிபாலனத் தலைவராய்த் திகழ்ந்தவர்.

இவர் முஸ்லிம் தமிழ் இலக்கியத்திற்குச் செய்துள்ள தொண்டு அளவிடற்கரியதாகும். தங்கத்தமிழாம் சங்கந் தமிழைத் தமிழுலகிற்கு மீட்டுக்கொடுத்த டாக்டர் உ.வே. சாமிநாதையர் போன்று ஆங்காங்குச் சிதறிக்கிடந்த இஸ்லாமிய இலக்கியங்களைத் தேடிப்பிடித்து ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்களை இவர் பதிப்பித்துள்ளார்.

இவர் பதிப்பித்த சீறா சென்னை இட்டா பார்த்தசாரதி நாயுடு அவர்களால் தமது ஸ்ரீ பத்மநாபவிலாச அச்சுக் கூடத்தில் 1900 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது

முதன்முதலாக 'உமறுப்புலவரவர்கள் பூர்வீக சரித்திரச் சுருக்கம்' சீறாப்புராணம் செய்யப்பட்ட சரித்திரச்சுருக்கம்' ஆகியவை சீறாப்பதிப்பில் சேர்க்கப்பெற்றுள்ளன, பார்வைக்குக் கிடைத்த பழைய பதிப்புகளில் மிகத் தெளிவான பதிப்பு இதுவேயாகும்.

கோட்டாறு சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் அவர்கள் பதிப்பித்த சீறாப்புராணம் சென்னை ஸ்ரீ பத்மநாப விலாச அச்சுக் கூடத்தினர் வழி 1907 இல் வெளிவந்துள்ளது.

## பிற பதிப்புகள்

இதனையொட்டிச் சென்னையிலிருந்து பி.நா. சிதம்பர முதலியார் & சன்ஸ், பி.என். இரத்தின நாயகர் & சன்ஸ்,

சென்னை பூமகள் விலாச அச்சுக்கூடம், மதுரைப் புது மண்டபப் புத்தகக்கடைப் பதிப்பு போன்ற பல பதிப்புகள் வந்துள்ளன.

## நாச்சிகுளத்தார் பதிப்பு

சீறா மூலப்பதிப்புகளில் இன்றியமையாது குறிப்பிட வேண்டியது 1974 இல் கவிஞர் நாச்சிகுளத்தார் பதிப் பித்துச் சென்னை திரீயெம் பிரிண்டர்ஸ் வெளியிட்டுள்ள சீறாப்புராணப் பதிப்பாகும். அதனைச் செம்மையான் முறை யில் பதிப்பிக்கத் துணை நின்றவர்கள் ,முஸ்லிம் முரசு' சிறப் பாசிரியரான திரு. ஸையிது முகம்மது (ஹஸன்) அவர்களும் பிறை' சிறப்பாசிரியரான மௌலவீ எம். அப்துல் வஹ்ஹாப் அவர்களுமாவர். இவர்கள் தங்களுக்குக் கிடைத்த பத்துக்கு மேற்பட்ட அச்சுப் பிரதிகளை வைத்துக் கொண்டு பேரளவு பிழைகளைக்களைந்து, சீர்பிரித்துச்செம்மையாக அச்சிட்டுள் ளனர். உமறுப்புலவர் வரலாற்றுச் சுருக்கமும் சில அரபுச் சொற்களின் தமிழாக்கமும் முன்னிணைப்பாகக் கொடுக்கப் பெற்றுள்ளன, அருஞ் சொல்லுவரை பின்னிணைப்பாக உள்ளது.

## தேவையான பதிப்பு

இத்தனை பதிப்புகள் வந்திருப்பினும் ஒரு பதிப்பிலாவது பாட்டு முதற்குறிப்பாவது, ஆராய்ச்சி முன்னுரையாவது இடம் பெறாதது பெரும் வருத்தத்திற்குரியசெய்தியேயாகும். அருஞ் சொற்குறிப்புரையும் பெருமளவில் இருக்கவேண்டும். ஒவ்வொரு படலத்திற்கும் கதைச் சுருக்கம் சேர்க்கப்பெறு தல் வேண்டும்.

மூலநூல் பலமுறை பதிப்பிக்கப்பெற்றுள்ளன நிலையில் இப்பெரும் காவியம் ஒரே ஒரு உறையுடன் மட்டுமே இது காறும் வெளி வந்திருப்பது பெருத்த ஏமாற்றத்திற்குரிய செய்தியேயாகும்.

## உறைச் சிறப்பு

மூலநூலின் சிறப்பை எடுத்துக் கூறுவது உரை நூலாகும். உரையாசிரியர் மூலநூலாசிரியரின் உள்ளக்கிடக்கையை உணர்ந்து கொள்ளாது தம் மனம்போல் பொருள் விரித்துரைக்கும் உரையாசிரியர்கள் பலருளர். ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு மொழி பெயர்ப்பது அல்லது மொழியாக்கம் செய்வது எவ்வளவு கடினமோ அவ்வளவு கடினம் உரையெழுதுவதும் ஆகும். ஆங்கிலத்தில் ஒரு மரபுரை உண்டு 'மொழிபெயர்ப்பாளன் ஒரு துரோகி, காட்டிக் கொடுப்பவன். தவறான உரையெழுதுபவனும் அந்த இனத்தைச் சார்ந்தவன்தான்' என்பதாகும் அது.

உரையாசிரியன் நூலாசிரியன் காணாத பொருளைக் கூடக் காட்டுவதுபோல் பொருள் காண்பதுதான் தனிச்சிறப்பு. ஆனால் அவ்வாறு காண்பது நூலாசிரியனுக்கு ஏற்றம் தருவதாய் இருக்கவேண்டும். திருக்குறளுக்கு எவ்வளவு பேர் உரையெழுதியிருப்பினும் பரிமேலழகர் உரையே தெள்ளு தமிழ் உரையாகப் போற்றப்பெறுகின்றது. 'கற்கக் கசடறக் கற்க' என்ற குறளில் 'பின்' எனப் பிரித்துப் படித்து 'பின்பு' என்றே உரையெழுதியுள்ளார். 'கல்லாதது உலகளவு' என்று வரையறுத்தபின், படித்தபின் ஒருவன் அதற்குத் தக நடக்கிறேன்' என்று கூறுவானாயின் எவ்வளவு பொருத்தமற்றுக் காணப்படுகிறது.

பரிமேலழகர் 'கற்றபின்' என்பதை ஒரே தொடராகக் கொண்டு 'கற்றல்' என்று பொருள் கூறுகிறார். ஒருவன் ஒன்றைப் படித்தால் படித்தவுடனேயே அதன் வழி நடக்க வேண்டும். 'படித்தபின்' என்று பின் நிகழ்வு வினையாகக் கொள்வது 'படித்தால்' என்று படித்தலையும் நடத்தலையும் உடன் நிகழ்வு வினையாகக் கொண்டுள்ள பரிமேலழகர் உரைத்திறன் உணர்ந்து பாராட்டத்தக்கது.

பரிமேலழகர் இவ்வாறு எழுதிய பின்னும் இன்னும் பலர் 'படித்த பின்' என்றே பொருள் கூறுகின்றார்கள். எனின், அதிலும் ஒரு திறன் வேண்டும், நூலாசிரியரின் உள்ளக்கிடக்கையை உரையாசிரியர் கூற, அவர்தம் உரை திறனை உணர்ந்து கொள்ளப் பேரறிஞரால் தான் முடியும். இந்த உரை நயத்தை எடுத்து விளக்கியவர் மறைந்த தமிழ்ப் பேரறிஞர் தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளாராவர். இத்துடன் வள்ளுவர் 'பின்' என்ற சொல்லைப் பயன்படுத்தும் இடங்களிலெல்லாம் பரிமேலழகர் இவ்வாறே உரை கண்டுள்ளார் என்பதை அடிகளார் விளக்கியுள்ளார்.

எனவே நூலாசிரியரின் உள்ளக்கிடக்கையை எடுத்துரைக்கும் உரையே போற்றத்தக்கவை. அவ்வகையில் சீறாப்புராணத்திற்கு எழுந்த உரை நூல்களை நாம் ஆயலாம்.

## பாவலர் உரை

இந்த இருபதாம் நூற்றாண்டில் இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்தில் சிறந்து விளங்கும் புலவர் சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் அவர்கள் தம் பாட்டனாரான ஞானியார் அப்பா அவர்களின் 'மெய்ஞ்ஞானப் பாடல் திரட்டை' அச்சிடுவதற்காகச் சென்னைக்கு வந்து சேர்ந்த சதாவதானி அவர்கள், ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்தின் உரிமையாளரான இட்டா பார்த்தசாரதி நாயுடுவிடம் நெருங்கிய தொடர்பு கொண்டார். அவ்வச்சகத்தில் பணியுமேற்றார். அச்சமத்தில் நாயுடுவின் வேண்டுகோளுக்கிணங்க சீறாவைப் பரிசோதித்து அதற்கு அழகிய எளிய இனிய தீந்தமிழில் உரை எழுதி 1902இல் முதல் தொகுதியையும், 1908இல் இரண்டாம் தொகுதியையும் வெளியிட்டார். இதன் இரண்டாம் பதிப்பும் பின்னர் வெளியாயிற்று. ஆனால் அதன் நீண்ட நாட்களாக மறு பதிப்பு இல்லாமல் உள்ளது. இதுவே சீறா முழுவதற்கும் இதுவரைவந்துள்ள ஒரே உரையாகும்.

## குலாம் காதிறு உரை

சீறாவின் சில படலங்களுக்குக் குறிப்புரையும் விரிவுரையும் வந்துள்ளன. தனியாகப் படலத்திற்கு வந்துள்ள உரைகளுள் முதன் முதற் குறிப்பிட வேண்டியது நாகூர்க் கவிஞர் குலாம் காதிறு நாவலர் அவர்கள் 'நபியவதாரப் படலத்திற்கு' எழுதிய உரையாகும். அவ்வுரை பார்வைக்குக் கிடைப்பது அரிதாயிருக்கின்றது.

## உரை கடிலகம்

ஆனால் அவர்தம் உரையை மறுத்துப் பறங்கிப்பேட்டை காதிரசனா மரைக்காயர் எழுதிய 'சீறா நபியவதாரப்படலம் உரை கடிலகம்' என்னும் உரை சீறாவிற்கு வாய்த்த சிறந்த உரையாகும்.

இவ்வுரை எழுந்த சூழலே வியப்புக்குரியதாகும். தொல்காப்பியம் முதலான பழந்தமிழ் இலக்கிய இலக்கண நூல்களைக் கற்றுத் துறைபோகிய காதிரசனா மரைக்காயரிடம் அவர்தம் நண்பர்கள் சீறாவிற்கு உரையெழுத வேண்டுமென்று தூண்டினராம். ஆனால் 'அத் தகுதிக்குச் சற்றும் பாத்திரமல்லேன்' என அவர் மறுத்து வந்தாராம். இந்நிலையில் குலாம் காதிறு நாவலர் எழுதிய 'நபியவதாரப் படல உரை' அவர் பார்வைக்குக் கிடைத்திருக்கிறது. அதில் 'அவ்வுரையாசிரியர் தமது கல்வியே கடலினும் பெரிதெனக் கொண்டு நூலாசிரியர் ஒருமை பன்மை தெரியாதார் எனக் குற்றங்கூறித் தமதறிவிற்கு இலக்காய்ச் செய்யுளைத் திருத்தித் தவறுரை வரைந்திருத்தலே பெரும்பான்மையும் புலப்பட்டனவாம். எனவே, உமறுப்புலவரவர்களின் நுண்ணிய கருத்தினையும் குலாம்காதிறு நாவலரினது கவனமின்மையையும் ஒருவாறு எடுத்துக்கூறி உலகப் பிரசித்தமாய்க் காட்டுதல் அத்தியாவசியம் எனக் கருதி, அவர் உரைக்குத் திலகமாய் 'உரைகள் திலகம்' எனும் 'உரைகடில'த்தைத் தம் முப்பதாம் வயதில் இயற்றியதாகக் காதிரசனா மரைக்காயர் குறிப்பிடுகிறார்.

இவர் உரை ஆற்றொழுக்கான இலக்கிய இலக்கணப் புலமை நிறைந்த நடையாய் அமைந்துள்ளது. தொல்காப் பியம் சொல்லதி காரத்திற்குச் சேனாவரையர் உரை எத்துணைச் சிறப்புடையதோ அத்துணைச் சிறப்பாக இது அமைந்துள்ளது அவர்தம் இலக்கிய நடைக்குச் சிறிய சான்று.

'நாயக! எமது கோரிக்கை நமக்கும் பொருந்துமேல் எதிர் வருமிரவிலே யாம் கருதிய புராணத்திற்கு முதலிலே வரைதற்காக மெய்யாகிய கடவுளினது ஒப்பறுதலைக் குறித்துப் புனையுங் கவிதைக்குத் தலைமொழியை எமக்கு வெள்ளிதாயறிவித்தல் வேண்டும். இல்லாவிடின் விழைந்த வுடனே இவ்வழியாக வெம்பதியடைதல் திண்ணம்!"

நூல் முழுவதும் குலாம் காதிறு நாவலர் உரையைப் பின்பற்றித் தழுவியும் மறுத்தும் உரையெழுதுகிறார். இது மீண்டும் பதிப்பித்தற்குரியது, இதன் போக்கையும் நடை யையும் தழுவி 'சீறாப் புர ணம்' முழுவதற்கும் ஓர் உரை வருமானால் அதுவே இஸ்லாமியத் தமிழிலக்கியத்திற்கு வைரக் குப்பாயமாக அமையும் என்பது திண்ணம்.

## நாவலர் மறுப்பு

'உரைகடிலத்தைக் கண்ணுற்ற நாவலர்கள்
''காதிரசனா மரைக்கான் கைவைத்தாய் எம்முரையில்
மாதிரசம் மாய்ந்துபோய் மாய்''

என்று வசை பாடியுள்ளார். [மாதிரசம்: மா-சிறப்புக்குரிய திரசம்-திரேகரசம் (உடல் சத்து) ].

இவ்வசை பாடியதோடு நில்லாது இதற்கு மறுப்பாக 'உரைகடிலக நிராகரணம்' என்ற நூலை வெளியிட்டார். காதிரசனா மரைக்காயரும் தாழ்ந்து போகாது 'உரைகடிலக நிராகரணச் சூறாவளி' என்ற நூலைப் படைத்தார். இப்பகை பின்பு அவரவர் ஞானாசிரியர்களால் தணிவிக்கப்பெற்றது.

## பிற உரைகள்

இவ்விரு உரைகள் தவிர பிற குறிப்புரைகளும் வெளி வந்துள்ளன. அவற்றுள் மிகவும் குறிப்பிடவேண்டிய பதிப்பு திரு. எம். ஆர். அப்துற்-றஹீம் அவர்கள் பதிப்பித்த 'சீறாப்புராணம்'—விலாதத்துக் காண்டமாகும். சீறா முழுமையும் கிடைக்காத நாளில், இப்பதிப்பை அவர் வெளிக் கொணர்ந்தார். அதிலிருந்து ஒரு பகுதியே 'சீறாப் புராணத்தில் சில பாடல்கள்' என்ற தலைப்புடன் சிறு நூலாக வெளி வந்துள்ளது.

## ஈழத்து உரை

ஈழத்து அன்பர்கள் சீறாவைக் கல்லூரியளவில் பாடமாக வைப்பதற்காகச் சில பாடல்களை உரையுடன் வெளியிட்டுள்ளனர். பதுறுப் படலம். அலிமா முலையூட்டுப் படலம் போன்றவை இவற்றுள் அடங்கும். பதுளையைச் சார்ந்த திரு எம் சி. எம். சுபைர். திரு. பி. எம். எம். அப்துல் காதர் இணைந்து உரையெழுதியுள்ள 'பதுறுப் படல' உரை குறிப்பிடத்தக்கது. இப்பதிப்பில் ஒவ்வொரு பாடலுக்கும் பதவுரை, பொழிப்புரை விளக்கவுரை, அரும் பதவுரை ஆகிய நான்கு வகை உரைகளும் தரப்பட்டுள்ளன. இதனைத் தொடர்ந்து இவ்வுரையாசிரியர்கள் நூல் முழுவதற்கும் உரையெழுதின் சிறப்பாக அமையும்.

## உமறு தரும் சீறா

சீறாவை அனைவரும் மறந்திருந்த நிலையில் திரு. நூர் முகம்மது எழுதிய 'உமறு தரும் சீறா' என்னும் அறிமுக நூல் சீறாவை மக்களிடையே பரப்பிய அருமையான பதிப்பு. சீறாவில் சிறந்த பாடல்கள் உரிய கதைப்போக்குடன் சுருங்கிய வடிவில் இந்நூலில் தரப்பட்டுள்ளது. இதில் ஏறத்தாழ 450 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

## உரைநடை நூல்கள்

சீறா முழுவதையும் படிக்க இயலாதவர்கட்கு அதன் கதைப் போக்கை மட்டும் அறிந்து கொள்ளப் பயன்படுபவை 'உரைநடை' என்னும் வசன நூல்கள்.

## சீறா வசனம்

சீறா வசனங்களில் குறிப்பிடத்தக்கது, நாகூர் குலாம் காதிறு நாவலர் இயற்றிய 'சீறா வசன'மாகும். இது 1885-க்கு முன்பிருக்கலாம். அடுத்துக் குறிப்பிட வேண்டியது, பட்டணம் கண்ணகுமதுப் புலவரவர்களியற்றிய 'சீறா வசன காவியம்', 1867இல் அச்சிடப்பெற்றது.

இறுதியாக வெளிவந்த சீறா வசனம் 'நபிகள் நாயகத்தின் ஜீவிய சரித்திரம்' என்ற ஹாஜி. மொ. அ. ஷாஹுல் ஹமீது லெப்பை அவர்களுடையது. இதன் இரண்டாம் பதிப்பு 1951இல் வெளிவந்தது.

## தழுவல் நூல்கள்

ஒரு நூல் மிகவும் சிறப்புற்று விளங்கினால் அதன் மையக் கருத்தைத் தழுவிப் பல சிற்றிலக்கியங்கள் எழுதுவது தமிழ் இலக்கிய மரபு. இவ்வாறே 'சீறா'விற்கும் பல நூல்கள் தோன்றின.

## சீறா கீர்த்தநம்

செய்யிது அபூபக்கர் புலவர் அவர்கள் சீறாவைப் பின்பற்றி நபிகள் நாயகத்தின் வாழ்க்கை வரலாற்றைச் 'சீறா கீர்த்தநம்' என்ற தலைப்பில் பாடியுள்ளார். இது 1934-க்கு முன் மூன்று பகுதிகளாக வெளிவந்துள்ளது.

## சீறா நாடகம்

யாழ்ப்பாணம் சாமுனா லெப்பையவர்கள் குமாரர் சேகுத்தம்பி புலவர்களால் இயற்றப்பெற்றது 'சீறா நாடகமென்னும் 'காரணமாலை'. கலித்துறை, கொச்சகம், கண்ணி

கள், விருத்தம், வெண்பா ஆகியவை பலவகைப் பாக்களில் ஆய நூல். 1878 இல் பதிப்பிக்கப்பெற்றது.

### சீறா வண்ணம்

வண்ணப்பாட்டு என்பது புதுவகைச் சந்தப் பாட்டு பெருமானின் சரித முரைக்கும் வண்ணப்பாட்டை இயற்றியவர் மேலூர் கல்விக் களஞ்சியப் புலவர். 1888 இல் அச்சானது.

### சீறா விளக்கு

செயிக் முகம்மது லெப்பை ஆலிம் அவர்கள் இயற்றிய சீறா விளக்கு' என்னும் 48 பக்க நூல் சீறாவின் கருத்தை உள்ளடக்கி எழுந்தது (1894).

### சீறா வெண்பா

சீறாப்புராணச் செய்தியை வெண்பா வடிவில் தரும் முயற்சியில் பாவா முகியித்தீன் அவர்களால் இயற்றறப பெற்றது சீறா வெண்பா ஆகும். நபியவதாரப் படலச் சரித்திரத்தை 125 வெண்பாக்களில் இந்நூல் தந்துள்ளது (1910).

இந்நூல்களில் பெரும்பாலானவை இன்று பார்ப்பதற்குக் கூட கிடைப்பதில்லை. இவற்றை மீண்டும் பதிப்பித்துச் சீறாவின் பெருமையைச் சீர்மையுடன் பரப்ப வேண்டியது தமிழ் மக்களனைவருடைய கடமையாகும்

## துணை நூல்கள்

அப்துற்-றஹீம்: முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள். 1957

உவைஸ் (எம். எம்.); இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்கள். 1973

மயிலை சீனி. வேங்கடசாமி; 19ஆம் நூற்றாண்டு தமிழிலக்கியம்

சண்முகம் பிள்ளை. மு: தமிழ் நூல் விவரணப்பட்டி (1876) 1910)

நயினார். எஸ். எம். எச்: சீதக்காதி வள்ளல் 1953

கனி ஆர். பி. எம்: இஸ்லாமிய இலக்கியக் கருவூலம் 1963

Murdoch J. Catalogue of Tamil printed books 1876.
Pope G U.Catalogue of Tamil books in the British Museum
Indian National Bibliography vol. IV.

## சீறாப் பதிப்புகள்

1842 செய்கப்துல் காதிர் நயினார் லெப்பை, பதி; சீறா வென்கிற புராணம், உவைஸ் நயினா லெப்பை, சென்னை, வித்தியா விலாச அச்சுக்கூடம்.

,, —உவைஸ் நயினா லெப்பை, யாழ்-பரிகாரி மரைக்காயர் பகீர் முகியித்தீன், சென்னை, வித்தியா விலாச அச்சுக்கூடம்.

1852 —யாழ், பரிகாரி மரைக்காயர் பகீர் முகியித்தீன் சைத்தாப்பேட்டை, லக்ஷ்மி விலாச அச்சுகூடம்.

1857 —தஞ்சை உசன் சாகிபு சென்னை, பிரபாகர அச்சுக் கூடம்.

1878 சேகுத்தம்பிப் புலவர், சீறா நாடகம்; காரணமாலை சென்னை, மனோன்மணி விலாச அச்சுக்கூடம்.

1880 அல்லாபிச்சை புலவர். பதி: சீறாவென்கிற புராணம். சென்னை பரப்பிரம முத்திராக்ஷரசாலை.

1887 கண்ணகுமதுப் புலவர்: சீறா வசன காவியம், சென்னை மனோன்மணி விலாச அச்சுக்கூடம்.

1888 கல்விக்களஞ்சியப்பா புலவர்: சீறா வண்ணமும் சித்திரக் கவிகளும். சென்னை, ராபின்சன் பிரஸ்.

1890 காதிரசனா மரைக்காயர் உரை சீறா நபியவதாரப் படலம், உரைகடிலகம். சென்னை, கலாரத்நாகரம்.

1894 செயிக் முகமது லெப்பை, சீறா விளக்கு. சென்னை ரிப்பன் அச்சுக்கூடம்.

1900 கண்ணகுமதுப் புலவர், பதி: சீறாப்புராணம் சென்னை; பத்மநாப விலாச அச்சுக்கூடம்.

1902 செய்குத்தம்பிப் பாவலர், உரை. சீறாப்புராணம் முதற்பாகம். சென்னை, பத்மநாப விலாச அச்சுக்கூடம்.

1907 —

1908 —சீறாப்புராணம் இரண்டாம் பாகம்.

1910 பாவா முகியித்தீன். சீறா வெண்பா, நபியவதாரப் படலம். மதுரை, தமிழ்ச் சங்க முத்திரைசாலை.

1951 ஷாஹுல் ஹமீது லெப்பை, நபிகள் நாயகத்தின் ஜீவிய சரித்திரம் (சீறா வசனம்) பதி. சென்னை. எம்.ஏ ஷாஹுல் ஹமீது—சன்ஸ்.

1958 அப்துஸ் ஸமது அ. ஸ. சீறா இன்பம், மணிவிளக்கு பதிப்பகம், சென்னை.

1961 ஸுபைர், அப்துல் காதர், உரை: பதுறுப்படலம், சென்னை ரமணி பப்ளிகேஷன்ஸ்.

1965 நூர் முகம்கது உமறு தரும் சீறா. சென்னை, ஹபீப் நூலகம்.

—சீறாப்புராணம், வ்லாதத்துக் காண்டம். சென்னை யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்.

—சீறாப்புராணத்திலிருந்து சில பாடல்கள், சென்னை, யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்.

1974 நாச்சிகுளத்தர், பதி. சீறாப்புராணம், சென்னை, திரீயெம் பப்ளிஷர்ஸ்.

# உமறு தரும் உவமை இன்பம்

பேராசிரியர் சி. நயினார் முகம்மது, எம். ஏ;

## முன்னுரை

'அழகே அழியா இன்பம்' என்பர். அழகுணர்ச்சி இலக்கியக் கலைக்கு இன்றியமையாதது. கவிதைப் பெண்ணுக்குக் கவினைத் தருவது அணியாகும். அணி எனும் சொல் ஆபரணம் எனும் பொருளுடன் அழகு எனும் பொருளையும் தரும், எனவேதான் அழகுத் தமிழுக்குரிய ஐந்து இலக்கணங்களில் அணியிலக்கணமும் ஒன்றாக அமைந்துள்ளது. தண்டி உலங்காரமும், மாறன் அலங்காரமும் குவலயரனந்தமும் அணிகளின் வகைளை விரித்துக் கூறுகின்றன. இவற்றுள் தலையாயதும் நிலையாயதும் உவமையணியாகும். சொல்லணிகளையும் பொருளணிகள் பலவற்றையும் கவிதைக்குச் சுமையாவன என்று ஒதுக்குவாரும் உவமையை உவந்து போற்றுவர். ஒல்காப் பெருமைத் தொல்காப்பியரும் உவமைக்கே ஓரியல் வகுத்துள்ளார். உவமை பொருளுக்குத் தெளிவும் பொலிவும் வலிவும் தந்து களிப்பூட்டுகின்றது.

''உவமை என்னும் தகைரும் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கில் கவினுறத் தோன்றி
நீப்பரு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே''

எனச் சித்திர மீமாம்சை சித்தரிக்கின்றது.

''வினை பயன் மெய் உரு என்ற நான்கே
வகை பெற வந்த உவமைத் தோற்றம்.''[1]

1. தொல்காப்பியம் சூத்திரம் 272.

என உவமையின் தோற்றத்தைத் தொல்காப்பியம் வகுத்துரைக்கின்றது. வினை, பயன், மெய், உரு ஆகிய நான்கினையும் பண்பு, தொழில், பயன் என மூன்றாக தண்டியலங்காரம் அடக்கிக் கூறும்.

பண்பும் தொழிலும் என்றவற்றின்,

"ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்ந்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை"[1]

உவமைகள் வெளிப்படை உவமம் எனவும் குறிப்பு உவமம் எனவும் இருவகைப்படும். வெளிப்படை உவமமும் விரி உவமம் எனவும் தொகை உவமம் எனவும் இருவகைப்படும். உவமையும் பொருளும் இரண்டறக்கலந்து சுருக்கமும் தெளிவும் தருவது உருவகம்

பார்க்கப் பலவாய் வேறுபட்டுத் தோன்றும் பல்வேறு பொருட்களையும் ஊன்றிப் பார்ப்பின் அவற்றிடையே ஒரு தொடர்பிருப்பது புலப்படும். தொடர்புடைய பொருட்களை கண்டும் கேட்டும் அறிந்தும் அனுபவித்தும் அவற்றின் ஒப்புமையறிந்து கூறுவர் நுண்மாண் நுழை புலம் உடையோர், உயர்ந்த புலவர் உவமையை உவந்து போற்றுவர். உமறுப் புலவரும் உவமையைத் தம் காப்பியம் எங்கும் செந்தமிழ்ச் சீசாவில் தொட்ட இடமெல்லாம் உவமைகள் தட்டுப்படுகின்றன 56 பாடல்களைக் கொண்ட நாட்டுப் படலத்தில் 64 உவமைகள். 35 பாடல்களேயுள்ள தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலத்திலோ 87 உவமைகள் அமைந்துள்ளன.

## பேரரசர் முன் பராரி

அவையடக்கம் கூறுவது கவிவாணரின் மரபாகும். 'இராமன் திருக்கதையை நான் பாட முற்பட்டது பூனையொன்று பாற்கடலை நக்கிப் பருகிட முனைந்ததைப் போன்

1. சீறா. தண்டியலங்காரம் சூத்திரம் 31

றது' என்று கம்பர் அவையடக்கம் கூறுகிறார். 'நளனது தெய்வீக வரலாற்றை பாட முயல்வது மதங்கொண்ட மா களிற்றைத் தாமரைத் தண்டின் நூலால் கட்ட முற்பட்டதைப் போன்றது' எனப் புகழேந்தியாரும் புகலுகின்றார். உயர் காப்பியம் பாடிய உமறுப்புலவரும் தமக்கே உரிய முறையில் அவையடக்கம் பாடுகின்றார்; அரிய உவமைகளை ஆளுகின்றார்.

பரந்து விரிந்துள்ள பாரதத்திலும் கடல் சூழ்ந்த தீவிலும் திக்கெல்லாம் செங்கோல் செலுத்தும் மாமன்னரும் கூலிவேலை செய்ய முயன்றும் உண்ணும் வகையற்று வருந்தும் பரம ஏழையும் சரியாவரா? பேரரசர் முன் பஞ்சப் பராரி எப்படியோ? அப்படியே செழுந்தமிழ் கவிஞர் முன் யான் விளம்புவது எனக் குறிப்பிடுகின்றார்.

"திக்கனைத்தினும் பாரினும்
 தீவினும் செங்கோல்
புக்க நன்னெறி திகிரி
 மன்னவர்கள் முன் பொருந்தத்
தக்க கூலியும் செய்து உண
 அறிகிலான் சரிபோல்
மிக்க செந்தமிழ்ப் புலவர்முன்
 யான் விளம் புவதே."[1]

இத்துடன் நிற்கவில்லை. பொழிவதை உறுதிப்படுத்த மும்முறை கூறுவது உலக வழக்கன்றோ? பெரும் புயற் காற்றுடன் உணவின்றி வருந்தும் சிற்றெறும்பின் மூச்சையும், பேரிடி முழக்கத்துடன் பெருவிரலின் நொடி ஒலியையும் இணைத்து அவையடக்கம் கூறித் தம் புலமைப் பெருக்கத்தைப் புலப்படுத்திவிடுகின்றார்.

1. சீறா, கடவுள் வாழ்த்துப் படலம் 18

**கார்முகிலும் கருணை நபியும்**

கடவுள் வாழ்த்திற்குப் பிறகு காப்பியத் தலைவரின் நாட்டு வளம் கூற விழைகிறார் நற்றமிழ்க் கவிஞர். கடவுளுக்கு அடுத்து கார்முகிலைச் சிறப்பிப்பது தமிழ் மரபாகும்.

விண்ணகத்து வெண் மேகம் மண்ணகத்து இறங்கிவந்து கடலில் படிந்து நீரினை முகந்துகொண்டு கருங்கடல்போல் எழுந்து வானம் சென்று பரந்து செறிந்து திரளுகிறது இதனை விளக்குதற்குக் காப்பியத்தின் கருப்பொருளாகிய நாயகத்தின் நற்புகழையே உவமையாகக் காட்டுகின்றார்.

'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை'

என்று உவமையின் தகுதியை உரைப்பர். வையகம் உய்ய வந்த வள்ளல் நபியின் புகழைக் காட்டிலுமா உயர்ந்த ஒன்று உள்ளது?

''தருங்கொடை நபினார் கீர்த்தி
சகமெலாம் பரந்து மிஞ்சி
நெருங்கியே விசும்பில் அண்ட
முகடுற நிறைந்த வேபோல்
இருங்கண வெள்ளை மேகம்
இரைபசுங் கடல்வீழ்ந்து உண்டோர்
கருங்கடல் எழுந்தது என்னக்
ககனிடை செறிந்து மீண்ட.''[1]

நாயகமவர்களின் புகழ் நானிலமெங்கும் போற்றப் பெறுகின்றது. அவர்களின் சலவாத்துக் கூறப்படாத நேரமே இல்லை. வானவரும் போற்றுகின்றனர்; மறை வழங்கிய இறைவனும் போற்றுகின்றான். எங்கும் பொங்கிப் பெருகியுள்ள நாயகமவர்களின் வான்புகழை வானமெங்கும் விரிந்து அடர்ந்து செறிந்து பரவியுள்ள கார் மேகத்திற்கு உவமை காட்டியிருப்பது உவகை பயப்பதாகும்.

1. சீறா. நாட்டுப் படலம், 1

நாயகமவர்கள் இன்னார் இனியரென்று பாராமல் எல்லார்க்கும் இனியவை காட்டி இன்பம் செய்தார்கள். பொருளாலும் பணியாலும் அருளுணர்ச்சியாலும் அனைவர்க்கும் கைம்மாறு கருதாமல் உதவியுள்ளார்கள். கார் முகிலும் வேறுபாடின்றி எதையும் எதிர்பாராமல் மழை பொழிந்து வளம் சுரக்கின்றது.

மழையின்றி மாநிலம் செழிக்காது; கருணை நபியின் நெறியின்றி நானிலத்தில் நலம் பிறக்காது.

நபிகள் நாயகம் இறைவனிடத்திலிருந்தே அருளுரைகளையும் நெறிமுறைகளையும் விதிவிலக்குகளையும் பெற்று வையத்திற்கு வழங்கியுள்ளார்கள். வெண்மேகமும் கடலிடத்து முகந்து வந்து கன மழை பொழிந்து களிப்பூட்டுகின்றது. இவ்வாறு உவமானத்தால் உவமேயம் சிறப்பதும் உவமேயத்தால் உவமானம் சிறப்பதும் கவிஞர் திறத்தால் அமைகின்றன சிறந்த அடைமொழிகளால் உயர்ந்த பொருட்கள் தோன்றி விடுகின்றன. பொதுவாக இயற்கை பொருட்களையும் நிகழ்ச்சிகளையும் மக்களுக்கும் மக்கள் செயல்களுக்கும் உவமை காட்டுவது பொது நியதியாகும். இங்கு இயற்கைப் பொருளாகிய மழை முகிலுக்கு காப்பிய நாயகராகிய மாநபியையே உவமை காட்டுகிறார் இவ்வாறு அமைவது பொருளுவமையாகும்.

## உவமையில்லாத செல்வி

காப்பியத் தலைவர் தம் பெற்றோர்களின் சிறப்பியல்புகளைத் தீட்டிக் காட்டுவதிலும் இனிய உவமைகளையும் உருவகங்களையும் எடுத்தாளுகின்றார்,

"அயிலுறை செழுங்கரத்து அப்துல்லா எனும்
பெயரிய களிறுக்கோர் பிடியும் போல் அவர்
உயிரென இருந்தசைந்த ஒசிந்த பூங்கொடி
மயிலெனும் ஆமினா என்னும் மங்கையே."[1]

1. சீறா. நபியவதாரப் படலம் 9

என இருவரையும் அறிமுகம் செய்யும் கவிஞர் அன்னை ஆமினாவை,

> ''அறத்தினுக்கு இல்இடம் அருட்கோர் தாயகம்
> பெருத்திடும் பொறுமையில் பூமிக்கு எண்மடங்கு
> உறைப்பெறும் குலத்தினுக்கு ஒப்பிலாமணி
> சிறப்பினுக்கு உவமையில்லாத செல்வியே.'' 1

எனச் சித்தரித்துக் காட்டுகின்றார்.

'அறத்தினுக்கு இல்இடம்' எனும் தொடர் அறத்தின் உறையுள் பொருள் பயப்பதுடன் அறத்திற்கு (வேறு) இடம் இது என அமைந்தும் இன்பம் செய்கின்றது. அருளுணர்ச்சிக்குத் தாயின் சுகத்தைக் காட்டிலும் சிறந்த இடம் வேறுளதோ? பொறுமைக்குப் பூமி என்பர்; உமறுப்புலவரோ பொறுமையில் பூமிக்கு எண்மடங்கு என்கின்றார். குலநலத்தில் ஒப்பில்லாத மணி என்னும் சிறப்பிற்கு உவமையில்லாத செல்வி (திருமகள்) என்றும் கூறுவதில் அறநலமும் அருள் நலமும் பொறை நலமும் குல நலமும் எழில் நலமும் இனிய முறையில் நிறைவுடன் கூறப்படுகின்றன. ஒப்பில்லை என்று உணர்த்துவதால் இது பொது நீங்கு உவமையாகும்.

## பிறப்பும் சிறப்பும்

காப்பிய நாயகரின் பிறப்பைக் கூறும்போது உமறின் உவமை சிறப்படைந்து உயர்ந்து விடுகின்றது.

> ''நெறிநிலை திரியா மருண்மதம் மிகுந்து
> நெடுநிலம் எங்கணும் பரந்து
> துறவறம் தவறி இல்லறம் மடிந்து
> சுடரிலா மனையது போலக்
> குறைபடும் காலம் இருளெனும் குபிரின்
> குலமறுத்து அறநெறி விளக்க

1. சீறா. நபியவதாரப் படலம் 91

மறுவிலா தெழுந்த முழுமதி போல
முகம்மது நபிபிறந் தனரே.'' 1

எனும் இனிய பாடலில் அமைந்துள்ள அரிய உவமையைப் பலரும் அறிவர். இதில் மறுவிலா தெழுந்த முழுமதி எனும் தொடரில் கருத்தாழம் மிகுந்துள்ளது

உதித்த, தோன்றிய முதலிய பிற சொற்கள் இருக்க 'எழுந்த' எனும் அடைமொழியை அமைத்துள்ளார். 'எழுந்த' எனும் சொல் வீறுடையது; எழுச்சியுடையது. நபிகள் நாயகம் அருளாலும் அரிய நேர்மைத் திறத்தாலும் மாக்களாக வதிந்த மக்களைத் திருத்தினார்கள்; மனிதப் புனிதர்களாக மாற்றினார்கள். கொடியவரைத் தடுத்து அடியவரைக் காக்க வாளெடுத்துத் தற்காப்புப் போரிடவும் செய்தார்கள். 28 ஆண்டுகளில் அண்ணலாரின் செந்நெறி எந்நிலமனைத்திலும் பரவியது. இவர்களைப் போன்று வெற்றி பெற்ற மத போதகரோ—அறப் பெரியாரோ இல்லையென அறிஞர் போற்றுகின்றனர். எழுச்சிமிக்க சமுதாயச் சிற்பியின் பிறப்பை 'எழுந்த' என்னும் அடைமொழி குறைவாக உணர்த்துகின்றன.

உலகில் சீர்திருத்தச் செம்மல்கள் பலர் தோன்றியுள்ளனர். இவர்களெல்லாம் முழுமதி போன்று அருள் ஒளி கொண்டு விளங்கியவர்களே. அண்ணல் நபிகளோ குறையொன்றிலாது முழுமை பெற்றவர்கள். எனவேதான் மறுவிலாதெழுந்த முழுமதி என பகிழ்ந்து கூறுகின்றார் மறுவிலாத மதி இல்லை. இவ்வாறு இல்லாத ஒன்றை உவமையாகக் கூறுவது இல்பொருள் உவமையாகும்.

''பானுவின் கதிரால் இடர்உறுங் காலம்
படர் தரு தரு நிழல் எனலாய்
ஊனமும் கொலையும் விளைத்திடும் பவநோய்
இடர் கவிர்த்திடும் அருமருந்தாய்

1 சீறா. நபியவதாரப் படலம் 92

தீனெனும் பயிர்க்கோர் செழுமழை எனவாய்
மாநிலத் தனக்கோர் மணிவிளக்கு எனவாய்
முகம்மது நபி பிறந்தனரே.”[1]

எனும் பாடலில் பெருமானார் பிறந்த பாலைவன நாடும் மக்கள் வாழ்வும் புலவரின் கற்பனை அனுபவத்திற்கு வருகின்றன. கடும் கோடை; கொளுத்தும் வெயில்; மரங்கள் இல்லை; இருந்தாலும் கருகிக் கவடுகளாகக் காணப்படுகின்றன. பயணம் செய்வோர் படும் துன்பத்திற்களவேது. இவ்வேளையில் களைத்துப் படர்ந்து தழைத்த தருத் தோன்றி கொழு நிழல் தருமானால் எவ்வளவு சுகம் தரும்! தீராத பாவப்பிணியைத் தீர்த்திடும் கிடைத்தற்கரிய மருந்து கிடைத்தால் எவ்வளவு நலம் தரும்? செத்துமடியும் பயிருக்குச் செழுமழை பொழிந்தால் எவ்வளவு வளம் சுரக்கும்? இருள் சூழ்ந்த வேளையில் புகை தோன்றா மணிவிளக்குத் தோன்றினால் எவ்வளவு ஒளி பிறக்கும்;

தருநிழலாகவும், அருமருந்தாகவும், செழுமழையாகவும், மணிவிளக்காகவும் காட்டிய புலவர் குறைஷிக் குலதிலகமாகவும் தீட்டி விடுகின்றார். இதன்கண் ஐந்து உவமைகள் பொருந்தியுள்ளன. இவ்வாறு பல உவமைகள் வருவதனைப் பல்பொருள் உவமை என்பர்

‘தீனெனும் பயிர்க்கு ஓர் செழுமழை எனவாய்’ என்பதால் இஸ்லாம் எனும் சன்மார்க்கம் ஏற்கெனவே (ஆதம் நபி முதல்) இருந்து வந்தது என்பதும் இடையில் இச் சன்மார்க்கப் பயிர் வாடி வதங்கிக் கிடந்தது என்பதும் இறுதி நபியின் பிறப்பால் இது செழிப்பும் சிறப்பும் அடைந்தது என்பதும் உணர்த்தப்படுகின்றன.

## பாலும் பல கலை அறிவும்

பிறந்த நாயகக் குழந்தையை அன்னை ஆமினா அள்ளியெடுத்து அரவணைத்துப் பாலமுதம் ஊட்டினார். (ஏழு நாட்

1. சீறா. நபியவதாரப் படலம்...92

களே அன்னை ஆமினா பாலூட்டினார்) இதனைக் கூறவந்த இன்பத் தமிழ்க் கவிஞர்,

"சிலை நுதல் கயல்கண் ஆமினா என்னும்
செவ்விபூத் திருந்தபொன் மடந்தை
மலர்தலை உலகில் சுருதியை விளக்கும்
முகம்மது நபி நயினாரை
இலகிய கமலக் கரத்தினில் ஏந்தி
இருவிழி குளிர் தர நோக்கிப்
பலகலை அறிவும் கொடுப்பபோல் எழுநாள்
பால்முலை கொடுத்தனர் அன்றே."[1]

எனப் பாடிப் பரவசமடைகிறார். இதன் கண் 'சிலைநுதல் 'கயல்கண்', 'கமலக்கரம்' ஆகிய மூன்று உவமைத் தொகைகள் அமைந்துள்ளன. 'பலகலை அறிவும் கொடுப்ப' போல் எனும் உவமையால் பெறப்படும் பிறப்புப் பொருளும் உண்டு.

நபிகள் நாயகம் பள்ளிசென்று பயிலாதவர்கள் இதனால் இவர்களை உம்மி நபிகள் என அழைப்பர், இவர்களின் பொறுப்போ வேதத்தின் விழுப்பொருளையெல்லாம் வையகத்து மக்களுக்கு விளக்கிக் காட்டுவதாகும். இதற்குப் பலகலை அறிவும் இன்றியமையாததன்றோ? இவ்வுணர்ச்சி கொண்ட கவிஞர் உவமையால் உள்ள நிறைவு கொள்ளுகின்றனர்.

## நடையும் நலமும்

நாயகம் குழந்தையைப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்த பெருமை குனைன் நகரத்து அலிமா அம்மாவைச் சாரும். அவர்களின் வீட்டில் அண்ணலார் நாளொருமேனியாக வளர்பிறையென வளர்ந்து வருகிறார்கள் குழந்தை குறுகுறு நடந்து தளர் நடைபயிலத் தொடங்குகிறது. இதனைக்

1. சீறா. நபியவதாரப் படலம் 116

கவிஞர் கற்பனையால் கண்டு மகிழ்கின்றார். இதோ அந்த இன்பக் காட்சி!

''எந்நிலம் அனைத்தும் தீன்நெறி நடப்ப
இயல்பெறு மனுநெறி நடப்பத்
துன்னிய அறத்தின் துறைவழி நடப்பத்
துன்பமற்று இன்பமே நடப்பப்
பன்னருஞ் செங்கோல் உலகெலாம் நடப்பப்
பாரினில் குலமுறை நடப்ப
மன்னியர் எவரும் சொற்படி நடப்ப
முகம்மது நபிநடந் தனரே.[1]

சன்மார்க்கமும் மனுநெறியும் அறத்துறைகளும் இன்பமும் செங்கோலாட்சி முறையும் குலமுறையும் மன்னியர் எவரும் சொல்படி செய்வதும் ஆகியவை நடப்பன போல் நாயகம் குழந்தை நடந்தது எனக் கொள்வோமாயின் இஃது எடுத்துக்காட்டு உவமை அணியாக அமையும். உவமைகள் அடுக்கிவரத் தொகுப்பது எடுத்துக்காட்டுவமை எனப்படும். உவம உருபு இல்லாமல் இருப்பது பெருவழக்கு.

## கொடியும் குறிப்பும்

இயற்கையாக நடைபெறும் நிகழ்ச்சிகளில் புலவர்கள் தம் குறிப்பினை ஏற்றிக் காட்டி இன்பம் ஊட்டுவர் கொடிகளின் அசைவில் காப்பியக் கவிஞர்கள் தம் கற்பனைத் திறத்தைக் காட்டியுள்ளனர். நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தில் ஒரு கொடிக் காட்சி: கோவலனும் கண்ணகியும் கௌந்தியடிகளுடன் கூடல் மாநகர் நோக்கிச் செல்கின்றனர். கோட்டை மதில்மேல் பாண்டி நாட்டுக் கொடிகள் பறக்கின்றன. மதுரையினுள் வந்தால் மங்கைக்கும் மணாளனுக்கும் வரும் துன்பங்களை ஐயமின்றி அறிந்து 'வரவேண்டாம்! வரவேண்டாம்!' என்பனபோல் மறித்துக் கை

1. சீறா. அலிமா முலையூட்டுப் படலம் 86

காட்டின எனக் குறிப்பிடுகின்றார், கற்பனையிற்சிறந்த கம்பரும் தம் கற்பனைக் கொடியைப் பறக்கவிடுகின்றார். இராமனும் இலக்குவனும் கௌசிக முனிவருடன் மிதிலைக்கு வருகின்றனர்; வில்லினை முறித்து மன்னியல் சீதையை மணமுடித்து மகிழ்வூட்ட வருகின்றனர். ஆதலின் மிதிலை நகரக் கொடிகள் அவர்களை 'வருக! வருக! என வரவேற்றுக் கையசைப்பதாகக் கூறுகின்றார். வில்லிப்புத்தூராரும் பாரதியாரும் கொடிக் காட்சிகளை தம் காப்பியங்களில் அமைத்திருக்கின்றனர். காப்பியக் கவிஞராகிய உமறுப்புலவரும் பறக்கும் கொடிகளில் கற்பனையைச் சிறக்க விடுகிறார்.

வளம்பெருக்கும் வாணிபம் செய்யும் பொருட்டு நாயக வாலிபர் சாம்நகர் நோக்கிச் செல்கின்றார்கள். அந்நகரத்துக் கோட்டை மதிலும் மாடங்களிலும் கொடிகள் பறக்கின்றன. அவற்றின் அசைவில் மூன்றுவகைக் கற்பனைகளை அமைத்து அகமகிழ்வூட்டுகின்றார்.

பேரொளி வீசிப் பெருமானார் வருகிறார்கள். 'ஷாம் நகரப் பெருமக்களே! காணிக்கையுடன் எதிர் சென்று வரவேற்புப் பளித்து கடைத்தேறுங்கள்' எனக் கையசைத்துக் காட்டுவதுபோல் கோட்டைகளில் பறக்கும் கொடிகள் அசைகின்றனவாம். மாடங்களில் கட்டியிருக்கும் கொடிக்கரங்கள் கலசங்கள் பொருந்திய பளிங்கு மாளிகையின் மாடங்களில் படிந்துள்ள தூசிகளைத் துடைத்துப் புதுப்பித்து அழகு படுத்துகின்றனவாம்.

மாடங்களின் மேல்நிலைகளில் கட்டியுள்ள மற்ற கொடிகளோ 'மா நபியே இம் மாநகருக்கு வருக! வருக!' என்று கையசைத்து வரவேற்கின்றனவாம்.

கற்பனையில் ஷாம்நகரில் பறக்கும் அக்கொடிகள் இதோ!

> ''முதிர்ந்த பேரொளி முகம்மது வருநெறி முன்னி
> எதிர்ந்து இறைஞ்சுதற்கு இந்நகர் உறைந்திடும் அரசீர்

பொதிர்த பூணொடும் ஏருமின் எனக்களி பொங்கி
அதிர்ந்திடக் கரமசைத்தல் போல் அசைந்தன
கொடிகள். ''1

''மதக்கொண் மாலிகை நாற்றிநன் மணிபல
குயிற்றிச்
செதுக்கி மின்னுமிழ் தமனியத் தகம்புகள் செறித்து
விதுக்கொண் மேனிலை மென்றுகண் மாசறத்
துடைத்துப்
புதுக்கு வான்தொழில் புரிந்தபோல் அசைந்த
பொற் கொடிகள்.''2

''சிவந்த பாதுடங் கய நபி திருநகர்ப் புறத்துக்
கவிந்த கார்க்குடை நிழலிட வருவது கண்டு
நிவந்த வெண்சுதைப் பளிக்கு மேல் நிலை வயின்
நின்று
குவிந்த கைவிரித் தழைத்தபோல் அசைந்தன
கொடிகள்.'' 3

உகுதுப் போர்க்களத்தில் இருவகைக் கொடிகளைக் காட்டுகின்றார். அவற்றில் ஒன்று:

''அல்லும் கல்லும் ஒத்தனமணக் குபிரவர் படையில்
செல்லு செல்லுமென் றேவின விசிறியின் திரள்கள்
கொல்லுங் கொல்லுமென் றுரைத்தன பல்லியங்
குமுறல்
வெல்லும் வெல்லுமென் றாடின விடுநெடுங்
கொடிகள்''4

இப்பாடலில் ''முஸ்லிம்களே! வெல்லுங்கள்! வெல்லுங்கள்!'' என்று கரமசைத்து ஊக்குவிக்கும் கொடிக்கரங்களைக் காணுகிறோம்.

1. சீறா. ஷாம்நகர் புக்க படலம் 17
2. சீறா. ஷாம்நகர் புக்க படலம் 18
3. சீறா. ஷாம்நகர் புக்க படலம் 19
4. சீறா. உகுதுப் படலம் 96

நாட்டுப் படலத்தில் மாடத்தின் மேல் பறக்கும் கொடி மதியின் மறுதுடைக்கும், சன்மார்க்கத்தை மறுக்கும் பகைவரின் மனநடுக்கத்தைக் காட்டும் மற்றொருவகைக் கொடி, இவ்வாறு கொடியசைவு முதலிய இயற்கைக் காட்சிகளில் கற்பனையை ஏற்றிக் கூறுவது தற் குறிப்பேற்ற அணியாகும்.

## செந்தாமரையும் அன்னப்பேடும்

உவமை வெளிப்படும் களங்களில் காதலும் ஒன்று. "பேரறிவு எவையும் செம்மை பெருத்தொளிர் வனப்பும் கொண்ட நாயக வாலிபருக்கும், பேரழகொழுகும் பெண்ணலங்கனியாகிய கதீஜா நாயகிக்கும் இடையே அன்பு அரும்பிக் காதலாக மலர்கின்றது. கவிஞர் இக் காதல் காட்சிகளைக் கண்ணியத்துடன் தீட்டிக் காட்டுகின்றார்.

வாணிபம் செய்யும் பொருட்டுப் பொருள் வேண்டி வரும் நாயகம் நாயகியைச் சந்திக்கிறார்கள். பேரொளி பரப்பிப் பொங்கிப் பெருகிய பெருமானாரின் அழகு வெள்ளத்தில் கதீஜா நாயகியின் கண்களாகிய கயல் மீன்கள் ஓடிக் குதித்து குளித்து மறுக்கமுறுகின்றன. 'வைத்த விழி வாங்கப் படாமையால் பூத்த கொம்பனைய தன் திருமேனியில் நாணம் எனும் போர்வையைப் போர்த்தி மிகுந்த ஆசை வெளிப்படாவண்ணம் கற்பென்னும் வேலியைக் கோலி உள்ளகத்து உணர்ச்சி காணாதவாறு வருந்தி நிற்கின்றார்" எனக் கவிஞரும் காதல் காட்சிகளை நாகரிகமுடன் காட்டுகின்றார்.

காக்குதற்கு உதித்த வள்ளல் காரிகை வடிவைக் கண்ணால் நோக்கியும் நோக்காதுபோல் எழுந்து மாதின் மாக்கடலனைய கண்ணும் மனமும் பின் தொடர்ந்து செல்ல வீடு செல்கிறார்கள். கதீஜா நாயகியும் காதலாகிக் கசிந்துருகுகின்றார்.

"படியினில் சசியும் செங்கேழ்ப்
பரிதியும் நிகர் ஒவ்வாத
வடிவெடுத் தனைய வள்ளல்
முகம்மதின் நெஞ்சம் என்னும்
கடிகமழ் வாவி யூடு
கருத்தெனும் கமல நாப்பண்
பிடி நடைக் கதிஜா என்னும்
பெடை அனம் உறைந்தது அன்றே"[1]

சூரியனும் சந்திரனும் நிகரிலாத வடிவெடுத்த வள்ளல் நபியின் நெஞ்சம் என்னும் மணங்கமழும் தடாகத்தில் கருத்து என்னும் செந் தாமரையின் நடுவில் பிடிபோலும் நடையுடைய கதீஜா என்னும் அன்னப்பேடு உறைந்து விட்டது எனக் கூறும் இப்பாடலில் பொது நீங்கு உவமையும் உவமத் தொகையும் உருவகமும் பொருந்தியுள்ளன. அன்னம் இலக்கியத்தில் காணப்படும் இலட்சியப் பறவையாகும். வண்ணத்தில் சிறந்தது; தூய எண்ணத்திலும் உயர்ந்தது. இனிய நடைக்கும் எடுத்துக்காட்டாக விளங்குவது; இது வாழும் இடமும் உயர்ந்ததாகும்; உறைவதோ நிறத்தாலும் மணத்தாலும் வடிவாலும் ஒளிச்சிறப்பாலும் பொலிவாலும் சிறந்த செந்தாமரை மலர். சிறந்த அன்னப்பேடு உயர்ந்த எண்ணத் தாமரையில் எழிலுடன் அமர்ந்தது என்பதில்தான் எத்தனை அழகு! சிறப்பு! கடிகமழ் வாவி என்னும் தொடர் கடிமணத்தையும் திருமணத்தையும் கட்டியங் கூறுகிறது. 'உறைந்ததன்றே' எனும் தொடரின் இறுதியில் வந்துள்ள 'ஏ' கார இடைச் சொல்லும் இதற்கு அரண் செய்கிறது இப்பாடலில் ஏற்றவரின் இதயச் சிறப்பும், எண்ணச் சிறப்பும், நாயகியாரின் வடிவச் சிறப்பும், பண்புச் சிறப்பும், காதல் சிறப்பும் கனிந்துள்ளன.

1. *சீறா.* பாதை போந்த படலம் 47

உவமைகள் பண்பாட்டுச் சிறப்பையும், அறிவியல் கருத்துக்களையும் தத்துவ நுட்பங்களையும் நீதி நெறிமுறைகளையும் உணர்த்துவதுண்டு. ஷாம் நகர் செல்லும் வழியில் விரிந்துள்ள இயற்கைக் காட்சிகளைத் தீட்டிக் காட்டும் போது பண்பாட்டுச் சிறப்பைப் புலப்படுத்தும் இனிய உவமைகளைக் கண்டு மகிழ்கின்றோம்.

## பாவையும் பயிரும்

நாற்றங்காலில் பாவியுள்ள நெல்நாற்றைப் பறித்து விளைநிலத்தில் நட்டுள்ளனர். பயிர் செழித்துக் கிளைத்து வளர்கிறது; கதிரீன்று பால் பிடித்து மணிமுதிர்ந்து தலை சாய்த்து வரப்புகளில் படிந்துள்ளது. இக்காட்சியில் குலப் பெண்ணின் நலச்சிறப்புப் புலப்படுகின்றது புலவருக்கு. அதனையே உவமையாகத் தீட்டிவிடுகின்றார். பிறந்தகத்தில் வளர்ந்து பருவமெய்திய பெண் கடிமணம் புரிந்து கணவனகம் புகுந்து இல்லறம் நடத்தி இன்பச் சின்னமாகிய குழந்தையை ஈன்று பணிந்து பயன் தந்து வாழும் பாங்கு நிலந் பெயர்ந்து விளைந்து படிந்து பயனிக்கும் நெற்பயிருக்கு உவமை காட்டப்பட்டுள்ளது. எத்தனை அற்புதமான பண்பாட்டுப் படைப்பு,

"ஒருமனைப் பிறந்து ஒருமனை இடத்தினில் உறைந்து
கருவரத் தரித்து ஈன்றுதன் கணவனை இகழாப்
பெருவரம் புறும் பெண்கொடி எனத்தலை சாய்த்துத்
திருவும் செல்வமும் திகழ்தரக் காண்பன செந்நெல்"[1]

கணவனுக்குக் கட்டுப்பட்டு இன்பம் பயந்து பிள்ளைக் கனியமுதைப் பெற்றெடுத்து எல்லை கடக்காமல் கற்புக்கடம் பூண்டு பணிபுரிந்து வாழும் குடும்பப் பெண்ணைச் செந்நெற் பயிரில் கண்டு களிக்கின்றோம்.

1. சீறா. ஷாம் நகர் புக்க படலம்11

'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்'

கண்டுக் காட்சி வழங்குகின்றாள்.

## தருவினம் வெருவிடக் கிடக்கும்

பசுமைப் புரட்சியில் நம்நாடு ஈடுபட்டுள்ளது; வெற்றியும் பெற்று வருகிறது; பயிர் வளர்ச்சியில் உயர்ச்சி காண பல நாட்டு முறைகளையும் பின்பற்றுகின்றனர். இவற்றில் ஜப்பான் நாட்டு நடவு முறையும் ஒன்று. இம்முறையில் கயிறு கட்டி நாற்றுக்களை வரிசை வரிசையாக நடுவர். பார்ப்பதற்கு அழகாக இருப்பதுடன் கலக்க இருப்பதால் பயிர்கள் படர்ந்து வளர்ந்து பயனளிக்கும். இதனை உமறுப்புலவர் நாட்டுப் படலத்தில் தீட்டி மகிழ்கின்றனர்.

"வரிசையிற் செறிந்த நிறைபசுஞ் சாலி
வளர்கிளைக் கிளையெனக் கிளைத்துப்
பெருகுசூல் முதிர்ந்து ஈன்று ஆரமுது உறைந்து
பிடர்குனி தரக்குலை சேர்ந்து
சொரிகதிர்ப் பவள நிறம்பல படைத்துச்
சுடர்மணி முத்தினம் தெறிப்பத்
தரையினில் படிந்தே அருட்கடை சுரந்த
தருவினம் வெருவிடக் கிடக்கும்." 1

இப்பாடலில் வேண்டியவற்றை வேண்டியாங்கு தரும் கற்பகத் தருவும் அஞ்சியோடும்படி நெற்பயிர் செழித்துக் கிடக்கும் எனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு உவமைக் குரியவற்றை குறைத்தும் பகுத்தும் கூறுவது நிந்தை உவமை எனப்படும்.

## உவமையும் வியப்பும்

வலிமைச் சிறப்பையும் வளமார்ந்த உவமைகளால் விளக்குகிறார் உமறு, பெருமானார் பொன்னெறி பரப்பிய

1. சீறா. நாட்டுப் படலம் 36

காரணத்தால் பொல்லாக் குறைஷியர் பகைமிகுந்து பொங்கி எழுந்தனர். பிறந்த பொன்னகரை விட்டுப் புறப் பட்டு வந்தபோதும் சும்மா விடவில்லை. படையெடுத்து வந்து பகை தொலைச்சு முற்பட்டனர். அம் மாநகர் தீய வரின் தாக்குதலிலிருந்து தற்காப்புச் செய்து கொள்ளும் கட்டாயத்திற்குள்ளானார்கள். போர்க்களம் செல்ல சுகுபு என்னும் குதிரையைக் கொண்டு வரச் சொன்னார்கள். அக்குதிரையின் ஆற்றலை சிறப்பை அரிய உவமைகளை அடுக்கி அருமையாகப் பலப்படுத்துகின்றார்.

"தாவிடின் மனத்தை ஒக்கும்
தாக்கிடின் இடியேறு ஒக்கும்
மேவிடின் திகிரி ஒக்கும்
பூவிடத்து அடலின் வன்கூழ்
போன்றிடும் சகுபு என்று ஓது
மாவினைக் கொணர்மின் என்ன
முகம்மது சரணம் வைத்தார்."[1]

சிறந்த தளபதி ஏறிய சிறந்த குதிரை களம் நோக்கிப் புறப்பட்டது. இதன் கடுகிய செலவை,

"கடலினைக் கலக்க என்றோ
கதிர் துகள் படுத்த என்றோ
வடவரை தகர்க்க என்றோ
மண்ணிலம் பிளக்க என்றோ
அடையலர் பதியை இன்னே
அந்தரத்து இடுக என்றோ
தடமுறும் கடின வாசி
தாள் பெயர்த்து இட்டது அம்மா!"[2]

இதன் கண் பொருள் வெளிப்படையாக உள்ளது. ஐந்து செய்திகள் அமைந்துள்ளன. கடலைக் கலக்குதற்கோ

1. சீறா. பதுறுப் படலம் 21
2. சீறா. பதுறுப் படலம் 22

சூரிய சந்திரர்களைத் தூளாக்குதற்கோ இமயப் மெருமலை யைத் தகர்ப்பதற்கோ, பூமியைப் பிளப்பதற்கோ பகைவர் ஊரை அந்தரத்தில் எறிவதற்கோ பரிந்து செல்லும் குதிரை அடியெடுத்து வைத்து அம்மா !' என்று வியப்புணர்ச்சியும் ஐயமும் தோன்ற அமைந்திருப்பதில் மருட்கை உவமை யும் ஐய உவமையும் இணைந்து இன்பம் சேர்க்கின்றன.

## மொழியும் பழியும்

தசைக்கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலம் உவமை நலத்தையும் கற்பனைத் திறத்தையும் வர்ணனை வனப்பை யும் வெளிப்படுத்தும் களமாக அமைந்துள்ளது. அன்னை ஆமினா, கதீஜா நாயகி, பாத்திமா நாயகி முதலிய பாத் திரங்களை வரம்பிகந்து வர்ணிப்பது வரவேற்கத் தக்கதன்று. கவிஞர்க்குரிய கற்பனையைக் கட்டுப்படுத்த முடியுமா? எனவே தசைக்கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலத்தைப் படைத்துப் பயன்படுத்துகிறார் உமறுப்புலவர். கேசாதி பாத வர்ணனையை வியக்கும் வண்ணம் தீட்டிக் காட்டுகின் றார். முடிமுதல் அடிகாறும் உள்ள உறுப்புகளின் சிறப்பை யெல்லாம் அழகு திகழ வர்ணிக்கின்றார்.

தசைக்கட்டியாக இருந்த ஹபீபு அரசரின் மகள் வேந் தரின் வேண்டுகோளுக்கிணங்க பெருமானார் பிரார்த்தனை யால் பேரழகு ஒழுகும் பருவமங்கையாக உருவெடுத்து விடு கின்றாள். அவ்வழகு நங்கையின் இனிய சொல் நலங்குறித்து ஒரு வர்ணனையை ஈண்டு காண்போம்.

''பாலென வெளிறாக் கனியென அழியாப்
பசுமடல் தேனெனச் சிதறா
வேலைவார் குழலார் செழுங்கரத்து ஏந்தும்
இளங்கிளி மொழியெனக் குழறா
வேலைவாழ் அமுதம் பிறந்தென உலகம்
விளங்கிடப் பொன்மழை பொழியச்

சாலவும் சிறந்த தருவினம் தழைப்பத்
தரவரும் இனியமென் மொழியாள்''.[1]

'இனிமையில் பால் போன்றது; ஆனால் வெள்ளையாக (பொருளற்று) இராது. கனிபோன்று சுவைக்கும்; ஆனால் அழுகிச் சிதைந்துவிடாது. மணமடல் தேன் போன்று தித்திக்கும்; ஆனால்சிதறி விடாது. கரத்தில் ஏந்தியுள்ள கிளிமொழி போல் சுகந்தரும்; ஆனால் குழறு மொழியாக இராது' என எடுத்தும் மறுத்தும் விளக்கி 'செத்து மடிந்த தருவினம் தழைக்கும்படி பாற்கடல் பிறந்த அமுத மழையாகப் பொழிந்தது போன்ற இன்மொழியாள்' என வர்ணிப்பதில் சொல்லின்பம் ஊறிப் பெருகிவிடுகிறது. இவ்வாறு எடுத்தும் மறித்தும் உவமையின் இயல்பைக் குறைத்தும் பொருளின் சிறப்பை விளக்குவது எதிர்மறுப்பு உவமையாகும்.

## உவமையும் மழலையும்

மாலை உவமம் என்று ஒன்று இதில் வந்த கருத்துக்களும் சொற்களும் மீண்டும் மீண்டும் வரும். உறவும் தொடர்பும் உள்ள பொருட்கள் ஒன்றோடொன்று இணைந்து மாலை போல் அமையும். உமறுப்புலவர் மாலை உவமம் புனைவதிலும் சிறந்து விளங்குகின்றார். சான்றாக ஒரு மாலை:

சுந்திரப்புலியன்ன அலிக்கும் பெண்ணிலங்கனி பாத்திமா நாயகிக்கும் திருமணம் செய்ய நிச்சயிக்கப்படுகிறது. மணச் செய்தியை மாநகர்க்கு அறிவிக்கின்றனர். மங்கள செய்தி கேட்ட மதீனா மக்கள் மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கிறார்கள். பரவசத்தால் உந்தப்பட்ட பாவையரின் செயல்களைப் பாருங்கள்!

''பாடு வார்சிலர் குயிலெனப்
பாடலுக்கு எதிரின்

1. சீறா. தசைக்கட்டியைப் பெண்ணுருவமைத்த படலம் 24

ஆடு வார்சிலர் மயிலென
ஆடலுக்கு அழகாய்க்
கூடு வார்சிலர் கிளியெனக்
கூடலின் குறிகண்
மூடு வார்சிலர விரிதரும்
கமலமென் முகத்தார்.'' 1

இப்பாடலில் பாடுவார், ஆடுவார், கூடுவார், மூடுவார் எனும் சொற்களும் கருத்துக்களும் திரும்பத் திரும்பத் தொடர்பாக வந்து மாலையாக அமைந்து மகிழ்வூட்டு கின்றன.

## நீதியும் பழமொழியும்

நீதிகளும் நெறிமுறைகளும் உவமைகளில் பொதிந் துள்ளன.

''ஒங்கு பாநில மாக்களில் ஒருவருக் கொருவர்
தீங்கி யற்றிட நினைத்திடுங் கொடியஅத் தீமை
நீங்கிடாது அவர் உயிரினைப் பருக நேரலர்கை
தாங்கும் வாளென வொல்லையில் உறச் சமைந்
திடுமே.'' 2

''ஈர மற்றபுன் மனச்சிறி யவர்திரண்டு இகலிக்
கோர மாகிய பழியையெண் ணாக்கொடுங் கொலை
யாய்த்
தேரு நல்லறிவாளருக்கு இழைத்திடும் தீங்கு
நீரி டைக்கனல் நெருப்புகுத் திடுவது ஒத்திடுமே.'' 3

எனும் பாடல்களில் தூயவர்க்குக் கேடுசெய்யும் தீயவர் படும் துன்பமும் தூயவர்க்குச் செய்யப்படும் கேடு அழிந் தொழிவதும் ஆகிய நீதிகள் உவமைகளால் உணர்த்தப்படு கின்றன.

1. சீறா. பாத்திமா திருமணப் படலம் 107
2. சீறா. கரம் பொருத்து படலம் 52
3. சீறா. கரம் பொருத்து படலம் 53

"உடுத்த பூமியில் புதைமணி னஎ உடல் ஒடுங்கி
வடித்த கண்ணில் நீர்ஒழுகிட இருந்தமொன்
மயிலை". 1

"புடங்கொள் வங்கம தாய்நினைவு உருகினான்." 2

"அங்கியில் கிருமியொத்து அறிவு போக்கினார்". 3

"மதியின் மிக்கவர் ஒருவரால் வருங்கிளை யனைத்தும்
கதியும் வெற்றியும் வீரமும் பெறுவர் அக் கதைபோல்
புதிய பேரொளி முகம்மதின் மணவினைப் பொருட்டால்
பதியும் வீதியும் மாடமும் மணம்படைத் தனவே." 4

"தன்னிலைமை தவறாத முதியோரை எவரேனும்
சாரில் வாய்ந்த
நன்னிலைநற் குணம் அறிவு பெறுவரேனும்
பழமொழியை நவிற்றிற்று அன்றே." 5

"புன்மைகவர் வஞ்சகநெஞ் சினர்க்குமறை
தினந்தோறும் புகட்டி னாலும்
நன்மை பயவாரெனும் சொல் பழமொழியைப்
புதுக்குவன் போல்......" 6

"என்போலும் சிறியர்பெரும் பழியடுத்த
குறைபிழை ஆயிரம்செய் தாலும்
பொன்போலும் மனப்பெரியோர் பொறுப்பாரெனும்
மொழி........."7

1. சீறா நபியவதாரப் படலம் 47
2. ,, நபியவதாரப் படலம் 21
3. ,, தீனிலை கண்ட படலம் 126
4. ,, மணம்புரி படலம் 31
5. ,, மணம்புரி படலம் 38
6. ,, சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் 34
7. ,, சுறாக்கத்துத் தொடர்ந்த படலம் 45

முதலிய பாடல்களிலும் தொடர்களிலும் நீதி பொதிந்த பழமொழிகள் உவமைகளாக வந்து நிறைந்த பொருள் பயக்கின்றன.

## தத்துவம் கூறும் வித்தகர்

உமறுப்புலவர் உவமையால் தத்துவ நுட்பங்களையும் புலப்படுத்துகின்றார்.

மழைபொழிந்து ஆறுகள் பெருகி ஓடிப் பாய்ந்தன. தடாகங்கள், ஏரிகள், குளங்கள், வயல்கள், தாமரைக் கிடங்குகள் முதலிய எல்லா இடங்களும் நிரம்பின. இதனைக் கூறவந்த கவிஞரின் கற்பனையில் தத்துவ நுட்பம் தோன்று கின்றது. அதனை அழகிய உவமையாக அமைத்து விடு கின்றார்.

"தடமும் ஏரியும் வாவியும் கழனியும் சலசக்
கிடங்கு எங்கணும் நிறைதரப் பெருகு கிலாலங்
குடம்பை யின்பல பேதமா கியசத கோடி
உடம்பு தோறினும் உயிர்நிலை நிலையினை ஒக்கும்." 1

ஓரே உயிர் பலகோடி உடம்புகளிலும் புகுந்து நிற்பது உவமையாக அமைந்துள்ளது. பரமான்மா எனும் ஒளிப் பிழம்பிலிருந்து ஜீவான்மா பிரிந்து வந்துள்ளது என்றும் உலக உயிர்களனைத்திலும் இறைவன் உறைந்துள்ளான் என்றும் கூறுவர் தத்துவ வித்தகர்.

## உதிர்ந்த மலர்கள்

மதிமுகம்
திருநகைத்தரள மெல்லிதழ்
காந்தள் மெல்விரல்
செவ்வரி வேற்கண்
விரிந்த செங்கமலக்கரம்

1. சீறா. நாட்டுப் படலம் 17

நுட்குடக்கனி
கோதரப் பழுத்து மதுரமே கனிந்த கொவ்வை வாய்
சிலைநுதல்
கயற்கண்
பவளவாய்

முதலிய உவமத் தொகைகளும் உவகையூட்டுகின்றன.

'தெள்ளமுலனைய முகம்மது நபி'
'வடுப்பிளவனைய கண்
'துய்ய நூல் விரித்தன்ன நரை'
'இன்னமுதக் கனி எனும் கலிமா'

முதலிய உவமைகளும் உமறுப்புலவரின் முத்திரைகளில் சிலவாகும்.

## முடிவுரை

இவ்வாறு உமறுப்புலவர் அரிய உவமைகளை இனிய முறையில் வழங்குகிறார். பொருள் விளக்கம் தருவதுடன் பண்பாட்டுச் சிறப்பையும் நீதிநெறி முறைகளையும் தத்துவ நுட்பங்களையும் உவமைகளில் பொறித்து மகிழ்வூட்டுகின்றார். கற்பனை நலம் கனிந்து உயர்ந்த உவமைகளில் ஒப்பற்ற இன்பமளிக்கும் உமறுப்புலவரை உவமைப் புலவர் எனலாமே!



# CHINDHAIKKINIA SEERA

*Compiled by*

**MANAVAI MUSTAFA**

தமிழகத்தின் தலைசிறந்த ஆய்வாளர்கள் பதினெண்மரின் அரிய ஆராய்ச்சிகள். உமறுப்புலவரின் ஒப்பற்ற படைப்பான சீறாப்புராணத்தைப் பல்வேறு கோணங்களில் திறம்பட ஆராய்ந்துள்ளார்கள். உமறு தரும் சீறாவை முழுமையாக அறிந்தின்புற அரிய வாய்ப்பளிக்கும் இனிய நூல்.

*Published by:*

**MEERAA PUBLICATION**

AE - 103, ANNA NAGAR

MADRAS - 600 040.